OSHO

# அஷ்டாவக்ர மகாகீதை

## எது எப்படியோ அது அப்படியே

Ashtavakra Mahagita - Vol.3



ஓஷோ

3

# அஷ்டாவக்ர மகாகீதை

**மூன்றாம் பாகம்**

## எது எப்படியோ அது அப்படியே

ஓஷோ அஷ்டாவக்ர-ஸம்ஹிதாவின் 298 சூத்திரங்களிலிருந்து 66 முதல் 98 சூத்திரங்கள் சார்ந்து கேள்வி-பதில்களுடன் வழங்கிய பத்து சொற்பொழிவுகளின் தொகுப்பு

## ஓஷோ

தமிழாக்கம்:

**டாக்டர் என். ஸ்ரீதரன்**



Since 1976

**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை – 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

அஷ்டாவக்ர மகாகீதை (மூன்றாம் பாகம்) - எது எப்படியோ அது அப்படியே

முதற் பதிப்பு : ஆகஸ்ட், 2019

விலை : ₹ 400/-

**Ashtaavakara Mahageethai - Part-3**

Originally published in Hindi under the title:
**ASHTAVAKRA MAHAGITA, VOL. 3**



Reprint: (Actual year of reprint)



| | | |
|---|---|---|
| Translated by | : | **Dr. N. Sreedharan** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | August, 2019 |
| Pages | : | 432 |
| **Price** | : | **₹ 400/-** |
| ISBN | : | 978-81-8345-486-5 |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |



Published by :
**KAVITHA PUBLICATION**
# 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 42161657, 7402222787
E-mail : kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com

Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்


பக்கம்

சொற்பொழிவு—21

ஞானமே முக்தி ............................................................................ 5

சொற்பொழிவு—22

உன்னை வணங்குவதே என் வேலை .................................... 43

சொற்பொழிவு—23

பார்வையே படைப்பாகும் .................................................... 83

சொற்பொழிவு—24

உள்ளங்கையோ சிறிதினும் சிறிது .................................... 128

சொற்பொழிவு—25

காண்பது கனவு, காண்பவனே சத்தியம் ............................. 170

சொற்பொழிவு — 26

சுதந்திர ஏரியில் கடமைக் கமலம் ..................................... 207

சொற்பொழிவு 27

மிகு விருப்பு கட்டிப்போடும், பேரறிவு விடுவிக்கும் ........ 248

சொற்பொழிவு 28

அனுபவ அறிவின் துணையுடன் வாழ்ந்திடு .................... 295

சொற்பொழிவு—29

தியானம் என்பது ஓய்வமைதி ............................................ 343

சொற்பொழிவு—29

சாட்சி மனம் சங்கீதம்: சந்நியாசம் புல்லாங்குழல் ............ 389

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

ந தே ஸங்கோஅஸ்தி கேநாபி கம் ஸுத்தஸ்த்யக்துமிச்சஸி|
ஸங்காதவிலயம் குர்வன்னேமேவ லயம் வ்ரஜ|| (66)

உதேதி பவதோ விஸ்வம் வாரிதேரிவ புதபுத:|
இதி க்ஞாத்வைகமாத்மானமேவமேவ லயம் வ்ரஜ|| (67)

ப்ரத்யக்ஷமப்யவஸ்துத்வத்விஸ்வம் நாஸ்த்யமலே த்வயி|
ரஜ்ஜுஸர்ப இவ வ்யக்ருமேவமேவ லயம் வ்ரஜ|| (68)

ஸமதுக்க ஸுக: பூர்ண ஆஷாநைராஷ்யயோ: ஸம:|
ஸமஜீவித ம்ருத்யு: ஸன்னைவமேவ லயம் வ்ரஜ|| (69)

ஜனகர் மொழிகிறார்:

ஆகாஸவதனம்தோஅஹய் கடவத் ப்ராக்ருதம் ஜகத்|
இதி க்ஞானம் ததைதஸ்ய ந த்யாகோ ந க்ரஹோ லய:|| (70)

மஹோஉததிரிவாஹம் ஸ ப்ரபஞ்சோ வீசிஸந்நிபி:|
இதி க்ஞானம் ததைதஸ்ய ந த்யாகோ ந க்ரஹோ லய:|| (71)

அஹம் ஸ ஸுக்திஸங்காஸோ ரூப்பவத்விஸ்வகல்பனா|
இதி க்ஞானம் ததைதஸ்ய ந த்யாகோ ந க்ரஹோ லய:|| (72)

அஹம் வா ஸர்வபூதேஷு ஸர்வபூதான்யயோ மயி|
இதி க்ஞானம் ததைதஸ்ய ந த்யாகோ ந க்ரஹோ லய:|| (73)

**உ**லகப் பற்று நீங்கி வருகிறது என்பதால் அறியாமையின் பிடிப்பு நீங்கிவிட்டது என்று அர்த்தமில்லை. இன்பநாட்டம் நீங்கிவிட்டது என்பதால் அந்த வேட்கையின் அடிப்படை காரணம் அழிந்துவிட்டது என்று அர்த்தமில்லை. மனத்தின் உள்ளே அந்த காரணங்கள் நீடிக்கத்தான் செய்யும். நீ பணத்தாசையைக் கைவிடு.

ஆனால் அந்த ஆசை, தியாகத்தில் ஒட்டிக்கொள்ளும். நீ வீட்டைத் துற. அந்தத் துறக்கும் ஆசை, ஆசிரமக் குடிசைக்கு மாறிவிடும். நீ கூட்டம்-கும்பலை, கடைத்தெரு சூழ்நிலையைத் தவிர். அந்தத் தவிர்க்கும் ஆசை, ஏகாந்தத்தின்மேல் பற்றை ஏற்படுத்தி விடும். ஒரு வகைப் பிடிப்பு இன்னொரு வகைப் பிடிப்பாக மாறுகிறது, அவ்வளவுதான். இது போதாது. அந்தப் பிடிப்பையே, தாவும் உணர்வையே, உதறித்தள்ள வேண்டும்.

சிற்றின்ப மயக்கத்திலிருந்து ஒருவன் விழித்ததும் புதிய ஆபத்து ஒன்று எதிர்ப்படுகிறது. போகங்களில் ஈடுபட்டிருக்கும்-வரையிலும் அந்த ஆபத்து கிடையாது. அதிலிருந்து மீள்கையில்தான் அந்த ஆபத்து தோன்றுகிறது. தியாகத்தில் மாட்டிக் கொள்வது என்பதுதான் அந்த ஆபத்து!

பழைய மனப்பான்மையே நீடித்தால், உள்ளே புரட்சி நிகழாவிடில், மாறுதல் வெளிப்புறம் மட்டும் ஏற்பட்டால், நீ தியாகத்தில் சிக்கிக்கொள்வாய். குடும்பஸ்தனாக இருந்த நீ துறவியாவாய். பணத்தை, குடும்பத்தை, வீட்டைக் கைவிடுவாய். ஆனால் உள்மனத்தில் உன்னை வேறுவிதமான வலைகள் பிடித்துக் கொண்டுவிடும். பற்றாக அமைந்து உன்னைப் பிடிக்க உன்னிடம் ஒரு பேரரசு இருக்க வேண்டியதில்லை; ஓர் அரைத்துணியே (கோவணமே) போதுமே! திகம்பர (ஆடையற்ற) நிலையில்கூட பற்று அம்சம் உண்டு. இவ்வாறு, தியாகமும் ஒருவகையான பற்றாகும்.

**மு**ற்கால சூஃபிகளின்* கதை. ஓர் அரசகுமாரன் குருகுல வாசத்தில் குறிப்பிட்ட ஒருவனுடன் நெருக்கமான நட்புக் கொண்டிருந்தான். படிப்பு முடிந்தபின் நண்பர்கள் வெவ்வேறு திசையில் பிரிந்தனர். அரசகுமாரன் தந்தைக்குப் பிறகு அரசனானான். அவன் நண்பன் தியாகியானான் துறவியானான். அவன் எல்லா திசைகளிலும் புகழ்பெற்றான். தொலைவிலிருந்து எல்லாம் யாத்திரிகர்கள் அவனை தரிசிக்க வந்தனர்; பலர் அவனது தொடர்பை (சத்சங்கத்தை) விரும்பினர். தேடிவருவோரின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போக அவனது தியாகமும் வளர்ச்சி பெற்றது. எல்லாவற்றையும் படிப்படியாகத் துறந்த அவன் கடைசியில் ஆடைகளையும் துறந்து

* இஸ்லாமியக் கோட்பாடுகளை நெகிழ்ந்து கொடுத்துப் பின்பற்றும் சம்பிரதாயத்தினர்.

திகம்பரனானான். சூரியனைப்போல் ஒளிவீசிய அவன் தியாகிகள் எல்லோரையும்விட உயர் தியாகியாக விளங்கினான்.

ஆனால் அரசனுக்கு ஒரு சந்தேகம். துறவியாகிவிட்ட இந்த நண்பன் படிக்கும் காலத்தில் மிகவும் கர்வியாக இருந்தான். திடீரென இவனால் பெரிய தியாகமெல்லாம் எப்படிச் செய்ய முடிந்தது? இவ்வளவு மாற்றம் நம்ப முடியவில்லையே. அரசன் தனக்கேற்பட்ட குறுகுறுப்பிற்கு விடை கண்டுபிடிப்பதற்காக அந்தத் துறவியை, பழைய நண்பனை, தனது தலைநகரத்திற்கு விஜயம் செய்யும்படி அழைப்பு விடுத்தான். 'நீ மகா தியாகியாகி விட்டாய் என அறிகிறேன். உன்னை வரவேற்று சேவை புரிய எனக்கு வாய்ப்புக்கொடு. என் குடிமக்களுக்கு ஞானம் கொடு. அவர்களை அறியாமையிலிருந்து விழித்தெழச் செய்,' என்று செய்தியனுப்பினான்.

அழைப்பு ஏற்கப்பட்டது. துறவி தலைநகரை நோக்கிக் கிளம்பினார். அரசன் அவரை வரவேற்கப் பலத்த ஏற்பாடு செய்தான். துறவியோ பழைய நண்பன். புகழ்பெற்றவன். கௌரவம் பெற்றவன். எனவே அரசன் எந்தக் குறையும் இல்லாதபடி நகரை அலங்கரிக்கச் செய்தான். எங்கும் பழக்குலைகள் தொங்கின. பாதையில் விலையுயர்ந்த கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தன. அரண்மனை வரை வழியெல்லாம் விளக்கு. தீபாவளிபோல் தோன்றியது.

அரசன் தன் அதிகாரிகள் பின்தொடர நகர வாயிலுக்குச் சென்று காத்திருந்தான். துறவி வந்தார். அவரது கோலத்தைப் பார்த்து அரசன் ஆச்சரியமடைந்தான். அவரது முழங்கால்வரை சேறு அப்பியிருந்தது. அப்போது மழை காலம் இல்லை. நகரத்துக்கு வரும் பாதை வறண்டிருந்தது. மக்கள் தண்ணீருக்குத் தவித்துக் கொண்டிருந்தனர். பிறகு எப்படி முழங்காலைத் தொடுமளவு சேறு படரமுடிந்தது? ஆனால் அரசன் மற்றவர்களின் முன்னிலையில் அதுபற்றி விசாரிக்க விரும்பவில்லை. இருவரும் அரண்மனையை அடைந்து தனிமையில் பேசிக் கொண்டனர். அரசன் கேட்டான், "உங்கள் கால்களில் ஏன் சேறு படர்ந்திருக்கிறது?"

அதற்குத் துறவி, "நகரத்தை நோக்கி நான் வரும் வழியில் சந்தித்தவர்கள், 'அரசன் தன்னிடம் செல்வம் குவிந்துள்ளதை டம்பமாகக் காட்டுவதற்காகத் தலைநகரை அளவுக்கு மீறி

அலங்கரித்துக் கொண்டிருக்கிறான். தன் செல்வத்தால் உங்களை வெட்கப்பட வைக்க விரும்புகிறான். நீ வாழ்க்கையில் என்ன சம்பாதித் தாய்? ஆடையில்லாத ஆண்டியாக அல்லவா ஆகியிருக்கிறாய். என்றெல்லாம் மறைமுகமாகக் கேட்பதுபோல், லட்சக்கணக்கில் பணம் செலவழித்து வழியெல்லாம் விலையுயர்ந்த கம்பளம் விரித்திருக்கிறான். மணமகளை அலங்கரிப்பதுபோல் நகரத்தை அலங்கரித்திருக்கிறான். இதையெல்லாம் காண்பித்து உங்களை மட்டம்தட்ட விரும்புகிறான்.' என்றனர். என்னைக் கேவலப்படுத்த முயன்ற பலரை நான் பார்த்திருக்கிறேன். அரசனால் விலையுயர்ந்த கம்பளங்களை விரித்துப் பரப்ப முடியுமென்றால், ஆண்டியாகிய என்னால் கால்களில் சேறு அப்பிக் கொண்டு அந்த கம்பளங்களின் மேல் நடைபோட முடியும். அற்பமான காசு பணத்தை நான் மதிப்பதில்லை." என்றார்.

அரசன் சொன்னான், "அப்பாடா! இப்பொழுதுதான் எனக்கு நிம்மதி. என் குறுகுறுப்பும் சந்தேகமும் நீங்கியது. நான் எதிர்பார்த்த படியே நீங்கள் என்னை திருப்திப்படுத்தி விட்டீர்கள்."

துறவி கேட்டார், "என்ன சந்தேகம் உனக்கு? எதை அறியும் குறுகுறுப்பு?"

"நான் உன்னை நெடுங்காலமாகவே அறிவேன். கல்வி நிலையத்தில் உன்னைவிட திமிரானவனைப் பார்த்ததில்லை. தற்காலத்திலோ பணிவின் அவதாரமாகத் திகழ்கிறாய். இதை என்னால் நம்ப முடியவில்லை. இது குறித்துத்தான் எனக்கு சந்தேகம் இருந்தது. இப்போது அது நீங்கிவிட்டது. வா, என்னைத் தழுவிக்கொள். நாம் இருவரும் அப்படியேதான் இருக்கிறோம். மாறவில்லை. நான் அரசன் என்ற கர்வத்தை என்னிடம் நிரப்பி வைத்திருக்கிறேன். நீ வேறு விதமான அகங்காரத்தை உனக்குள் நிரப்பிக் கொண்டுள்ளாய். நம்முடைய திசைகள்தான் வெவ்வேறு. ஆனால் சேருமிடம் ஒன்றேதான். நான் கர்வி என்பது எனக்குத் தெரியும். ஆனால் நீயும் கர்வி என்பது உனக்குத் தெரியவில்லை. எனக்கு என்றாவது ஒருநாள் கர்வம் சலித்துப்போகும். உனக்கு உன் கர்வத்தின்மீது சலிப்பு ஏற்படுமா? பாவம், உன்னைப் பார்த்தால் இரக்கமாக இருக்கிறது. நீ உன் அஹங்காரத்தை நன்றாக அலங்கரித்திருக்கிறாய். நீ அதற்கு தியாகம் என்ற ஆடையை அணிவித்துள்ளாய்."

உலகம் சலித்துப் போனவனின் தியாகம் ஆபத்தானது.

உலக வாழ்க்கையில் ஆழ்ந்து கிடப்பவர் இரு வகையினர். ஒரு வகையினர் கடைகளில் உட்கார்ந்திருக்கிறார்கள். பணம் சேகரித்துக் குவிக்கிறார்கள். வெளிப்பொருள்களால் தங்களை நிரப்பிக் கொள் கிறார்கள். இன்னொரு வகையினர் கோயில்களில் அமர்ந்திருக் கிறார்கள். அவர்கள் பணத்தை எட்டி உதைத்தவர்கள். வெளிப்பொருள் களைக் கைவிட்டுத் தியாகத்தால் தங்களை நிரப்பிக் கொள்வோம் என நினைக்கிறார்கள். இருவகையினரும் ஒரேமாதிரியான பிரமைக்கு உள்ளாகியிருக்கிறார்கள். வெளிப்பொருள்களால் தன்னை எவனும் நிரப்பிக்கொள்ள முடியாது. அதேபோல், வெளிப்பொருள்களை உதறித்தள்ளுவதாலும் ஒருவன் நிரம்ப முடியாது. வெளியுலகிற்கும் தன்னை நிரப்பிக் கொள்வதற்கும் (முழுமைப்படுத்திக் கொள்வதற்கும்) யாதொரு சம்பந்தமும் கிடையாது.

அஷ்டாவக்ரர் முதலில் ஜனகரை பரீட்சை செய்தார். மேலே தரப்பட்டுள்ள சூத்திரங்களில் பரீட்சை எதுவும் கிடையாது. ஆசை காட்டித் தூண்டிப் பார்க்கிறார். இந்த ஆசைத் தூண்டுதலை ஒவ்வொரு தியாகியும் சமாளிக்க வேண்டியுள்ளது; இன்பங்களை விட்டு ஓடுபவன் எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது. "நீ தியாகியாகி விடு," என்று அஷ்டாவக்ரர் ஜனகரைத் தூண்டிப் பார்க்கிறார். "நீ ஞானம் பெற்று விட்டாய். இனி தியாகம் மேற்கொள். அனைத்தையும் துற. இந்த மாயாமோகத்தைக் கடந்துசெல்," எனத் தூண்டுகிறார்.

ஜனகருக்கு அஷ்டாவக்ரர் அளிக்கும் இத்தகைய தூண்டுதல்கள் முதலில் அவர் செய்த பரீட்சையைவிட கடினமானவை. சிற்றின்பங்களி லிருந்து விலகும் ஒவ்வொரு மனிதனும் தியாகத்தை நோக்கிக் கவரப்படுகிறான். எனவே அஷ்டாவக்ரர் ஜனகரைச் சீண்டிப் பார்ப்பது நியாயம்தான்.

ஆனால் தியாகத்தையும் கடந்து சென்றால்தான் முக்தி நிலை ஏற்படும். போகங்களைத் துறக்க வேண்டியதுதான். அடுத்துவரும் தியாகத்தையும் துறக்க வேண்டும். உலகைத் துறக்க வேண்டியதுதான். அடுத்துவரும் மோட்சத்தையும் துறக்க வேண்டும். அப்போதுதான் பரம முக்தி என்னும் நிலை வாய்க்கிறது.

பரம முக்தி என்பதற்குப் பொருள் இனி எதன் மீதும் ஆசை பாக்கி இல்லை என்பதுதான். தியாகத்தை மேற்கொள்ளும்போதும்

ஏதோ காரணம் இருக்கத்தான் செய்கிறது. காரணம் இருக்குமிடத்தில் தியாகத்திற்கு என்ன வேலை? பிறகு சிற்றின்பத்திற்கும் தியாக இன்பத்திற்கும் இடையே என்ன வேறுபாடு? இரண்டும் எதிர்பார்ப்பு என்னும் ஒரே கணக்கின் கீழ்தானே வருகின்றன.

ஒருவன் சிற்றின்பத்தில் ஆழ்ந்துள்ளான். பணம் திரட்டுகிறான், அழகான பெண்ணைத் தேடி அலைகிறான். பெரிதாக வீடு கட்டுகிறான். ஏன் அவ்வாறெல்லாம் செய்கிறான் என்று கேட்டுப்பார். 'இதனாலெல்லாம் சுகம் கிடைக்கிறது." என்று அவன் சொல்வான்.

இன்னொருவன் அழகான வீட்டைத் துறக்கிறான்; மனைவியைத் துறக்கிறான்; குடும்பத்தினரை, சொத்தைத் துறக்கிறான்; ஆடைகளையும் களைந்துவிட்டு வெற்றுடம்பாக அலைகிறான்; சந்நியாசியாகி விடுகிறான். "ஏனப்பா இப்படியெல்லாம் செய்கிறாய்?" என்று அவனிடம் கேட்டுப்பார். "இதனாலெல்லாம் சுகம் கிடைக்கிறது." என்பான் அவன்.

இந்த இருவகையினருமே சுகத்திற்குப் பேராசைப்படுகிறார்கள். சுகத்தைப் பெறச் சில நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென இருவகையினருமே நினைக்கிறார்கள். இது ஒரு பிரமை.

சுக உணர்வு என்பது சுபாவமானது, இயற்கையாக அமைவது. நீ அதைப் பெறுவதற்காக முயலுகின்ற வரையிலும், நீ அதைப் பெற முடியாத நிலையிலேயே நீடிப்பாய். நீ அதைப் பெறும் முயற்சியி லேயே அதை இழந்துவிட்டாய். குடும்பஸ்தர் (இல்லறத்தான்) ஒருவிதத்தில் சுகத்தை இழக்கிறான் எனில் தியாகி வேறு விதத்தில் அதை இழக்கிறான். எந்த விதத்தில் இழக்கிறான் என்பது முக்கிய மன்று. நீ எந்த விதமான மதுவைக் குடித்து மயக்கமடைந்தாய் என்பது முக்கியமன்று. நீ எந்த நிறுவனத்தின் எந்தப் பெயரிலுள்ள மதுவைக் குடித்தாய் என்பதும் முக்கியமன்று.

இல்லறத்தான் சொல்கிறான்-ஒவ்வொரு பொருளும் இந்தந்த அளவு என்னிடம் இருந்தால் நான் சுகமாக இருப்பேன்.

தியாகி சொல்கிறான்-என்னிடம் எதுவுமே மிஞ்சியிராமல் போனால் நான் சுகமாக இருப்பேன்.

இரண்டு பேரும் குறிப்பிடும் சுகம் நிபந்தனைகளைக் கொண்டிருக்கிறது. சுகத்தைப் பெற நீ நிபந்தனை விதிக்கும்வரை சுகம் உனக்கு சுபாவமானது என்னும் விஷயத்தை நீ புரிந்து கொள்ள முடியாது. அதை அடைவதற்காக நீ எங்கும் போக வேண்டியதில்லை. தேடிப் போவதைக் கைவிடு. வெளியில் அதைத் தேடாதே. நீ நிதானமாக உனக்குள்ளே அமிழ்ந்து பார்.

இதைத்தான் அஷ்டாவக்ரர் தமது ஆரம்ப சூத்திரங்களில் கூறுகிறார்-உள்ளுணர்வில் சாந்த நிலையை அடைவதுதான் சுகம், ஆனந்தம், சச்சிதானந்தம் என்பதெல்லாம்.

நீ எங்கும் போகாதே. போக வேண்டுமென்று மனத்தில் அலை எழவேண்டாம். போதல் என்பதன் அர்த்தம் நீ உன் சுபாவத்திலிருந்து பிறழ்கிறாய் என்பதாகும். நீ எதையாவது யாசித்தால், எதையாவது விரும்பினால், எதையாவது தேடியலைந்தால், நீ உன் சுபாவத்திலிருந்து சறுக்கிவிட்டாய் என்று பொருள். யாசிக்காதே, தேடாதே, எங்கும் போகாதே. கண்களை மூடிக்கொள். உள்ளத்தினுள், உனக்குள் அமிழ்ந்துசெல்.

அது இக்கணமும் உன்னிடம் உள்ளது. உன்னிடமுள்ள அதை நீ எப்பொழுதும் எடுத்துக்கொண்டு செல்கிறாய். அது உன்னிடமுள்ள கந்தல் மூட்டைக்குள் ஒளிந்திருக்கிறது. மறைந்துள்ள வைரத்தைப் பார்க்காமல், கந்தல் மூட்டையைப் பார்த்து, உன்னை யாசகனாகக் கருதி, பிச்சையெடுக்கிறாய். கையிலுள்ள மூட்டைக்குள் வைரமிருந்தும் உன்னிடம் ஒன்றுமில்லையென நினைக்கிறாய். மூட்டையை அவிழ். நீ வெளியே தேடியது அதனுள்ளே இருப்பது கண்டு அசந்துபோவாய். ஜனகரும் அப்படித்தான் ஆடிப்போனார்.

ஜனகர் சொன்னார்-எத்தகைய ஆச்சரியம் இது! நான் என்னையே நமஸ்கரிக்க வேண்டும்போலும், என் பாதங்களையே தொட்டு வணங்க வேண்டும் என்றும் அல்லவா தோன்றுகிறது. எதிர்பார்க்கவே இல்லை. எது இப்பொழுது என்னிடமே காணக் கிடைத்ததோ அதையல்லவா இத்தனை காலமாக நான் வெளியே தேடிக் கொண்டிருந்தேன். நான் கடவுளர்க்கெல்லாம் கடவுள். நான் பரமேஸ்வரன். இந்த உலகத்தின் சாரமெல்லாம் நான்தான். சக்கரவர்த்தியாகிய நான் இதுநாள்வரை பிச்சைக்காரனாக அல்லவா திரிந்து கொண்டிருந்தேன்!

சக்கரவர்த்தியாக இருப்பது நமது இயல்பு. பிச்சைக்காரனாக ஆவது நாம் மேற்கொண்ட பழக்கம். அது தவறானது. தவற்றைச் சரி செய்துகொள்ள வேண்டும். எங்கேயும் தேடிப் போக வேண்டியதில்லை; எதையும் தேட வேண்டியதில்லை.

இன்ப மயக்கத்திலிருந்து விழித்தெழுபவன் வேறு வகை மாற்றைத் தேடுகிறான். ஆனால் அந்த மாற்றும் இன்பமாக இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறான்.

**வாழ்க்கையெனும் போராட்டத்தில்**
**அலுத்து, சலித்துப் போனேன்**
**ஏ பாடகனே! அடுத்து நீ**
**காதல் கீதம் ஒன்று பாடிக்காட்டேன்**

போதும், போதும் இந்தப் போராட்டம். இதற்குமேல் தாங்க முடியாது. தைரியம் இழந்துவிட்டேன். மனம் உடைந்துவிட்டேன்.

சரி, இதென்ன விசித்திரம்! வாழ்க்கையெனும் ராகத்தால் நீ சலித்துப் போனாய் என்றால், காதல் கீதத்திற்கு ஏன் கோரிக்கை விடுகிறாய்? வாழ்க்கைப் போராட்டத்தால் அலுத்துப் போனாய் என்றால், காதல் அல்லது அன்பிற்கு ஆசைப்பட்டால், மீண்டும் அதே வாழ்க்கைதானே அமையும்.

நாம் மாறுகிறோம், ஆனாலும் மாறவில்லை. நாம் திரும்பு கிறோம், ஆனாலும் திரும்பவில்லை. நாம் மேலோட்டமாக எல்லா விளையாட்டுகளும் விளையாடுகிறோம். நாம் அலைகளில் மேலோட்டமாக மிதக்கிறோம். உள்ளே ஆழ்வதில்லை. ஓர் அலையிலிருந்து இன்னொன்றுக்கு, அதிலிருந்து மூன்றாம் அலைக்கு, என நாம் அலைகளின் நுரையில் மிதக்கிறோம். எந்த முத்து கிடைத்தால் முக்தி கிடைக்குமோ அதைப் பெறுவதற்கு ஆழமாக முழுக்குப் போட வேண்டும். மூழ்காதவனுக்கு முத்து எப்படிக் கைவசமாகும்?

நாம் ஆசைகளில் பேராசையாக, விருப்பங்களில் பெருவிருப்ப மாக எது உள்ளதோ அதைத்தான் நாடுகிறோம். நாம் பணத்தில் தேடுகிறோம், பதவியில் தேடுகிறோம், நாம் தேடுவதென்னவோ பரமாத்மாவைத்தான். பதவி கிடைத்தால் நமது சக்தி அதிகரித்து நாமே ஒரு கடவுள்போல் உணர்கிறோம். நம்மிடம் செல்வமிருந்தால் நாம்

ஏழையாக இல்லாத கடவுளென நினைக்கிறோம். நம்மிடம் ஞானம் இருந்தால் நாம் அறியாமை இல்லாத கடவுளென நினைக்கிறோம்.

கடவுளை எத்தனையோ அலைகளில் தேடினோம். அவர் நம் கையில் அகப்படவில்லை. உள்ளங் கையில் நுரைதான் ஒட்டிக் கொள்கிறது. அப்போது இன்னொரு அலையில் தென்படும் நுரை நம்மை அழைக்கிறது. நுரை அழகானது. அதிகாலை சூரிய கிரணங்களின் ஒளியில் அது வண்ணமயமாகத் திகழ்கிறது. முத்தைத் தோற்கடிக்கும் வெண்மை, வானவில்போல் வர்ணஜாலம் முத்தில் தெரிகிறது. உயர எழும்பும் அலைமேல் தெரியும் நுரை இமயத்தின் மீது உறைந்திருக்கும் பனியை நினைவூட்டுகிறது. கடலின் சாரமெல் லாம் வெண்ணெயாகத் திரண்டதுபோல் நுரை காட்சியளிக்கிறது. ஆனால் கையில் எதுவும் சிக்குவதில்லை.

நாம் விடுபட எத்தனையோ முறை புரண்டு பார்த்தோம். ஆனால் ஓர் அலையிலிருந்து விடுபட்டாலும் இன்னொன்றில் சிக்கிக் கொண்டோம். எத்தனையே பேர் வீட்டைத் துறந்து சந்நியாசி யானார்கள். சிறிது காலம் சென்றபின் இன்பங்களை நாடி வீட்டிற்குத் திரும்பினர்கள். பிறகு மறுபடியும் திகட்டிப்போய் சந்நியாசியானார்கள். இது ஒன்றும் புதிய விளையாட்டில்லை. இது மிகவும் பழைமையானது. சிலர் முதல் முறையாகத் துறவறம் மேற்கொள்ள வருகிறார்கள். ஆனால் அவர்களின் மனத்தை நான் ஆராய்ந்ததில் அவர்கள் மனத்தளவில் ஏற்கெனவே பல முறை துறவியாக வேண்டுமென விரும்பியதை உணர்ந்தேன். இப்பொழுது என்னிடம் வந்துள்ளார்களே மறுபடியும் திரும்பிவிடும் விளையாட்டு விளையாடுவார்களா அல்லது இந்த முறை புரட்சி விளையுமா? புதிய அலை தோன்றுமா? ஆழத்தில் இறங்குவாரா?.

போகிகளைக் காண்கிறேன். அவர்கள் யோகிகளாக வேண்டும் என்று கனவு காண்கிறார்கள். துறவிகளுடனும் பழகி வருகிறேன். பல்லாண்டுகளாகப் பலவகைத் துறவிகளுடன் அலைந்திருக்கிறேன். துறவிகளுக்கோ உலக இன்பக் கனவுகள் வருகின்றன! இது வேடிக்கை யானது. நீ சவாரி செய்யும் அலை பயனற்றதாகத் தோன்றுகிறது. தொலைவில் எழும் அலை, அக்கரைப் பச்சைபோல், கவர்ச்சியாகத் தெரிகிறது.

போகி நினைக்கிறான் தியாகி ஆனந்தமாக வாழ்கிறான் என்று. ஆகவே அவன் தியாகியின் பாதங்களைத் தொட்டு வணங்குகிறான். நீயும் அப்படிச் செய்கிறாய். உனக்கு எப்பொழுது புத்தி வரும்? எப்பொழுது கண்கள் திறக்கும்? தியாகி ஆனந்தமாக இருப்பதாக எண்ணி நீ அவர் பாதங்களை வணங்கினால் அது ஆபத்தானது. நீ இன்பங்களால் சலித்துப் போனபின் தியாகி ஆகிவிடுவாய். ஏனெனில் நீ யாராக ஆக விரும்புகிறாயோ அத்தகையவரின் காலைத்தானே தொடுவாய். பாத ஸ்பரிசம் ஒரு சமிக்ஞை மட்டுமே. அதன் மூலம் நீ ஒரு தகவல் தருகிறாய். அதாவது, சில சிக்கல்கள் இல்லாவிடில் நீயும் அவரைப் போன்றே தியாகி ஆகியிருப்பாய்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் மிகவும் சோகமாகக் காணப்பட்டார். நண்பர் ஒருவர் காரணம் விசாரித்து ஆறுதல் சொன்னார். "ஆம், உன் மனைவி மாண்டு விட்டாள்தான். ஆனால் நீ இன்னமும் இளமையாகத் தான் இருக்கிறாய். இன்னொரு கல்யாணம் செய்து கொள்ளலாமே. பல பேர் என்னிடம் தங்களுக்குத் திருமண வயதில் பெண் உள்ளதாகவும், முல்லாவை திருமணம் செய்துகொள்ள சம்மதிக்க வைக்குமாறும் சொல்லியிருக்கிறார்கள்."

முல்லா பதிலளித்தார்: "மீண்டும் திருமணம் செய்து கொள்ள லாம்தான். ஆனால் நாலு காரணங்களால் நான் கல்யாணம் செய்து கொள்ள முடியாத நில்லயில் உள்ளேன்."

நண்பர் சொன்னார்: "ஒரு பிரம்மசாரிகூட தனக்கு ஏன் திருமணமாகவில்லை என்பதற்கு ஒன்றிரண்டு காரணம்தான் சொல்ல முடியும்; நான்கு காரணம் சொல்ல முடியாது. அப்படி இருக்க, உனக்கு அப்படி என்ன நான்கு காரணங்கள் தடையாக உள்ளன?"

"மூன்று மகள், ஒரு மகன்" முல்லாவின் பதில் பளிச்சென்று வந்தது. ஏற்கெனவே உள்ள நான்கு குழந்தைகள்தான் மறுமணத்திற்குத் தடையாக உள்ளதை முல்லா நயமாகச் சுட்டிக்காட்டுகிறார்.

**போ**கி தியாகியின் கால் தொட்டு வணங்கச் செல்கிறான். அவனும் தியாகியாக விரும்புகிறான். ஆனால் எத்தனையோ காரணங்கள் தடுக்கின்றன. நீ மகாத்மா எனப்படுபவரைப் பணிந்து

வணங்க ஏன் செல்கிறாய்? நீ என்ன நினைக்கிறாய் தெரியுமா? 'எனக்கு அதிர்ஷ்டம் இருந்தால் நானும் மகாத்மா ஆகியிருப்பேன். அதற்கான வேளை வரவில்லை. அதுவரை அத்தகையவரை வணங்கவாவது செய்வேன்; அவருக்கு உரிய மரியாதையையாவது காட்டுவேன்,' என்று எண்ணுகிறாய்.

நீ கொடுக்கும் மரியாதை உனக்குள் மறைந்திருக்கும் (துறவியாகும்) எதிர்கால ஆசையின் பாதங்களில் சமர்ப்பிக்கும் மலராகும். நீ வணங்குவது எதிரேயுள்ள துறவியை அன்று. உன்னுள் இருக்கும் எதிர்கால ஆசையின் உருவச் சிலையைத்தான் பணிகிறாய். முல்லாவுக்கு இருந்ததுபோன்ற ஏதேனும் காரணம் உனக்கு இல்லாவிடில் வந்தது ஆபத்து. ஒரு குதிகுதித்து சந்நியாசியாகி விடுவாய், தியாகியாகி விடுவாய். எனக்கு தியாகிகளின் உண்மை நிலை தெரியும். அவசரப்பட்டு தியாகியானோமே என அவர்கள் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

**எ**ன்னை ஒரு துறவி சந்தித்தார். வயது 70-75 இருக்கும். அவர் சொன்னார்: "உங்களிடம்தான் நம்பகமாக ஒரு விஷயம் சொல்ல முடியும். வேறு யாரிடமும் அதைத் தெரிவிக்க முடியாது. என் மனவேதனையை வேறு யாரிடமும் பகிர்ந்து கொள்ள முடியாது. என் பாதங்களைத் தொடுவோரிடமும், என்னிடம் மரியாதை காட்டுபவர்களிடமும் உண்மையை வெளிப்படுத்த முடியாது. உங்களிடம் சொல்லலாம். நான் துறவறம் மேற்கொண்டு 40 ஆண்டுகளாகின்றன. ஆனால் பலன் எதுவும் கிடைத்ததாகத் தோன்றவில்லை. நான் சந்நியாசியானது தவறோ என்று சந்தேகப்படத் தோன்றுகிறது. இரவில் கெட்ட கனவுகள் வருகின்றன. இதைவிட நான் இல்லறத்தானாகவே இருந்திருக்கலாம். வீடு-நிலம் இருந்தது, மனைவி இருந்தாள், குழந்தைகள் இருந்தன. இப்போதுள்ள நிலைமையை விட 40 வருஷங்களுக்கு முன் நான் இருந்த நிலை மனத்துக்குப் பிடித்திருக்கிறது. அந்த நிலையே சரியானது என்று தோன்றுகிறது. நான் 40 வருஷங்களுக்குமுன் உதறித் தள்ளிய அலை இப்போது நுரை நிறைந்து விளங்குகிறது. அந்த நுரை. அலையின் கிரீடம்போல் தோன்றுகிறது. மீண்டும் வானவில் உதிக்கிறது."

கெட்டவன் நல்லவன் ஆவதற்குக் கனவு காண்பதைப்போல், நல்லவன் கெட்ட செயல்கள் புரிபவனாகத் தன்னைக் கனவில்

காண்கிறான். இதை அறிந்தால் நீ ஆச்சரியப்படுவாய். உன்னால் துறவிகளின் கனவில் எட்டிப் பார்க்க முடியுமானால் மிரண்டு போவாய். கனவில் அவர்கள் குற்றவாளிகள் போல் தெரிவர்.

நீ சிறைக்குச் சென்று உன்னால் குற்றவாளி கைதிகளின் கனவில் எட்டிப் பார்க்க முடியுமானால் ஆச்சரியப்படுவாய். அவர்கள் தமது குற்றப் பின்னணியால் சலித்துப் போய் விட்டனர். கெடுதல்கள் தொடர்ந்து செய்து களைத்துப் போய்விட்டனர். இனி அவர்கள் நல்லவர்களாக மாற விழைகின்றனர். சிறையிலிருந்து வெளியே வர ஒரு வாய்ப்புக் கிடைத்தால் போதும். கெட்ட புத்தியைக் கைவிட்டு, அவர்களது மனம் புனிதம் அடைந்துவிட்டதை உலகிற்கு நிரூபிப்பார்கள். உத்தரவாதம் இல்லைதான். சில ஆண்டுகள் கழித்து விடுதலையாகி சமூகத்தில் வாழத் தொடங்கிய பின் மீண்டும் பழைய அலைகள் புத்துயிர் பெற்று அவர்களைச் சாய்க்கக்கூடும். அது வேறு விஷயம். ஒருவன் விழித்திருக்கையில் எத்தகையவனாக உள்ளானோ அதற்கு எதிரானதைத்தான் கனவில் பார்க்கிறான்.

**அ**ஷ்டாவக்ரர் ஜனகருக்கு ஞானம் வசப்பட்டதை சோதித்துப் பார்த்துவிட்டார். அடுத்து, தூண்டுதல்கள் கொடுத்துப் பார்க்கிறார். இது ஆழமான பரீட்சையாகும். "ஜனகரே, உமக்கு ஞானம் ஏற்பட்டு விட்டதல்லவா? சரி, எல்லாவற்றையும் துற. தியாகத்தை மேற்கொள்." ஜனகர் இந்தத் தூண்டுதலுக்கு வசமாகியிருந்தால் அஷ்டாவக்ரர் வைத்த ஆழமான தேர்வில் தோற்றிருப்பார். ஜனகர் தவிர வேறு சாதாரண மனிதனாயிருந்தால் அஷ்டாவக்ரரின் தூண்டுதலால், கவரப்பட்டிருப் பான். அவரது பேச்சு அவ்வளவு சூட்சுமமாக இருந்தது. முதல் சூத்திரத்தில் **(சுலோகம் 66)** சொல்கிறார், 'உனக்கு யாருடனும் சம்பந்தம் கிடையாது. இதை நீ அறிவித்துள்ளாய். ஆகவே நீ தூயவன். நீ எதை தியாகம் செய்ய விரும்புகிறாய்? அப்படியானால் உடல் மீதுள்ள பற்றை தியாகம் செய்து ஒழித்து நீ மோட்சத்தை அடை வாயாக.'

இது சிக்கலான சூத்திரம். அஷ்டாவக்ரர் மிக நுணுக்கமாகத் தூண்டுகிறார். 'ஜனகரே, நீர் சுத்தமானவர். உமக்கு யாருடனும் சம்பந்தம் இல்லை. உமது உள்ளத்தில் தியாக அலைகள் எழுவதைக் காண்கிறேன். நீர் எதையாவது தியாகம் செய்ய விரும்புகிறீர்.

அப்படியானால் உடல்மீது உமக்குள்ள அபிமானத்தை (பிடிப்பை) தியாகம் செய்து விடுங்களேன். இதனால் உமக்கு மோட்சம் சித்தியாகிவிடும்.'

அஷ்டாவக்ரர் சொல்வது "நான் உனக்குள் தியாக அலை எழுவதைக் காண்கிறேன். இப்போதைக்கு மந்தமான அலையாக உள்ளது. நீ ஒருவேளை அதை இதற்குள் உணர்ந்திருக்க மாட்டாய். அதற்கு உனக்குச் சற்று நேரமாகலாம். உன் ஆழ்மனத்தில் ஓர் அலை தலைதூக்கிக் கொண்டிருக்கிறது. சிறிது காலம் கழித்து உனது உள்ளுணர்வாகிய பாறையில் அது மோதும். அப்போது நீ அதை அறிந்து கொள்வாய்."

மனத்தில் எண்ணம் வெளிப்படுவதில் நான்கு கட்டங்கள் உள்ளன. முதல் கட்டத்தில் விதை வடிவில், இருண்ட நிலையில் இருக்கும் உன் எண்ணத்தை நீ உணர்வதுகூட இல்லை.

இரண்டாவது கட்டத்தில் சிறிது வெளிச்சம் தெரிகிறது. மனத்தில் எண்ணம் தெரிவதும் தெரியாததுமாக இருக்கிறது. அந்த பூர்வாங்க படிவம் (உருவரை) இன்னும் தெளிவாகவில்லை. ஆனால் குரல் லேசாக எழுவதுபோல் இருக்கிறது.

மூன்றாவது கட்டத்தில் உன் எண்ணம் தொண்டைவரை வந்துவிடுகிறது. என்ன பேச வேண்டும் என்பது உனக்குத் தெரிந்து விடுகிறது. அந்த எண்ணத்துடன் உனக்குள்ளே பரிச்சயம் ஏற்பட்டு விட்டது. நீ உள்ளே பேசியும் விட்டாய். இனி வெளிப்புறமாக அதைக் கூறவில்லை.

நீ உன் எண்ணத்தை வெளிப்புறமாக வெளிப்படுத்துவது நான்காவதான கடைசிக் கட்டமாகும்.

ஆனால் உனக்குள்ளே முதல் கட்ட நிலை உருவாகும்போதே குரு அதை ஊகித்து விடுவார். ஆகவேதான் அஷ்டாவக்ரர் ஜனகர் உள்ளத்தில் முதல் கட்ட எண்ண அலை எட்டிப் பார்ப்பதைக் கவனிக்கிறார். சிறிது நேரத்தில் இரண்டாம் கட்டம் தொடங்கும். எண்ணம் மங்கலாக வெளிப்படும் நேரம் இது. மூன்றாம் கட்டத்தில் எண்ணம் வலுப்பெறும், தெளிவடையும். நான்காவது நிலையில் ஜனகர்

அறிவிப்பார்-நான் எல்லாவற்றையும் கைவிட்டேன்; எல்லாவற்றையும் தியாகம் செய்தேன். இதோ கிளம்பிவிட்டேன் காட்டிற்கு.

எண்ணம் என்பது இந்த நிலைவரை வந்தடையும்முன் ஒரு நடவடிக்கை தேவை. ஏனெனில் இதுவரை வந்துவிட்டால் பிறகு திரும்புவது கஷ்டம். எண்ணத்திலிருந்து விடுபட, அதன் ஆரம்ப கட்டத்தில் அதைத் தடுத்துவிட்டால் அதன் பிடியில் நீ அகப்பட்டுக் கொள்ள மாட்டாய். நீ விதை வளர்வதைத் தடுத்துவிட்டால் அது பிறகு மரமாக முடியாது. விதையை மரமாக வளரவிட்டால் அதில் பழங்கள் தோன்றும். மேலும், மரம் ஆயிரக் கணக்கில் விதைகளை பூமியில் சிதறச் செய்யும். பிறகுதான் பெரும்பான்மையோர் மரத்தை இந்த அளவிற்கு வளரவிட்டிருக்கக் கூடாது என்று விழிப்படைகிறார்கள். ஆனால் காலம் கடந்துவிட்டது. இனி நீ அந்த மரத்தை வெட்டிவிட்டாலும் பெரிய மாற்றம் விளையாது. ஏனெனில் மரம் ஆயிரக் கணக்கான விதைகளை நிலத்தில் தூவிவிட்டது. உரிய காலத்தில் அவை முளைக்கும். ஆயிரம் மரங்கள் புதிதாகத் தோன்றும். மரம் வளர்ந்து விதை பரவியபிறகே விழிப்புற்று அதை வெட்டுவது உனக்குப் பழக்கமாகி விட்டது. மீண்டும் மரங்கள் வளர்கின்றன. இப்படித்தான் நம் வாழ்க்கையில் நடக்கிறது.

**பு**த்தர் பிட்சுகளுக்கு விபஸ்ஸனா என்ற முறையை அறிமுகப் படுத்துகிறார். இது ஒருவகையான விழிப்பு உணர்வு. உள் விழிப்பு. இந்தப் பயிற்சியினால் காலப்போக்கில் முதல் கட்டத் தோற்ற நிலையிலேயே எண்ணம் உனக்குக் காட்சியளிக்கத் தொடங்கும். அப்போதே அதை அடக்குவது எளிது. ‘மன்னிக்கவும். இதை வெளியிடுவதில் எனக்கு இஷ்டமில்லை,’ என்று நினைத்தாலே போதும். விதை முளைக்காது.

இரண்டாம் நிலையில் அடக்குவது கொஞ்சம் கடினம். சிறிது போராட வேண்டியிருக்கும். மூன்றாம் நிலை அதிக சிரமம் தரும். போராடினாலும் வெற்றி பெறுவது சந்தேகம். நான்காவது நிலையில் ஒன்றும் செய்வதற்கில்லை. எண்ணம் வெளிப்பட்டு விட்டது. நீ அகப்பட்டுக் கொண்டாய். சொன்னதைத் திரும்பப்பெற முடியாது. எண்ணம் செயலாகிவிடுவதால் விளைவை அனுபவித்துத்தான் ஆக வேண்டும்.

முதலில் சூன்ய நிலையில் விதை. வளரும் சாத்தியம் உள்ளது. அடுத்து, உணர்வு தோன்றுகிறது. பிறகு எண்ணமாகிறது. கடைசியில் வெளிப்பாடு ஆகிறது.

விதை நிலையை ஜனகர் உணர்ந்திராமல் போகலாம். அல்லது இப்போதுதான் உணர ஆரம்பித்திருக்கலாம். ஆனால் அந்த விதையை அஷ்டாவக்ரர் கவனித்துவிட்டார். ஆகவேதான் அவர் ஜனகரிடம், "நீ எதையாவது தியாகம் செய்ய விரும்பினால் உன் உடல்மீது உனக்குள்ள கர்வத்தை தியாகம் செய்து மோட்சத்தை அடைவாயாக," என்று கூறித் தூண்டிப் பார்த்தார்.

பெரிய மாயவலை இது. "ஆமாம், உடல் மீதுள்ள பற்றை தியாகம் செய்ய வேண்டியதுதான்," என்று ஜனகர் கூறியிருந்தால் இவர் கைவிட வேண்டியது ஏதோ உள்ளது என்று அர்த்தமாகும். அதன் உள்ளர்த்தம் இவரிடம் அறியாமை (அக்ஞானம்) கொஞ்சம் மிஞ்சியுள்ளது என்பதாகும்; இன்னும் உள்ளே புரட்சி நிகழவில்லை என்பதாகும். தீபம் ஏற்றப்பட்டுள்ளது. இருட்டை தியாகம் செய்ய வேண்டியுள்ளது என்று நீ சொன்னால், விளக்கு எரியவில்லை என்றுதான் அர்த்தம். விளக்கு ஏற்றியபின் இருட்டை விரட்டுவது பற்றி எப்படிப் பேச்செழ முடியும்? விளக்கு ஏற்றியதும் இருட்டுதான் போய்விட்டதே. தியாகம் ஆகிவிட்டது. இனிமேல்தான் தியாகம் ஆகவேண்டும்போல் எண்ணுவது தவறு. ஒன்றைச் செய்ய வேண்டுமானால் நாம் கர்த்தா (செய்பவர்) ஆகிவிடுகிறோம். தானாக ஒன்று நிகழ்ந்தால் நாம் சாட்சியாக மட்டுமே இருக்கிறோம். போகம் முடிந்தது, தியாகம் முடிந்தது. நாம் போகம் அனுபவிக்கவில்லை, தியாகம் செய்யவில்லை. நடைபெற்றதை நிகழவிட்டோம். நாம் வேறென்ன செய்வது? பார்த்தபடியே இருந்தோம். நமது பார்வையை பரிசுத்தமாக வைத்துக் கொண்டோம்.

உனக்கு யாரும் உறவு-நட்பு இல்லை. பிறகு எதைக் கைவிட விரும்புகிறாய்? தொடர்பு இருந்தால்தானே விலகவும் முடியும்.

**இ**ந்த சூத்திரம் நுணுக்கமானது. சரியாகப் புரிந்துகொள். புரிந்துகொண்டால் உள்புரட்சி மூளும். என்னிடம் ஒருத்தன் வந்து சொல்கிறான், "மனைவி-குழந்தைகளைத் துறக்க விரும்புகிறேன்."

அப்படியானால் அவர்களைத் தனக்கே சொந்தமென நினைப்பது தெரிகிறது. இன்னொருத்தன் சொல்கிறான், "செல்வத்தைக் கைவிட வேண்டும்; வீடு-வாசலைத் துறக்க வேண்டும்."

நான் கேட்கிறேன், "இந்தாப்பா, இவையெல்லாம் உன்னுடைய வைதான் என்று உனக்கு பக்காவாகத் தெரியுமா? இவற்றை நீ கைவிடாவிடில் இவை உன்னுடையவையாகவே நீடிக்குமா? பிறகு நீ இறக்கும்போது இவையெல்லாம் உன்னைக் கைகழுவி விடுமே. நீ இல்லாத, இன்னும் பிறக்காத, காலத்திலும் வீடு இங்கேதான் இருந்தது. நீ இல்லாத காலத்திலும் குடும்பப் பொக்கிஷத்தில் வைரங்கள் இருக்கத்தான் செய்தன. அப்போது அவை வேறு ஒருவருக்குச் சொந்தமாக இருந்தன. அவர் அப்போது அவற்றைத் தன்னுடையவை என நினைத்திருந்தார். இப்பொழுது நீ பிரமை காரணமாக அவற்றை உன்னுடையவையாக நினைக்கிறாய். இவையெல்லாம் நீ பிறப்பதற்கு முன்பே இருந்தன. நீ இறந்த பிறகும் இவை நீடிக்கும். எதை விடுவாய்? ஒன்றை உனதென்றே பக்காவாக நினைக்க முடிந்தால்தானே நீ அதை விடமுடியும்? உன்னுடையது அல்லாத ஒன்றை நீ விடுவது எங்ஙனம்? ஒன்றை விடவேண்டுமானால் அதற்கு நீ எஜமானனாக அல்லவா இருக்க வேண்டும்."

"நான் உலகைத் துறந்தேன்," என்று ஒருவன் கூறினால் உண்மையில் அவ்வாறு நடைபெற முடியாது. ஏனெனில் உலகின்மீது அவனுக்குத் தனிப்பட்ட உரிமை கிடையாது. 'நான் கைவிட்டேன்' என்று அவன் சொல்வதால் அது தன்னுடையது என்ற பிரமையில் அவன் இருப்பது தெரிகிறது. என்னுடையதாக ஒன்று இருந்தால்தான் நான் அதைத் துறக்க முடியும்.

உனக்கு உறவு யார்? நண்பர் யார்? தனியாக வந்தாய், தனியாக போகிறாய். கொண்டுவந்தது எதுவும் இல்லை. கொண்டு செல்லப் போவதும் எதுவும் இல்லை. வெறுங்கையொடு வந்தாய், வெறுங் கையோடு திரும்புகிறாய்.

இது விசித்திரமான விஷயம். மனிதன் பிறக்கும்போது உள்ளங்கையை மூடியபடி வருகிறான். இறக்கும்போது உள்ளங்கை விரிந்து விடுகிறது. குழந்தையாக வரும்போது முட்டி மூடியிருக்கிறது. உள்ளே ஒன்றுமில்லாவிடிலும் பரவாயில்லை. குறைந்தபட்சம், மூடிய

கையில் ஏதாவது இருக்கலாம் என்று நமக்கு ஒரு பிரமையாவது உண்டாகிறது. 'மூடிய முட்டி லட்சம் பெறும், திறந்த முட்டி மண்ணாங்கட்டி' என்று பழமொழி உள்ளது. மூடிய முட்டியிலும் நாம் ஒன்றும் கொண்டு வராததால் நாம் கைவிடுவதற்கு என்ன இருக்கிறது?

இது அற்புதமான சூத்திரம். அறிவியல்பூர்வமான சூத்திரம். உனக்கு அடிப்படையில் பந்துக்களும் இல்லை, தோழர்களுமில்லை. உனது என்று எதுவும் இல்லை. ஆகவே நீ முதலாளியும் இல்லை. எதன் மீதும் உரிமை கொண்டாடுவது உன்னைத் தடம் புரளச் செய்யும். எதுவும் சொந்தம் இல்லாத நிலைமையில் நீ சுத்தமானவனாக விளங்குகிறாய்.

நீ எந்தப் பொருள் மீது எஜமானனாக ஆதிக்கம் செலுத்து கிறாயோ, அது உன் மீது உரிமை கொண்டாடத் தொடங்குகிறது. எப்பெண்ணின் கணவனாக நீ ஆதிக்கம் செலுத்துகிறாயோ அவள் உன் மீது ஆட்சி செலுத்துவாள். வீட்டை வாங்கி அதன் சொந்தக் காரனாகு. வீடு உனக்குக் கட்டளை பிறப்பிக்கத் தொடங்கும்.

**ஃப**ரீத் தன்னுடைய சீடர்களுடன் எங்கோ போய்க் கொண்டிருந்தார். வழியில் ஒருவன் ஒரு பசுவின் கழுத்தில் கயிற்றைக் கட்டி இழுத்துச் செல்வதைப் பார்த்தனர். பசு முன்னேறாமல் தரையில் காலைத் தேய்த்து முரண்டு பிடித்தது. அது தனது சுதந்திரத்தை இழக்க விரும்பவில்லை. ஃபரீத் சீடர்களுடன் அந்த மனிதனைச் சூழ்ந்து கொண்டார். சீடர்களை நோக்கி அவர், "உங்களுக்கு ஒரு கேள்வி. இந்த மனிதன் பசுவைக் கயிற்றால் கட்டியுள்ளானா அல்லது பசு இவனைக் கட்டியுள்ளதா?" இதென்ன விசித்திரமான கேள்வியாக இருக்கிறதே என்று பதிலறியும் ஆர்வத்துடன் அந்த மனிதனும் பசுவுடன் நின்றுவிட்டான்.

சீடர்கள் சொன்னார்கள், "கண்ணுக்கே தெரிகிறதே. இவன்தான் பசுவைக் கட்டியிழுக்கிறான்."

ஃபரீத்: "அடுத்த கேள்வி. கயிற்றை நடுவில் வெட்டிவிட்டால் இவன் பசுவின் பின்னால் செல்வானா அல்லது பசு இவன் பின்னால் செல்லுமா?"

சீடர்கள் சொன்னார்கள்: "இதற்குப் பதிலளிப்பது கொஞ்சம் சிக்கலானது. பசு தப்பித்து ஓட தயாராகத் தெரிகிறது. கயிற்றை வெட்டினால் அது அவன் பின்னால் போகாது. அவன்தான் அதன் பின்னால் துரத்திக்கொண்டு போவான்."

ஃபரீத் விளக்கினார்: "மேலோட்டமாகப் பார்க்கும்போது பசுவின் கழுத்தில் கயிறு கட்டப்பட்டுள்ளதாகத் தோன்றுகிறது. ஆழ்ந்து யோசித்தால் கயிறு மனிதனின் கழுத்தில்தான் உள்ளது. ஏனோ மாடு அவன் பின்னால் போக இஷ்டப்படவில்லை. பசு அவனைக் கட்டி அழைத்துச் செல்வதுபோல் அவன்தான் அதன் பின்னால் ஓடுகிறான்."

நாம் எதன் எஜமானன் என நம்மை நினைக்கிறோமோ அது நமக்கு எஜமானன் ஆகிவிடுகிறது. பணம் இருப்பதால் நீ செல்வந்த னாவதில்லை. நீ அதன் அடிமையாகத்தான் ஆகிறாய். குறை பணத்தில் இல்லை. எல்லோருமே பணத்திற்கு அடிமையாகத்தான் ஆகிறார்கள். பிறகு வாழ்க்கையில் அவர்கள் செய்யும் ஒரே வேலை பணப் பெட்டியைப் பாதுகாப்பது. அத்துடன் மேன்மேலும் பணம் சேகரிப்பது. இதற்காகத்தான் பிறந்துள்ளதுபோல் அவர்கள் நடந்து கொள்கிறார்கள். இந்த மாபெரும் வேலையைச் செய்யத்தான் உலகத்திற்கு வந்துள்ளதுபோல் பணப்பெட்டியை நிரப்புவதிலேயே ஈடுபடுகிறார்கள். ஒருநாள் அவர்கள் இறந்து போவார்கள். அவர்களின் மாபெரும் பணி முடிந்துவிடும். ஆனால் பணப்பெட்டி மட்டும் இவ்வுலகிலேயே கிடக்கும்.

**அ**ஷ்டாவக்ரர் சொல்கிறார்: உனக்கு யாரும் இல்லை. நீயும் யாருடையவனும் அல்லன். நீ தனி ஆள். ஆகவே சுத்தமானவன். சுத்தமாக இருப்பதே உனக்கு இயல்பானது. தனிமை ஏன் சுத்தமானது?

ஒரு பொருள் இன்னொன்றுடன் சேரும்போது அதன் தூய்மை கெடுகிறது. எப்பொருளுமே தனிப்பட்ட முறையில் சுத்தமானதுதான். இதைக் கவனத்தில் வைக்க வேண்டும். பால்காரர் பாலில் தண்ணீர் கலந்துவிட்டதாகச் சொல்கிறாய். பால் அசுத்தமாகிவிட்டது என்கிறாய். ஆனால் தண்ணீரும் கெட்டுப்போனதை யோசித்தாயா? உனக்குப் பால் தேவைப்படுகிறது. ஆகவே பால் கெட்டுவிட்டதாக நீ கவலைப்படு கிறாய். அதற்குப் பதிலளிப்பதுபோல் பால்காரர், "ஏன் முட்டாள்தன

மாகப் பேசுகிறீர்? பாலும் சுத்தம். நான் கலந்த தண்ணீரும் சுத்தம். இவ்வாறு இரண்டு மடங்கு சுத்தமாகிவிட்டது. நீ அசுத்தம் என்று உளறுகிறாயே. தெருவில் ஓடும் தண்ணியில்லை இது. சுத்தமான தண்ணீர் பிடித்துக் கொதிக்க வைத்தபின்தான் பாலில் கலந்தேன். உனக்குக் கணக்குப் போடத் தெரியாதா? இரண்டு சுத்தமான பொருட்கள் சேர்ந்தால் சுத்தம் இரண்டு மடங்காகத்தானே செய்யும்?''

ஆனால் வாழ்க்கை கணித பிரகாரம் செல்வதில்லை. அது கணிதத்தை விட உயர்ந்தது. வாழ்க்கையில் இரண்டு சுத்தமான பொருட்களைக் கலந்தாலும் அசுத்தமான கலவையே கிடைக்கும். உனக்குப் பால் தேவை. அதற்கு விலையும் தரவேண்டும். ஆகவே அது அசுத்தமாகிவிட்டது என்கிறாய். ஆனால் பாலில் கலந்ததால் தண்ணீரும்தானே தூய்மை இழந்தது.

அசுத்தம் என்பதன் அர்த்தத்தைப் புரிந்துகொள். சிறுநீரில் தங்கத்தாலான பொருள் விழுந்துவிட்டால் கெட்டுப் போவது சிறுநீரும்தான்! சிறுநீரும் தன்வரையில் சுத்தமானதே. ஒரு பொருள் தன் இயல்புடன் தானாக இருப்பதே சுத்தம் என்பது. சுயமாக இருப்பதே சுத்தம்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒருநாள் ஒரு தேநீர்க் கடையில் உட்கார்ந்தபடி அரட்டையடித்துக் கொண்டிருந்தார். இறைவன் எல்லாப் பொருட்களையும் முழுமையாகப் படைத்துள்ளான் என்று அவர் வாதிட்டார். இறைவன் பரிபூரணன் ஆதலின் அவன் படைக்கும் பொருளும் முழுமையாக இருக்கும். சுற்றிலும் நின்று கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்கு அவர் பேச்சு சரியானதாகவே தோன்றியது.

அந்த சமயம் பார்த்தா ஒரு கூனன் அப்பக்கம் வந்து தொலைக்க வேண்டும். முல்லா சொன்னது அவன் காதிலும் விழுந்தது. அவன் தன் உடம்பைத் தொட்டுக் காட்டி முல்லாவிடம், ''இதற்கு என்ன சொல்கிறீர்?'' என்று கேட்டான். அவன் உடல் அஷ்டாவக்ரரின் உடல் போன்றே பல கோணல்களாக இருந்தது.

முல்லா சற்றுத் தடுமாறிவிட்டார். பிறகு சமாளித்துக் கொண்டு கூறினார்: ''நான் சொன்னது உனக்கும் பொருந்தும். ஆஹா! உன்னைப் போன்ற பரிபூரணமான கூனனை நான் பார்த்ததே இல்லை. எதுவும்

செய்து உன்னை இதற்கு மேலும் கூனனாக ஆக்க முடியாது. கடவுள் உன்னை முழுமையான கூனனாகப் படைத்திருக்கிறார்!''

ஒவ்வொரு பொருளும் அடிப்படையில் எப்படியோ அதில்தான் அதன் சுத்தமும் அடங்கியுள்ளது. இயல்பில் இருப்பதே சுத்தம். இயல்பு மாற நேர்வதுதான் அசுத்தம். நீ உன் இயல்பைவிட்டுப் பிறர் இயல்பால் பாதிக்கப்பட்டால் உன் தூய்மை நீங்கி நீ மாசடைகிறாய். நீ விரும்புவது பணம், பதவி,கௌரவம் ஆகிய எதுவோ உன் மனத்தில் அதன் பாதிப்பின் நிழல் விழுகிறது. ஏதாவது ஒன்றை விரும்புதல் என்றால் தன்மீது வேறொன்றின் பாதிப்பு படுகிறது என்று அர்த்தம். தன்னையே எவன் விரும்புகிறான்? தான் என்பது நீ தானே. தனியே விருப்பத்தைக் காட்ட எதுவுமில்லை.

ஆகவேதான் மக்கள் ஆத்மாவைத் தவிர்த்தே வருகின்றனர். ஆத்மாவை எவன் விரும்புவான்? ஆத்மாதான் நம்மிடம் உள்ளதே. நம்மிடம் இல்லாத ஒன்றையே நாம் விரும்புகிறோம். அந்த விருப்பம் நம்மை அசுத்தப்படுத்தி விடுகிறது. வெளிக்கலப்பால் நாம் (ஆத்மா) மாசடைகிறோம்.

ஜனகரே, நீர் சுத்தமானவர். ஏனெனில் உங்களுக்கு விருப்பம் எதுவும் இல்லை. ஆனால் தியாக ஆசை முளைவிட்டிருக்கிறது. எதை நீர் தியாகம் செய்ய விரும்புகிறீர்? ஒரு பொருள் எனது என்ற பிரமை இருந்தால்தானே அதை விட முடியும். எனது என்று எதுவுமே இல்லை என்று நினைத்தாலே போதும். அது தியாகமாகி விடும். எங்கும் தப்பித்து ஓடவேண்டியதில்லை. மனைவி உன் அருகே உட்கார்ந்துள்ளாள். குழந்தைகள் சுற்றிலும் விளையாடிக் கொண்டிருக் கின்றன. உன் கடையில் வியாபாரம் மும்முரமாக நடைபெறுகிறது. வாடிக்கையாளர்கள் வந்துபோய்க் கொண்டிருக்கின்றனர். இப்படிப் பரபரப்பான சூழ்நிலையிலும் 'எனது என்று ஒன்றுமில்லை' என்னும் உணர்வைப் பெற முடியும்.

ஒன்றைவிட வேண்டுமானால் அது உடல் மீதுள்ள பற்றாக இருக்கட்டும். 'நான் உடல், நான் மனம், எனக்கெனத் தனித்தன்மை உள்ளது' இவற்றையெல்லாம் தியாகம் செய்யேன்.

அஷ்டாவக்ரர் எப்படி வலை விரிக்கிறார் பாருங்கள். உன் உள்ளத்தில் தியாக ஆசை தோன்றினால் அது தவறு என்கிறார்

முதலில். பிறகு நுணுக்கமாக, சாமர்த்தியமாக ஓர் ஆலோசனை வழங்குகிறார். சரி, நீ விரும்பினால், எதையாவது விட்டுவிட மனம் துடித்தால், வெளிப்பொருட்களை விடுவது ஒருபுறமிருக்கட்டும். 'நான் உடல், நான் மனம், நான் தனித்தன்மை வாய்ந்தவன் என்ற எண்ணத்தை விட்டுவிடேன்.' என்று அவர் தியாகத்துக்குத் தூண்டுகிறார். இது சிக்கலான விஷயம்.

குயவர் பானை தயாரிப்பதை நீ பார்த்திருக்கிறாயா? அவர் உட்புறமாகப் பானையைச் சமாளிக்கிறார். குழைத்த களிமண்ணைச் சக்கரத்தின் மீது வைத்து, உட்புறமாக ஒரு கையைவிட்டுப் பிடித்துக் கொள்கிறார். இன்னொரு கையால் வெளிப்புறத்தில் தட்டிக் கொடுக் கிறார். இதனால் பானையின் சுவர் (வெளிப்புறம்) வடிவம் எடுக்கிறது.

கபீர்தாசர் சொல்கிறார்: 'குருவின் வேலையும் இத்தகையதே யாகும். ஒரு கையால் தட்டுகிறார், இன்னொரு கையால் பிடித்துக் கொள்கிறார்.' இதில் ஒன்றை மட்டும் கவனித்தாலும் நீ பாதிதான் பார்த்தவன் ஆகிறாய். குருவின் முழுமையான பணியை நீ அறியாமலிருந்து விடுகிறாய். ஒருபுறம் தாக்குதல், மறுபுறம் அரவணைப்பு. நீ பயந்து ஓடிப்போகாதபடி அவரது தாக்குதல் ஓர் எல்லைக்கு அடங்கியிருக்கிறது. அளவுக்கு மீறி உபதேசிக்காமல் நீ வந்தபோது பெற்றிருந்ததைவிட கூடுதலாக அறிந்தவனாக ஆக்குகிறார். அவரது தாக்குதல் ஹோமியோபதி சிகிச்சை போல் மெல்ல-மெல்ல நடைபெறுகிறது. அலோபதியின் தீவிரம் கிடையாது. தீவிரமாக உன்னை மாற்ற முயன்றால் நீ ஓடிவிடுவாய் அல்லது உன் வாழ்க்கை முடிந்துவிடும். உன்னால் எந்த அளவிற்குத் தாங்க முடியுமோ அந்த அளவிற்குத்தான் தாக்குகிறார். பாதிப்பு அதிகமாகி நீ துடித்தால், ஓட முயன்றால், தடவிக்கொடுக்க ஆரம்பிக்கிறார். அடித்த கை அணைக்கத் தொடங்குகிறது.

'தட்டு-தடவு' என்ற கொள்கைப்படி அஷ்டாவக்ரர் சொல்கிறார், "செல்வம் முதலியவற்றைக் கைவிடுதல் அற்ப விஷயம். நீ கைவிட வேண்டிய பெரிய விஷயம் சொல்கிறேன். நீ உன் உடல் மீதான கர்வத்தைக் கைவிடு. 'நான் உடல்' என்ற உணர்வு கரைந்துபோகச் செய். உனக்கு உடனே மோட்சம் கிடைக்கும்."

இவ்வாறு மீண்டும் காரண-காரிய உலகம் நுணுக்கமாக உண்டாக்கப்படுகிறது. ஜனகரும் அற்புதமான கெட்டிக்காரர்தாம். எனவே அஷ்டாவக்ரருக்கு அவர் பதிலளிக்கும் சுலோகங்களும் அற்புதமாகவே இருக்கும்.

அஷ்டாவக்ரர் இரண்டாம் சுலோகத்தில் **(சுலோகம் 67)** கூறுகிறார்: "நீரிலிருந்து நீர்க்குமிழி தோன்றுவதைப்போல் உன்னிட மிருந்தே உலகம் உண்டாகியிருக்கிறது. இவ்வாறு ஆத்மா ஒன்றே என அறி. அவ்வாறு அறிந்து மோட்சம் பெறு."

கடலில் எழும் அலைபோல் உலகம் உன்னிடமிருந்து தோன்றியது என்று கற்பனை செய்தால் போதும். இவ்வாறு தன்னையும் உலகையும், தனிமனிதனையும் சமூகத்தையும் ஒன்றெனக் கருதி நீ மோட்சம் பெறு.

இங்கே சாமர்த்தியமாக அஷ்டாவக்ரர் தூண்டிப் பார்க்கிறார். மோட்சம் பெறுவதற்கு அடிப்படையாக எதையோ அறிந்திருக்க வேண்டும்போல் பேசுகிறார்.

ஆனால் மோட்சம் பெறுவதற்கு ஏதாவது ஒன்று தேவை யென்றால் பிறகு அது மோட்சமாக இராது. மோட்சம் பெற காரணம் வேண்டும் என்றால், அது அந்த காரணத்தைச் சார்ந்திருக்கும். அது ஒரு நிபந்தனை போலிருக்கும். என்றாவது அந்த காரணம் விலகினால், மோட்சம் கீழே விழுந்துவிடும். மோட்சம் காரணத்தினால் ஏற்படுவது அன்று.

முக்தி பெறுவதற்கான உபாயம் பற்றி நீ விசாரித்தால் நீ மாட்டிக் கொள்வதற்கான புதிய உபாயம் பற்றி விசாரிப்பதற்கு அது சமமாகும். ஒருவர் ஆலோசனை சொல்கிறார். "நீ யோகாசனம் பழகு. அதன் மூலம் எல்லாவற்றிலிருந்தும் விடுபடுவாய்," என்கிறார். நீ முன்பு கடையில் திண்டின் மீது சாய்ந்து உட்கார்ந்திருந்ததும் யோகாசனமே. பிறர் ஆலோசனை கேட்டு, காட்டிற்குச் சென்று, மரத்தின் கீழ் அமர்ந்து யோகாசனம் பயிலுகிறாய். உன் ஆசை எதிர்காலம்வரை நீளுகிறது.

மோட்சம் ஏற்கெனவே கைவசம் உள்ளதுதான். நீ ஒன்றும் செய்யாமலிரு-அதுவே மோட்சம். நீ செயலின்றி இருக்கையில் அது உனக்குத் தென்படும். செயல் புரிகையில் நீ கர்த்தாவாகிறாய்.

உன்னிடமிருந்து சக்தி வெளியாகிறது. சக்தி உள்ளேயே இருக்க, நீ செயலொன்றும் புரியாவிடில், கர்த்தா நிலையிலிருந்து நீ சாட்சி நிலைக்குப் போய்விடுவாய். அப்போதுதான் நீ எதையும் பார்க்க முடியும்.

ஜென் சம்பிரதாய குருமார்கள் சீடர்களுக்குத் தரும் உபதேசம் 'ஒன்றும் செய்யாதே, அப்படியே உட்கார்ந்திரு' என்பதுதான். இதைவிட புரட்சிகரமான உபதேசம் ஒரு காலத்திலும் தரப்பட்ட தில்லை. ஏதாவது வேலை கொடுங்கள் என்று வந்து-வந்து கேட்கிறார்கள். சத்குரு மறுக்கிறார். "ஏதாவது வேலை கொடுத்தால் உலகச் சிக்கல்கள் மறுபடியும் தொடங்கிவிடும்," என்கிறார்.

கோரக்நாதர் மோட்சம் பெற ஏராளமான வழிமுறைகள் சொல்லிக் குழப்பினார். குண்டலினிப் பயிற்சி செய்; நாத பிரம்மத்தை உட்செவியால் உணர் என்றெல்லாம் தூண்டுகிறார். என்னிடம் வந்துள்ள நீயும் எதுவும் செய்யாமல் சும்மா உட்கார்ந்திருக்க முடியாது என்கிறாய். "சரி, ஏதாவது செய்து கொண்டிரு. செயல் புரிந்து ஒருநாள் களைத்துவிடுவாய். அப்போது சொல்வாய், 'என்ன செய்தாலும், எவ்வளவு செய்தாலும் ஒரு பிரயோஜனமும் இல்லை.' அப்பொழுது நான் சொல்வேன்-இனி சும்மா உட்கார்ந்திரு."

ஒரு சிறுவனிடம் நீ சொல்கிறாய்: ஏன் இப்படி அசைந்தாடிக் கொண்டே இருக்கிறாய். கை-காலை கட்டிக் கொண்டு ஓரிடத்தில் அமைதியாக உட்காரு. அவனால் எப்படி முடியும்? அவன் என்ன கிழவனா ஒரேயிடத்தில் அப்படியே கிடப்பதற்கு? சிறுவனிடம் துடிதுடிப்பான சக்தி நிரம்பியிருக்கிறது; நெருப்பாகக் கொதிக்கிறது. சும்மா உட்காரச் சொன்னால் அவன் முணுமுணுப்பான். இரவிலும் அமைதியாகத் தூங்கமாட்டான். படுக்கையிலிருந்து கீழே விழுவான். படுக்கையில் புரள்வான். கை-காலை வீசுவான். அவனிடமுள்ள மிகையான சக்தி இவ்வாறெல்லாம் வெளிப்படுகிறது. அவனைக் கண்ணை மூடிக்கொண்டு சாந்தமாக உட்கார்ந்திரு என்றால் எப்படி ஒப்புக் கொள்வான்? அவனை அப்படி உட்காரவைக்க ஒரு வழிதான் உள்ளது. அவனைப் பதினைந்து தடவை வட்டமாக, வேகமாக ஓடிவிட்டு வா என்று சொன்னால் போதும். அவ்வாறு ஓடிவிட்டு தொப்பென்று அமைதியாக உட்கார்ந்து விடுவான். காரணம்,

அவனிடமிருந்த சக்தி வழிந்தோடி விட்டது. களைப்பு மேலிட்டு விட்டது. அத்தகைய தளர்வான நிலையில் சும்மா உட்கார்ந்திருப்பது சுலபமாகி விடுகிறது.

யோகம் முதலிய நிறைய வழிமுறைகள் சொல்லப்படுகின்றனவே, அவை உன்னைக் களைப்படையச் செய்வதற்குத்தான். 'எல்லாம் செய்து பார்த்தாகி விட்டது, ஒரு பிரயோஜனமும் இல்லை. அடுத்தபடியாக ஒன்றும் செய்யாமல் இருந்து பார்க்கலாமே' என்று நீ நினைப்பாய். மாற்றி–மாற்றி ஏதாவது செய்து, கடைசியில் நீ, 'கடவுளே, என்னைக் கர்மத்திலிருந்து விடுவி. ஏதாவது செய்துகொண்டே இருப்பதில் உயிர்போகிறது. நான் சாந்தமாக இருக்க, ஓரிடத்தில் அமைதியாக உட்கார்ந்துவிட விரும்புகிறேன்,' என்று புலம்புகிறாய். ஆனால் நீயே விரும்பினால்தான் நீ சாந்தமாக உட்கார முடியும். சீடனுக்கு, தான் கர்த்தாவாக இருப்பதில், கர்மம் செய்வதில், ஆர்வம் இருக்கும்வரை குரு அவனுக்கு ஏதாவது வேலை கொடுத்தபடி இருப்பார். பிறகு ஒருநாள், ஜென் குரு சொன்னதுபோல், 'சும்மா இரு செயலற' என்று கட்டளையிடுவார்.

வீட்டில் செய்வதற்கு எதுவும் வேலை மிஞ்சியிருக்கவில்லை என்றால் மக்கள் தவிப்பதைப் பார்த்திருப்பாயே. நேற்றுதான் குறிப்பிட்ட விதமாகக் கட்டில், நாற்காலி முதலியவற்றை சீராக அமைத்தவர்கள் இன்று அவற்றை மாற்றி அமைப்பார்கள். நேற்றுதான் வீட்டையெல்லாம் கழுவி மெழுகினார்கள். இன்று மறுபடியும் கழுவுவார்கள். ஏற்கெனவே படித்துமுடித்த செய்தித்தாளை மறுபடியும் பிரித்துப் படிப்பார்கள். செய்வதற்கு ஒரு வேலையும் கிடைக்கவில்லை என்றால் எதையாவது சாப்பிட, கொறிக்கத் தொடங்கி விடுவார்கள்!'

நான் நிறையப் பயணம் செய்திருக்கிறேன். ஒரு நண்பர் சில சமயம் என்னுடன் பயணங்களில் கலந்து கொள்வார். முப்பது மணி நேரம்கூட நாங்கள் ரயிலில் பயணித்திருக்கிறோம். அப்போது நண்பருக்கு அடிக்கடி பசியெடுக்க ஆரம்பித்துவிடும். "வீட்டில் இருக்கும்போது இப்படிப் பசி எடுப்பதில்லையே. வீட்டில் ஏதாவது வேலை செய்தபடி இருப்பதால், பசி எடுப்பது நியாயம்தான். ஆனால் ரயிலில் சும்மாதானே உட்கார்ந்திருக்கிறோம். ரயிலில் நிறையப் பேருக்குப் பசி எடுக்கத் தொடங்கிவிடுகிறது. வீட்டிலிருந்து சாப்பிட

ஏதாவது கொண்டு வந்திருந்தால் பொட்டலத்தை சீக்கிரமே திறக்கத் தவிக்கிறார்களே. என்ன காரணம்?'' என்று நண்பர் கேட்டார்.

நான் காரணத்தை விளக்கினேன்: "உன்னால் ஒன்றும் செய்யாமல் சும்மா உட்கார்ந்திருக்க முடியாது என்பதுதான் காரணம். ரயிலில் பல மணி நேரம் எவ்வித வேலையுமின்றி உட்கார்ந்திருக்க நேரிடுகிறது. சிறிது நேரம் ஜன்னல் வழியே தெரியும் காட்சிகளைப் பார்க்கிறாய். கண்கள் களைத்துப் போகின்றன. செய்தித்தாள் படிக்கிறாய். சிறிது நேரத்தில் அதுவும் முடிந்துபோகிறது. பிறகு எதையாவது கொறிக்கிறாய். உன் பெட்டியைத் திறந்து இன்னொருவரது பெட்டிபோல் அதை ஆராய்கிறாய். நீதான் பெட்டியில் பொருட்களை நிரப்பிக் கொண்டுவந்தாய். இப்போது திறந்து பொருட்களை வேறு விதமாக அடுக்குகிறாய். படுக்கையை விரித்துப் போடுகிறாய். ஜன்னலை மூடுகிறாய். பிறகு ஏனோ திறக்கிறாய். பாத்ரூமிற்கு எழுந்து போகிறாய். சில நிமிடங்கள் முன்புதானே அங்கு போனாய். மறந்து விட்டதா?''

மனிதன் ஏதாவது வேலையில் சிக்கிக்கிடக்கவே விரும்புகிறான். எப்பொழுதும் வேலையில் மும்முரமாக இருந்தால்தான் எல்லாம் சரியாக இருப்பதாக அவனுக்குத் தோன்றுகிறது. வேலை எதுவுமில்லாவிடில் எல்லாம் சூன்யமாகத் தோன்றுகிறது.

ஆனால் அந்த சூன்யம்தான், வெறுமை உணர்வுதான், தியான நிலை. அந்த நிலையில்தான் உனக்குள் மோட்சம் இறங்கிவருகிறது. ஆனால் மோட்சம் உன்னை அணுகுவது உனக்குத் தெரிந்திருப்ப தில்லை. நீ வாசல் கதவை மூடிவிடுகிறாய். "என்னை உள்ளே விடு,'' என்கிறது மோட்சம். "அதற்கெல்லாம் நேரமில்லை,'' என்று கூறிவிட்டு நீ ஏதாவது வேலையைக் கையில் எடுத்துக் கொள்கிறாய்.

நீ எந்த வேளையில் எந்த கர்மத்திலும் ஈடுபடாமல் இருக் கிறாயோ அப்பொழுதுதான் மோட்சம் உன்னிடம் வந்துசேரும். அது மாபெரும் ஆசீர்வாதம்போல் உன்மீது பொழிகிறது. அரிய வரம்போல் நாலா பக்கத்திலும் சூழ்கிறது. ஏனெனில் மோட்சம் என்பது எல்லோருக்கும் சுபாவமானது. நீ அதைப் பெறத் தனியாக எதுவும் செய்யவேண்டியிருக்காது.

ஆனால் குரு உன்னிடம், "ஏதாவது செயல்புரிய வேண்டும் என்னும் ஆசை துளியாவது உன்னிடம் ஒட்டிக் கொண்டிருந்தால் அதையும் நீ தீர்த்துக் கொண்டுவிடு," என்கிறார்.

உன்னிடமிருந்து உலகம் தோன்றுகிறது. கடலிலிருந்து அலை பிரிந்து எழுவதுபோல் உன்னிடமிருந்து பிரிகிறது. அலை மீண்டும் கடலில் வீழ்ந்து அதனுடன் ஒன்றிவிடும். அதுபோல் ஆத்மாவும் ஒன்றே என அறிக. அவ்வாறு அறிவதால் மோட்சம் கிடைக்கப் பெறுவாய்.

ஆத்மா எல்லாவற்றுடனும் இணைந்து ஒன்றாகி விடுகிறது என்பதைச் சுட்டிக்காட்டி குரு சீடனுடைய ஞான யாத்திரையைத் தொடங்கி வைக்கிறார். அறிவில் குறைந்தவர்கள் பலர் ஓரிடத்தில் ஆசனம் போட்டு, 'நானும் பிரம்மமும் ஒன்று' ஜபித்துக் கொண்டே யிருக்கிறார்கள். இவ்வாறு பிறவி முழுவதிலும் ஓதினாலும் பலன் ஒன்றும் விளையாது. சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளையாக ஆயுளைக் கழிக்க வேண்டியதுதான். இவ்வாறு சொல்லிச் சொல்லி, ஒருவேளை தானும் பிரம்மமும் ஒன்றே என்ற பிரமையும் ஏற்படலாம். இந்த பிரமை ஞானமன்று.

"கண்ணில் தெரியும் உலகம் உண்மையெனத் தோன்றினாலும் உன்னைப் போன்ற தூயோனுக்கு, கயிறு பாம்பாகத் தெரியாததுபோல், உண்மையானதன்று. ஆகவே நீ நிர்வாண நிலையைப் பெறுவாயாக. எல்லாமே பொய்த் தோற்றம். நீ பிரமைவசப்படாமல் விழித்திரு. கயிறு பாம்புபோல் தெரிகின்ற மாதிரி எல்லாமே கனவுதான். உலகம் கண்ணுக்குத் தெரிகின்றபோதிலும் அது உண்மையில் இல்லை." **(சுலோகம் 68)**

நீ தூயவன்; நீ அறிஞன்; உன்னிடம் மாசு இல்லை; எந்தக் குறையும் இல்லை. குறை தென்பட்டால் கயிற்றரவம்போல் அதுவும் உண்மையில் இல்லை. இதை அறிந்து நீ இறையுணர்வில் லயித்திரு; நிர்வாண நிலையை அடைந்திடு.

உலக இன்பங்களின் மயக்கத்திலிருந்து விழித்தெழுபவனை வசப்படுத்தக்கூடிய விஷயங்கள் தியாகம், ஞானம் என்னும் இரண்டுதாம். தியாகம் சொல்கிறது: அனைத்தையும் துற, தவம் செய்யத்

தொடங்கு. பட்டினி விரதமிரு. தூக்கத்தைக் கைவிடு. இதை விடு. அதை விடு. ஞானம் சொல்கிறது: இப்படி அறி. அப்படி அறி. அறிந்ததை வலுப்படுத்து.

உலகில் இருவகையான மக்கள் உள்ளனர். செயல் வீரர்களாக இருப்பவர்கள் உலகப் பற்றைத் துறந்ததும் தியாகத்தில் சுறுசுறுப்பாகி விடுவார்கள். செயல் குறைத்து சிந்தனையில் அதிகம் ஆழ்பவர்கள் உலகப் பற்று நீங்கியதும் ஞானத்தில் ஆழ்ந்து விடுவார்கள். இரண்டுமே இடைஞ்சல்கள்தாம்.

உலகப் பற்றைக் கைவிட்டு ஓடுபவன் இரண்டு விதமாக மாறலாம். அவன் ஓர் அறிஞனாகலாம்; சாஸ்திரங்களை விளக்குபவனாகலாம். அல்லது அவன் தன் உடலை உருகச் செய்யலாம்; அதை வதைக்கலாம். இரண்டுமே தடைக்கற்கள்தாம். இங்கே அறிவதற்கு எதுவுமில்லை; செய்வதற்கும் எதுவுமில்லை. அறிபவன்—எல்லாம் அறிந்தவன்—உனக்குள்தான் ஒளிந்து உட்கார்ந்திருக்கிறான். இது ஆன்மிகத்தில் மிகவும் முக்கியமான அறிவிப்பாகும். இதைப் புரிந்துகொள்ள முயற்சிசெய்.

'துன்பமும் இன்பமும், எதிர்பார்ப்பும் ஏமாற்றமும், வாழ்வும் சாவும் சமமெனக் கருதும் பூரண மனம் பெற்று நீ நிர்வாண நிலையை அடைவாயாக.' **(சுலோகம் 69)**

துன்பமும் இன்பமும், ஆசையும் நிராசையும் சமமென உணர்வதுதான் வைராக்கியத்தின் அடிப்படைப் பொருள். ஜனகரே, வாழ்வும் சாவும் சமமெனக் கருதி நிர்வாண நிலையை அடைவீராக.

அஷ்டாவக்ரர் ஜனகரை ஒரு லட்சியத்தை மேற்கொள்ளச் சொல்கிறார். உடலின் மீது உனக்குள்ள பிடிப்பைக் கைவிடு. அல்லது, 'நான் பரபிரம்மம்; நான் ஆத்மா; ஆத்மா எல்லோருக்கும் ஒன்று' என்னும் ஞானத்தைப் பெற்றுவிடு. நீ முக்தனாவதற்கு இந்த இரண்டு வழிகள் உள்ளன.

சாதாரண சாதகனாக இருந்தால் பலவிதச் சிக்கல்களில் மாட்டிக் கொண்டிருப்பான். பரபரப்பான சாதகனாக இருந்தால் கர்மயோகத்தில் ஈடுபடுவான். செயல் குறைந்தவனாக இருந்தால் ஞானயோகத்தில் ஈடுபடுவான்.

அஷ்டாவக்ரர் பக்தியோகம் பற்றி குறிப்பிடவில்லை. ஏனெனில் ஜனகர் விஷயத்தில் அதற்கு வாய்ப்பில்லை. மேலே சொன்ன இரண்டு யோகங்கள்தான் அவருக்கு சாத்தியமானவை. ஜனகர் க்ஷத்திரியர் என்பதால் செயல் வீரராகத் திகழ வாய்ப்பிருந்தது. அவர் மூல அடிப்படையில் போர் வீரர். இந்த அடிப்படையில் சமண மதத்தில் தீர்த்தங்கரர்கள் எனப்படும் புனிதர்கள் அனைவரும் க்ஷத்திரிய குலம் என்பதால் மாபெரும் தியாக வாழ்வை மேற்கொண்டனர்.

அவர்களைப் போலவே ஜனகரும் மகாதியாகியாகும் வாய்ப்புப் பெற்றிருந்தார். வேறுவிதமாக உருவாகும் வாய்ப்பும் அவருக்கிருந்தது. அவர் பேரரசர், அறிஞர், பண்பாளர், அக்காலத்திய தூய ஞானத்தைப் பெற்றவர். ஆகவே அவர் சிந்தனையாளராக உருவாகவும் வாய்ப்பு இருந்தது. ஆனால் பக்தி மயமான பின்னணி அவருக்கு அமைந் திருக்கவில்லை. ஆகவே அஷ்டாவக்ரர் கர்மம், ஞானம் என்னும் இரு சூழ்நிலைகளையும் மட்டும் ஜனகருடன் தொடர்புப்படுத்துகிறார். இவை இரண்டும் ஜனகரின் ஆழ்மனத்தில் பதிந்திருக்கக் கூடியவை. இவை முளைத்து வளரக்கூடிய வாய்ப்புள்ளவை.

சொல்லப்படும் விஷயம் ஒன்றேயாயினும் நாம் ஒவ்வொரு வரும் வெவ்வேறு விதமாக அதைப் புரிந்து கொள்கிறோம். கேட்பவர் எத்தனை பேரோ புரிந்து கொள்வதும் அத்தனை வகைப்படும். இங்கே பேசுபவன் நான் ஒருவன் மட்டுமே. ஆனால் என் பேச்சைக் கேட்கும் ஒவ்வொருவரும் அவரவர் மன அமைப்புப்படி புரிந்து கொள்கின்றனர்.

**மு**ல்லா நஸ்ருத்தீனின் மகனுடன் பேசுவது போன்று எனக்கொரு கற்பனை. சிறு வயதினன். திடீரென்று என்னிடம் கேட்டான், "நீங்கள் எனக்கு ஒரு விஷயம் தெளிவுபடுத்துங்கள். நீங்கள் எல்லோருடைய கேள்விகளுக்கும்பதில் சொல்கிறீர்கள். என் கேள்விக்கும் பதில் சொல்லுங்கள். மனிதன் இறக்கும்போது அவனது உயிர் எங்கேயிருந்து புறப்பட்டு வெளியேறுகிறது?"

சிறுவயதினர் இப்படித்தான் திடீரென்று கனமான கேள்வி கேட்பார்கள். நான் திகைத்தேன். நேரடியாகப் பதில் கூறாமல் அவனையே மடக்கினேன். "உனக்குத் தெரியுமா, பையா, உயிர்

எவ்வழியாகப் போகிறது என்று?" "ஓ, தெரியுமே," என்றான் அவன் "அப்படியானால் முதல்ல நீ சொல்லு," என்று தூண்டினேன். "ஜன்னல் வழியா புறப்படுகிறது," என்று அவன் பதிலளித்தான். "உனக்கு எப்படியப்பா அவ்வளவு சரியா தெரியும்?" என்று வியந்து கேட்டேன்.

சிறுவன் விளக்கினான்: "ஒருநாள் அப்பா ஜன்னல் பக்கத்தில் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தேன். ஒரு அழகான பெண் தெருவில் போவதும் ஜன்னல் வழியே தெரிந்தது. அவளைப் பார்த்ததும் அப்பா, 'என் உயிரே, ஜன்னல் வழியே அவள் பின்னால் போய் விட்டாதே' என்றார். ஆகவே ஜன்னல் வழியாகத்தான் உடலிலிருந்து உயிர் வெளியே புறப்படும் என்பதை அறிந்து கொண்டேன்."

இதைக் கேட்டு யாரும் சிரிக்கக்கூடாது. அவன் வயதுப்படி அவன் புரிந்து கொண்ட விதம் சரியானதுதான். நம்மால் முடிந்த அளவிற்குத்தான் நாம் ஒரு விஷயத்தைப் புரிந்துகொள்ள முடியும். ஜனகர் தமது ஆற்றலுக்கு ஏற்ப எதையும் புரிந்துகொண்டார். ஜனகரின் புரிந்துகொள்ளும் ஆற்றல் விரிந்து பரந்தது; தனித்தன்மை உடையது. சாதாரண மனிதனின் ஆற்றலைவிட பல மடங்கு அதிகமானது. எனினும் அவரும் இந்த விஷயங்களைப் புரிந்து கொள்வாரா என்று அஷ்டாவக்ரருக்கும் சிறிது சந்தேகம் ஏற்பட்டிருக்கும்; இது இயற்கைதான். எளிதில் தொட முடியாத அளவு உயர்ந்த சிந்தனை இது.

நீ முயன்றால் இன்பமும் துன்பமும் சமம் என்று உன்னால் எண்ண முடியும். ஆனாலும் நீ அவற்றால் கட்டப்பட்டவனாகவே இருப்பாய். வாழ்வும் சாவும் உனது கண்ணோட்டத்தில் சமமாகத் தோன்றலாம். இத்தகைய சமநோக்கை உன் மனத்தில் பதியலாம். எல்லாம் சமமெனக் கருதுமாறு உன் மனத்தை வசப்படுத்தலாம். இதனாலெல்லாம் உன் வாழ்க்கையில் பெரிதாக எதுவும் நடந்துவிடாது. நீ முற்றிலுமாக மாறிவிட மாட்டாய். உன் வாழ்க்கைக்குப் புதிய அர்த்தம் கிடைக்காது. உன் தலைக்கு மேலாகப் புதிய ஆகாயம் (புதுச்சூழ்நிலை) தோன்றாது.

**ஜனகரின் பதில்**

அடுத்து ஜனகர் கூறிய சுலோகங்கள் வருகின்றன. இவை அருமையான பொருளுடையவை. ஜனகரின் ஆழ்மனத்தில் இறங்கி

அஷ்டாவக்ரரே இவற்றைக் கூறுவதுபோல் நமக்கு உணர்வு ஏற்படுகிறது. அவர் எதிர்பார்த்த மாதிரியான பதில்களையே ஜனகர் தருகிறார். இப்படிப்பட்ட சீடரைப் பெறுவது மகாகடினம்.

'நான் ஆகாயம் போன்றவன். உலகம் ஒரு பானையைப் போன்று இயற்கையால் உருவாக்கப்பட்டதாகும். ஆகவே இதை விடுதலும் இல்லை, ஏற்றலும் இல்லை, இதில் லயிப்பதும் இல்லை.' **(சுலோகம் 70)**

ஜனகரின் பதில் புரட்சிகரமானது. அஷ்டாவக்ரரின் உடல் எட்டுக் கோணலாக இருந்தும் ஜனகரின் பதிலைக் கேட்டு நடனமே ஆடியிருப்பார். ஞானத் தாமரை மலர்ந்ததென, யோக சாஸ்திரத்தில் கூறப்படும் ஸஹஸ்ரார (ஆயிரம் இதழ்) கமலம் மலர்ந்ததென, மகிழ்ந்திருப்பார்.

"நான் ஆகாயம் போன்றவன். உலகம் பானை (குடம்) போன்றது. அது மீண்டும்-மீண்டும் உருவாகி அழிகிறது. இதனால் ஆகாயம் பாதிக்கப்படுவதில்லை. கனவு தோன்றி மறைவதுபோல் உலகம் தோன்றி அழிகிறது. ஆனால் சாட்சி மனப்பான்மை உள்ளவன் ஆகாயம் போல் சுத்தமாக இருக்கிறான். என்னை எப்பொருளும் களங்கப்படுத்த முடியாது," இவ்வாறு ஜனகர் அறிவிக்கிறார். "நான் தூய்மை பெற்று முக்தி அடைய வேண்டும் என்று சொல்ல வேண்டிய தில்லை. நான்தான் அசுத்தமாக ஆகவேயில்லையே," என்கிறார்.

பாலில் தண்ணீரைக் கலக்க முடியும். ஏனெனில் இரண்டும் ஒரேமாதிரி திரவ வகையானவை. எண்ணெயில் தண்ணீர் கலக்காது. ஆனாலும் அவற்றை ஒன்றாக வைக்க முடியும். ஒரு பாட்டிலில் இரண்டையும் நிரப்ப முடியும். ஏனெனில் அவை இரண்டும் அடிப்படையில் திரவ பதார்த்தங்கள். ஆனால் ஆகாயத்தை எந்தப் பொருளுடனும் சேர்க்க முடியாது. ஆகாயம் பரிசுத்தமானது, விகாரமற்றது.

இந்த நிலவுலகில் கோடி-கோடி மக்கள் பிறந்தார்கள். அவர்களில் நல்லவர்கள், கெட்டவர்கள், புண்ணியவான்கள், பாவிகள் என்றெல்லாம் கலந்திருந்தார்கள். எத்தனையோ போர்கள், சமாதானங்கள் நிகழ்ந்தன. எத்தனையோ வசந்த காலங்கள், இலையுதிர் காலங்கள் வந்து போயின. ஆகாயத்தில் எந்த மாற்றமும் இல்லை; ஒரு சுருக்கம்கூட விழவில்லை.

ஜனகர் சொல்கிறார், "நான் ஆகாயம் போன்றவன். இதை உணர்வதே ஞானம். நீங்கள் இப்போது வேறு எந்த ஞானத்தைச் சொல்கிறீர்கள்? எந்த ஞானத்தைத் தேடி அடைய வேண்டும் என்கிறீர்கள்? எனக்கு ஏற்கெனவே ஞானம் கிடைத்துவிட்டது."

எத்தனையோ சாஸ்திரங்கள், போகமும் இல்லை, தியாகமும் இல்லை என்று கூறுகின்றன. ஜனகர்தான் கூடுதலாக, போகமும் இல்லை, தியாகமும் இல்லை, மோட்சமும் இல்லை, கலந்து லயித்தலும் இல்லை என அறிவிக்கிறார். இத்துணை அருமையான கருத்து நீங்கள் ஆன்மிக இலக்கியம் முழுவதிலும் தேடினாலும் கிடைக்காது.

பானைகள் உருவாகின்றன, உடைகின்றன. பானை உருவானதும் அதனுள்ளே ஆகாயம் (சூன்யம்) ஏற்பட்டு விடுகிறது. பானைக்கு வெளியே அது ஏற்கெனவே வியாபித்துள்ளது. பானை உடைந்தால் உள்ளிருக்கும் ஆகாயமும் வெளியேயுள்ள ஆகாயமும் ஒன்றாகி விடுகின்றன. பானை உருவாகிக் கொண்டிருந்த சமயத்திலும் உள் ஆகாயமும் வெளி ஆகாயமும் ஒரு விதத்தில் தனித்தனியாக இல்லை என்று கருத முடியும். ஏனெனில் பானையின் பரப்பில் நுண்துளைகள் இயற்கையாகவே அமைந்திருக்கும். அவற்றின் வழியாக ஆகாயம் உட்புறத்துடன் இணைகிறது. இதனால் ஆகாயம் சின்னபின்னமாகாது, உடைந்து போகாது. நீ ஆகாயத்தை வாளால் வெட்ட முடியாது. ஆகாயத்தின் எல்லைகளாக நீ நினைப்பவை வெறும் கற்பனையே ஆகாயத்தில் எந்தக் கோடும் போட முடியாது.

'நான் ஆகாயம் போன்றவன். இதுவே நான் பெற்ற ஞானம். ஆகவே தியாகம், ஏற்பு, லயிப்பு என்பதற்கெல்லாம் இடமில்லை.'

'நான் மாகடல் போன்றவன். இவ்வுலகத் தோற்றங்கள் கடல் அலைகள் போன்றவை. இதுவே நான் பெற்ற ஞானம். ஆகவே தியாகம், ஏற்பு, லயிப்பு என்பதற்கு இடமில்லை.' **(சுலோகம் 71)**

ஜனகர் சொல்கிறார்: "குருதேவரே, என்னைச் சிக்கலில் மாட்டிவிடாதீர். என்னை மாட்டிவிட உம்மால் முடியாது. நீங்கள் எனக்கு ஞான விழிப்பு கொடுத்து விட்டீர்கள். எனக்கு வலை வீசாதீர்கள். உங்களது தூண்டுதல் இனி என்னைப் பாதிக்காது. எதை எப்படி அறிந்து கொண்டால் முக்தி பெறலாம் என்றெல்லாம் சொல்லி என் பாதையை மாற்றப் பெரிய அளவில் தூண்டாதீர்கள்.

“நான் ஏற்கெனவே முக்தன் (முக்தி பெற்றவன்). இந்த ஞானம் பெற்று விட்டேன். வேறு என்ன ஞானம் பாக்கியுள்ளது? முக்தனாகு என்று என் மனத்தில் ஆசைகளைத் தூண்டிப் பார்க்கிறீர்களே. மோட்சத்தைத் தேடு என்று ஆசை மூட்டுகிறீர்களே. எரிந்துபோன, சாம்பலாகிவிட்ட ஆசையைத் தளிர்க்கச் செய்கிறீர்களே. யாரிடம் இதையெல்லாம் சொல்கிறீர்கள்? ஆசை மூட்டுவதை நிறுத்துங்கள். இனி நீங்கள் என்னை வளைத்துப் போட முடியாது.”

மகா திறமைசாலியான அஷ்டாவக்ரர் கூட நுணுக்கமான மொழி நடையில் ஒளிந்துள்ள ஆசை வலையை ஜனகரை நோக்கி வீச முடியவில்லை. ஜனகர் எப்பொருளுக்காவது வாடிக்கையாளராக இருந்தால்தானே இது சாத்தியம். ஜனகர் நிச்சயமாக ஞானவிழிப்புப் பெற்று விட்டார்.

‘நான் பெருங்கடல். உலகத் தோற்றங்கள் அலைகள். இவ்வுலகம் என்னிலிருந்து வேறுபட்டதாகத் தோன்றினும் எங்கே பிரிந்துள்ளது? அலைகள் கடலிலிருந்து எப்படிப் பிரிய முடியும்? அவை கடலில் உள்ளன. அவை கடலினுடையவை. கடல்தானே அலைகளை எழும்பச் செய்கிறது. வேறு யார்? இந்த உலகமும் நான்தான்; இந்த உலகம் இல்லாத தன்மையும் நான்தான். அலைகள் உள்ளபோதும் கடல் இருக்கிறது. அலைகள் இல்லாதபோதும் கடல் உண்டுதான். அப்படி ஞானம் கிடைத்துள்ளது. இனி எதைக் கைவிட முடியும்? கடல் எப்படி அலைகளைக் கைவிடும்? இந்தக் கேள்வியே முட்டாள்தனமானது. கடலானது அலைகளைப் பிடித்து வைக்கட்டுமா? பிடிக்க வேண்டிய அவசியம் ஏதும் இல்லை. அலைகள் ஏற்கெனவே கடலுக்குச் சொந்தமானவைதாம். முக்தி வெளியே எங்கே இருக்கிறது? இதை அறிந்து நான் முக்தனாகிவிட்டேன்.

‘நான் சிப்பியைப் போன்றவன். உலகைப் பற்றிய கற்பனை வெள்ளி போன்றது. இதுவே ஞானம். இதை அறிந்தால் தியாகமும் இல்லை, ஏற்பும் இல்லை, லயித்தலும் இல்லை.” **(சுலோகம் 72)**

“நான் நிச்சயமாக எல்லா உயிர்களிலும் உள்ளேன். இதேபோல் எல்லா உயிர்களும் எனக்குள் உள்ளன. இதுவே ஞானம். இதை அறிந்துகொண்டால் விடுதலும் இல்லை, ஏற்றலும் இல்லை, லயித்தலும் இல்லை.” **(சுலோகம் 73)**

ஞானம் என்பது அடையும் வஸ்து இல்லை. ஞானம் உள்ளது, ஞானம் இல்லை என்ற இரண்டு நிலைகள்தான் உண்டு. ஞானம் கிடைத்தது என்று கூறும் எவனும் ஞானம் பெற்றிருக்க மாட்டான். அவன் அறிஞன் ஆகிறான். ஞானி என்பவன் அறிஞனிலிருந்து மாறுபடுகிறான். அவன் நேரடியாக விழிப்புப் பெறுகிறான். ஒரு நொடியில் என்ன நடக்க வேண்டுமோ அதுவே நடக்கிறது. எப்படி நடக்க வேண்டுமோ அவ்வாறே நடக்கிறது. இந்த நிலையை அடைபவன் மகாத்மா எனப்படுகிறான்.

உலகில் சிலர் எதையாவது பெறுவதிலேயே நாட்டம் கொண்டுள்ளனர். பணம் பெற வேண்டும், பதவி பெற வேண்டும், கௌரவம் பெற வேண்டும் என்று ஏங்குகின்றனர். சிலர் சுவர்க்கம் பெற வேண்டும், அங்கும் பதவி கிடைக்க வேண்டும், கௌரவம் பெற வேண்டும் என்று விரும்புகின்றனர். சிலர் இவ்வுலகில் சம்பாதிக்கவும், சிலர் மேலுலகத்தில் சம்பாதிக்கவும் முயல்கின்றனர். சிலருக்கு வங்கி இங்கே உள்ளது. வேறு சிலருடைய வங்கி தொலைவில் சுவர்க்கத்தில் உள்ளது. இருவகையினருமே சம்பாதிப்பதில் ஈடுபட்டுள்ளனர். ஆனால் ஒரு புனிதர் சொல்லுவார்-சம்பாதிப்பது பற்றி எப்படிப் பேச்சு வந்தது? இந்த முழு உலகமும் என்னுடையதுதானே. நானேதானே இந்த முழு உலகிலும் உள்ளேன். எனக்கும் உலகிற்கும் இடையே எள் அளவுகூட இடைவெளி கிடையாது.

**உன்னை விரும்பி வந்தடைந்தேன்**
**இந்தச் சேருமிடம் வரை;**
**உன்னில் என்னைக் கண்டேன் நான்,**
**என்னில் உன்னைக் கண்டேனே**

இந்த 'நான்-நீ' என்பதன் நடுவில் இடைவெளி இல்லை. 'நான்-நீ' என்பது மொழியோடு சம்பந்தப்பட்டது. ஓர் அலைக்கும் வேறோர் அலைக்கும் இடையே வித்தியாசம் கிடையாது. இதை உணரும் நேரம்தான் ஞானோதய நேரம்.

இந்நிலையில் நாம் உலகின் மர்மத்தைப் புரிந்து கொள்கிறோம். புற உலகில்தான் லாபமும் நஷ்டமும் நிச்சயிக்கப்பட்டுள்ளன. ஞான உலகில் லாபமும் இல்லை, நஷ்டமும் இல்லை. ஏனெனில் இங்கே நம்மைத் தவிர யாருமில்லை. நம்மிடமிருந்து எதையும் பிடுங்க

முடியாது. நமக்கு எதுவும் கொடுக்க முடியாது. இங்கு பேராசைப் படுவதில் அர்த்தமில்லை, கோபிப்பதிலும் அர்த்தமில்லை.

கோபப்படுவது என்பது ஒருவன் தன்னையே கன்னத்தில் அறைந்து கொள்வதற்கு சமமாகும். பேராசைப்படுவது என்பது ஒருவன் தனது வீட்டிலேயே தன்னுடைய பொருட்களை ஒளித்து வைப்பதற்கு சமமாகும். 'நானே அதைத் திருடிவிடுவேனோ?' என்று அவன் அச்சப்படுவது போன்றதாகும்.

ஜனகர் வினவுகிறார்: 'இன்ப துன்பங்களில் சமமான மனநிலையுடன் இருக்குமாறு நீங்கள் யாரைப் பார்த்துக் கூறுகிறீர்கள்? இவ்வுலகில் சுகம் எங்கே உள்ளது? துக்கம் எங்கே உள்ளது? வாழ்வையும் சாவையும் சமமாக நினைக்கச் சொல்கிறீர்கள். அப்படியானால் அவை வெவ்வேறு என்றும், பரஸ்பரம் முரண்படுபவை என்றுமல்லவா அர்த்தப்படுகிறது. அவை இரண்டும் ஒன்றுதானே. பிறகு அவற்றை எப்படி சமமெனக் கருத முடியும்? அவை இரண்டும் என்னில் உள்ளனவே. அவை இரண்டிலுமே நான் இருக்கின்றேன்.'

தனிமனிதன் தன்னை சூன்யமாக உணர்ந்ததும் அவன் சிருஷ்டியுடன் ஒன்றாகக் கலந்து விடுகிறான். ஆகவே பிரம்மத்தை அறிபவன் பிரம்மமாகி விடுகிறான் என்று சொல்லப்படுகிறது. சத்தியத்தை அறிந்தவன் சத்யமாகி விடுகிறான். எதை நாம் அறிந்து கொள்கிறோமோ அதுவாகவே நாம் ஆகிவிடுகிறோம்.

ஜனகர் கூறிய இந்த நாலு சூத்திரங்களையும் கேட்டு அஷ்டாவக்ரர் அடைந்த ஆனந்தத்தை நம்மால் வர்ணிக்க முடியாது. தகுதியான சீடன் கிடைத்தால் குருவிற்குக் கிடைக்கும் திருப்தியை நம்மால் அளக்க முடியாது. குரு ஏற்கெனவே சுயமாகவே ஒளிவீசுபவர்தாம். சீடனின் உள்ளத்தில் ஞான விளக்கு பிரகாசித்தால், குருவின் ஒளியில் ஒரு புதிய சூரியனைச் சேர்த்தது போலிருக்கும். குருவின் ஒளி ஆயிரம் சூரியர்களின் ஒளிபோல் இருந்தால், சிஷ்யன் ஞானம் பெற்றதும் குருவின் ஒளி ஆயிரத்து ஒன்று சூரியர்களின் ஒளிபோலிருக்கும். இதைத்தான் குரு எதிர்பார்த்தார். இதற்காகத்தான் சீடனை பரீட்சித்தார். ஆசைமூட்டிப் பார்த்தார். ஜனகரிடம் ஞானம் தோன்ற வாய்ப்பிருந்தது. ஆகவேதான் அஷ்டாவக்ரர் தொடர்ந்து அவரை சோதனைக்குள்ளாக்கினார்.

குரு எந்தச் சீடனையாவது சிறிதளவே பரீட்சை செய்து அனுப்பிவிட்டால் அவனிடம் ஞானம் தோன்ற அதிகம் வாய்ப்பில்லை என்று அர்த்தம். அவனை அதிகம் சோதித்தால் தாங்க முடியாமல் உடைந்து விடுவான். ஒவ்வொரு சீடனையும் அவனால் தாங்கக்கூடிய அளவிற்குத்தான் பரீட்சை செய்யலாம். அளவு மீறி பரீட்சித்தால் சீடன் முழுமையாக உருவாகாமல் சிதைந்துபோவான். அஷ்டாவக்ரர் ஜனகரைக் கடைசிவரை இழுத்தார்; ஆசைமூட்டிப் பார்த்தார். ஞானமும் தியாகமும்தான் கடைசித் தடைகள். அவற்றையும் கடந்தவன் முக்தனாகிறான். அனைத்திலிருந்தும் விடுபடுதலே முக்தி.

அறிவிலிகளும் அடிக்கடி ஞான விஷயங்கள் பேசுவதுண்டு. இதன் மூலம் அவர்கள் தமது அறியாமையை மறைத்துக் கொள்கிறார்கள். வேறு எப்படி மறைப்பது? நமக்கு நோயிருந்தால் ஆரோக்கியம் பற்றியே அதிகம் பேசுவோம். காயம் பட்டால் அதை மறைக்கத் துணிக்கட்டு போடுகிறோம். ஆனால் வெல்வெட்டுத் துணியால் கட்டினாலும் அது மறைப்பதற்கான முயற்சியே தவிர காயத்தை நீக்கும் வழியில்லை.

உலகில் பலர் உன்னிடம் இன்பம்-துன்பத்தில், வாழ்வு-சாவில் சமமான மனப்பான்மை வைத்துக்கொள் என்று அறிவுரை கூறுவார்கள். இதன் அர்த்தம் என்ன? இந்த ஜோடிகள் சமமில்லை என்பதுதானே. நீதான் அவற்றை சமப்படுத்த வேண்டும் என்பதுபோல் அல்லவா உள்ளது. அப்படியானால் அதற்கு நீ முயற்சி செய்ய வேண்டும். எங்கே முயற்சி நடக்கிறதோ அங்கே ஞானம் கிடையாது. ஞானம் என்பது சகஜமானது. முயற்சி நடந்தால் உள்ளே ஏதோ முரண்பாடுகள் உள்ளதாக அர்த்தம். இல்லாவிடில் யாருக்கு எதிராக முயற்சி?

ஒருவன் கோபவுணர்வை எதிர்த்து முயன்று போராடுகிறான். ‘அமைதியாக நாம் இருக்க வேண்டும். அமைதியாக இருப்பதே நம் கடமை’ என்கிறான். கேட்க நன்றாக உள்ளது. முயன்று சாந்தமாக இருப்பது தர்மமாகாது. அது கோபத்தை மறைப்பதற்கான உபாயம் மட்டுமே ஆகும். இயல்பாகவே சாந்தமாக இருப்பதே சிறப்பானது. சாந்தமாக இருக்க முயல்வதில் விசேஷம் இல்லை, ‘நான் ஏற்கெனவே சாந்தமானவன்தான்’ என்று அனுபவபூர்வமாக உணருதல் வேண்டும்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒருநாள் பக்கத்து வீட்டுக்காரரிடம் சொன்னார்: "உங்களுக்கு ஏற்படும் பயங்கரமான கஷ்டத்தில் ஒரு விஷயம் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். பாதிப் பேருக்கு உங்கள் கஷ்டத்தைச் செவிமடுப்பதில் ஆர்வம் இல்லை. மீதிப் பேர் நீங்கள் இப்படிக் கஷ்டப்படுவது நியாயமானதுதான் என்று எண்ணுவார்கள்."

முல்லா சொன்னது ஞான வார்த்தை. குறைந்த அறிவுள்ளவர் களும் பெரிய ஞான விஷயம் பேசுவதுண்டு. பின்னணிக் காரணம் மட்டும் தவறாக இருக்கும்.

சினமும் சாந்தமும் எதிரெதிரானவையல்ல என்பதைப் புரிந்து கொள். சாந்தம் உள்ள இடத்தில் சினம் இருக்காது. சாந்தம் என்பது சினமின்மையைக் குறிப்பிடுகிறது. அது சினத்துக்கு எதிரானதன்று. சினத்தை அகற்றினால் சாந்தம் ஏற்படும் என்று மக்கள் தவறாக நினைக்கிறார்கள். ஆனால் அம்முயற்சியில் ஏற்படும் எரிச்சலால் அமைதியின்மை இரண்டு மடங்காக அதிகரித்து விடும். சினத்தை அகற்றி சாந்தியை நிலைநாட்ட முடியுமென நினைப்பது நாம் உடலை ஆடையால் மூடுவதற்கு சமமாகும். உள்ளே எல்லா அழுக்கும், சீழ் பிடித்த காயங்களும் அப்படியேதான் இருக்கும்.

காமத்துக்கு எதிர்ப்பு பிரம்மசரியம் அன்று. பிரம்மசரியம் உள்ள இடத்தில் காமத்திற்கு வாய்ப்பில்லை என்பதே உண்மை. காம ஆசையைத் தடுத்து-தடுத்து, சமாளித்து பிரம்மசரியம் ஏற்படுவதில்லை. 'நான் பிரம்மம் என்று ஒருவன் அறிந்து கொண்டால், அவனுடைய நடத்தையில் (சரியம், ஆசாரம்) பிரம்மம் இறங்கி வருகிறது. பிரம்மத்தைப் போன்று ஒழுகுதல் பிரம்மசரியம். இந்தச் சொல்லுக்கும் காமவேட்கைக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. இது அடிப்படையில் ஆழ்ந்த அர்த்தமுள்ள சொல். மகாத்மாக்கள் எனப்படுவோர் இதன் பொருளைச் சிதைத்துவிட்டார்கள். காம ஆசையிலிருந்து விடுபடுதலே பிரம்மசரியம் என அவர்கள் விளக்குகின்றனர். பிரம்மசரியத்தில் காமம் எப்படி வந்தது? பிரம்மத்தைப் போல் நடத்தை, தெய்விக நடத்தை என்பதே பிரம்மசரியம் என்பதன் சொல்வழிப் பொருள்.

ஆனால் பிரம்மத்தைப்போல் நடந்துகொள்வது என்பது பிரம்மத்தை நீ உனக்குள்ளே அனுபவபூர்வமாக உணர்ந்தால்தான்

சாத்தியப்படும். அப்படி பிரம்ம அனுபவம் பெற்றவனின் நடத்தையே (பிரம்ம ஆசாரம்) பிரம்மசரியம் ஆகிறது. அவன் சொல்வான்-கடலும் எனது, அலையும் எனது, எல்லாம் என்னுடையவை, எல்லாவற்றிலும் நானும் ஓர் அங்கம். இங்கே கைவிட எதுவுமில்லை; பிடித்து வைக்க வும் எதுவுமில்லை. உலகமே மோட்சம்தான். பிறகு அதைவிட்டு எங்கே போவது?

இதையே ஜென் துறவி ரிஞ்சாயி, 'உலகமே நிர்வாணம் (மோட்சம்),' என்கிறார். நூற்றுக் கணக்கான ஆண்டுகளாக மக்களுக்கு இந்த சூத்திரம் புரியவில்லை. 'உலகம் நிர்வாணமா? இதென்ன விசித்திரமான அறிவிப்பாக இருக்கிறதே. போகமே தியாகம் என்று சொல்வது போலல்லவா உள்ளது?' என்று மக்கள் குழம்பினர். ஆனால் அவர் சொன்னது சரிதான்.

ரிஞ்சாயி சொல்வதென்ன? எதுவும் விலகப் போவதில்லை. விடுவதற்கும் எதுவுமில்லை. பெறுவதற்கும் எதுவுமில்லை. இதையெல்லாம் அறிந்தவன் நிர்வாண நிலையை அடைந்தவன் ஆகிறான். அவன் தொடர்ந்து உலகத்திலேயே இருப்பான். வேறு எங்கே ஓடிப்போக முடியும்? போவதற்கு எந்த இடம் உள்ளது? இருப்பதை, கிடைப்பதை ஏற்கிறான். அலை எழும்புகிறதா, அதை ஏற்கிறான். அலை மறைந்து விட்டதா அந்த நிலையையும் ஏற்கிறான். அவனது ஏற்பு முழுமையானது. இல்லாததை அவன் கேட்கப் போவதில்லை. இல்லாதது என்றொரு நிலைமையும் கிடையாது.

உன்னைத் தவிர இன்னொன்றும் வேண்டும், வேறொன்றும் வேண்டும், வித்தியாசமானது வேண்டும் என்று நீ விரும்பும்வரை நீ தடுமாறியபடியே இருப்பாய். என்றைக்கு நீ, 'எப்படியோ அப்படியே உள்ளது; எப்படி உள்ளதோ அப்படியே இருக்கும்; எது எப்படி உள்ளதோ அது எனக்கு சம்மதம்,' என்று அறிவிக்க முடிகிறதோ அன்றே நீ முக்தனாகிவிட்டாய், மோட்சம் பெற்றுவிட்டாய்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

**முதல் கேள்வி:**

> **கபில முனிவரின் ஸாங்க்ய சாஸ்திரம், அஷ்டாவக்ரரின் மகாகீதை, ஜே. கிருஷ்ண மூர்த்தியின் தத்துவம் எல்லாம் ஒன்றுதானா? இடம் மற்றும் கால வேறுபாட்டால் அவை வெளியிடப்பட்ட விதம்தான் வெவ்வேறா?**

**ச**த்தியம் காலத்தைக் கடந்தது; தேசத்தை (இடத்தைக்) கடந்தது. காலம்-இடத்துடன் சத்தியத்திற்கு எந்த சம்பந்தமும் இல்லை. சத்யம் நிரந்தரமானது. ஆனால் அதன் வெளிப்பாடு காலம்-இடத்தைக் கடந்திருக்கவில்லை. அது காலத்திற்குக் கட்டுப்பட்டது; காலத்திற் கேற்ப மாறுகிறது.

அறிதல் என்பது குறிப்பிட்ட சமயத்தில்தான் சாத்தியம் என்றில்லை. ஆனால் சொல்லுதல் என்பது காலவரையறைக்குள் அடங்கியது. அறிதல் தனிமையில் நிகழும். அங்கே வேறு யாரும் இருக்க மாட்டார்கள். ஆனால் சொல்லுதல் என்பது நிகழ, அதைக் கேட்கின்ற இன்னொரு நபர் தேவை.

சத்தியம் எனும் நிகழ்ச்சி தனி மனிதனுக்குள் நடைபெறுகிறது. எண்ணம் வெளிப்படுதல் சமூகத்தில், மக்கள் நடுவில் நிகழ்கிறது.

கபில முனிவர், அஷ்டாவக்ரர், கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் அவரவர் காலத்திற்கேற்றபடி சீடர்களிடம் பேசினார்கள். ஆகவே கருத்தை வெளியிட்ட விதம் வித்தியாசமாக இருக்கலாம். ஆனால் அந்தந்தச் சீடர்கள் அறிந்து கொண்டது ஒரேமாதிரி ஞானமாகும். இதற்கு கிருஷ்ணமூர்த்தி, அஷ்டாவக்ரர் சொன்னதையும், அஷ்டாவக்ரர் கபிலர் சொன்னதையும் திருப்பிச் சொன்னதாக

அர்த்தமில்லை. திருப்பிச் சொன்னால் மூல அனுபவம் கிடைக்காது. சத்யம் என்று பிறர் கூறியதைத் திருப்பிக் கூறினால் அது அசத்யமாகி விடும். காதால் கேட்ட சத்யம் அசத்யமாகும். ஒவ்வொருவனும் சுயமாக அறியும் சத்யமே உண்மையாகும்.

இவ்வாறு ஒருவனுக்கு சத்யானுபவம் ஏற்படும்போது அதேபோல் வேறு ஒருவனும் அனுபவம் பெற்றிருக்கக்கூடும் என்பது பற்றி அவன் நினைத்துப் பார்ப்பதில்லை. சத்தியானுபவம் இவ்வுலகம் அறியாத அனுபவமாகும். அது உவமையற்றது. தனித்தன்மை வாய்ந்தது ஆகவே அந்த அனுபவம் பெறுபவன் தனக்கு மட்டுமே அது கிடைத்ததாக நினைக்கிறான்.

காதலிலும் இப்படித்தான். காதலிப்பவன் தன்னைப்போல் காதலை உணர்பவன் வேறு எவனும் கிடையாது என நினைக்கிறான். உலகில் இதுவரை எண்ண முடியாத அளவிற்குக் காதலர்கள் தோன்றியுள்ளனர். ஆனால் காதலிக்கத் தொடங்கும் ஒவ்வொருவனும் தனக்குத்தான் காதல் புற்றி முழுமையாகத் தெரியும் என்று நினைத்துக் கொள்கிறான். ஏனெனில் காதலிப்பது என்பது இன்னொருவரைப் பார்த்துப் பின்பற்றக் கூடியது அன்று. இன்னொருவரிடமிருந்து அதைக் கடன் வாங்க முடியாது. மற்றவர்களுக்குக் காதல் ஏற்பட்டதைப் பற்றியும், எப்படி ஏற்பட்டது என்றும் நீ உணர முடியாது. உனக்கு ஏற்பட்டுள்ள காதலைப் பற்றிதான் உனக்கு அனுபவம் ஏற்பட முடியும்.

இதுபோல், சத்யானுபவம் நிகழும்போது அது தனித்தன்மை வாய்ந்ததாக உள்ளது. ஆகவே சீடர்கள் ஏமாறிவிடுகிறார்கள். கபிலருக்குத் தெரிந்தது வேறு யாருக்கும் தெரியாது; அஷ்டாவக்ரர் அறிந்ததை மற்றவர்கள் அறிந்திருக்கவில்லை; கிருஷ்ணமூர்த்தி உபதேசித்த விஷயங்கள் வேறு யாரும் சொன்னது கிடையாது என்று சீடர்கள் முடிவுகட்டுகிறார்கள். இது அவர்களது பிரமை. அந்த ஞானிகள் அறிந்ததெல்லாம் ஒன்றேதான்; அறிவதற்கு வேறு எதுவுமில்லை. சொன்ன விஷயமும்கூட ஒன்றேதான். மொழிகள்-சொற்கள் வெவ்வேறாக இருக்கலாம். அந்த உபதேசத்தைக் கேட்டவர்களிலும் பல வகையினர் இருக்கலாம். ஆனால் ஞானிகள் அறிந்ததும் சொன்னதும் ஒரே உண்மையைத்தான்.

ஆனால் சத்யானுபவம் கிடைக்கும் போதெல்லாம் தனக்குத்தான் கிடைத்ததாகத் தோன்றும். முதல் முதலாகக் கிடைத்ததாகத் தோன்றும். அந்த அனுபவம் இதற்குமுன் யாருக்கும் கிடைத்ததில்லை என்றும், இனிமேலும் யாருக்கும் கிடைக்காது என்றும் எண்ணத் தோன்றும்.

புத்தருக்கு சத்ய தரிசனம் கிடைத்தபோது அதை 'அபூர்வம்' என்றார். இதற்கு முன்பும் இவ்வாறு ஏற்பட்டதில்லை; இனி ஏற்படவும் வாய்ப்பில்லை என்றார்.

இவ்வாறு அவர் அறிவித்தது தன்னைப் பற்றி மட்டும்தான். ஆனால் சிஷ்யர்கள் 'அபூர்வ' என்பதற்கு புத்தருக்கு ஏற்பட்ட அனுபவம்போல் யாருக்கும் ஏற்பட்டதில்லை என்று அர்த்தம் செய்து கொண்டார்கள். அது தவறான கண்ணோட்டம். புத்தரைப் பின்பற்றுவோர் புத்தரின் சத்யானுபவம் மகாவீரருக்கு ஏற்பட்டதில்லை, ஆதிசங்கரருக்கு ஏற்பட்டதில்லை என்று வாதிடுகிறார்கள். புத்தர் 'அபூர்வம்' என்றது தனது அனுபவம் பற்றித்தான். அந்த அனுபவம் தனக்குத்தான் இதுவரை ஏற்பட்டதில்லை என்ற அர்த்தத்தில் பேசுகிறார். 'அவருக்கிருந்த அறியாமை இருட்டு முதல் முறையாக அகன்றது. இந்த விடியல் முதல் முறையாக மலர்ந்தது' என்கிறார்.

ஒருவருக்கு சமாதிநிலை வாய்க்கும்போது அது அவருக்கு அபூர்வமானதுதான். ஆனால் அவர் அது பற்றிக் கூறும்போது அவரைப் பின்பற்றுவோர் தவறாகப் புரிந்து கொண்டு உபத்திரவம் செய்கிறார்கள். காதால் கேட்டதுமே அர்த்தம் மாறிவிடுகிறது.

நான் உன்னிடம் பேசுகிறேன். நான் சொல்லவந்த விஷயம் அதைச் சொல்லாத வரையிலும் சத்யமாக இருக்கும். நான் அதை வெளியிட்டு நீ அதைக் கேட்டதுமே அது அசத்யமாகிவிடும். ஏனெனில் நான் சொல்வது எனக்கு விளைந்த அனுபவம் பற்றியது. நீ காதால் கேட்பது உனது அனுபவம் அன்று. நீ எனது அனுபவத்தை நம்புகிறாய் என்று மட்டும் நினைக்கலாம். நீ சுயமாக ஒன்றை உணராமலே நம்புகிறாய். ஆதாரமற்ற நம்பிக்கையை அசத்யம் என்றே கூறலாம்.

இப்படி நம்புகின்றவர்களிடையே மோதல் விளைகிறது. புத்தர் சொன்னதைக் கேட்டவர்கள், மகாவீரர் மொழிந்ததைக் கேட்டவர்கள், கபிலர் கூறியதைக் கேட்டவர்கள், கிருஷ்ணமூர்த்தி பேசியதைக்

கேட்டவர்கள் என்று பலவகையினர் உள்ளனர். அவர்களில் ஒவ்வொரு வகையினரும் வெவ்வேறு மொழியில், சொற்களில், பாணியிலமைந்த உபதேசங்கள் கேட்டவர்கள். கேட்டது ஒரே பாட்டைத்தான். குரல்கள்தாம் வேறு-வேறாக உள்ளன.

மொழியியலின் ஒரு பிரிவான ஒலியியலில் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? அவர்களது பெரியதொரு கண்டுபிடிப்பு என்னவென்றால், ஒவ்வொருவரது கட்டைவிரலின் அடையாளமும் வேறுபடுவதைப் போல், ஒவ்வொருவரது குரலும் வெவ்வேறாகும் என்பதே. எந்த இரண்டு பேருடைய குரலும் ஒரே மாதிரியாக இருக்காது. ஒரே பாட்டை இருவர் பாடினாலும் கேட்கும்போது குரல் வித்தியாசம் தெரியும்.

கிருஷ்ணமூர்த்தி பேசியபோது அதில் அவரது குரலின் தனி முத்திரை பதிந்திருக்கும். அவரது ஆளுமையின் பாதிப்பு படிந்திருக்கும். இந்தப் பாதிப்புகளுக்கு முக்கியத்துவம் கொடுத்தால் ஒரே மதத்தில் பல பிரிவுகள் (சம்பிரதாயங்கள்) தோன்றும். மூல விஷயத்தை அணுகினால் பொதுவில் தர்மம் என்பது உதிக்கிறது.

சம்பிரதாயங்கள் அல்லது மதப் பிரிவுகளின் ஆழத்தில் தர்மம் மறைந்து நிற்கிறது. அந்தப் பிரிவுகள் நாம் உடுத்தும் உடைகள் போன்றவை. அந்த ஆடைகளை அகற்றி, நிர்வாணமான தர்மத்தைத் தேடிக் கண்டுபிடிக்காத வரையிலும் நீ தர்மத்தைக் கண்டறிய முடியாது. இந்துமதம், இஸ்லாம், கிறிஸ்தவம், சீக்கியம், சமணம் ஆகிய எல்லாம் சம்பிரதாயங்கள். இவை ஒரே கருத்தின் வெவ்வேறு வெளிப்பாடுகள். ஒரே விஷயத்தை வெவ்வேறு மொழிகளில் கூறிய காரணத்தால் இவற்றின் இடையே பெரிய அளவில் வித்தியாசம் தெரிகிறது.

ஆனால் எல்லா மதங்களிடையேயும் ஒத்திசைவு ஏற்படுத்த முயலு என்று நான் உனக்கு அறிவுறுத்த மாட்டேன். அந்த பிரமையில் விழாதே. அது புத்தி விளைவிக்கும் வலுவான பிரமையாகி விடும். அஷ்டாவக்ரர், கிருஷ்ணமூர்த்தி, கபிலர் ஆகியோரின் உபதேசங் களைப் படித்து, அவற்றில் ஒற்றுமையைத் தேடி, ஒரே மாதிரியான கருத்துகளைச் சேகரித்து ஒரு பொதுவான கோட்பாட்டை உருவாக்க முயன்றால், அது புத்தி உனக்கு விரித்த வலையாகி விடும். இதன் மூலம் நீ தர்மத்தைத் தெரிந்து கொள்ள முடியாது. முன்பே மூன்று

மதங்கள் இருந்ததாக வைத்துக் கொண்டால், உன்னுடைய முயற்சியின் விளைவான கோட்பாடு அவற்றுடன் சேர்ந்து நான்காவது மதமாகிவிடும்.

ஒரு கிராமத்தில் ஒருநாள் காலையில் இரண்டு குழுக்களாகச் சிலர் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். முல்லா நஸ்ருத்தீன் அப்பக்கமாகப் போக நேர்ந்தது. அவர் சொன்னார், "ஏன்யா இப்படி சண்டை போடறீங்க? பேச்சு மூலமாகவே பிரச்சினையைத் தீர்த்துக் கொள்ளலாமே. ஏன் கையில் கத்தி தூக்குகிறீர்கள்? கொலை விழப் போகிறது. கொஞ்சம் பொறுங்கள். நான் வழி சொல்கிறேன். குழுவிற்கு ஐந்து பேராக இரண்டு குழுவிலிருந்தும் பஞ்சாயத்துக்காரர்களாகத் தேர்ந்தெடுங்கள். அவர்கள் சரியான முடிவு சொல்லி சண்டையை நிறுத்தி விடுவார்கள்."

மாலையில் முல்லா அந்த வழியாகத் திரும்பி வந்தபோது காலையில் பார்த்த சிலருக்குப் பதிலாக, கூட்டமாக நிறையப்பேர் சண்டை போட்டுக் கொண்டிருந்தனர். கைகளில் உருவிய கத்தி! அவர்களைத் தடுத்து முல்லா, "மறுபடியும் என்ன பிரச்சினை?" என்று விசாரித்தார்.

அவர்கள் சொன்னார்கள்: "காலையில் சிலர்தான் தகராறு செய்து கொண்டிருந்தார்கள். இப்போதோ அவர்கள் தேர்ந்தெடுத்த பஞ்சாயத்தார்களும் தமக்குள் சண்டைபோட ஆரம்பத்து விட்டனர். ஐயா, தாங்கள் இந்த பஞ்சாயத்துக்காரர்களைச் சமாதானப்படுத்தப் புதிதாக ஒரு பஞ்சாயத்து ஏற்படுத்தி உதவுங்கள்."

நஸ்ருத்தீன் மறுத்தார். "நிலைமை எல்லை மீறிவிட்டது. எனக்கு புத்திவந்தது. காலையிலேயே நியமித்த பஞ்சாயத்தாரால் நீங்கள் சிக்கலைத் தீர்த்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். இப்போதோ சண்டை வளர்ந்துவிட்டது." என்றார்.

இணக்கம் ஏற்படுத்த முயல்பவர்களால் சம்பிரதாய வேற்றுமைகள் மறைந்து போவதில்லை. ஏற்கெனவே மூன்று மதப் பிரிவுகள் இருந்தால், சமாதானபிரியர்களின் நான்காவது சம்பிரதாயம் ஒன்று புதிதாகத் தலைதூக்குகிறது. பிறகு இந்த சமரச சம்பிரதாயம் புதிய வேறுபாடுகளை எழுப்புகிறது.

மகாவீரர் விஷயத்தில் இப்படித்தான் ஆனது. சத்தியம் சம்பந்தமான எல்லா வெளிப்பாடுகளும் உண்மைதான். ஆனால் ஒவ்வொன்றும் ஓரளவே உண்மை. எந்த வெளிப்பாடும் பூரண உண்மையில்லை. அவற்றிடையே ஒருங்கிணைப்பு உண்டாக்க மகாவீரர் 'ஸ்யாத்வாதம்' என்னும் புதிய கொள்கையை உருவாக்கினார். இதன் விளக்கம் என்னவெனில்—நான் சொல்வதும் சரி, உன் கருத்தும் சரி, மற்றவர்கள் கூறுவதும் சரிதான். எல்லாருடைய கருத்துகளிலும் கொஞ்சம்-கொஞ்சம் உண்மை உள்ளது. ஆகவே நமக்குள் ஏன் சண்டையிட வேண்டும்? விவாதம் ஏன்? மகாவீரரின் மதிப்பீடு சரியானது. ஆனால் விளைவு என்ன? 'ஸ்யாத்வாதம்' ஒரு புதிய சம்பிரதாயமாக உருவாகி, அதற்கும் மற்ற சம்பிரதாயங்களுக்கும் இடையில் புதிதாகச் சண்டை மூண்டது!

நான் ஜைனத் துறவி ஒருவருடன் உரையாடிக் கொண்டிருந்தேன். நான் அவரிடம் ஸ்யாத்வாதத்தின் அர்த்தத்தைச் சுருக்கமாகச் சொல்லுமாறு கேட்டுக் கொண்டேன். அவர் சொன்னார்- ஸ்யாத்வாதத்தின்படி எதுவுமே முழு உண்மையில்லை. எல்லாக் கொள்கைகளிலும் சிறிதளவாவது உண்மை உண்டு. நாங்கள் எல்லாவற்றிலுமுள்ள உண்மையைக் காண்கிறோம். நாங்கள் வாதம் செய்து பிரிப்பதில்லை. மாறாக ஒருங்கிணைக்கிறோம்."

நான் கேட்டேன், "உங்கள் ஸ்யாத்வாதம் பூரண சத்தியமா இல்லையா?" "பூரண சத்தியம்தான்," என்று அவர் பதிலளித்தார். இதை மற்ற சம்பிரதாயவாதிகள் ஒப்புக் கொள்வார்களா? ஸ்யாத்வாதம் பூரணமான சத்தியமில்லை என்று அவர்கள் வாதம் செய்வார்கள். ஒருங்கிணைத்து சமரசம் செய்யவந்த ஸ்யாத்வாதம் இன்னொரு சம்பிரதாயமாகக் கருதப்பட்டு, புதிய சண்டைக்குத்தான் வழி கோலுகிறது.

ஸ்யாத்வாதத்தைப் புரிந்து கொண்டிருந்தால் சமண சம்பிரதாயம் தோன்றியிருக்காது. ஏனெனில் ஸ்யாத்வாதத்தின் அடிப்படையில் சம்பிரதாயம் தோன்ற வாய்ப்பில்லை. ஸ்யாத்வாதம் எல்லாவற்றிலும் சத்தியமுண்டு, ஆனால் எதிலும் பூரண சத்தியம் கிடையாது என்கிறது. ஒரு சம்பிரதாயம் தோன்றக் காரணம் தன்னிடம் மட்டுமே பூரண சத்தியம் உண்டு என்ற நினைப்புதான். சம்பிரதாயங்களை வேரறுக்க வந்த ஸ்யாத்வாதம் சமண சம்பிரதாயத்தின் அங்கமாகிவிட்டது.

சம்பிரதாயங்களிடையே சமரசம் ஏற்படுத்தும் வழியைத் தேடுமாறு உன்னை நான் கேட்டுக் கொள்ளவில்லை. நான் சொல்வதெல்லாம் என்ன? நீ தியானத்தில் ஆழ்ந்துசென்றால், சாட்சி மனப்பான்மையை அடைந்து விட்டால், எல்லாப் பாதைகளும் மலையின் உச்சியை நோக்கியே செல்வதை நீ தெரிந்து கொள்வாய். அவை ஆரம்பமாகும் இடங்கள் வெவ்வேறாக இருக்கலாம். முடிவு-பூரண ஆஹுதி—ஒரே சிகரம்தான்.

சாட்சி மனப்பான்மையை மேற்கொண்டால் எல்லாப் பாதைகளும் ஒரே முடிவிற்குச் செல்வது தெரியவரும். எப்படி நீ பயணிக்கிறாய் என்பது உன் விருப்பமாகும். நடந்து, மாட்டுவண்டியில், குதிரை மீது, விமானம், ரயில், கார், பஸ் என்று எந்த வகையிலும் வா. இதில் தகராறுக்கு இடமில்லை. ஒருவன் பள்ளிவாசலிலிருந்து, கோயிலிலிருந்து வரக்கூடும்; பிரார்த்தனை செய்துவிட்டு, தியானம் செய்துவிட்டு வரக்கூடும்; கூத்தாடியபடி அல்லது மௌனமாக வரக்கூடும். சாட்சி மனப்பான்மை உதித்துவிட்டதெனில், ஞான விழிப்பின் கிரணங்கள் ஒளிவிட்டதெனில், பிரமையில் ஆழ்ந்திருக் காமல், நல்ல சுயநினைவுடன் நீ வாழ ஆரம்பித்துள்ளாய் எனில், உன் வாழ்வில் கருணையும் அன்பும் பிரவேசிக்கும். உன் வாழ்விலிருந்து சினமும் வன்செயல் விருப்பமும் நீங்கிவிடும்.

நீ இரண்டு விஷயங்கள்தான் தெரிந்துகொள்ள வேண்டும். அவை தனித்தனியானவை அல்ல. ஒரே காசின் இரண்டு பக்கங்கள் போன்றவை. உள்ளே தியானம் ஆட்சி செய்தால் வெளியே அன்பு பிரதிபலிப்பாகும். இதை மாற்றிச் சொன்னாலும் சரிதான். நீ பிரார்த்தனை செய். அன்பு தோன்றும். தியானம் அதைப் பின்தொடரும். அல்லது தியானம்செய், அன்பு தோன்றும். பிரார்த்தனை பின்தொடரும். அன்பு, தியானம் ஆகிய இரண்டில் எதைச் சாதித்தாலும் மற்றொன்றும் தானாகவே சாத்தியமாகிவிடும்.

சாட்சி நிலையை அடைந்த பிறகுதான் உனக்கு உலகில் நிலவும் சத்தியங்களிடையே உள்ள சமரசம் தெரியவரும். இதற்கு மாறாக, அறிவுபூர்வமான சமரசம் ஏற்படுத்த முயல்வது பலன் தராது.

**இரண்டாம் கேள்வி:**

> **நேற்று பேசுகையில் எல்லா ஆன்மிக முயற்சி களும் சிக்கலானவை என்று கூறினீர்கள். அதேசமயம் சந்நியாசி கட்டாயம் தியானம் செய்ய வேண்டும் என்கிறீர்கள். இதனால் மனத்தில் குழப்பமாக உள்ளது. தியானம் செய்யாவிடில் எதையோ இழந்ததுபோல் உணர்கிறேன். ஆனால் தியானம் செய்வதால் நேரம் வீணாகிறது என்றும் மனம் இன்னொரு புறம் கூறுகிறதே. என்ன செய்வது?**

நிச்சயமாக எல்லா ஆன்மிக முயற்சிகளும் சிக்கலானவைதாம். ஆனால் அவற்றை மேற்கொள்ள வேண்டாம் என்று இதற்கு அர்த்தமில்லை. நான் சொல்வது—நீ படகில் பயணம் செய். ஆனால் கரை சேர்ந்ததும் இறங்கிவிடு.

நீ விவாதம் செய்கிறாய்: "நீங்கள் பயணம் செய்யவும் சொல் கிறீர்கள், இறங்கிவிடவும் சொல்கிறீர்கள். இறங்கத்தான் வேண்டுமெனில் படகில் ஏறுவது தேவையில்லையே. ஏறிவிட்டால் பிறகு ஏன் இறங்க வேண்டும்? தர்மசங்கடத்தில் எங்களைத் தள்ளுகிறீர்களே," என்கிறாய். தர்க்க புத்தி இப்படித்தான் குழப்பம் உண்டாக்கும்.

**சி**லர் ஒரு குழுவாக ஹரித்வாருக்கு புனித யாத்திரையாகக் கிளம்பினர். ரயிலில் பலத்த கூட்டம். குழுவில் ஒருவனைத் தவிர எல்லோரும் பெட்டியில் ஏறிவிட்டனர். மிஞ்சியவன் ஏறமுடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தான். ஏறியவர்களில் ஒருவன் அவனிடம் வேடிக்கையாகச் சொன்னான், "ஏன்பா ஏறுவதற்கு இப்படி கஷ்டப்படறே? ஏறினாலும் கடைசியில இறங்கித்தானே ஆகணும்."

ஏற முயன்றவன் கொஞ்சம் புத்திசாலி. அவன் முயற்சியைக் கைவிட்டு பிளாட்ஃபாரத்தில் இறங்கிவிட்டான். உள்ளே இருந்த குழுவினர் எட்டிப்பார்த்து, "ஏன் ஏறாமலிருக்கிறாய்? ரயில் புறப்படும் நேரம் ஆகிவிட்டது. ஏறு சீக்கிரம்," என்று கத்தினர்.

அவன் பதிலளித்தான், "உங்களுக்குத் தெரியாதா என்ன? ஏறினால் இறங்கத்தானே வேண்டும். பிறகு ஏன் ஏறுவதற்கு முட்டித்

தள்ளி கஷ்டப்பட வேண்டும்? விஷயம் புரிந்தது. ஆகவே இறங்கி விட்டேன்.''

ரயில் நகர ஆரம்பித்தது. குழுவினர் கலவரப்பட்டனர். அவனையும் சேர்த்துக் கொண்டுதான் அவர்கள் கிளம்பியிருந்தனர். அவனை எப்படி விட்டுவிட முடியும்? அவர்களில் சிலர் இறங்கி அவனை வலுக்கட்டாயமாகப் பெட்டியில் ஏற்றிவிட்டனர். அவன் கத்தினான், "ஏன் இப்படி செய்கிறீர்கள்? இறங்கித்தான் ஆகவேண்டும் என்கிற நிலையில் என்னை ஏன் சிரமப்படுத்துகிறீர்கள்?''

ஆனால் அவர்கள் அவன் பேச்சை அலட்சியம் செய்தனர். "வாதம்-விவாதம் பிறகு செய்து கொள்ளலாம். முதலில் நீ பெட்டியில் ஏறு. ஒன்றாக நாம் கிளம்பிவிட்டு இப்போது முன்பின் தெரியாத இடத்தில் உன்னை எப்படி நாங்கள் விட்டுவிட்டு போக முடியும்?'' என்று கேட்டனர்.

ஹரித்வார் ரயில் நிலையம் வந்துவிட்டது. யாத்திரைக் குழுவினர் இறங்கிக் கொண்டிருந்தனர். ஆனால் புதுத் தகராறு ஏற்பட்டது. அந்த குறிப்பிட்ட பயணி இறங்க முடியாதென்று அடம்பிடித்தான். "ஏறியாகி விட்டது. ஏற்றிவிட்டீர்கள், பிறகு ஏன் இறங்க வேண்டும்?''என்று வாதம் செய்தான். "இறங்கினால் மறுபடியும் ஏற வேண்டும். நான் ஏறிய நிலையிலேயே இருக்கிறேன். என்னை இங்கேயே விட்டுவிட்டு நீங்கள் போகலாம்,'' என்று கூறினான்.

அவர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. வலுக்கட்டாயமாகக் கீழே இறக்கி விட்டார்கள். அவன் கத்தினான், "ஏன் இப்படி ஏடாகூடமாக நடந்து கொள்கிறீர்கள்? ஏற விரும்பாத என்னை ஏற்றிவிட்டீர்கள். இறங்க விரும்பாத என்னை இறக்கி விட்டீர்கள். ஏறுவதா? இறங்குவதா என்ற இரண்டில் ஒன்றைத்தான் தெரிந்தெடுக்க வேண்டும்.''

வாழ்க்கையில் இத்தகைய தர்க்கத்தால் பேரிழப்பே ஏற்படும். நீ ரயிலில் ஏறாவிடில் புனிதத் தலத்தை அடைய முடியாது. குறிப்பிட்ட ரயில் நிலையம் வந்ததும் இறங்காவிடில் அப்போதும் புனிதத் தலத்தை அடைய முடியாது.

அதனால்தான் நான் உன்னை தொடர்ந்து தியானம் செய்யச் சொல்கிறேன். ஆனால் ஒரு கட்டத்தில் தியானத்தையும் கைவிட

நேரிடும் என்பதை நினைவில் வை. நீ ஒன்றை மட்டும் பின்பற்றுவது வசதியென நினைக்கிறாய். வசதி முக்கியமில்லை. ஆன்மிகப் பலன் முக்கியம்.

வசதி முக்கியமென்றால் எந்த முயற்சியுமே செய்யாதே. கிருஷ்ணமூர்த்தியின் வழி அது. தியானம் செய்ய வேண்டியது அவசியமில்லை என்று அவர் தெளிவாகச் சொல்கிறார். தியானம் செய்ய வேண்டாமென நினைத்தவர்கள் அவர் பக்கம் போய்ச் சேர்ந்தனர். அவர்களுக்கும் விசேஷமான பலன் எதுவும் கிடைக்க வில்லை.

பிறகு என்னிடம் வருகிறார்கள். "நாங்கள் கிருஷ்ணமூர்த்தியின் அறிவுரை கேட்டுச் சலித்துப்போய் விட்டோம். தியானத்தில் சாரம் இல்லை என்று அவர் கூறுவது புரிந்தது. ஆனால் தியானம் மேற்கொள்ளாத நிலையிலும் பலன் கிடைக்கவில்லையே." என்று அவர்கள் புகார் செய்கிறார்கள். இவர்கள் இக்கரையிலேயே இருந்து விட்டார்கள். படகில் ஏறவில்லை.

இன்னொரு புறம் மஹேஷ் யோகி அல்லது அவர் வகைத் துறவியர் உள்ளனர். தியானம் செய்யுமாறு அவர்கள் மேன்மேலும் வற்புறுத்துகின்றனர். சிலர் நாம ஜபத்தில் ஆழ்ந்துள்ளனர். 'ராம்-ராம்' என்று வாழ்நாள் முழுதும் ஜபிக்கின்றனர். அவர்களும் என்னிடமே வருகிறார்கள். தியானமும் ஜபமும் மதத்துடன் சம்பந்தப்பட்டிருப்பதால் எப்படி அவற்றைக் கைவிடுவது என்று கேட்கிறார்கள்.

நான் கூறுவதைப் புரிந்துகொள்ள முயற்சிசெய். தியானம் செய்யத் தொடங்கு. கிருஷ்ணமூர்த்தி சொல்வது உண்மை-படகை விட்டு அவசியம் இறங்கிவிட வேண்டும். இக்கரையில் அன்று. அக்கரையில் இறங்கு. கிருஷ்ணமூர்த்தி 'படகைவிட்டு இறங்கு' என்றது அக்கரையைக் குறிப்பிட்டுத்தான். இங்கேயே இறங்கினால் மறுகரைக்குப் போக முடியாதே. இங்கேயே அலைந்து திரிய நேரிடும். நீ மஹேஷ் யோகி படகில் ஏறுவதைப் பார்த்தாய். அது உண்மையே. ஆனால் படகிலேயே இருந்து விடாதே. மறுகரையில் இறங்கிவிட வேண்டும் என்பதை நினைவில் வை.

'தியானம் செய்-தியானத்தைக் கைவிடு' என்று பரஸ்பரம் முரண்படும் அறிவுரைகள் மூலம் நான் குறிப்பிடுவது அந்த இரு

கரைகளைத்தான். இந்தக் கரையிலிருந்து ஆரம்பி; அந்தக் கரையில் விட்டுவிடு. 'தியானம் செய்' என்று மட்டும் சொல்லி நிறுத்தினால் ஆபத்து. அதை நிறுத்திவிட வேண்டிய வேளை வரும்போது உன்னால் முடியாமல் போய்விடும். 'தியானத்தை ஒரு கட்டத்தில் விடு' என்று நான் முதலிலேயே சொன்னால், விடவேண்டியதை எதற்கு வீணாக ஆரம்பிக்க வேண்டும் என்று நீ சும்மா இருந்து விடுவாய்.

'சம்பாதி-தானம் செய்' என்று சொல்வது போல்தான் இதுவும். சம்பாதிக்கும் முயற்சியிலும் ஆனந்தம் உண்டு, தானம் செய்வதிலும் நிறைய ஆனந்தம் உண்டு. இதேபோல் தியானமும் சுவையான அனுபவம். ஒரு நிலையில் அதை விடுவதும் சுகமான அனுபவம்.

இதில் தர்மசங்கடம் எதுவுமில்லை. இது தெளிவான விஷயம். நான் எல்லா முரண்பாடுகளையும் சாதகமாக்கிக் கொள்ள விரும்புகிறேன். ஆனால் நீயோ முரண்பாடில்லாத உபதேசத்தை என்னிடம் எதிர்பார்க்கிறாய். அப்போதுதான் நீ சங்கடப்படாமல் இருப்பாய். நீ பிறர் போட்ட தடத்திலேயே செல்லவே லாயக்கு. கையில் ஒரு கொடியும் கொடுத்துவிட்டால் நீ அதை ஏந்திக் கொண்டு பிறர் தடத்தில் செல்ல தயாராக இருப்பாய்.

ஆம், என் பேச்சில் முரண்பாடு இருக்கத்தான் செய்கிறது. ஏனெனில் நமது வாழ்க்கையே முரண்பாடுகளால்தான் உருவாகிறது. பிறப்பு நேரிடுகிறது. பிறகு சாவு நேரிடுகிறது. இது ஒரு முரண்பாடு. நீ இது பற்றி வாழ்க்கையிடம் புகார் கூறுகிறாயா? 'இது என்ன விசித்திரம்?' என்று கடவுளிடம் புகார் செய்கிறாயா? 'உயிர் கொடுத்தீர், பிறகு ஏன் கொல்கிறீர்? கொல்லத்தான் வேண்டுமெனில் பிறவி கொடுப்பதை நிறுத்து.' என்று நீ கடவுளிடம் கேட்டுக் கொண்டது உண்டா?

நீ புகார் கூறினாலும் கடவுள் அதைக் காதில் போட்டுக் கொள்ள மாட்டார் எத்தனையோ பேர் இது விஷயமாகக் கடவுளை நொந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் பிறப்பைத் தரும் பரமாத்மா இறப்பையும் கொடுக்கிறார். ஒரு கையால் பிறப்பைத் தருகிறார். இன்னொரு கையால் அதைத் திரும்ப எடுத்துக் கொண்டு விடுகிறார். இங்கே இரவு-பகல், வெப்பம்-குளிர் மாறி மாறி வருகின்றன. வெவ் வேறு விதமான பருவகாலங்கள் ஒன்றையொன்று தொடர்கின்றன. இதில்தான் வாழ்க்கையின் சுவை அடங்கியுள்ளது. தனித்தனியாக

முரண்படுபவை வாழ்க்கையில் சந்திக்கின்றன. ஒரே சுவை நீடித்தால் வாழ்க்கை வெளிறிப்போகும்; வளம் ஏற்படாது. முரணான ஒலிகள் வாழ்க்கையில் இணைந்து மதுரமான சங்கீதத்தை விளைவிக்கின்றன. பிறப்புக்கும் இறப்புக்கும் இடையே வாழ்க்கை களிநடம் புரிகிறது.

ஆகவே நான் சொல்வது: நீ தியானம் பழகு. ஆனால் ஒரு கட்டத்தில் தியானத்தைக் கைவிட நேரிடும் என்பதை நினைவில் வை. எந்த விதிமுறையையும் ஒருநாள் கைவிடத்தான் வேண்டும்.

இந்த விஷயத்தில் இந்துக்கள் கெட்டிக்காரர்கள். மண்ணால் விநாயகர் சிலை செய்கிறார்கள். அதற்கு பூஜை நடக்கிறது. பிறகு அதை எடுத்துச் சென்று கடலில் கரைத்து விடுகிறார்கள். உலகில் எந்த மதத்துக்காரருக்கு இவ்வளவு துணிச்சல் உண்டு? மண்ணால் உருவம் செய்து அதில் இறைத் தன்மையை ஏற்றுகிறார்கள். ஆடல், பாடல், பாட்டு, பூஜை எல்லாம் முடிந்தது. பிறகு கைகூப்பி, "சாமி! எங்களுக்கு வேறு வேலைகளும் இருக்கு. நீங்கள் கடலடியில் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். அடுத்த வருஷம் மறுபடியும் சந்திப்போம்," என்று பிரார்த்திக்கிறார்கள்.

இந்துக்கள் விநாயகர் உருவங்களை எவ்வளவு பக்தியுடன் உருவாக்குகிறார்கள் என்பதைப் பார்த்துப் பிற மதத்தினர் திகைப்படை கிறார்கள். எவ்வளவு ஆசை-ஆசையாக வண்ணம் தீட்டுகிறார்கள். உருவத்தை அழகாக்க எவ்வளவு செலவு செய்கிறார்கள். விநாயகர் சதுர்த்தி வருவதற்கு ஒன்றிரண்டு மாதங்கள் முன்னரே தயாரிப்பைத் தொடங்கி விடுகிறார்கள். பண்டிகைக்குச் சில நாள் முன்பிருந்தே பூமாலை, அர்ச்சனை, பூஜை, இசை, பஜனை முதலியவை நடைபெற ஆரம்பித்து விடுகின்றன.

விநாயகர் சிலைகளைக் கடலில் கரைக்கும் நாள் வருகிறது. ஊர்வலமாக பக்தர்கள் எடுத்துச் செல்கின்றனர். மேளதாளத்துடன், பேண்ட் இசையுடன் ஊர்வலம் முன்னேறுகிறது. முன்னால் செல்பவர்களில் சிலர் தாளத்திற்கேற்ப நடனமாடுகின்றனர். பிறப்பும் இசையுடன், மரணமும் இசையுடன். கடவுளுக்கும் பிறப்பு இறப்பைக் கற்பித்து விடுகின்றனர்.

இவ்வுலகில் உண்டாகும் ஒவ்வொரு பொருளும் அழிந்துதான் போகும். நாம் உலகில் நமக்குக் கிடைக்கும் ஒவ்வொரு பொருளையும்

உபயோகப்படுத்த வேண்டும். எந்தப் பொருளுடனும் ஒட்டக்கூடாது. பரமாத்மா மீது கூட பற்று நீடிக்கக்கூடாது. இக்காலத்தில் இப்பண்டிகையைக் கொண்டாடும் இந்துக்கள் அதன்அடிப்படை அர்த்தத்தை அறிந்துள்ளனர் என்று கூற முடியாது. முதல் முதலில் சிலை கரைப்பதற்கான ஊர்வலத்தைத் தொடங்கியவர்கள் தத்துவக் கண்ணோட்டம் பெற்றிருந்திருப்பார்கள். பிறகு வந்த தலைமுறையினர் அடிப்படைக் காரணத்தை மறந்திருப்பார்கள். இயந்திரம்போல் ஒரேமாதிரியாகக் கொண்டாடுகிறார்கள். சுய உணர்வின்றிச் செயல்படுகிறார்கள். சிலையைக் கடலில் கரைப்பது வழக்கம் என்று அதைத் தொடர்கிறார்கள். அதன் சாரத்தைப் புரிந்துகொள். அது என்ன? ஒரு விதிமுறையைக் கடைப்பிடித்தோம். ஆனால் அந்த விதிமுறைக்குக் கட்டுண்டு இருக்கக் கூடாது. பண்டிகை முடிந்தது. அதற்கு மேலும் உருவங்களை வைத்திருக்கக் கூடாது. கரைத்துவிடு.

அதையே நானும் சொல்கிறேன்: ஆடு, குதி, தியானம் செய், பூஜை பிரார்த்தனை மேற்கொள். ஆனால் இவற்றுக்கு ஆட்பட்டு விடாதே. இது பாதை, சாலை. சேருமிடம், முகாம் இல்லை. முகாமை நெருங்கும் சமயம், "என்னால் பாதையைக் கைவிட முடியாது. நான் நெடுங்காலமாக இந்தப் பாதையில் யாத்திரிகனாக உள்ளேன். நான் பாதைக்கு துரோகம் செய்ய மாட்டேன். இந்தப் பாதைதானே இத்தனை காலமாக என்னோடு நட்பாக இருந்தது. இதுதானே என்னை முகாம் வரை கொண்டுவந்தது. முகாமை வேண்டுமானால் கைவிடுவேனே தவிர, பாதையைக் கைவிட தயாரில்லை," என்றெல்லாம் நீ சொன்னால் எவ்வளவு மடத்தனம்! முகாமை அடையத்தானே பாதையுடன் உறவு. அதை எப்படி தேவையின்றி நீட்டிக்க முடியும்? பாதையின் வெற்றி என்பது முகாமை அடையச் செய்து பாதையைக் கைவிடுவதேயாகும்.

இதேபோல் தியானம் பூரணத்துவத்தை அடைந்ததும் தியானத்தைக் கைவிடும் வேளை வந்துவிட்டதெனலாம். தியானத்தை விடமுடியாதவரையில் அது இன்னும் காயாக இருக்கிறது, பழுக்கவில்லை, பூரணமாகவில்லை என்று பொருள். காய் பழுத்ததும் மரத்திலிருந்து பழம் விழுகிறது. தியானம் பழுக்கும்போது அதுவும் விழுந்துவிடும். அந்நிலையில் சமாதி வாய்க்கிறது.

பதஞ்சலி முனிவர் தியானம் நிகழ்வதை மூன்று கூறுகளாகப் பார்க்கிறார். அவை தாரணை, தியானம், சமாதி எனப்படுகின்றன.

தாரணை ஒற்றையடிப் பாதை போன்றது. நீ உள்ள இடத்தில் ராஜபாட்டை இல்லை. ஆகவே தாரணை என்னும் ஒற்றையடிப் பாதை தியானம் என்னும் ராஜபாட்டையில் கொண்டுபோய்ச் சேர்க்கிறது. இந்த ராஜபாட்டை நாம் சேரவேண்டிய இறுதி முகாமில் நம்மைச் சேர்ப்பிக்கிறது. ராஜபாட்டையை அடைந்ததும் ஒற்றையடிப் பாதையைக் கைவிடுகிறோம். முகாமை அடைந்ததும் ராஜபாட்டையும் பின்தள்ளப்படுகிறது. தாரணை முடியுமிடத்தில் தியானமும், தியானம் முடியுமிடத்தில் சமாதியும் வாய்க்கிறது.

இந்துக்கள் விநாயகர் உருவத்தை லயிப்புடன் செதுக்குவதைப் போலவே நீயும் மனம் ஒன்றி தியானம் செய். 'இதைத்தான் கரைக்கப் போகிறோமே. எதற்காக இத்தனை வர்ணம் பூச வேண்டும்? அழகாயிருந்தாலென்ன, இல்லாவிட்டாலென்ன? ஏதோ வர்ணத்தைப் பூசினால் சரிதான். முகம் சரியாக இல்லாவிட்டால் போகட்டும், கண் வெளிப்பட்டுள்ளதா, மூக்கு வைக்கப்பட்டுள்ளதா என்று ஏன் கவலைப்பட வேண்டும்? நாலு நாளில் விடைகொடுத்து அனுப்பப் போகிறோம். பிள்ளையாரென்று எதையாவது பிடித்துவைத்து பூஜையை முடித்துக் கொள்ளலாம்,' என்று அலட்சியமாக எதுவும் செய்யாதே. முழு ஈடுபாடு காண்பி. இல்லாவிடில் பூஜை வேண்டாம்; பிள்ளையாருக்கு விடைகொடுக்க வேண்டாம்; கடலில் கரைக்கின்ற தேவையும் எழாது.

தியானம் செய்யும்போது முழு வாழ்க்கையையே பணயம் வைப்பதுபோல் தீவிரமாக ஈடுபடு. அப்போதுதான் அந்த புண்ணிய வேளை, சௌபாக்கியமான வேளை வரும். அந்த வேளைதான் கரைப்பதற்கான தருணம். அந்த நேரம்தான் தியானத்தைக் கைவிடும் தருணம். தியானத்தைவிட உயர்ந்த நிலைக்குச் செல்லவேண்டும். முகாமை அடைய வேண்டும். முடிவை அடைய வேண்டும். அதுவே சமாதி நிலை.

நான் முரண்பாடுபோல் சொல்வது என்னவெனில், தியானத்தை பரிபூரணமாகச் செய்பவன் ஒருநாள் அதை முழுமையாகக் கைவிடுவான் என்பதேயாகும். பரிபூரணமாகச் செய்யாதவன், தண்ணீர் கொதித்து ஆவியாகக்கூடிய நிலைவரை காத்திராமல் இலேசாகச் சுட்ட நீரைக் குடிப்பவனுக்கு சமமாவான். அந்த அரைகுறைப் பேர்வழி இக்கரையிலேயே சிக்கிக்கிடப்பான்.

**ஜை**ன சாஸ்திரத்துக் கதை ஒன்று. ஒரு துறவி ஒரு நதியில் குளித்துக் கொண்டிருந்தார். ஒருவன் அங்கே வந்தான். படகில் அமர்ந்தான். துடுப்புப் போட்டான். ஆனால் படகு கிளம்பவில்லை. அந்த மனிதன் திகைத்தான். துறவி சிரித்தார். அதைப் பார்த்த அவன், "ஐயா, படகு ஏன் கிளம்பாமலிருக்கிறது? என்ன பிரச்சினை என்று உங்களுக்கு புரிகிறதா?" என்று கேட்டான்.

துறவி படகைச் சுட்டிக்காட்டி, "நண்பரே, படகு இன்னும் கரையிலேயே கட்டப்பட்டுக் கிடக்கிறது. துடுப்புப் போடுவதால் ஒரு பிரயோஜனமும் இல்லை. கரையில் அடிக்கப்பட்டுள்ள முளையி லிருந்து முதலில் படகின் கயிற்றை விடுவி, " என அறிவுறுத்தினார்.

படகோட்டி வழக்கம்போல் துடுப்புப் போடுகிறார். படகு கிளம்பவில்லை. வேகமாகத் துடுப்புப் போட்டால்தான் கிளம்பும் என நினைத்து அவ்வாறே செய்கிறார். உழைப்பின் காரணமாக வியர்வை யால் உடல் நனைந்து போகிறது. ஆனால் படகு கரையில் கட்டப் பட்டுள்ளதே. அதை இன்னும் விடுவிக்கவில்லை. படகைச் செலுத்து வதற்கு வசதியாக முதலில் அதைக் கரையிலிருந்து அவிழ்க்க வேண்டும்.

ஆகவே நீ அரை மனத்தோடு தியானம் செய்தால் ஆத்மா என்னும் படகு கரையை விட்டு அகலாது. நீ அக்கரையை ஒருபோதும் சென்றடைய மாட்டாய். மறுகரையில் இறங்குவதற்கான வேளை என்றும் வராது.

அஷ்டாவக்ரர் எல்லாச் சடங்குகளும் பிரயத்தனங்களும் நம்மைக் கட்டிப் போடுகின்றன என்று ஜனகரிடம் கூறினார். அவர் சொன்னது சரிதான். ஆனால் ஒன்றை நினைவில் வை. அவர் அவ்வாறு கூறியது படகு மறுகரையை அடைந்த பிறகுதான். ஆகவே நான் அஷ்டாவக்ரரின் சூத்திரங்களை மகாகீதை என்கிறேன். கிருஷ்ணன் கூறியதை கீதை என்று மட்டுமே அழைக்கிறேன். ஏனெனில் அர்ஜுனன் இந்தக் கரையில்தான் கிருஷ்ண கீதை கூறப்பட்டபோது இருக்கிறான். அவன் படகில் ஏறமாட்டேன் என்கிறான். நழுவி ஓடுகிறான். அவன், "நான் சந்நியாசம் மேற்கொள்ள விரும்புகிறேன். நான் படகில் ஏறமாட்டேன். போரிடுவதில் என்ன சாரம், என்ன அர்த்தம் உள்ளது? என் உடல் தளர்கிறது. காண்டீவ வில்

கையிலிருந்து நழுவுகிறது. என்னை இப்படியே போகவிடுங்கள்'' என்று கிருஷ்ணனிடம் மன்றாடுகிறான்.

அர்ஜுனன் தேரில் அப்படியே உட்கார்ந்துவிட்டான். தளர்ந்து போனான். கிருஷ்ணன் அவனைப் பிடித்து, அறிவுறுத்திப் படகில் உட்காரவைக்கிறார். அவ்வளவுதான் அவரால் முடிகிறது. ஆகவே அவர் கூறியது வெறும் கீதை அஷ்டாவக்ரர் மொழிந்தது மகாகீதை. அது மறுகரையுடன் சம்பந்தப்பட்டது. ஜனகர் அந்தக் கரையை அடைந்துவிட்டார். ஆனால் படகிலிருந்து இறங்க இன்னும் தயாராக வில்லை. படகிலேயே இருக்கிறார். நெடுங்காலமாகப் படகில் பயணித்ததால் படகே அவருக்கு வீடுபோல் ஆகிவிட்டது.

அஷ்டாவக்ரர் அதட்டுகிறார், 'படகைவிட்டு இறங்கிவிடு. எல்லா வழிமுறைகளும் நம்மைக் கட்டிப் போடுபவை. பிரயத்தனங்களைக் கைவிடு.''

கிருஷ்ணன் கூறுகிறார், ''போராட்டத்தில் இறங்கு. பயந்து ஓடாதே, எல்லாவற்றையும் கடவுள் பொறுப்பில் விடு. அவர் உன்னை என்ன செய்ய வைக்கிறாரோ அதைச் செய். நீ ஒரு கருவி மட்டுமே என உணர். இந்தப் படகில் நீ ஏறத்தான் வேண்டும். இதுவே உனக்கு விதிக்கப்பட்டுள்ளது.''

அர்ஜுனன் கண்ணனின் பேச்சைக் கேட்டு படகில் ஏறியிருந்தால் ஒரு பிரச்சினை உள்ளது. அவனும் வாத விவாதம் செய்யக் கூடியவன். படகிலிருந்து இறங்க மறுப்பான். ஏற மறுத்து எவ்வளவு தர்க்கம் செய்தானே அதே அளவிற்கு இறங்க மறுத்தும் தர்க்கிப்பான். கூடுதலாகவும் அவன் வாதம் செய்யலாம். 'கிருஷ்ணன்தான் என்னைப் படகில் ஏற்றிவிட்டதால் நான் இறங்க முயல்வது அவருக்கு துரோகமாகும். அது குரு துரோகமாகும். விருப்பமின்றியே நான் படகில் ஏறினேன். இப்பொழுது என்னை இறங்கச் சொல்கிறீர்களே. நான் ஏறமாட்டேன் என்று முதலிலேயே சொன்னேனா இல்லையா? இப்போது இறங்கச் சொல்லி என்னுடன் விளையாடுகிறீர்களே,'' என வாதிடுவான்.

அஷ்டாவக்ரர் சொல்கிறார்: எல்லாச் சடங்குகளும் நம்மைக் கட்டிப் போடுகின்றன. தியானம், தாரணை, யோகம், பூஜை, பிரார்த்தனை ஆகிய எல்லாமும்கூட நம்மைக் கட்டுப்படுத்துபவையே.

கிருஷ்ண கீதை ஆன்மிகத்தில் அரிச்சுவடி கற்கும் நிலையில் உள்ளவர்களுக்கு—ஆரம்பகால சாதகர்களுக்கு-உபயோகமானது. அஷ்டாவக்ர கீதை எல்லா பாடங்களையும் பயின்று பட்டம் பெறும் நிலையில் உள்ளவர்களுக்குப் பொருத்தமானது. கிருஷ்ண கீதை தீட்சையின் ஆரம்பக் கட்டம் போன்றது. அஷ்டாவக்ர கீதை பட்டமளிப்பு விழா பேருரைக்கு சமம். ஒரு கீதையிலிருந்து தொடங்கி இன்னொரு கீதையில் ஆன்மிகப் பயணம் பூர்த்தியாகிறது. ஒன்று தவ முயற்சிகளில் ஏற்றிவிடுகிறது. இன்னொன்று எல்லா வழிமுறைகளி லிருந்தும் இறக்கி விடுகிறது. ஒன்று பிள்ளையாரை எப்படி உருவாக்குவது, வர்ணம் பூசுவது, பக்தி செய்வது என்பதைச் சொல் கிறது. இன்னொன்று எப்படி பாடியபடி, ஆடியபடி அவ்வுருவத்தை நீரில் கரைக்க வேண்டும் என்பதைத் தெரிவிக்கிறது.

பிறப்புக்கும் இறப்புக்கும் இடையே வாழ்வு உள்ளது. அதேபோல், படகில் ஏறி, படகிலிருந்து இறங்குவதன் இடையே இறை அனுபவம் கிடைக்கிறது.

**மூன்றாம் கேள்வி:**

**தங்கள் சொற்பொழிவைக் கேட்கும்போது நான் அன்புமயமான அதன் சங்கீதத் தன்மையில் என்னை இழக்கிறேன். நீங்கள் சிதார் மீட்டுவது போலவும், நான் தபலா வாசிப்பது போலவும் உணர்கிறேன். அல்லது நான் தம்புரா மீட்ட நீங்கள் ஆலாபனை செய்வதுபோல் தோன்று கிறது. எனக்கு என்ன ஆகிவிட்டது? தயவு செய்து என்னைத் தாங்கிப் பிடியுங்கள்.**

தாங்கிப் பிடிப்பதா? உதைத்துத்தான் தள்ளுவேன்! உன்னைத் தாங்கிக் கொள்வதா? உனக்கு சுபமான வேளை வாய்த்திருக்கிறது. எல்லோருக்கும் அவ்வாறே நேரட்டும்.

நான் சொல்வது அடிப்படையில் உரைநடை இல்லை, சங்கீதம்தான். நீ இதைக் கேட்டு அனுபவிக்க விரும்பினால் அதற்குத் தலைசிறந்த ஒரு வழி உள்ளது. அதாவது, நீயும் அந்த சங்கீதத்தில் என் கூட்டாளியாகி விடு. என் இசையின் பின்னணியில் நீ குறைந்தபட்சம் தம்புராவாவது மீட்டு. தொலைவிலேயே நின்றபடி

இருக்காதே இந்த ஆர்கெஸ்ட்ராவில் நீயும் சேர்ந்துகொள். அப்போது தான் முழு லயிப்பு உண்டாகும்.

உனக்கு நல்லது நடக்கிறது. சௌபாக்யமான நிகழ்ச்சி உன் வாழ்வில் ஏற்பட்டுள்ளது. தபலாவைத் தட்டு. தம்புராவை மீட்டு. என்னோடு சேர்ந்து பாடு. என்னுடன் சேர்ந்து ஆடு. இந்த ஆட்டத்தில் அமிழ்ந்து உன்னை இழந்துவிடு. மறந்துவிடு. இந்த இழப்பில் நீ உண்மை வடிவில் கிடைப்பாய். இந்த நடனத்தில் நீ தன் முனைப்பு நீங்கிக் கரைந்து போவாய். உன் எல்லைகள் எல்லையற்ற ஒன்றில் மூழ்கிவிடும். திடீரென நீ முதல் முறையாக விழிப்புப் பெறுவாய். நீ நிஜத்தில் யாரென்பதைத் தெரிந்து கொள்வாய். உன் அஞ்ஞான உறக்கமெல்லாம் கலைந்துவிடும்.

'எனக்கு என்ன ஆகிவிட்டது? என்னைத் தாங்குங்கள்?' என்று கலவரப்படுகிறாய். என்னால் உனது நிலைமையைப் புரிந்துகொள்ள முடிகிறது. ஒருவன் எதிலாவது மூழ்கும்போது கவலைப்படுதல் இயற்கைதான். மனம் பேதலித்துவிட்டதோ என்று நீ சந்தேகப்படலாம், இல்லாவிட்டால் தபலாவும் தம்புராவும் எங்கிருந்து வந்தன?

நீ இந்தக் கேள்வியைக் கேட்கவே பயப்பட்டிருப்பாய். உன் கேள்வி பற்றி மற்றவர்களிடம் நான் சொன்னபோது அவர்கள் நகைத்தார்கள். இது என்ன பைத்தியக்காரத்தனமென்று நினைத்தார்கள். நீயும் உன் மனத்தில் 'நான் செய்வது என்ன? தபலா வாசித்து அதை நான் கேட்கவா இங்கு வந்தேன்? தம்புராவைத் தாங்கவா வந்தேன்? இதென்ன விசித்திரமான கற்பனைகள். சுயஹிப்னாடிசமா இது? மனத்தின் கிறுக்குத்தனமா? என் மனத்தில் இத்தகைய உணர்ச்சி அலை ஏன் பொங்குகிறது?' என்று குழம்பியிருப்பாய்.

பயப்படாதே. இந்த அலை உன்னை மறுகரையில் சேர்ப்பித்து விடும். இந்த அலை உனக்குப் படகுபோல் உதவும், இந்த அலை மீது ஏறவேண்டும் என்றே சொல்கிறேன். இந்த வாய்ப்பைத் தவறவிடாதே. இந்த அலையானது மூழ்கடித்தால் மூழ்கிப்போ. தூக்கிப் பிடித்தால் மேலே வா. இந்த அலையுடன் நீ உன்னை இணைத்துக்கொள். இந்த அலையை எதிர்க்காதே. இதனுடன் மோதி எதிர்நீச்சல் போடாதே. அதனிடமிருந்து தப்பி விலகவும் முயலாதே.

**தூரத்து இசைபோல்**
**அப்போது என்னைக்**
**கூப்பிடும் அவனை**
**யார் என அறியேன்**

உன்னை அழைப்பவன் தூரத்து சங்கீதம் போன்றவன். நீ அந்த இசையுடன் இயைந்து தம்புரா மீட்டினால் அவன் நெருங்கிவரத் தொடங்குவான். தொலைவான இசையை அருகே கொண்டுவர அவனுடன் கூட்டாளியாகச் சேர்ந்துகொள்.

இசையைச் செவிமடுப்பதில் இருவகை. ஒன்று: நடுநிலைமையுடன் கேட்பது. கொடுக்கல்-வாங்கல் உணர்வு இல்லாததுபோல் கேட்பது. சலனமேயின்றி பிரேதம்போல் கேட்பது.

இன்னொரு வகை: கேட்கும் இசையில் தானும் துடிப்புடன் பங்கேற்பது. ஆனந்தமாக, நடனமாடியபடி, தனது பங்கையும் கொடுப்பது. பேசுபவன் நீயில்லை, வேறொருவன் பேசுவது போலவும், உன் எதிர்காலம்தான் பேசுவது போலவும், உனக்குள்ளே மறைந்திருக்கும் சாத்தியங்கள் பேசுவது போலவும் தோன்ற வேண்டும். உனது ரீங்காரம்தான் நான். நீ பாடாத பாட்டைப் பற்றி, பாட வேண்டிய பாட்டைப் பற்றி உனக்கு நான் இப்போது பாடம் கற்பிக்கிறேன்.

அப்போது உன் கையிலிருக்கும் தம்புரா தொடர்ந்து மீட்டப்பட்டு வீணையாகிவிடும். இப்போது என்னுடன் சேர்ந்து இசைக்கருவியை வாசிக்கும் நீ போகப்போக 'நீ-நான்' என்னும் இடைவெளி நீங்கிவிட்டதை உணர்வாய். அப்போது நானும் இல்லை-நீயும் இல்லை-பரமாத்மாதான் இசைக் கருவியை வாசிக்கிறார் என்பது புரியும். அப்போது உனக்கு ஒருவன் தம்புரா வாசிப்பது போன்ற நிலைக்கு உயர்ந்து விடுவாய். அப்போது கேட்கும் பாட்டு பின்வருமாறு.

**உயிரின் கடைசி விருந்தாளியே!**
**நிலவொளியால் மெழுகப்பட்டு**
**மின்னல் சிரிப்பைப் பரப்பியபடி**
**சுகந்தக் காற்றின் சிறகுகளால்**
**பறந்து வானில் சூழ்ந்துகொள்ளும்**
**மேகம் ஆகி நீ வருகவே!**

**களைத்துப்போன பயணியின் மேல்**
**நிழல்போல் படர்ந்து முறுவலித்து**
**பாரமான இமைகளின் மேல்**
**துயிலின் மதுவைத் தெளிக்கின்ற**
**இரவைப் போலவே நீயும்**
**வாழ்க்கையில் மெய்மறக்கச் செய்கவே!**

**யாரும் அறியா உலகில் இருந்து**
**ஒளிந்து மறைந்து இறங்கிவந்து**
**மதுரசம் பருகித் தாகம் தணிக்க**
**பூக்களின் நெஞ்சத்தைத் திறக்கின்ற**
**கிரணங்களைப் போலவே நீயும்**
**நிழல் உடலுடன் ஒளிந்து வருகவே!**

வரவிடு என்னை. உனக்குள்ளே பிரவேசிக்க விடு. மற்றவர் உன்னைத் தாங்க வேண்டும் என்று கூறாதே. நீ ஆத்ம ஆனந்தம் காரணமாக மது பருகியவனைப்போல போதையில் இயங்க வேண்டும். தாங்கிப் பிடித்துக் கொள்ளும் பேச்சே கூடாது.

உன் பயம் எனக்குப் புரிகிறது. 'எனக்கு என்ன ஆகிவிட்டது? நான் நினைவை இழந்து விடுவேனா? மயக்கம் போட்டு விடுவேனா?' இவ்வாறெல்லாம் நீ பயப்படுகிறாய்.

நீ என்னிடம் 'இனி இம்மாதிரி பயம் வரக்கூடாது' என்று சொல். பிறரைச் சார்ந்திருக்க விரும்பவில்லை என்று சொல். என்னை மூழ்கடியுங்கள், நினைவிழக்கச் செய்யுங்கள் என்று சொல். ஏனெனில் நீ இதுவரை நினைப்புடன் உள்ளதாக நினைத்தாய். ஆனால் அது மயக்க நிலை. நீ இதுவரை விழிப்பு என்று நினைத்ததை அதிகபட்ச மாகக் கனவு என்று மட்டுமே கூறலாம். அந்த நிலைமை அடர்த்தியான இரவில் ஆழ்ந்து தூங்குவது போன்றது.

இப்போது நான் உனக்குத் தரும் மயக்கம் அது விழிப்பை வரவழைப்பதற்காக மேற்கொள்ளப்படுகிறது. நான் தரும் ஆன்மிக மது மயக்கம் தருவது போலிருந்து விழிப்பைக் கொண்டுவரும். நீ என்னை உன்னிடம் வரவிடு. ஆதரவு தருமாறு நீ சொன்னால் நீ அச்சத்திலிருப்பதாகப் பொருள்படும். என்னை வரவிடாமல் தடுத்தால், கதவை மூடிக்கொண்டால் நீ ஆன்மிகப் பித்து பிடித்துவிடுமோ என்று அஞ்சுவதாகப் பொருள்படும்.

ஆனால் நினைவில் வை. ஆன்மிகம் என்பது விசித்திரமான மூளைக் கோளாறு! புத்தியின் எல்லைகளையெல்லாம் கடந்து நிற்கும் நிலை அது. இந்த புத்தி மாறுபாடே சாதகனைக் கடவுளின் அருகில் அழைத்துச் செல்கிறது.

உலகில் இருவகை மனிதர்களுக்குப் பைத்தியம் பிடிக்கிறது. சராசரி புத்திகூட இல்லாதவர்கள் பைத்தியம் எனப்படுகின்றனர். அறிவாளிக்குள்ள புத்தியின் எல்லையைக் கடந்தவர்களும் மக்களுக்குப் பைத்தியம்போல் தோன்றுகின்றனர்.

இந்நிலையில் மனத்தத்துவ (உளவியல்) நிபுணர்கள் ஞானிகளைத் தனிவகையான பைத்தியங்கள் எனக் கருதுவதில் ஆச்சரியம் இல்லைதான். மனத்தத்துவ நூல்களும் ஞானிகளையும் சித்த சுவாதீனம் இல்லாதவர்களையும் பிரித்துக் காட்டுவதில்லை. அவை மனிதர்களை சாதாரண மனநிலை கொண்டவர்கள், மனக் குறைபாடு உள்ளவர்கள் என்று வகைப்படுத்துகின்றன. சாதாரண மனிதர்களுக்கு உன்னை உதாரணம் கூறலாம். மனம் திரிந்து போனவர்கள் சமயவாதிகளாக, ஆத்திகர்களாக, நாத்திகர்களாக, தர்ம நெறிகளைப் பின்பற்றாதவர்களாக எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம்.

மேற்கத்திய நாடுகளில் இயேசுநாதர் பற்றிய சில நூல்களில் இயற்கை மீறிய உணர்ச்சி உடையவராக அவர் சித்திரிக்கப்படுகிறார். இந்தியாவில் மனத்தத்துவ இயல் அதிகமாக வளரவில்லை. ஆகவே இதுவரை புத்தர், மகாவீரர், அஷ்டாவக்ரர் ஆகியோர் தப்பிவிட்டனர். நீண்ட காலத்திற்கு இது சாத்தியமில்லை. விரைவிலேயே இந்தியாவிலுள்ள உளவியல் அறிஞர்களும் துணிச்சலாகக் கருத்துக் கூறுவார்கள். இயேசு நாதருக்கு எதிராக எழுதப்படுவதைப் போலவே ஒரு காலத்தில் மகாவீரருக்கு எதிராகவும் எழுதப்படும். நிச்சயமாக இயேசுநாதரை விட மகாவீரருக்கு மூளைக் கோளாறு அதிகம் என்று சான்றுகளுடன் வாதம் நடக்கும்!

இயேசுநாதர் உடல் முழுதும் மறைத்து ஆடை அணிந்திருந்தார். மகாவீரர் உடையே அணியாமல் திரிந்தாரே. இது சாதாரண மன நிலையையா காட்டுகிறது? மேலும் அவர் தலையிலிருந்து ஒவ்வொரு ரோமமாகக் கிள்ளி எறிவார். பைத்தியங்களில் சிலர் அப்படித்தானே செய்கிறார்கள். உனக்கே வெறி வந்தால் 'முடியைப் பிடிங்கிக்கொண்டு

சாகலாம் போலிருக்கிறது' என்றுதானே சொல்கிறாய். பெண்களுக்குக் கடுங்கோபம் வந்தால் தங்கள் முடியைப் பிடித்திழுக்கும் அளவு ஆவேசம் கொள்கிறார்கள். மகாவீரர் ஆடை அணியாததாலும், ஒவ்வொரு முடியாகப் பிடுங்கியதாலும் பைத்தியம் என்றே திட்டு வாங்கினார்.

ஆனால் மனத்தத்துவ வல்லுநர்கள் இன்னும் முழு உண்மையை அறியவில்லை. அவர்கள் மக்களை வகைப்படுத்தியுள்ள விதம் அறிவுபூர்வமானது இல்லை. ஒருவன் குடித்துவிட்டுத் தள்ளாடி, தடுமாறிச் சாலையில் நடக்கிறான். இன்னொருவன் காதல் மயக்கத்தால் அசைந்தாடி நடக்கிறான். மூன்றாமவன் பிரார்த்தனை உணர்வுப் பெருக்கில் கால் தாளமிட்டு நடக்கிறான். சமாளிக்க முடியாத அளவிற்கு உள்ளத்திலிருந்து பொங்கும் உவகையால் கால் சரியாக பூமியில் பரவவில்லை. மூவரும் தள்ளாட்டம் போடுகிறார்கள்.

அவர்கள் நடக்கும் விதத்தைப் பின்னாலிருந்து பார்த்தால் மூவருமே குடிகாரர்கள் என்றே நினைக்கத் தோன்றும். குடிகாரன் அசைந்தாடுவது போல்தான் மீராபாயும் ஆடினாள்; சைதன்ய மகாபிரபுவும் ஆடினார். குடிகாரன் வாயில் வந்ததைப் பாடுவதுபோல், மீராவின் திருவாயிலிருந்து பாடல்களாகக் கொட்டுகின்றன. ஆனால் அற்பமான குடிகாரன் ஒருகாலும் மீராவிற்கும் சைதன்யருக்கும் சமமாகிவிட முடியாது. அவர்கள் கடவுளிடமும், குடிகாரன் கள்ளிலும் அறிவைப் பறிகொடுத்து விட்டனர். அறிவை இழத்தல் ஒன்றுமட்டுமே அவர்களை சமமாக்குகிறது.

'மான-அவமானத்தை நான் பொருட்படுத்தவில்லை' என்று மீரா பாடுகிறாள். அவள் பருகியதும் மது. ஆனால் அது திராட்சையி லிருந்து தயாரிக்கப்பட்டதன்று. கிருஷ்ண பிரேமை என்னும் மது அது. அதுவும் விசேஷமான போதையைத் தூண்டவல்லது. ஆனால் மீரா மன நோயாளி இல்லை. அவளை நீ நோயாளியாகக் கருதினால் ஆரோக்யம் குறித்த உன் மதிப்பீடுகள் தவறானவை என்று பொருள் படும். ஏனெனில் பெருமிதமாகவும் ஆனந்தமாகவும் இருப்பதுதானே ஆரோக்கியத்தின் லட்சணம்.

இன்னொரு புறம் மனத்தத்துவ அறிஞர்கள் 'நார்மல்' எனக் குறிப்பிடும் சாதாரண சராசரி மனிதர்கள் அமைதியிழந்து, படபடப்

பாகவும், கவலையாகவும், துக்கத்துடனும் அல்லவா காணப்படு கிறார்கள். இதுவா ஆரோக்கியத்தின் அடையாளம்? இவர்கள் வாழ்க்கையில் பூ மலர்ந்ததில்லை, இன்னிசை பெருகியதில்லை, ஆனந்த ரசம் வழிந்தோடியதில்லை. கவலையிலும் துன்பத்திலும் சிக்கியுள்ள இவர்களா ஆரோக்கியசாலிகள்? இவர்களைப் பின்பற்று வதைவிட மீராவின் பக்திப் பித்தையே மக்கள் தேர்ந்தெடுப்பார்கள். அது தேர்ந்தெடுக்கப்படும் தகுதி வாய்ந்தது. ரோஜாப் பூவை எப்பெயரால் அழைத்தால் என்ன?* நீ மகாவீரரைப் பைத்தியம் என இகழ் அல்லது பரமஹம்சர் என்று புகழ். இதனால் என்ன வித்தியாசம்? அடிப்படையில் அவர் அவராகத்தான் இருப்பார்.

நீ என்னிடம் இருப்பதானால் நிச்சயமாக இங்கு (ஆன்மிக) மதுவைப் பருகும் ஏற்பாடுகள் நடப்பதைக் காண்பாய். இந்த இடமும் ஒருவகையான மதுசாலை. இதை ஆசிரமம் அல்லது கோயில் என்பதைவிட மதுசாலை என்பது பொருத்தமாக இருக்கும். நீ இங்கே தள்ளாடு, அசைந்தாடு, ஆழ்ந்த போதைக்கு வசமாகு, புதிய பரிமாணம் திறக்கட்டும் என நான் விரும்புகிறேன்.

என்னைக் கொஞ்சம் பருகு. வாழ்க்கை எழில்மயமாகி விடும். எல்லாக் கவலைகளும், படபடப்பும், எரிச்சலும், அமைதியின்மையும் தூர விலகிவிடும். ஒவ்வொரு பூவிலிருந்தும் புதிதாக ஆயிரம் பூக்கள் மலரும். வாழ்க்கையில் உண்மையான ஆனந்தத்தை அனுபவித்து நீ பிரமித்துப் போவாய். இவ்வுலகில் கிடைக்கும் மேலோட்டமான இன்பத்தைவிட, கடவுளின் பிரிவால் உண்டாகிய விரகத் துன்பம் மேலானது என்பதை அறிந்து கொள்வாய். உலகில் கிடைக்கும் புன்முறுவல்களைவிட கடவுளுக்காக விடும் கண்ணீர் உயர்வானது எனத் தெரியவரும்.

**உலக இன்பம் மேற்பூச்சானது**
**உள்ளத்திற்குத் தேவை கனத்த சோகம்**
**அன்ப! எனது மனத்தின் கோயிலில்**
**உனது நினைவே மூர்த்தியாய் உள்ளது**
**அந்த நினைவால் உள்ளம் ஜொலித்தது**

---

* ...... That which we call a rose
By any other name would smell as sweet

(Shakespeare)

**உனது அன்பால் உள்ளம் நிறைந்தது**
**நாவில் வேறொரு பெயரும் வருவதில்லை**
**உனது நாமமே ஓதப்படுகிறது**
**இரவும் பகலும் இனிய ஷெனாய்போல்**
**அதுவே உள்ளத்தில் ஒலிக்கிறது.**

இந்த ஷெனாய் வாத்தியத்தை ஒலிக்கவிடு. புல்புல்தாராவை ஒலிக்க விடு. தம்புராவை ஒலிக்கவிடு. தபலாவில் ஒலி எழவிடு. ஆடு. பாடு, ரீங்காரம் செய்.

மதம் என்பது துள்ளி விளையாடும் அமைப்பாக விளங்க வேண்டும். உலகிற்கு ஓர் ஆடும் தெய்வமே தேவை. சோகமான கடவுளால் பயன் விளையவில்லை. கடவுள் நிஜத்தில் சோகமானவர் என்று நம்ப முடியவில்லை. மனிதன் தனது சோகத்தைத்தான் கடவுள் மேல் ஏற்றிப் பார்க்கிறான். சோகமான கடவுள் சோகமான மனிதனின் கண்டுபிடிப்பு. தேவை—ஆடும் தெய்வம், சிரிக்கும் தெய்வம்.

எந்த மதம் உன்னைச் சிரிக்கவிடவில்லையோ, உனக்கு சந்தோஷம் தரவில்லையோ, உன் வாழ்க்கையைப் புன்முறுவல்களால் நிரப்பவில்லையோ, வாழ்க்கையைத் திருவிழா ஆக்கவில்லையோ, உற்சாகப்படுத்தவில்லையோ, அது ஒரு மதமே இல்லை. அது தற்கொலைக்கான வழிபோன்றது. அதைப் பின்பற்றாதே. அது கிழவர்களின் மதம்; பிரேதங்களின் மதம். அந்த மதத்தில் வாழ்க்கை ஆறு வறண்டு கிடக்கிறது. மதம் என்பது எக்காலத்தும் இளமைத் துடிப்புடன் விளங்க வேண்டும். சின்னஞ்சிறு குழந்தைகள் ஆடிப்பாடி, துள்ளிக் குதித்து மகிழ்வதுபோல் மதத்தில் தூய இன்பம் நிறைந்திருக்க வேண்டும்.

சோகமாகவும் முகத்தைத் தொங்கப் போட்டும் இருப்பது எப்படி என்பதை இங்கே நான் கற்றுத்தருபவன் அல்லன். நீ வாழ்க்கையை பெரிய பாரமாக, கனமான விஷயமாக எடுத்துக் கொள்வதையும் நான் விரும்பவில்லை. கடுப்பாக இருப்பது நெஞ்சின் மேல் பாறாங்கல்லை வைத்துச் சுமப்பதற்கு சமம்; நோயால் பீடிக்கப்பட்டிருப்பதற்கு சமம். அகற்றிவிடு அந்தக் கல்லை.

அந்தக் கல் இவ்விடத்தில் சரிகிறது. தம்புரா ஒலிக்கும் தருணம் நெருங்கிவிட்டது. உன்னை நான் தாங்கிக் கொள்ள வேண்டும் என்கிறாயே. பதிலாக, உன்னை உதைத்துத் தள்ளுமாறு கேளேன்! நீ

முழுமையாக ஒழிந்துபோகும்படி உதைக்குமாறும், தம்புரா ஒலி மட்டும் தொடருமாறும் கேட்டுக் கொள்ளேன்.

**நான்காம் கேள்வி:**

> **வாழ்க்கை எனக்குத் தந்தவனே,**
> **திகட்டி விட்டது உன் உலகம்**
> **தொடர்ந்து வாழ்வது கடினமாயுள்ளது**
> **நீ தந்த காயம் ஆறாததால்**
> **இரவும் பகலும் துன்பமாயுள்ளது**
> **விழிகளில் சூன்யம் உள்ளத்தில் சங்கடம்**
> **கவலை நாற்புறம் சூழ்ந்துள்ளது**
> **திகட்டி விட்டது உன் உலகம்**

உண்மையிலேயே இவ்வளவு போதுமென்று உலகம் உனக்குத் திகட்டிப் போயிருந்தால் அதன் விளைவு சோகமாக இருக்க வேண்டிய கட்டாயமில்லை. ஏமாற்ற உணர்வும் தேவையில்லை. அதன் விளைவு விசேஷமான உற்சாகமாகவும் இருக்கலாம். வாழ்க்கை திகட்டிவிட்டதெனில் வாழ்க்கை அர்த்தமற்றது என்பது புரிந்து போனதாகப் பொருள். ஏமாற்ற உணர்வு எப்படி ஏற்பட முடியும்? எதிர்பார்ப்பு இருந்தால்தானே ஏமாற்றமும் ஏற்படும். இதைப் புரிந்து கொள்ள முயலு.

வாழ்க்கையில் உனக்கு ஏதோ கிடைக்கும், ஏதாவது கிடைக்கும் என்று நீ ஆசைப்படும் வரையிலும் வாழ்க்கை உன்னை ஏமாற்றவே செய்யும். ஏனெனில் வாழ்க்கையிலிருந்து எதுவும் கிடைப்பதில்லை. ஆசையைக் கைவிடு; நிராசையும் நீங்கிவிடும். ஆனால் மக்கள் ஆசையைக் கைவிட்டால் முழுமையாக ஏமாற்றம் விளையும் என்று தவறாக எண்ணுகிறார்கள். எதிர்பார்ப்பின் நிழல்தானே ஏமாற்றமும். எவ்வளவுக்கு ஆசைப்படுகிறாயோ அவ்வளவிற்கு நீ ஏமாறப் போவதும் நிச்சயம்; தோற்கப்போவதும் நிச்சயம். வெல்ல ஆசைப் பட்டால் தோல்வியும் ஏற்படலாம்.

இதையே லாஓத்ஸுவும்,* 'என்னை யாரும் தோற்கடிக்க முடியாது. ஏனெனில் நான் வெற்றிக்கு ஆசைப்படுவதில்லையே' என்று கூறுகிறார். உண்மைதான், வெற்றியை விரும்பாத ஒருவனை நீ

* Lao Tzu (600 B.C.) founder of Taoism and Chinese philosopher

எப்படித் தோற்கடிக்க முடியும்? வெற்றிக்கு ஆசைப்படுபவனுக்குத் தோல்வியும் எதிர்ப்படும். பணக்காரனாவதற்கு ஒருவன் எவ்வளவு ஆசைப்படுகிறானோ அந்த அளவிற்கு அவன் ஏழையாக இருப்பான். ஏனெனில் பணத்தாசைக்கு என்றும் முடிவில்லை. எவ்வளவு செல்வம் கிடைத்தாலும் அது போதாது என்றே தோன்றும். அவனது ஆசை பெரிய அண்டா போன்றது. அதில் எவ்வளவு போட்டாலும் ஆழத்தில் போய்விடும்.

எதிர்பார்ப்பு என்பது ஏமாற்றத்தின் தாய் என்னும் சூத்திரத்தை நினைவில் வை. அதுவே உன் தோல்விக்கு அடிப்படை; உன் வாழ்க்கையில் சோகத்திற்கான காரணம்.

வாழ்க்கை இதற்குள் திகட்டிப் போயிருக்காது. நீ சலித்துப் போயிருப்பாய். உன் ஆசைகள் பூர்த்தியாகவில்லை, முடிவு பெறவில்லை. நீ விரும்பியது நடைபெறவில்லை ஆகவே நீ சலித்துப் போயுள்ளாய். நீ விரும்புவது கிடைக்கும் என்று கடவுள் கூறினால் நீ உடனே சுறுசுறுப்பாகி விடுவாய். யாராவது உன்னிடம் வந்து, "நீ கேட்டது கிடைக்கும். அது பக்கத்திலேயே தான் உள்ளது," என்று கூறினால் நீ உடனே ஓடிவருவாய். மறுபடியும் உன் உள்ளத்தில் எதிர்பார்ப்பு என்னும் விளக்கு எரியத் தொடங்கும்.

இது உனது தோல்வியின் அடையாளம். புத்தி வந்ததற்கான அறிகுறி இல்லை. தோல்வியடைந்ததை ஞானம் அடைந்ததாக நினைக்காதே. தோல்வி கண்ட மனிதன் சலித்துப்போய் அப்படியே உட்கார்ந்து விடுகிறான். ஆனால் மனத்திற்குள் நப்பாசை நீங்கவில்லை. வேறு உபாயம் செய்திருந்தால் கிடைத்திருக்குமென யோசிப்பான். 'தேடுவதற்கு வேறு ஏதாவது வழிமுறை இருந்திருக்கும். நான் ஒருவேளை சரியான விதத்தில் தேடவில்லை; அல்லது தேடுவதில் நான் முழு சக்தியையும் வெளிப்படுத்தவில்லை' என்றெல்லாம் அவன் வருந்திக் கொண்டிருப்பான். ஆனால் நீ எவ்வளவு சக்தியை உபயோகித்தாலும் உலகில் தோல்வியடைவது நிச்சயம். உலகில் வெற்றி கிடைப்பதில்லை.

**ஒ**ரு பெண்மணி ஒரு கடையில் குழந்தைகளுக்காகப் பொம்மை வாங்க வந்தாள். துண்டு துண்டாக இருக்கும். சிறு பிளாஸ்டிக்

கட்டைகளை வைத்துக் கட்டடம் கட்டுவது போன்ற விளையாட்டுத் தொகுப்பு அவளுக்குப் பிடித்திருந்தது. அவளும் அவள் கணவனும் எவ்வளவு முயன்றும் அந்தத் துண்டுகளை ஒன்றுடன் ஒன்று இணைத்து முழுமையான உருவம் தர முடியவில்லை.

அப்பெண்மணி கடைக்காரரிடம் அந்தப் பொம்மையைக் காண்பித்து, "நாங்கள் இதை எங்கள் ஐந்து வயதான குழந்தைக்காக வாங்க விரும்புகிறோம். இவற்றை இணைத்து என்னாலோ, என் கணவராலோ ஓர் உருவம் தர முடியவில்லை. இத்தனைக்கும் அவர் கணிதப் பேராசிரியர். அவராலேயே இணைக்க முடியவில்லையெனில் வேறு யாருக்கு அது சாத்தியப்படும்? என் ஐந்து வயதுப் பையன் இதை வைத்துக் கொண்டு எப்படி விளையாடுவான்?"

கடைக்காரர் விளக்கினார்: "கவலைப்படாதீர்கள். இந்த பொம்மைத் துண்டுகள் முழுமையாக கட்டப்படுவதற்காக இல்லை. இது ஒருவகையான பாடம். உலகம் பற்றிய பாடம். உலகத்தைச் சீர்படுத்தி ஓர் ஒழுங்குமுறையின் கீழே கொண்டுவர எவ்வளவு முயன்றாலும் அது பலிக்காது. இது வாழ்க்கையின் சத்தியமாகும். முழுமையாக உருவம் தருவதற்காக இந்தத் துண்டுகள் தயாரிக்கப்படவில்லை. எவ்வளவு முயன்றாலும் நீ இதில் தோல்விதான் காண்பாய்."

உலகம் ஒரு பயிற்சிக் களம். அதை ஒழுங்குபடுத்த முடியாது. அலெக்ஸாந்தரும் நெப்போலியனும்கூட உலகத்தை ஓர் ஒழுங்கு முறைக்கு உட்படுத்த முடியவில்லை. நீ எம்மாத்திரம்? அதை யாராலும் எக்காலத்திலும் சீராக்க முடியவில்லை. புத்தர், மகாவீரராலும் முடியாத ஒன்றை நீ எப்படிச் செதுக்கி அமைப்பாய்?

உலகம் விழிப்புணர்வு பெறுவதற்காகப் படைக்கப்பட்டுள்ளது. நீ பார்த்து-பார்த்து விழிப்பாயாக. நீ விழிப்புப் பெறும்போது இந்த உலகத்தை ஒழுங்காக்க முடியாதென்பதை நீ அறிந்துகொள்வாய். 'நான் மேற்கொண்ட உபாயத்தில் குறை இல்லை. நான் செய்த உழைப்பும் கொஞ்சநஞ்சமில்லை. எனது அறிவு குறைவுபட்டதில்லை. நான் இன்னும் கொஞ்ச தூரம் ஓடிப்பார்த்திருக்கலாம் என்ற நிலையும் இல்லை.' இதெல்லாம் சரி. ஆனால் என்ன செய்தாலும் உலகத்தைப் பிடித்துவைத்து உருவம் தரமுடியாது என்பதை அறிந்துகொண்டதும் உன் சோகம் விலகிவிடும். உள்ளே மண்டிக்கிடந்த தோல்வி உணர்வு

மறைந்துவிடும். அப்போது நீ கலகலவென்று சிரிப்பாய். 'ஒரு வேடிக்கையை, தமாஷை நான் தீவிரமாக எடுத்து அலட்டிக் கொண்டேனே' என வெட்கப்படுவாய்.

இந்த வேடிக்கையை அறிந்திருப்பதால்தான் இந்துக்கள் உலகத்தை லீலை என்று சொல்கிறார்கள். இது உண்மையில் நல்ல விளையாட்டு மைதானம். இங்கே எதையும் நீ எதிர்பார்க்கும் வரையில்தான் குழப்பமும் கவலையும். உருதுக் கவிதை ஒன்று:

**காதலியின் காலடியில் கிடக்கின்ற உள்ளமே**
**கடிதம் எழுதினாயே பதில் ஏதும் கிடைத்ததா**
**கவலையில் மூழ்கிக் கிடக்கிறாய்**
**காத்திரு எதிர்பார்த்து மேலும் கொஞ்சம் காலம்**

எதிர்பார்ப்பெல்லாம் முடிந்ததா? இனியாவது விழித்துக்கொள். இந்த உலகில் எதுவும் கிடைப்பதற்கில்லை. உலக வாழ்க்கை ஒரு விளையாட்டு. அதை விளையாட்டாகவே கருதி அதில் ஈடுபடு. அதைப் பற்றி கனமாகச் சிந்திக்காதே.

ஆனால் நீ திரைப்படத்தைக்கூட தீவிரமாக எடுத்துக் கொள்கிறாய். நீ ஒரு பைத்தியம். திரைப்படத்தில் ஒருவன் கொல்லப் படுகிறான். திரையரங்கில் பலர் பெருமூச்சு விடுகிறார்கள். அவர்களு டைய கைக்குட்டைகளை சோதித்தால் ஈரமாக உள்ளதை அறியலாம். திரையில் சோகக் காட்சி பார்த்து அவர்களின் கண்களிலிருந்து நீர் வடிகிறது. கைக்குட்டையால் அவசரமாகத் துடைத்துவிட்டு அதை மறைத்து விடுகிறார்கள். அரங்கில் இருட்டாக இருப்பதால் ஒருவர் கண்ணீரை மற்றவர் பார்ப்பதில்லை. அருகருகே அமர்ந்துள்ள கணவனும் மனைவியும்கூட அழுகிறார்கள்; கண்ணீரைத் துடைத்துக் கொள்கிறார்கள். திரையில் தெரிவது உண்மையில்லை, நிழலும் ஒளியும்தான் என்பது அப்போது அவர்களுக்குப் புரிவதில்லை. ஆனாலும் திரை சித்திரங்களும் உன்னைப் பாதிக்கின்றன. நீ உணர்ச்சி வசப்படுகிறாய். வசனமும்கூட உன்னைப் பாதிக்கிறது. நீ சுயநினைவு டன் இல்லை. ஒருவிதமான மயக்க நிலையில் இருக்கிறாய்.

நீ இங்கே வாழ்வது கடினமாக உள்ளது என்கிறாய். அப்படி யானால் உனக்கு இன்னும் எதிர்பார்ப்பு உள்ளதெனத் தெரிகிறது. கடினம் என்று சொல்வதால் நீ ஏதோ வசதியை எதிர்பார்க்கிறாய்.

வெற்றியை, கஷ்ட நிவாரணத்தை எதிர்பார்க்கிறாய். வாழ்வதற்கு ஒரு சாக்கு உனக்குத் தேவைப்படுகிறது.

காயம் ஆறாததால் இரவும் பகலும் துன்பமாக உள்ளது என்கிறாய். கவனித்துப் பார். ஞானிகள் உலகை மாயை என்கிறார்கள். ஆகவே காயம் ஏற்பட வாய்ப்பில்லை. காயம் இருப்பதாக நினைப்பது, அஷ்டாவக்ரர் அடிக்கடி சொல்வதுபோல, கயிற்றை பாம்பாக நினைப்பதற்கு சமம். ஒருவன் இருட்டில் கிடக்கும் கயிற்றைப் பாம்பென நினைத்து ஓட்டம் பிடிக்கிறான். அவன் உடம்பிலிருந்து வியர்வை கொட்டுகிறது. இதயம் படபடக்கிறது. மாரடைப்பதுபோல் தோன்றுகிறது. அதே சமயம் இன்னொருவன் விளக்கு எடுத்துவந்து பார்த்துச் சிரிக்கிறான். 'டேய் பைத்தியம், ஓடிப்போக இங்கே என்ன இருக்கிறது? பயப்படுவதற்கும் எதுவுமில்லை. தரையில் கயிறுதான் கிடக்கிறது.'' என்கிறான்.

**எ**ன் ஊரில் கபீர்தாஸ் சம்பிரதாயத் துறவி ஒருவர் வசித்து வந்தார். தனது உபதேசப் பேச்சில் அவர் அடிக்கடி பாம்பு-கயிறு உதாரணத்தைக் குறிப்பிடுவார். சிறு வயதிலிருந்தே நான் அவர் இதைக் கூறுவதைக் கேட்டிருக்கிறேன். இது இந்திய தத்துவத்தில் ஒரு பழைமையான உதாரணம். 'இந்த உலகமானது கயிற்றில் பாம்பு தெரிவது போன்றது' என்று அந்தத் துறவி கூறுவதை அவரே எந்த அளவிற்கு நம்புகிறார் என்று நான் சோதித்துப் பார்க்க விரும்பினேன்.

அவர் தினமும் இரவில் எங்கள் வீட்டு வழியாகத்தான் செல்வது வழக்கம். அவர் வீடு எங்கள் வீட்டிற்குப் பின்புறமாக ஒரு சாக்கடையைக் கடந்து இருந்தது. நான் ஒரு கயிற்றில் நீண்ட நாடாவை (ரிப்பனைக்) கட்டி வீட்டில் தயாராக இருந்தேன். கயிற்றைச் சாக்கடையில் போட்டேன். அதில் கட்டியிருந்த நாடாவின் மறுமுனை என் கையிலிருந்தது.

துறவி கையில் தடியுடன் வீட்டை நெருங்கிய சமயம் நான் நாடாவை இழுக்கலானேன். அதனுடன் சேர்ந்திருந்த கயிறு இங்கும் அங்குமாகத் தரையில் தேய்ந்தபடி சென்றது. அதைப் பார்த்துத் துறவி ஓடத் தொடங்கினார்; கூக்குரல் எழுப்பினார். மக்கள் விளக்குடன் ஓடிவந்தனர். நான் கையும் களவுமாகப் பிடிபட்டேன். ஒரு

வயோதிகரை இப்படி பயமுறுத்தலாமா என்று பலமாகத் திட்டினர். நான் அப்பாவிபோல் சொன்னேன், "இவர்தான் நான் இப்படி தமாஷ் செய்யக் காரணம். எதற்கெடுத்தாலும் கயிற்றுப் பாம்பு உதாரணமே சொல்லி எனக்கு எரிச்சலூட்டிவிட்டார். குறைந்தபட்சம் இவராவது பயப்பட மாட்டார்; பாம்பன்று கயிறு என்பதைக் கண்டுபிடித்து விடுவாரென நினைத்தேன். இவர் கதையே இப்படியென்றால் மற்றவர்களைப் பற்றி என்ன சொல்வது?"

இந்த உலகம் ஒரு தோற்றம் மட்டுமே. ஆனால் அது மிகவும் உண்மைபோல் தோன்றுகிறது. ஒரு காலத்தில் நீ இருக்கவில்லை. இன்னொரு காலத்தில் நீ இருக்கப் போவதில்லை. இடைப்பட்ட காலத்தில் நடைபெறும் வாழ்க்கை ஒரு விளையாட்டு மட்டுமே. அது கனவு போல் ஒரு நாள் முடிவுபெற்று விடும். நீ திரும்பிப் பார்க்கிறாய்- 30,40,50 ஆண்டுகள் வாழ்க்கை ஓடிவிட்டது. உண்மையில் நீ 50 ஆண்டுகள் வாழ்ந்தாயா அல்லது எல்லாம் கனவா? பழைய வாழ்க்கை ஞாபக அளவில் மட்டுமே மிஞ்சியுள்ளது. ஞாபகம் என்பது கனவிற்கும் பொருந்தும். நீ நிஜமாகவே 50 ஆண்டுகள் வாழ்ந்தாயா அல்லது கனவு கண்டாயா? நீ எப்படி நிரூபிப்பாய்? இது சிக்கலான விஷயம்; யோசிக்க வேண்டிய விஷயம்; கவலையளிக்கும் விஷயம். 'நான் வாழ்ந்தது என்பது உண்மையா அல்லது கானல்நீர் போன்ற தோற்றமா?' என நீ குழம்புவாய்.

மரணம் உன் வீட்டு வாசற்படியில் வந்து நிற்கிறது. அதன் நிழல் உன்னைச் சூழ்கிறது. 'நான் 70-80 வருஷம் வாழ்ந்துவிட்டேன்' என்று நீ பெருமிதப்படலாம். உண்மையிலேயே நீ வாழ்ந்தாயா? சாவு எல்லாவற்றையும் துடைத்து சுத்தமாக்கிவிடும். இந்த பூமியில் எத்தனையோ பேர் வந்தார்கள்-வாழ்ந்தார்கள்-செத்தார்கள். எதை விட்டுச் சென்றார்கள்? அவர்களது நினைவு நிரந்தரமாக நீடிக்கவில்லை; முகவரி மிஞ்சவில்லை.

நீ ஓரிடத்தில் உட்கார்ந்திருக்கிறாய். அந்த இடத்தின் கீழே பத்து மனிதர்களின் பிணங்களாவது புதைக்கப்பட்டுள்ளன! இத்தகைய எண்ணிக்கையில் மக்கள் பிறந்து இறந்திருக்கிறார்கள். ஒவ்வோர் அங்குலம் பூமியும் மயான பூமிதான். கல்லறைகள் ஊருக்கு வெளியே இருப்பதாக நினைக்காதே. இப்போது ஊர் அமைந்துள்ள இடம் முன்பு மயானமாக இருந்தது. இப்போது மயானம் உள்ள இடத்தில் ஊர்

இருந்தது. நூற்றுக் கணக்கான ஆண்டுகளில் எல்லாம் தலைகீழாக மாறிவிடுகின்றன. நீ உட்கார்ந்துள்ள இடத்தின் கீழே பத்து பிணங்கள் உள்ளன என்ற கணக்குப்படி நீ பதினொன்றாவது பிணம்!

ஒரு மனிதன் எங்கோ அலைந்து திரிந்து ஒரு மரத்தின் கீழ் வந்து உட்கார்ந்தான். அது கேட்டதைத் தரும் கற்பகத்தரு! அவனுக்குப் பசி. கண்ணில் யாரும் தென்படவில்லை. எனினும் எங்கிருந்தாவது சாப்பாடு கிடைத்தால் தேவலை என்று நினைத்தான். சட்டென்று அவன் முன்னால் ஒரு தட்டில் பலவகை உணவுகள் அடுக்கப்பட்டு வந்து சேர்ந்தன. அவனுக்கிருந்த கோரப்பசியால் எங்கேயிருந்த உணவு வந்தது, தன் மனத்திலிருந்ததை யார் ஊகித்தது என்றெல்லாம் அவன் யோசிக்கவே இல்லை. ருசியான உணவு, அளவுமீறி உண்டதால் கண்ணை அசத்தியது. கட்டாந்தரையில் தூசியில் படுப்பதற்குப் பதிலாகக் கட்டில்-மெத்தை இருந்தால் திருப்தியாகத் தூங்கலாம் என அவன் நினைத்தான். சட்டெனக் கட்டில்-மெத்தை அவன் முன் காட்சியளித்தது. அவன் சற்றுக் குழப்பமடைந்தான். 'இது எப்படி நிகழ்ந்தது என்று யோசிக்க எவ்வளவோ நேரம் இருக்கிறது. முதலில் ஒரு தூக்கம் போடலாம்' என அவன் முடிவெடுத்தான். தூங்கி எழுந்தபின் அவன் யோசித்தான். இந்த இடத்தில் பூதங்கள் வாழ்கின்றனபோலும் என அவன் நினைத்தான். சட்டென சில பூதங்கள் அவன் கண்ணெதிரே தென்பட்டன! 'ஐயோ, இவை என்னைக் கொன்றுவிடுமே என நினைத்தான். அவ்வாறே அவை அவனைக் கொன்றுவிட்டன!

நினைத்தால் நடக்கும் சுவர்க்கத்தில், உழைத்தால்தான் கிடைக்கும் உலகத்தில். அதுவும்கூட நிச்சயமில்லை. சுவர்க்கத்தில் நீ நினைத்த மாத்திரத்திலேயே எதுவும் நடந்துவிடும். கால இடைவெளி இருக்காது. ஆனால் சுவர்க்கத்திலும் நீ சுகமாக இருக்க முடியாது என்பதை நினைவில் வை.

அந்த மனிதனின் கதை இதையே உணர்த்துகிறது. எல்லாம் கிடைக்கும் இடத்திலும் உனக்கு சுகம் கிடைப்பது நிச்சயமில்லை. நீ சுகத்தில் நம்பிக்கை வைத்திருக்கும்வரை நீ சுகம் பெற முடியாது. சுகத்திலிருந்தும் விழிப்புப் பெறு. சுகம் நீங்கியதும் அதன் மறுபக்கமாகிய துக்கமும் நீங்கிவிடும்.

புத்தரிடம் அவர் சீடர் ஒருவர் வந்தார். அவரும் பௌத்த பிட்சு. அவர் தியானத்தில் ஈடுபட்டு மனத்தில் சாந்தம் நிரம்பியவர். ஒரு நாள் அவர் சிந்தனை செய்து கொண்டிருந்தபோது புத்தர் சில மகத்தான விஷயங்களைத் தெளிவுபடுத்தவில்லை என்பது நினைவிற்கு வந்தது. உடனே அவர் புத்தரிடம் வந்து, "குருவே, தாங்கள் இதுவரை சில விஷயங்கள் சொல்லவில்லையே—கடவுள் உண்டா, இல்லையா; சுவர்க்கம் உண்டா, இல்லையா; இறந்தபின் ஆத்மா எங்கே போகிறது; மறுபிறவி உண்டா, கிடையாதா?"

புத்தர் பதிலளித்தார்: "இந்தக் கேள்விகளுக்கு நான் பதில் சொன்னால், அந்தப் பதில்கள் உன்னை அடைவதற்கு முன்னால் நான் இறந்து விடுவேன். அவற்றைப் புரிந்து கொள்வதற்கு முன்னால் நீ இறந்துபோவாய். இம்மாதிரிக் கேள்விகளுக்குப் பதில் தேடுவதும் கூறுவதும் வீணான முயற்சிகள். உதாரணமாக, ஒருவனது உடலில் அம்பு தைத்துவிட்டது. சாகக் கிட;ககிறான். நான் அம்பை உருவி விடுவதாகக் கூறுகிறேன். அவன் தடுத்துப் பின்வருமாறு என்னிடம் கேட்பதாய் வைத்துக் கொள்வோம்: 'இந்த அம்பு எத்திசையிலிருந்து வந்தது? அம்பைச் செலுத்தியது யார்? அவன் நண்பனா, பகைவனா? தவறாக அம்பை எய்தானா அல்லது வேண்டுமென்றேவா? அம்பு சாதாரணமானதா, விஷம் தோய்ந்ததா?' நான் அவனிடம் சொல்வேன், "நான் பதில் கூறி முடிப்பதற்குள் நீ செத்துப் போவாய். முதலில் நான் அம்பை எடுத்துவிடுகிறேன். நீ உயிர் பிழை. பிறகு இந்தக் கேள்விகளைப் பற்றி கவலைப்படு."

புத்தர் அந்தச் சீடரிடம் மேலும் கூறினார், "வாழ்க்கையில் துன்பம் உண்டு என்று உனக்குச் சொல்லியிருக்கிறேன். வாழ்க்கையில் வரும் துன்பத்திலிருந்து விடுதலை பெறும் வழி உள்ளது என்றும் சொல்லியிருக்கிறேன். இதற்குமேல் நான் எதுவும் சொல்வதற்கில்லை. உன் துன்பம் நீங்கிய பிறகு பதில் தேடிக்கொள்."

இது ஆழமாக யோசிக்க வேண்டிய விஷயம். புத்தர் ஏன் அவ்வாறு சொன்னார்? கடவுளைப் பற்றிய கேள்விக்கு புத்தர் பதில் சொல்ல இஷ்டப்படவில்லையா? நீ கடவுளைத் தேடுவது பக்தியினால் இல்லை என்றும், துக்கத்தைப் போக்கிக் கொள்ளவே தேடுகிறாய் என்பதும் புத்தருக்குத் தெரியும். துக்கம் நீங்கிவிட்டால் நீ கடவுளைப் பற்றி விவாதிப்பதையும் நிறுத்திவிடுவாய். துக்கத்தின் காரணமாகவே

நீ கடவுளுக்கு ஆசைப்படுகிறாய். சுவர்க்கத்திலாவது துன்பம் தீருமா என்ற ஏக்கத்தால் சுவர்க்கம் உண்டா என அறிய விரும்புகிறாய். இங்கே நியாயம் கேட்டுத் தோற்றதால் இங்கே நியாயம் கிடைக்காது என்பதை உணர்ந்து கடவுளிடம் நியாயம் கிடைக்குமென எதிர்பார்க்கிறாய்.

கடவுளின் இல்லத்தில் நியாயம் கிடைக்கத் தாமதமாகலாம். ஆனால் கிடைத்தே தீரும். இறந்த பிறகு, மறுபிறவியில், அல்லது பல பிறவிகளுக்குப் பின்பாவது நியாயம் கிடைக்கும். ஆகவே சாவுக்குப் பின் என்ன நடக்கிறது. மறுபிறவி உண்டா என்றெல்லாம் கேள்வி பிறக்கிறது.

புத்தர் கூறியவை இரண்டு விஷயங்கள்தான். 'துக்கம் உண்மை; அதை உணர். துக்கத்தைக் கடக்க வழியுண்டு; அதற்கு சாட்சியாகிவிடு. இதற்குமேல் நான் சொல்ல எதுவுமில்லை. என் உபதேசம் அவ்வளவுதான் இந்த இரண்டையும் கவனத்தில்கொள். மற்றவற்றிற்கு என்னிடம் பதில் எதிர்பார்க்காதே. நீயே தேடிக்கொள்' என்கிறார்.

புத்தர் சரியாகத்தான் சொன்னார். ஒருவனுக்குத் துன்பம் விலகிவிட்டால் பிறகு அவன் சுவர்க்கம் உண்டா, இல்லையா என்பது பற்றித் துளியும் கவலைப்படுவதில்லை. துன்பம் நீங்கினால் சுவர்க்கம்தானே. பிறகு அவன் கடவுள் உண்டா, கிடையாதா என்றும் கேட்பதில்லை. துக்கமில்லாத மனிதன் சுயமாகவே கடவுள் ஆகிறான்! அவர் ஒருவர்தானே கவலையற்றவர்.

கடவுள்-சுவர்க்கம்-மறுபிறவி ஆகியவை பற்றிக் கேட்டவன் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம் நிறைய உள்ளது. வாழ்க்கையை விருப்பங்கள் மூலமாக, எதிர்பார்ப்புகள் மூலமாகப் பார்க்காதே. வாழ்க்கையை அது உள்ளபடியே பார். நடுவில் உன் விருப்பத்தை நுழைக்காதே. சட்டென்று சில விஷயங்கள் நடக்கும். பாம்பு காணாமல் போய்விடும். கயிறு கிடப்பது தெளிவாகத் தென்படும். ஆகவே பயம் தோன்றாது. ஓடிவிழுந்து காயம் படாது. தோல்வி விளையாது. சோகம் உண்டாகாது. உள்ளத்தினுள் ஒரு தீபம் ஒளிவிடும். அஷ்டாவக்ரர் அதற்கு சாட்சி மனப்பான்மை என்று பெயர் கொடுத்துள்ளார்.

துக்கத்தைப் பார். சுகத்தை விரும்பாதே. உலகில் இருவகை மனிதர்கள்: சுகத்திற்கு ஆசைப்படுபவர்கள், துக்கத்தை (சாட்சிபோல்) காண்பவர்கள். சுகத்தை விரும்புகிறவன் புது-புது துக்கங்களை

ஏற்படுத்திக்கொண்டே செல்கிறான். சுகத்தில் விருப்பம் துக்கத்தைப் பிறப்பிக்கிறது. துக்கத்தைச் சாட்சிபோல் பார்த்தால் அது கரைந்து போகிறது. துக்கம் கரைவதால் அங்கே சுகம் தோன்றுகிறது. நீ எந்த வகை மனிதனாக விரும்புகிறாய் என்பது நீயே முடிவுசெய்ய வேண்டிய விஷயம்.

சுகம் வேண்டுமென்று கேட்டால் துன்பம் அதிகரிக்கிறது. ஏனெனில் சுகம் கிடைப்பதில்லை. துக்கம் அதிகமானால் அதிகமான சுகம் கேட்பாய். அப்போது அந்த அளவிற்கு துக்கமும் கூடிவிடுகிறது. இப்படி நீ ஒரு சுழற்சக்கரத்தில் சிக்கிக் கொள்வாய். பிறகு நீ தப்பித்து வெளியேவர முடியாது. இதை ஞானிகள் சம்சார சக்கரம் என்று சொல்வது வழக்கம். பவசாகரம் (உலகக் கடல்) என்றும் சொல்வார்கள். உன் துக்கம் அதிகரிப்பதன் அளவிற்கேற்ப நீ கூடுதல்ாக சுகத்தைத் தேடுகிறாய். அதன் விளைவாகத் துன்பம் முன்பிருந்ததை விட அதிகமாகி விடுகிறது. இதற்கு எல்லை இல்லை, முடிவு இல்லை. ஆகவே உலகக் கடல் எனப்படுகிறது.

இன்னொரு வகையான மனிதர்களும் உள்ளனர். இவர்கள் கஷ்டத்தை அப்படியே பார்க்கிறார்கள். துக்கம் ஏற்பட்டுள்ளதா? சரிதான். அதற்கு எதிரானதை விரும்புவதில் என்ன சாரம் இருக்கிறது? துக்கத்தையே ஒரு கை பார்ப்போம். அது என்ன, எங்கேயிருக்கிறது, எப்படியிருக்கிறது என்று ஆராய்வோம். துக்கம் உண்மையானது எனில் அதை விழிப்புடன் அணுகுவோம்.

நீ ஒரு சிறிய சோதனை செய்து பார்க்கலாம். நீ வருத்தப்படும் போதெல்லாம், சோகமாக இருக்கும் போதெல்லாம் ஓர் அறையில் அமைதியாக உட்கார்ந்துவிடு. அங்கே துக்கமாக இரு. அதிகபட்ச அளவிற்கு துக்கப்படு. துக்கத்தை மிகைப்படுத்தி வேண்டுமானாலும் பார்.

**தி**பெத்தில் இப்படி ஒரு வழக்கம்-மிகைப்படுத்தும் வழக்கம்-உண்டு. இது தியான முறையில் ஆழமான கட்டமாகும். எப்பொருளை அல்லது உணர்ச்சியை விட்டு நீ தப்பிக்க விரும்புகிறாயோ அதை நீ மிகைப்படுத்தி நினை. அது தன் முழு உருவத்தில் உன் மனக்கண்ணில் தோன்றட்டும். துக்கமாயிருந்தால் உன் அறைக்குள் போ. கதவை

மூடிவிடு. அறையின் நடுப்பகுதியில் உட்கார்ந்துகொள். எவ்வளவு இஷ்டமோ அவ்வளவு துக்கப்படு. துடி, பெருமூச்சுவிடு, கதறு, தரையில் உருளு, நெஞ்சில் அடித்துக்கொள். இப்படியெல்லாம் துக்கத்தை மிகைப்படுத்து. துக்கத்தை முழுப் பொலிவுடன் முன்னிறுத்து. துக்க நெருப்பை எரியவிடு. துக்க நெருப்பு குபுகுபுவென எரிவதாகவும் நீ அதன் நடுவில் நின்று அதைப் பார்ப்பதாகவும் கற்பனைசெய். துக்கம் என்பது என்ன, அது எப்படி இருக்கிறது என்று அதை சாட்சிபோல் கவனி.

உடனே ஓர் அதிசயம் நிகழும். நீ சாட்சியானதும் உன் துக்கம் விலக ஆரம்பிக்கும். உனக்கும் துக்கத்திற்கும் நடுவில் இடைவெளி அதிகரிக்கும். அந்த இடைவெளி அதிகரிப்பதற்கு ஏற்ப சுகத்தின் ராகம் கேட்கத் தொடங்கும் சுகத்தின் நறுமணத்தை உணரத் தொடங்குவாய். துக்கம் விலகுகிறது எனில் சுகம் நெருங்கிவிட்டதாகப் பொருள். காலப்போக்கில் துக்கம் தொலைதூரத்திற்கு அகன்றுவிடும். அது இன்னும் நீடிக்கிறதா என்றுகூட உணர முடியாமல் போய்விடும். அது நட்சத்திரத் தொலைவிற்குச் சென்றுவிடும். உள்ளத்தில் சுகத்தின் வீணை ஒலிக்கும். துக்கம் முற்றிலும் நீங்கிவிட்டால் மிஞ்சியிருப்பது சுகம்தானே.

சுகமாக இருப்பதுதான் உனது சுபாவம். சுகம் என்பது துக்கத்திற்கு எதிரானது இல்லை. சுகம் பெறுவதற்காக நீ துக்கத்துடன் போராட வேண்டியதில்லை. துக்கம் இல்லாத நிலைதான் சுகமென்பது. துக்கத்தை சாட்சியாக நன்றாகப் பார். துக்கம் நீங்கிவிடும். கோபமா, பேராசையா, கவலையா? நூற்றுக்குத் தொண்ணூறு விகிதச் சூழ்நிலை களில் இவற்றையும் சாட்சி போல் பார்த்துச் சமாளிக்க முடியும்.

மேற்கத்திய மனத்தத்துவ நிபுணர்கள் தலைவலியையும் நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது சமயங்களில் சாட்சி மனப்பான்மை யுடன் கவனித்தால் அது நீங்கிவிடும் என்கிறார்கள். மிஞ்சியுள்ள ஒரு சூழ்நிலைத் தலைவலி என்ன? அது உடல் சம்பந்தப்பட்ட கோளாறாக இருக்கும். அதற்கு மட்டுமே மருந்து தேவை.

உனக்கு அடுத்த முறை தலைவலி வரும்போது சாரிடான் அல்லது ஆஸ்ப்ரோ மாத்திரை விழுங்காதே. அதன் மீது தியானத்தை பிரயோகி. விளைவு உன்னை ஆச்சரியப்படுத்தும். அறிவியலார்

இப்போதுதான் கண்டுபிடித்த இந்த உண்மை ஆன்மிக உலகில் நூற்றாண்டுகளாக நிரூபிக்கப்பட்டுள்ளது.

இனி தலைவலி வந்தால் ஓரிடத்தில் உட்காரு. தலைவலி எங்கிருந்து வருகிறது என்று தேட முயலு. விரல் வைத்து உணரும் அளவிற்கு அந்த இடத்தைத் துல்லியமாகக் கண்டுபிடி. முதலில் தலை முழுதும் வலிப்பதாகத் தோன்றியிருக்கும். நீ தேடத்தேட வலி சுருங்குவதை உணர்ந்து நீ ஆச்சரியப்படுவாய். ஒரு சிறிய பகுதியில்தான் தலைவலி இருப்பது தெரியவரும். வலி இருப்பதை மறுக்க முயல வேண்டாம். ஒரு கட்டத்தில் வலியின் பரப்பு மிகவும் குறைந்து ஒரு புள்ளி அளவிலேயே நீடிப்பதை உணரலாம். ஓர் ஊசியால் குத்துவதுபோல்தான் வலியின் தீவிரம் இருக்கும். சில நொடிகளில் அது மறைந்துவிடும். பிறகு மீண்டும் வலிக்கும். அப்போது உனக்கு ஒரு விஷயம் தெளிவாகும். உன் மனத்தில் சாட்சி உணர்வு மேலோங்கும்போது வலி மறைந்துவிடும். சாட்சி உணர்விலிருந்து நீ நழுவும்போது வலி மீண்டும் வரும். தொடர்ந்து சாட்சி மனப்பான்மை நீடித்தால் வலி முழுமையாக அகன்றுவிடும்.

இந்த சோதனையை நீ செய்துபார். மன இறுக்கம், மனத்தில் பிரச்சினை காரணமான தலைவலியானால் சாட்சி மனப்பான்மை கொண்டு அதை குணப்படுத்திவிடலாம். கல்லடி பட்டோ, சுவரில் முட்டியோ வலி விளைந்தால் அது உடல் சம்பந்தமானது. அதற்கும் மனத்திற்கும் சம்பந்தமில்லை. கல்லடி பட்டு வலி விளைந்தால் சாட்சி மனப்பான்மையுடன் அதைக் கவனித்தாலும் வலி போகாதுதான். ஆனால் ஒரு விஷயம் தெளிவாகும். அதாவது நீ வலி அல்லன். நீ வலியிலிருந்து வித்தியாசமானவன். ஆக, மனவலி, உடல்வலி ஆகிய இரு நிலைகளிலும் நீ வலியைக் கடந்துவிடுவாய். சாட்சிக் கண்ணோட்டத்தால் மன வலி நீங்கிவிடும் உடல்வலி நீடிக்கும் என்றாலும் 'எனக்கு வலிக்கிறது' என்று நினைக்கத் தோன்றாது. வேறு யாருக்கோ வலி என்றால் எப்படி உனக்கு வலிக்காமல் நீ அதைக் காண்பாயோ, அதேபோல் உனக்கு வலி வந்தாலும் சாட்சி மனப்பான்மையால் நீ பாதிக்கப்படாமல் அதை பார்ப்பவனாக மட்டும் இருந்துவிட முடியும்.

உனக்கு 'உலகம் திகட்டிவிட்டது, வாழ்வது சிரமமாகிவிட்டது' என்று பாடினாய். இந்த நிலைமை உனக்கு உயிர் கொடுத்தவனால்

நேரவில்லை. உன் நிலைமைக்கு நீதான் பொறுப்பு. இதுவும் நல்லதே. வாழ்வில் விரக்தி கடவுளால் ஏற்பட்டிருந்தால் நீ ஒன்றும் செய்வதற்கில்லை. நீதான் காரணகர்த்தா என்பதால் நீ விழித்துக் கொண்டால் போதும். சலிப்பு நீங்கிவிடும். சோகப் பாட்டு பாடுவதால் பலனில்லை. ஏதாவது செய்து, உழைத்து, உன் மனத்துயில் கலைய வேண்டும். இருட்டு எப்போதும் நீடிப்பதில்லை. அதைத் தொடர்ந்து உதய வெளிச்சமும் உண்டு.

**படுக்கையை வாரிச் சுருட்டு**
**இருட்டு உள்ளது கொஞ்சம்தான்**
**விரைவில் அதுவும் கலைந்துவிடும்**
**விழித்து எழ தயாராகு**
**இடுப்புக் கச்சையை இறுக்கிக் கட்டு**
**இருட்டு உள்ளது கொஞ்சம்தான்**

படுக்கையைச் சுருட்டுவது சாட்சி மனப்பான்மையை மேற்கொள் ளுவதன் அடையாளம். படுக்கையைச் சுருட்டுவது காலைப்பொழுது நெருங்கிவிட்டதைக் காட்டுகிறது. நீ விழித்துக் கொண்டால், எழுந்து நின்றால், படுக்கையைச் சுருட்டினால்—இதோ விடிந்துவிட்டது! அறியாமை இரவு முடிவுபெற்று ஞானோதயம் ஏற்பட்டுவிட்டது.

சோகமான விஷயங்களை அழுதும் புலம்பியும் வெளிப் படுத்துவதால் தீர்வு கிடைத்துவிடாது. நீ எப்பொழுதும் அழுதபடி தானே உள்ளாய். அழுதது போதும். பிறவிகள்தோறும் அழுதிருக் கிறாய். 'உலகை உண்டாக்கியவனே, என் துன்பத்தை நீக்கு' எனக் கேட்டுக் கொள்கிறாய். நீ யாரிடம் வேண்டிக் கொள்கிறாய்? அவரைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? அவர் காது கேளாதவராக இருக்கலாம். உன்னுடைய துன்பத்தில் இன்பம் காண்பவராக இருக்கலாம். உன்னு டைய கஷ்டம் அவருக்குக் கஷ்டமாகவே தோன்றாமலிருக்கலாம். அடிப்படையில் அப்படி ஒருவர் இருக்கிறாரா என்பதுகூட நிச்சயமாக உனக்குத் தெரியாதே.

மனிதன் பயம் காரணமாக பகவானை ஏற்படுத்தினான். துக்கம் காரணமாகச் சிலைகள் செதுக்கினான். தனது வேதனையில் யாராவது உதவுவார்கள் என்ற நம்பிக்கையில் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்து அதில் உருவங்களைக் கற்பனை செய்கிறான். இதனால் ஒரு

நன்மையும் விளையாது. அஷ்டாவக்ரரோ, புத்தரோ, கபிலரோ உன்னை இம்மாதிரிக் கெஞ்சச் சொல்லவில்லை. அவர்கள் சொல்வது என்ன?

உன் உள்ளத்தினுள் உயிர்த் துடிப்புள்ள அம்சம் (சைதன்யம்) இருப்பது உறுதி. இல்லாவிடில் ஒரு விஷயம் அல்லது நிகழ்ச்சி துன்பம் என்று எப்படித் தெரியவரும்? துக்கத்தை உணரும் அந்த அம்சத்திற்கு மெருகேற்று: அதைத் தூய்மையாக்கு; குப்பையை விலக்கு; அதற்கு ஒளியேற்று. அது ஒரு தீப்பந்தம்போல் ஆகட்டும். அதன் பேரொளியில் உனக்கு முக்தி கிட்டும்.

கடைசிக்கேள்வி—இது நேரடியான கேள்வி இல்லை. சீடர் ஆனந்த சாகரின் வங்காள மொழிக் கவிதை.

**உனக்கே வணக்கம்-பிரபு**
**உனக்கே நமஸ்காரம்**
**உனது இந்த வையகத்தில்**
**எல்லாவற்றையும் நானிழந்தேன்**
**உன்னை வணங்குவதே எஞ்சியுள்ளது**

**கார்காலத்து மேகங்கள்**
**நீரால் தங்களை நிரப்பிக்கொண்டு**
**பாரம் தாங்காது புவியின்மேல்**
**மழையாய்ப் பொழிந்துவிடுகின்றன**
**அதுபோல் நானும் உன் திருவடியில்**
**சமர்ப்பணமாக விழைகின்றேன்.**

**உனது மாளிகை வாயிலிலே**
**எனது மனம் முழுவதையும்**
**உடைத்துப் போடுவேன்**
**மனத்திடமிருந்து முக்தி பெறுவேன்**

**எனது சோகக் குரலொலி**
**தொலைந்து மறைக முழுமையாக**
**பாடல்கள் எல்லாம் முடிவுபெற்று**
**பரவுக மௌனம் எல்லையற்று**

**எனது உயிரான ஹம்சப் பறவை**
**மானசரோவருக்குப் பறக்கிறது**

**எப்படியாவது இல்லம் திரும்பவே**
**இரவும் பகலும் பிரார்த்திக்கிறது**

**பிறப்பு-இறப்பைக் கடந்து சென்று**
**அதற்கும் முந்திய நிலைமைக்கு**
**எனது உயிர் திரும்புவதாக.**

பூமியில் இறங்கும் மேகத்தைப்போல் உன் உயிர் இறைவன் திருவடியில் குனிந்து பணிந்தால் மழைபோல் அருட்பிரசாதம் பொழியும். நீ திமிருடன் நின்றால் அருள் பெற முடியாது. அகங்காரம் கொண்டால் அலைச்சல்தான் மிஞ்சும். உன்னை சமர்ப்பித்துக் கொண்டால், கரைத்துக் கொண்டால், நீ ஆழ்ந்து மூழ்கினால் மகாபிரசாதம் உனக்குள் இறங்கும். குனி, வளை, தலைவணங்கு.

வாழ்க்கையின் பரம சத்யம் மரணத்துக்கு அப்பாலுள்ளது. நீ முழுமையாக மறையுமிடம்தான் அந்த பரம சத்யம் உள்ள இடம். உனது மரணமே சமாதிநிலை. நீ மறையுமிடத்தில் கடவுள் ஏற்படுகிறார். நீ என்ற உணர்வு இருந்த வரையிலும் கடவுள் தாமதித்தார். நீ திவாலாகி விட்டாய். நீ இல்லாமல் போனாய். கடவுளின் இல்லக் கதவு திறந்தது. ஆகவே, இல்லாமல்போவது எப்படி என்பதைக் கற்றுக் கொள்.

எவ்வாறு உன்னை நீ இல்லாமல் செய்துகொள்வது? அதற்கு இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று:நீ சாட்சியாகிவிடு. இதுவே அஷ்டாவக்ரர், கபிலரிஷி, கிருஷ்ணமூர்த்தி, புத்தர் ஆகியோர் காட்டும் வழி. அல்லது பேரன்பில் ஆழ்ந்துவிடு. இதுவே மீரா, சைதன்யர், இயேசுநாதர் ஆகியோர் காட்டும் வழி. முதல்வழி ஞானத்துடனும், இரண்டாவது வழி பக்தியுடனும் சம்பந்தப்பட்டது. ஆனால் இரண்டின் சாரமான அர்த்தமும் ஒன்றேதான். ஞானத்திலும் நீ காணாமல் போவாய். ஏனெனில் சாட்சி மனோபாவம் ஏற்பட்டுவிட்டால் அகங்காரம் அங்கு தங்கியிருக்க முடியாது. பேரன்பு நிலைமையிலும் நீ இல்லாமல் போய்விடுவாய். அன்புள்ள இடத்தில் அகங்காரத்திற்கு வேலையில்லை. சாராம்சமாகக் கூறுவதானால்—அகங்காரம் இல்லாமல் போனால் ஆண்டவன் காட்சியளிப்பான்.

**ஹரி ஓம்தத்ஸத்!**

ஜனகர் மொழிகிறார்

மய்யநந்தமஹாம்போதௌ விஸ்வபோத இதஸ்தத:|
ப்ரமதி ஸ்வாந்தவாதேந ந மமாஸ்த்யஸஹிஷ்ணுதா|| (74)

மய்யநந்தமஹாம்போதௌ ஜகத்வீசி: ஸ்வபாவத:|
உதேது வாஸ்தமாயாது ந மே வ்ருத்திர்ந நக்ஷதி:|| (75)

மய்யநந்தமஹாம்போதௌ விஸ்வம் நாம விகல்பனா|
அதிஸாந்தோ நிராகார ஏததேவாஹமாஸ்தித:|| (76)

நாத்மா பாவேஷு நோ பாவஸ்தத்ராநந்தே நிரஞ்ஜனே|
இத்யஸக்தோஅஸ்ப்ருஹ: ஸாந்த ஏததேவாஹமாஸ்தித:|| (77)

அஹோ சின்மாத்ரமேவாஹ மிந்த்ரஜாலோபமம் ஜகத்|
அதோ மம கதம் குத்ர ஹேயோபாதேயகல்பனா|| (78)

**ச**த்யத்தைச் சரியாகச் சொல்ல முடியாது. ஆகவே அதை மீண்டும் மீண்டும் கூற நேரிடுகிறது. அப்படியும் ஏதோ விட்டுப் போனதாகத் தோன்றுகிறது. சொல்ல வேண்டியதை முழுமையாகச் சொற்களில் நிரப்ப முடிவதில்லை.

ஓர் அரேபியப் பழமொழியின்படி முழுமையான மனிதனைப் படைக்க முடியாது. ஆகவே கடவுள் தினமும் புதுப்புதுவிதமான குழந்தைகளை உற்பத்தி செய்கிறார். பூரணமான மனிதனைப் படைக்க முயற்சி எடுத்து வருகிறார். அவர் சளைக்கவில்லை, மனம் ஒடிய வில்லை, தோல்வியை ஒப்புக் கொள்ளவில்லை.

சத்யமும் இதே நிலையில்தான் உள்ளது. புராதன காலத்திலிருந்தே அறிஞர்கள் அதைச் சொல்ல முயன்றிருக்கின்றனர். நூற்றுக் கணக்கான முறையில் அதைச் சுட்டிக் காட்டியிருக்கின்றனர்.

ஆனாலும் பெரும்பகுதி இன்னும் கூறப்படாமலே உள்ளது. அதை முழுமையாகச் சொல்ல முடியாது. உள்ளங்கையில் ஆகாயத்தைப் பிடித்து மூட முடியாதல்லவா? அதுபோல் சத்யம் சொற்களில் அடங்காது.

ஆச்சரியம் என்னவென்றால் உள்ளங்கையை மூடினால் ஆகாயம் அதற்கு வெளியேதான் இருக்கும். உள்ளங்கையைத் திற. வானம் வசப்படும். திறந்தால் இருப்பதும், மூடினால் காணாமல் போவதும் விந்தை. இதேபோல் மௌனத்தில் சத்தியம் இருக்கிறது; சொற்களில் அது சிதைகிறது. சொல் மூடிய உள்ளங்கைக்கும் மௌனம் திறந்த கைக்கும் சமம். ஆனாலும் ஞானிகள் சாதாரண மக்களின் மீது கருணைகொண்டு சத்தியத்தை எடுத்துச் சொல்ல முயன்றிருக்கிறார்கள். அந்த முயற்சி தொடர்கிறது என்பது சுபமான செய்தி. சத்யத்தை முழுமையாகச் சொல்ல முடியாவிடிலும் அதைச் சொல்வதற்கான முயற்சி தொடர்ந்து நடைபெற வேண்டும். ஏனெனில் அந்த முயற்சி யின் காரணமாக அறியாமைத் துயிலிலிருந்து பலர் விழிக்கிறார்கள். காதால் கேட்பதால் மட்டும் சத்யம் கிடைத்து விடாதுதான். ஆனால் தாகமாவது ஏற்படும். சத்யத்தைத் தேடி அடையும் விருப்பம் ஒளிவிடும்.

நான் உன்னிடம் என்ன சொன்னாலும் அது முழு அர்த்தத்துடன் உன்னை அடையாது என்பதை நான் அறிவேன். பிறகும் ஏன் சொல்கிறேன்? அது உனக்குள்ளே மறைந்திருக்கும் அக்னி மூண்டெழ நெய்போல் என் சொல் உதவுமென நம்புகிறேன். சத்யம் உனக்கு வசப்பட்டாலும் வசப்படாவிடிலும் உனக்குள்ளே நீறுபூத்திருக்கும் அக்னிக்கு எரிபொருள்போல் என் சொல் உதவும். இந்த நம்பிக்கையில்தான் சாஸ்திரங்கள் எல்லாம் தோன்றின. ஆனால் நீ சத்யத்தைச் சொற்களால் வளைக்க முயன்றால் தோல்வியடைவாய். ஒருவன் ஒரு பாட்டை மனப்பாடம் செய்தும் அதன் அர்த்தத்தை அறியாதிருப்பது போல்தான் இதுவும்.

கிளிப் பேச்சும் இப்படித்தான். அது சொற்களை நினைவில் வைத்திருக்கும். 'ராம்-ராம்'என்று ஜபம்போல் சொல்லும். பஜனை வார்த்தையும் கூறும். நீயும் சொற்கள் கற்கலாம். மொழியில் அருமையான சொற்கள் நிறைய உள்ளன. ஆன்மிகச் சொற்களைக் கற்றுக் கொண்டதால் சத்யமும் உனக்கு அகப்பட்டுவிட்டதாக பிரமை

எழலாம். சொல் என்பது பெட்டி போன்றது. அதில் சத்யம் இருக்க வேண்டிய கட்டாயமில்லை. பெட்டி காலியாக இருக்கலாம். அதனால்தான் சாஸ்திரங்களைத் தலையில் தூக்கிவைத்துக் கொள்ளக்கூடாதென நான் சொல்கிறேன்.

சத்யத்தை பரிசுத்தமான அளவிற்கு அஷ்டாவக்ர மகாகீதை விளக்குவதுபோல் வேறு எந்த சாஸ்திர நூலும் விளக்கியதில்லை; விளக்கவும் முடியாது. ஆனாலும் நீ அஷ்டாவக்ரரின் சொல்வளத்தில் மயங்கி விடக்கூடாது. இந்தச் சொற்களை மொழிந்த அஷ்டாவக்ரரின் உள்ளத்தில் சத்யம் வீற்றிருந்தது. அவரது உள்ளம் சத்யத்தின் இருப்பிடமாக இருந்தது. சொற்கள் மூலம் அவர் முழுமையாகக் கூறியிருந்தாலும் அதே சொற்கள் உன்னை அடைகையில் உன்னால் முழுமையாக உணர முடியாது.

சத்குருவின் அருகில் இருக்கையிலும், நல்லுபதேசங்களைக் கேட்கையிலும் அதிகாலைப் பனியில் உலவுவது போன்று உணர்வாய். பனித்துளி மழைபோல் உடலையும் உடையையும் நனைப்பதில்லை. ஆனால் உலாவி முடித்தபின் உடை லேசாக ஈரமாக இருப்பதை உணர்கிறோம்.

சத்சங்கம் இத்தகைய குளிர்ச்சியை, ஈரப்பதத்தைத் தருகிறது. நீ சாஸ்திரங்களின் தூய உபதேசங்களை அமைதியாகக் கேட்டபடி இருந்தால், சொற்களின் சிறப்பில் சிக்கிக் கொள்ளாதிருந்தால், பனித்துளி தழுவி நறுமணம் பரப்புவதுபோல் உணர்வாய். உள்ளத்து விளக்கிற்கு எரிபொருள் கிடைத்ததுபோல் உணர்வாய்.

**கவிஞன் எழுதினான் பாடல்கள் பன்முறை**
**ஒவ்வொரு முறையும் புதுப்புதுப் பாடல்**
**அனைத்திலும் எழுதிய விஷயம் ஒன்றே**
**ஏனெனில் அவன் அதை முழுதாய் அறியான்**
**பாடல் எதிலும் அது முழுமையாய் இல்லை**
**முதல் பாடலில் அது வெளிப்பட்டிருந்தால்**
**மேற்கொண்டு அவன் ஏன் பாடல் எழுதுவான்?**

அஷ்டாவக்ரர் அதையேதான் சொல்லிச் சென்றார். ஜனகரும் அதையே திருப்பிச் சொன்னார். அதை ஒரு பாட்டில் சொல்ல முடியாத கவிஞன் இன்னொரு பாட்டெழுதிச் சொல்ல முயலுகிறான்.

வின்சென்ட் வான் காக்* என்ற ஓவியரிடம் ஒருவர், "நீங்கள் வாழ்க்கையில் எத்தனை ஓவியங்கள் வரைந்திருப்பீர்கள்?" என்று வினவினார். "நான் வரைந்த ஓவியங்கள் ஏராளம். ஆனால் நான் ஓர் ஓவியம்தான் வரைய விரும்பினேன்," என்று காக் பதிலளித்தார். அவர் சொன்னது சரியே. அந்த ஒரு குறிப்பிட்ட ஓவியத்தைப் படைக்கும் முயற்சியில் அவர் எத்தனையோ படங்கள் வரைந்தார். ஆனால் அந்த ஒன்றை வரைவது சாத்தியப்படவில்லை.

**ர**வீந்திரநாத் டாகுர் மரணப்படுக்கையில் இருந்தார். கண்களில் கண்ணீர். அது கண்டு ஒரு நண்பர் கேட்டார், "ஏன் வருந்துகிறீர்? கடவுளுக்கு நன்றி கூறுங்கள். அவர் உங்களுக்கு எல்லா வசதிகளும் வழங்கினார். வேறென்ன வேண்டும்? உங்களுக்கு சமமான மகாகவி யாருமில்லை. நீங்கள் 6000 பாடல்கள் இயற்றினீர்கள். அவற்றை இசையுடன் பாட முடியும். ஆங்கிலக் கவிஞர் ஷெல்லியின் பாடல்களைக் கூட இசையுடன் பாட முடியும். ஆனால் அவர் எழுதியவை 2000 பாடல்கள்தான். ஆகவே நீங்கள் அமைதியாக விடைபெறுங்கள்."

ரவீந்திரர் சிரித்தபடி சொன்னார்: "நான் கடவுளை பிரார்த்தித்தபடி இருந்தேன். கண்ணீர் வந்துவிட்டது. கடவுளே, இது என்ன தமாஷ்? நான் இப்போதுதான் சுருதி சேர்த்து முடித்தேன். இன்னும் பாடவே ஆரம்பிக்கவில்லையே! அதற்குள் புறப்படும் வேளை வந்துவிட்டதே. இது அநியாயம் இல்லையா? நான் எழுதிய 6000 பாடல்கள் அடிப்படையில் சுருதி சேர்க்கும் முயற்சிதான்," என்று விளக்கினார்.

தபலா வாசிப்பவர் தபலாவை நாற்புறமும் சுண்டியும் தட்டியும் பார்க்கிறார். வீணை வித்துவான் தந்திகளை இறுக்குகிறார், சோதிக்கிறார். அப்போது கிளம்பும் ஒலியை சங்கீதம் என்று நினைத்து விடாதே அவ்வாறு சோதிப்பது இசை நிகழ்ச்சி தொடங்குவதற்கு முந்திய கட்டமேயாகும்.

ரவீந்திரர் சொன்னதும் இதுவே. "நான் இப்போதுதான் சுருதி சேர்த்து முடித்தேன். பாட தயாரானேன். பாட்டு வெளிப்படும்போல் இருந்தது. இதென்ன விடைபெறும் வேளை வந்துவிட்டதே. இது

---

- Vincent van Gogh (1853-1890), Dutch painter, produced more than 800 paintings and 700 drawings, of which he sold only one in his lifetime!

அநியாயம் அல்லவா?'' என்று வருந்துகிறார். உயர்ந்த விஷயத்தைச் சொல்ல முயன்றவனுக்கெல்லாம் இதே நிலைமை ஏற்பட்டிருக்கிறது. தலைசிறந்த பாட்டு என்பது பாடப்படாமலே இருந்து வந்திருக்கிறது.

ஆகவே குறிப்பிட்ட வழியில் ஒன்று சாத்தியப்படாவிடில் வேறொரு வழி மேற்கொள்ளப்படுகிறது. குறிப்பிட்ட வார்த்தைகளால் அர்த்தம் முழுமை பெறாவிடில் வேறு வார்த்தைகள் தேடப்படுகின்றன. இந்தத் திரியால் விளக்கு எரியாவிடில் வேறு திரி கொண்டு வரப்படுகிறது. இந்த மாற்று ஏற்பாடுகளால் பயனில்லை. சொல்லும் சொல்ல விரும்பும் சத்யமும் இணைவதில்லை. ஆனாலும் நீ அமைதியாக உபதேசம் கேட்டால், அதன் சாரத்தைப் பருகினால், வார்த்தைகள் மறைந்து அவற்றின் ஒளி உனக்குள்ளிருக்கும் அக்னியை பிரகாசிக்கச் செய்யும். உனக்கு ஞானத் தாகம் ஏற்படும்.

இந்த அத்தியாயத்தில் ஜனகர் கூறும் சூத்திரங்களை சென்ற அத்தியாயத்தில் கூறிய சூத்திரங்களின் விளக்கம் எனலாம். அஷ்டாவக்ரர் ஜனகரிடம், "அடுத்து நீ ஞானம் பெறு," என்று சொன்னார். அதற்கு ஜனகர், "ஞானத்தைப் பெறுவதா? இதென்ன இப்படிச் சொல்கிறீர்களே. ஏற்கெனவே நான் ஞானம் அடைந்து விட்டேனே. ஞானம் என்னிடமிருந்து வேறுபடுத்தக்கூடிய அம்சம் இல்லையே. எனது சுபாவமே எனது ஞானம். இதுவே ஞானம். எனக்கு ஏற்பட்டுள்ள சாட்சி மனப்பான்மையே ஞானம். ஞானம் பெறு என்று நீங்கள் சொல்வது எதிர்கால நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறது. அதற்காக முயற்சிசெய்ய வேண்டும், சடங்கு செய்ய வேண்டும், யாத்திரை மேற்கொள்ள வேண்டும், வழியைத் தேர்ந்தெடுக்க வேண்டும். முகாம் எதிர்காலத்தில் உள்ளதுபோல் பேசுகிறீர்கள்...

"போதும், என்னை மேலும் சிக்கலில் மாட்டிவிடாதீர்கள். என்னைத் தூண்டிவிடாதீர்கள். ஞானம் ஏற்பட்டு விட்டது. இதற்கு, இப்பொழுதுதான் ஞானம் பெற்றதாக அர்த்தம் இல்லை. ஞானம் எப்பொழுதுமே இருந்தது. எனக்குத்தான் அது நினைவில்லாமல் போனது. செல்வம் என்னிடம் இருந்தும் என் பார்வை அப்பக்கம் செல்லவில்லை. செல்வத்தை நான் வெளியில் தேடிக் கொண்டிருந் தேன். அது கிடைப்பதில் பிரச்சினையில்லை. என் அணுகுமுறைதான் தவறானது. நான் உழைக்கவில்லையென்றோ, என் தவம் முழுமை

பெறவில்லையென்றோ, என் வழிமுறைகள் அரைகுறையானவை என்றோ, வாழ்க்கையையே பணயமாக வைக்கவில்லை என்றோ கூற முடியாது. எனது தவறு என்னவெனில் நான் எப்பக்கம் பார்க்க வேண்டுமோ அப்பக்கம் திரும்பவில்லை. நான் பார்வையை உள் முகமாகத் திருப்பவில்லை. தேடியவன் தனக்குள் தேடிப்பார்க்கவில்லை என்பதுதான் பிரச்சினை. அவன் வேறெங்கோ தேடியபடியிருந்தான். உள்ளே பார், முடிந்தது விஷயம். முடிந்தது என்று சொல்வதுகூட மொழியின் குறைபாடு. எப்பொழுதும் இருந்ததை இப்போது உணர முடிந்தது என்று பொருள்."

புத்தருக்கு ஞானம் ஏற்பட்டபோது ஒருவர் அவரிடம் வந்து, "உங்களுக்கு என்ன கிடைத்தது?" என்று கேட்டார். அதற்கு புத்தர், "புதிதாக எதுவும் கிடைக்கவில்லை. ஏற்கெனவே கிடைத்திருந்ததை அடையாளம் கண்டு கொண்டேன். ஏற்கெனவே இருந்ததைத் தேடும் அவசியம் ஏற்படவில்லை," என்றார்.

ஜனகருடைய பதிலைக் கேட்டு அஷ்டாவக்ரர் சந்தோஷப் பட்டிருப்பார். குருவின் எதிர்பார்ப்பை பூரணமாக நிறைவேற்றிய இத்தகைய சீடன் கிடைப்பது அரிது. சீடன் என்பவன் மலர்ச்சியடைய வேண்டும்; வளர வேண்டும்; ஞானவானாக வேண்டும்; ஞானவலிமை பெறவேண்டும்; சித்தி பெறவேண்டும். இதையெல்லாம் ஜனகர் நிறை வேற்றியதால் அஷ்டாவக்ரருக்கு மிகுந்த திருப்தி ஏற்பட்டிருக்கும். அவர் எதிர்பார்த்த பதிலைத் தான் ஜனகரும் கூறியிருக்கிறார்.

ஆனால் வெளியே அவர் கடினமானவராகக் காட்சி தந்தார். ஏனெனில் அவர் தேர்வு நடத்துபவர். கண்கள் ஜனகரின் உள்ளத்தை ஊடுருவதுபோல் துளைத்தன. குரு அப்படித்தான் கடுமையானவராக இருக்க வேண்டும். அதுவே அவரது கருணை. பரீட்சையின் முடிவில் தான் சாதகமாகச் சொல்லுவார். சீடன் வழுக்குவதற்கு இம்மியளவு ஆபத்து இருந்தாலும் குரு கடுமையாக நடந்து கொள்வார், தண்டிப்பார். சீடன் உருப்பட மாட்டான் என்று தெரிந்தால் அவரே தூண்டிவிட்டு அவனை வழிதவறச் செய்து தன்னைவிட்டு விலகிப் போக விடுவார்.

ஜனகர் சொன்னார்: 'எல்லையற்ற பெருங்கடல் போன்ற என் பரப்பில் உலகமென்னும் படகு தனக்கு இயற்கையான காற்றுபட்டு

இங்குமங்கும் ஆடுகிறது. என் சகிப்புத் தன்மை நீங்கவில்லை.' **(சுலோகம் 74)**

இந்த சூத்திரம் எளிமையாக இருப்பதாகத் தோன்றுகிறது. இதனை ஆராய்ந்துபார். இந்த சூத்திரம் கூறுவது என்ன? துக்கமும் சரி, சுகமும் சரி, இயற்கையான என் சுபாவத்திலிருந்து உண்டாகின்றன. இஷ்டப்பட்டதைத் தெரிந்தெடுக்கும் வாய்ப்பு எனக்கில்லை. கடலில் பலவகை அலைகள்—சிறியவை, பெரியவை; நல்லவை, கெட்டவை; அழகானவை, குரூபமானவை—என எழும்புகின்றன. இவ்வாறு அலைகள் எழும்புவது கடலின் சுபாவம். இதேபோல் என் உள்ளமும் ஒரு கடல். அதில் சுகம், துக்கம், அன்பு, வெறுப்பு, குரோதம், கருணை ஆகிய அலைகள் வீசியபடி இருக்கின்றன. இவை தாமாகவே எழுந்து இங்கும்-அங்கும் பரவுகின்றன. இவற்றை நான் தெரிந்தெடுக்கவில்லை. அவற்றுடன் நான் சம்பந்தப்படவில்லை. ஆகவே நான் பொறுமை இழக்க நேரிடவில்லை.

என்னிடம் வரும் சிலர் தங்களை எப்படியாவது அமைதியற்ற மனநிலையிலிருந்து வெளியே கொண்டுவரக் கேட்டுக் கொள்கின்றனர். நான் அவர்களிடம் அந்த அமைதியற்ற தன்மையை ஏற்றுக்கொள்ளச் சொல்கிறேன். நான் சொல்வது அவர்களுக்கு உடனடியாகப் புரிவதில்லை. குழப்பமில்லாமல் இருக்க அவர்கள் ஏதோ வழி, ஏதோ தந்திரம், ஏதோ மருந்து, யந்திரம்-தாயத்து, யாகம்-ஹோமம் செய்தால் போதுமென நினைக்கிறார்கள். குரு ஸ்தானத்தில் உள்ள நூறு பேரில் 99 பேர், 'இதைச் செய், அதைச் செய், உனது அமைதியின்மை நீங்கிவிடும்' என்றே ஆலோசனை தருகிறார்கள்.

என் சிக்கல் என்னவெனில், அமைதியின்மையைக் கைவிடு வதற்கு உபாயம் எதுவும் கிடையாது. அதை ஏற்றுக் கொள்வதற்குத் தான் வழிமுறை உண்டு. ஏற்றுக் கொண்டதும் அமைதியின்மை கரைந்து போய்விடும். அமைதியின்மை நீங்கிவிடும் என்று அர்த்தம் கொள்ளாதே. நீ அமைதியின்மையிலிருந்து விலகி விடுவாய் என்பதே இதன் அர்த்தம்.

மனத்தின் இயக்கத்தைப் புரிந்துகொள். மனத்தில் சாந்தமில்லை. சாந்தமாக இருக்க வேண்டும் என்று நீ கூறுகிறாய். அந்த எதிர்பார்ப்பு புதிய அமைதியின்மையை உண்டாக்குகிறது. உன்னிடம் பத்தாயிரம்

ரூபாய் உள்ளது. ஆனால் நீ ஆசைப்பட்ட தொகை பத்து லட்சம். எனவே உனக்கு மனத்தில் அமைதியில்லை. இருப்பதைக்கொண்டு நீ திருப்தி பெறவில்லை. இல்லாததை நீ அடைய விரும்புகிறாய். இல்லாததற்கு முக்கியத்துவம் கொடுத்துக் கேட்டதால் அமைதி யிழந்தாய். இல்லாமையால் அமைதியின்மை வருகிறது. கைவசம் உள்ளது. இருப்பில் உள்ளது, கவலை தராது. உன் மனைவிக்குக் கூடுதலாக அழகு தேவை; உன் கணவன் கூடுதலாகப் புகழ் பெற்றிருக்க வேண்டும்; பிள்ளைகள் இன்னும் புத்திசாலிகளாக இருந்திருக்கலாம்; வீடு இதைவிடப் பெரியதாக அமைந்திருக்கலாம்; உனக்குக் கூடுதலாக சமூக அந்தஸ்து கிடைத்திருக்கலாம்; நீ வகிக்கும் பதவியைவிட உயர்ந்த பதவி உனக்குப் பொருத்தமாக இருந்திருக்கும். இப்படி உன்னிடம் இல்லாத ஒன்றை நீ கோருவதால் மன அமைதியை இழக்கிறாய். இதனால் நீ புதியதொரு கோரிக்கை எழுப்புகிறாய். உன்னிடம் இல்லாத ஒன்று உனக்குக் கிடைக்க வேண்டும் என்பதுடன் சாந்தியும் கேட்கிறாய். ஒன்று இரண்டாகி வலை இறுகுகிறது.

பொதுவாகவே அமைதியில்லாதிருந்தும் அமைதியைத் தேடாதவன், இருக்கின்ற மனக்குறையுடன் அமைதியையும் சேர்த்துத் தேடுபவனைவிட சாந்தமாக இருப்பான்! ஏனெனில் இந்த இரண்டாமவன், இருக்கின்ற உபத்திரவம் போதாததுபோல் புதிதாக ஒன்றைத் தலையில் ஏற்றிக் கொள்கிறான்.

மதவாதிகளையும், சடங்குகளில் ஆழ்ந்திருப்பவர்களையும் போல் அமைதியற்ற மனிதர்களைப் பார்க்க முடியாது. சம்சாரி எனப்படுவன்கூட இவர்களைப்போல் அமைதியிழப்பதில்லை. சமயவாதிகள் வழிபாட்டுத் தலங்களில் வணங்குகிறார்கள்; பூஜை அறையில் அமர்ந்திருக்கிறார்கள்; தவம் செய்கிறார்கள்; விரதங்களைக் கடைப்பிடிக்கிறார்கள். ஆனால் அமைதியிழந்து படபடப்பாகக் காணப்படுகிறார்கள்.

சாதாரண, சராசரி மனிதர்கள், சம்சாரிகள் ஹோட்டலில் உட்கார்ந் திருக்கிறார்கள்; தேநீர் பருகுகிறார்கள்; பேச்சில் ஈடுபடுகிறார்கள்; செய்தித்தாள் படிக்கிறார்கள். ஆனால் அவர்கள் சிறிய அளவில்தான் அமைதியின்றி இருக்கிறார்கள். ஏனெனில் இந்த உலகத்தில் எதையோ பெறுவது அல்லது செய்வது மட்டுமே பாக்கியுள்ளதாக

நினைக்கிறார்கள். சமயவாதிகளிடம் அசாந்தி இரண்டு மடங்காக உள்ளது. ஏனெனில் அவர்கள் மறு உலகத்திலும் எதையோ பெறுவதற்கு இப்போதிருந்தே கவலைப்படுகிறார்கள். அவர்களுக்கு இங்கேயும் ஏதோ வேண்டும்; மறு உலகிலும் ஏதோ வேண்டும்; இந்த எதிர்பார்ப்புகளால் ஏற்பட்டுள்ள அமைதியின்மையும் நீங்க வேண்டும். சுருக்கமாக, வாழ்க்கையில் எதுவும் வேண்டுமென்றால் அமைதியை இழப்பதைத் தவிர்க்க முடியாது.

யாராவது என்னிடம் அமைதியை நாடி வந்தால், 'நீ அசாந்தியை ஏற்றுக்கொள்' என்றே அறிவுரை கூறுகிறேன். இதைப் புரிந்துகொள்வது கடினம். அசாந்தியை ஏற்றுக்கொண்டால் பிறகு சாந்தி எப்படிக் கிடைக்கும் என்ற கேள்வி எழத்தான் செய்யும். சாந்தமான வனைக் கேட்டுப்பார். அவன் அமைதியின்மையை ஏற்றுக்கொண்ட வனாக இருப்பான். என் ஆலாசனையை ஒப்புக்கொண்டு, "சரி, ஐயா, அமைதியின்மையை ஏற்றுக்கொண்டு சாந்த நிலையை அடைவேன்," என்று ஒருவன் கூறலாம். இது போதாது. இந்த அறிவிப்பிலும் 'சாந்தி வேண்டும்' என்னும் கோரிக்கை அப்படியே உள்ளது. ஏற்றுக்கொள் வது என்பதன் அர்த்தம்—எது எப்படியோ அப்படியே இருக்கிறது. அது வேறுவிதமாக இருக்க வாய்ப்பில்லை. எது எப்படியோ அது அப்படியே ஆகும். எப்படி ஆனதோ அப்படித்தான் ஆகி வந்திருக் கிறது.

இந்த விதமாக என் கருத்தை நீ ஏற்றால், இதனால் சாந்தி கிடைக்குமா என்னும் கேள்வி எழாது. எது எப்படியோ அப்படியே ஏற்கிறேன் என்னும் கண்ணோட்டம்தான் சாந்த நிலை எனப்படுகிறது. பிறகு நீ எப்படி அமைதியை இழப்பாய்? யார் உன் அமைதியைக் குலைக்க முடியும்? அசாந்தியா, துக்கமா, மரணமா எதுவானாலும் ஏற்கிறேன் என்று நீ முடிவெடுத்து, எதையும் நீயே தேர்ந்தெடுப்பதைக் கைவிட்டு உன்னை சமர்ப்பித்துவிடு. அன்று உனக்குள் புரட்சி நிகழும். இதுதான் இந்த சுலோகத்தில் (எண் 74) கூறப்படுகிறது.

'நான் என்னும் சமுத்திரத்தில் உலகப் படகு தனக்கு சுபாவமான காற்றால் இங்குமங்கும் தள்ளாடுகிறது. என் சகிப்புத் தன்மை நீடிக்கிறது.'

இது சுபாவம் காரணமாகத்தான் என்பதை இப்போது நான் அறிந்துகொண்டேன். எனக்கு எதிரிபோல் யாரும் என் பின்னால்

நிற்கவில்லை. என் அமைதியைக் குலைக்க எனக்கு எதிரி யாரு மில்லை. என் சுபாவமென்னும் அலைகள்தாம் என்னை ஆட்டுவிக் கின்றன. இதுதான் நான். இப்படித்தான் நான் இருக்கிறேன். சில சமயம் அலைகள் எழுகின்றன; சில சமயம் எழுவதில்லை. சில சமயம் எல்லாம் சாந்தமான சூழ்நிலையாகி விடுகிறது. வேறு சில சமயம் எங்கும் அமைதியின்மை நிலவுகிறது. இது என் இயற்கை குணம்.

ஒரு நண்பர் என்னிடம் கேட்டார்: "ஆத்மா முக்தி பெற்றால் அது பூரண ஆனந்தத்தில் ஆழ்ந்திருக்கும். சுதந்திரமாக இருக்கும். ஆத்மாவிலும் ஆசை, பற்று எழ முடியுமா?"

நண்பரின் சந்தேகம் நியாயமானது, தர்க்கபூர்வமானது, பற்று எழுவதும் ஆத்மாவின் சுதந்திரத்தின் அங்கம்தான். ஆசையை வெளியாள் எடுத்து உன்னிடம் தரவில்லை. இது உனது சுபாவம். ஆசையும் பற்றும் தோன்றும்போது நீ சம்சாரியாகி விடுகிறாய். நீ தேகமெடுக்கிறாய். ஆசை திகட்டியபின் நீ முக்திநிலையை அடைகிறாய். இந்த இருநிலைகளும் உன் சுபாவம்தான். ஆசை என்பதை சாத்தான் உனக்குள் நிரப்புவதாகவும், மோட்சம் என்பதை நீ கொண்டு வருவதாகவும் கருதக்கூடாது. பற்றும் உன்னுடையதே, மோட்சமும் உன்னுடையதே. பற்று இருந்தால்தானே முக்திக்கும் வாய்ப்பு இருக்கும். பற்று இல்லாவிடில் முக்தி எங்கேயிருந்து வரும்? நீ நரகத்திற்குப் போக முடியாதபடி கதவு மூடப்பட்டிருந்தால், சுவர்க்கத்திற்குப் போவதற்கு மட்டுமே முக்தி கிடைத்திருந்தால், அது முழுமையான முக்தி ஆகாது. அதன் மூலம் இன்பம் கிடைக்காது. அதில் சுவையிருக்காது. சுவர்க்கத்திற்குப் போயும் வாய் கசக்கும்.

நரகத்திற்குப் போகும் வசதியும் கைவசம் இருந்தால்தான் சுவர்க்கம் இனிக்கும். துக்கமும் ஏற்படக்கூடும் என்பதால்தான் சுகம் இனிக்கிறது. முரணான அம்சங்கள் கலந்திருப்பதால்தான் வாழ்க்கை வண்ணமயமாக உள்ளது; இசைமயமாக உள்ளது. இரண்டு பொருள் உரசுவதால்தான் இசையொலி எழுகிறது. விரல்களுக்கும் தந்திக் கம்பி களுக்கும் இடையே நடக்கும் போராட்டத்தால்தான் வீணையொலி கேட்கிறது. உரசுதல் நின்று போனால் சங்கீதம் சூன்யமாகிவிடும்.

ஜனகர் சொல்கிறார்-நான் மாற்றுகளில் ஒன்றைத் தெரிந்தெடுக்க விரும்பவில்லை. படகு தள்ளாடுவதை விரும்பவில்லை. சகிப்புத் தன்மையை இழக்க விரும்பவில்லை.

நீ எதையாவது விரும்பினால் மனம் சலனமடைகிறது. ஆனால் இருப்பதை ஏற்றுக் கொண்டால் மன இறுக்கம் நீங்கிவிடுகிறது. அறியாமை அகல வேண்டும், ஞானம் பிறக்க வேண்டும் என நீ விரும்பினால், உபத்திரவம் ஆரம்பமாகி விடுகிறது. பற்று நீங்க வேண்டும், ஆசையற்ற தன்மையுடன் இருக்க வேண்டும் என நீ விழைந்தால், சிக்கலில் மாட்டிக் கொள்வாய். உலகிலிருந்து முக்தி பெற வேண்டும், மோட்சமே என் சாம்ராஜ்ஜியம் ஆக வேண்டும் என நினைத்தால் நீ ஒருவிதமான சங்கடத்தை விலைக்கு வாங்கியவனாவாய்.

ஜனகர் சொல்வது அற்புதமான விஷயம். 'உலகம், மோட்சம் ஆகிய இரண்டுமே என்னுள் எழும் அலைகளாகும்' என்கிறார். 'நான் எதையும் தெரிந்தெடுக்கப் போவதில்லை. எழும்பும் அலைகளைப் பார்த்தபடி இருக்கிறேன். இவையும் என்னுடையவை; என் சுபாவமானவை.'

இதுதான் ஸ்வீகரிக்கும் பாவனை (ஏற்கும் பண்பு) என்பதாகும். பிறகு சகிப்புத் தன்மை சீர்குலைய வாய்ப்பில்லை. சகிப்புத் தன்மை இயற்கையான குணமாகப் படிந்துவிடுகிறது. எது நடக்குமோ அதுதான் நடைபெறுகிறது. இதை ஏற்றுக் கொள்வது கடினம்தான். ஏனெனில் அஹங்காரம் இத்தகைய பொறுமையை எதிர்க்கிறது.

ஒருவன் என்னிடம் வந்து, "ஐயா, நான் மகாகோபக்காரன். நான் கோப குணத்திலிருந்து விடுபட விரும்புகிறேன்," என்று தெரிவித்தான். நான் பதிலுக்கு, "நீ ஏனப்பா கோபக்காரனாக இருக்கிறாய்? அகங்காரம் காரணமாகத்தானே?" என்று கேட்டேன். அவன் 'ஆம்' என ஒப்புக் கொண்டான். நான் தொடர்ந்தேன்:

"அதே அகங்காரம் காரணமாகத்தான் நீ கோப குணத்திலிருந்து விடுபட விரும்புகிறாய். கோபம் ஏற்படுவதற்குக் காரணம் அகங்காரம்தான். உனக்குக் கோபம் மூளும்போதெல்லாம் நீ தரம் தாழ்ந்து விடுகிறாய். அது உனது அகங்காரத்துக்கு (உயர்வு மனப்பான்மைக்குப்) பிடித்தமில்லை. மக்கள் உன்னைச் சான்றோன் எனக் கருதி வழிபட வேண்டும், உன் கால்களைத் தொட்டு வணங்க வேண்டும் என்று ஆசைப்படுகிறாய். உன் கோபம் காரணமாக இந்த வாய்ப்பு சிதறிவிடுகிறது. முன்கோபியை யார் வணங்குவார்கள்?

“ஆகவே நீ கோப குணத்திலிருந்து தப்பிக்க விரும்புகிறாய். ஆனால் ஆணி வேர் ஒன்றேதான். நீ கோபப்படுவதற்கும் கோபத்தைக் கைவிட்டு மகாத்மா ஆக விரும்புவதற்கும் அகங்காரமே காரணம். இதைப் புரிந்துகொள் இப்படி இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க முயல்வதைக் கைவிடு. நீ பின்வருமாறு சமரசம் செய்துகொள்-‘ஆம், நான் கோபக்காரன்தான். கோபத்தின் விளைவுகள் எனக்குத் தெரியும். யாரும் என்னை மதிக்கமாட்டார்கள், சரிதான். ஏன் மதிக்க வேண்டும்? பிறர் என்னை அவமானப்படுத்துவார்கள். சரிதான். கோபக்காரன் அவமானப்படத்தானே செய்வான்?’ இவ்வாறு நீ உன் கோப குணத்துடன் ஒத்துப்போ. இப்படிக் கோபத்தைப் புரிந்து கொண்டால், ஏற்றுக்கொண்டால், கோபம் மிஞ்சியிருக்காது.

இதே மனிதன் சிலநாள் முன் எனக்கு எழுதிய கடிதத்தில், ‘என்னை நீங்கள் இப்பொழுது காப்பாற்றுங்கள். என்னை விடுவியுங்கள். நான் இப்பொழுதெல்லாம் விலைமாதர் வீட்டிற்குப் போகிறேன். ஆனால் மக்களோ என்னை புனிதமான சான்றோன் என நினைக்கின்றனர். நான் வழிதவறுவது வெளியே தெரிந்து அகப்பட்டுக் கொண்டால் பிறகு நிலைமை எவ்வளவு கேவலமாகிவிடும்’ என்று கலவரமாக எழுதியிருந்தான்.

இப்படி அகங்காரம் வெவ்வேறு வடிவம் எடுக்கிறது. விலைமாதர் வீட்டுக்கு இட்டுச்செல்வதும் அதுவே; மகாத்மாவாகத் திகழ வேண்டும் என பேராசைப்பட வைப்பதும் அதுவே.

அவன் என்னை நேரில் சந்தித்தபோது சொன்னேன்; “நீ ஒரு காரியம் செய். நீ வேசி வீடு செல்பவன் என்று வெளிப்படையாக அறிவித்துவிடு. அத்துடன் விஷயம் முடிந்துவிடும். உன்னை வாட்டும் பயம் நீங்கிவிடும். பிறகு நீ விருப்பப்பட்டால் வேசி வீடு செல் அல்லது போகாமல் இருந்துவிடு எதுவும் உன் இஷ்டம். உனக்கு இம்மாதிரி நடவடிக்கையே பொருத்தமாக இருக்கும். ஆகவே வேசி வீடு செல்லக்கூடாது என்று கட்டளையிட மாட்டேன். நீ உன் தவற்றை ஏற்று வெளிப்படையாக ஒப்புக்கொண்டால், உனது கெட்ட பழக்கம் விலகிவிட வாய்ப்பு உள்ளது. நீ இப்போது ஒருவகையான உறக்கத்தில் ஆழ்ந்துள்ளாய். இதை ஒப்புக் கொண்டால், உறக்கத்திற்கும் விழிப்பிற்கும் இடையே பாலம்போல் உருவாகி, நீ விழிப்புப் பெறுவாய்.

சட்டென அவன் கத்தினான், "நான் புத்தராகப் போகிறேன். இந்த விஷயத்தில் என்னை யாரும் தடுக்க முடியாது." அவனது கூக்குரல் கேட்டு, என் அருகில் அமர்ந்திருந்த சிஷ்யை ஷீலா நடுங்கிவிட்டாள்.

அதே கோபம், அதே அகங்காரம் 'நான் புத்தராவேன்' என்று அவனை அறிவிக்க வைக்கிறது. அவனை யாரும் தடுக்கப் போவதில்லை. எது எப்படியோ அதை அப்படியே வெளிப்படையாக ஒப்புக்கொள் என்பதுதான் என் அறிவுரை. ஆனால் அதிகபட்ச அளவு கெட்டவனான மனிதனும் தான் கெட்டவன் என்று ஒத்துக் கொள்வதில்லை. ஏதோ கொஞ்சம் கெட்ட அம்சம் தன் சுபாவத்தில் உள்ளது என்று மட்டுமே சொல்வான். தன்னை அடிப்படையில் நல்லவன் என்றே அறிவித்துக் கொள்வான். மேலும் நல்லவனாக ஆவதற்கு தான் எடுத்துவரும் முயற்சிகளையும் தெரிவிப்பான், பூஜை, பிரார்த்தனை, தியானம், சத்சங்கம் ஆகியவற்றை மேற்கொள்வதாகக் கூறுவான். "நான் மனுஷன் நல்லவன்தான். சில விஷயங்களில் மட்டும் எனக்கு பலஹீனம். இதனால் சில சமயம் கொஞ்சம் தப்பாக நடந்துகொள்கிறேன். என் பலஹீனம் கொஞ்சம்-கொஞ்சமாக நீங்கிவிடும்," என்றெல்லாம் சொல்லி அவன் தன்னையே ஏமாற்றிக் கொள்கிறான்.

அவனது பலஹீனம் என்றும் நீங்காது. தன்னிடம் சில நற்பண்புகள் உள்ளதாக அவன் கூறுவது தனது அடிப்படையான தீய தன்மையை மறைப்பதற்காகவே ஆகும். சான்றோர்களின் சத்சங்கத்தை அவன் நாடுவது அவனது கோப குணத்தை மறைப்பதற்கான திரையாகும். 'நான் நல்லவனாவேன். நான் புத்தராவதை யாரும் தடுக்க முடியாது' ஆகிய அறிவிப்புகளும் திரை போன்றவை. அவற்றின் பின்னே அகங்காரம்தான் ஒளிந்து நிற்கிறது.

மனத்தின் சுபாவத்தை நீ சரியாகப் புரிந்துகொண்டால் ஜனகர் கூறுவதன் மகத்துவம் உனக்குப் புரியவரும். மனத்திற்கு இதுவும் சுபாவம், அதுவும் சுபாவம். இரண்டும் ஏற்புடையவை. 'இந்த சமயம் என்ன நிகழ்கிறதோ அதிலிருந்து நான் பிரிந்திருக்க விரும்பவில்லை' என்று கூறுவது புரட்சிகரமான அறிவிப்பு. இந்த நிமிடம் எனக்குக் கோபமா, பேராசையா, காமமா? அதுதான் நான், இதிலிருந்து

வித்தியாசப்பட வேண்டும் என்ற வேண்டுகோளை நான் முன்வைக்க வில்லை. வித்தியாசப்படுவதுபோல் நான் இடையில் திரைபோட வில்லை.

பெரும்பாலும் நல்ல லட்சியங்களின் பின்னே நீ உன் வாழ்க்கையின் காயங்களை மறைத்துக் கொள்கிறாய். வன்முறையாளன் ஓர் அகிம்சாவாதியாக ஆவதற்கு முயலுகிறான். ஆனால் அப்படி ஆவதில்லை, ஆகவும் முடியாது. அகிம்சாவாதி ஆவதற்கு ஒரே ஓர் உபாயமே உள்ளது. அது வன்முறை உணர்வை முழுமையாக ஒப்புக் கொண்டு விடுவதுதான். கோபக்காரன் கருணாமூர்த்தியாக விரும்பு கிறான். ஆனால் அப்படி ஆக முடிவதில்லை. கருணையுள்ளவன் போல் வெளிவேஷம் போட்டாலும் அடிப்படையில் மாற்றம் இருக்காது. காமம் மிகையாக உள்ளவன் பிரம்மசரியத்துக்கு மாற முயல்கிறான். அவனது புலனடக்க ஆர்வம் ஒரு மறைப்பே தவிர உண்மையானதன்று. 'இன்று நான் செய்வது தப்புதான். நாளையி லிருந்து திருந்திவிடுவேன்' என்கிறான். அன்றைய இன்பத்தில் ஆழ்கிறான். இப்படி நாள் கடத்துகிறான்.

ஆனால், நாளை என்பது உண்டா என்று தெரியாதே. நீ இன்று எப்படி உள்ளாயோ அதுதான் நீ. இதை முழுமையாக அங்கீகரி. பிறகு உன் வாழ்க்கையில் முரண்பாடுகள், போராட்டங்கள் இருக்காது. நீ எப்படி உள்ளாயோ அதிலிருந்து மாறுபட்டவனாக இருக்க முடியாது. பிறகு யாருடன் மோதுவாய்? தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு எங்கே உள்ளது? கடவுள் உன்னை இப்படித்தான் படைத்துள்ளார். இந்த சமயம் நீ இப்படித்தான் இருப்பதை அவர் விரும்புகிறார். இந்த நிலைதான் உனக்கு விதிக்கப்பட்டுள்ளது.

'நான் என்ற கடலில் உலக வாழ்க்கைப் படகு சுபாவக் காற்றால் இங்குமங்கும் அலைக்கழிக்கப்படுகிறது.' வெவ்வேறு சமயம் வெவ்வேறு அலைகள். குரோதம், கருணை, காமம், புலனடக்கம், பேராசை, தானதர்மம் ஆகிய அலைகள், எழுகின்றன. ஆனால் நான் எல்லாவற்றையும் சகித்துக் கொள்கிறேன். இவற்றிலிருந்து நான் வேறுபட்டவனல்லன். ஆகவே நான் செய்ய வேண்டியது ஒன்றும் மிஞ்சியிருக்கவில்லை. அலை எழுவதை சாட்சிபோல் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

படகு தனது சொந்தக் காற்றால் அலைந்தபடி உள்ளது. நான் எங்கும் போக வேண்டியதில்லை. எதுவாகவும் ஆக வேண்டிய தில்லை. ஒரு குறிக்கோளும் எனக்கில்லை. நான் ஒரேயடியாக உட்கார்ந்துவிட்டேன். களிப்புடன் அலைகளைப் பார்த்தபடி இருக்கிறேன். எல்லா எரிச்சலும் நீங்கிவிட்டது.

நீ சொல்வதென்ன? 'நான் கோபக்காரன். நான் சாந்த புருஷனாக மாற வேண்டும்.' இதற்கு என்ன அர்த்தம்? கோபம் காரணமாக நீ பொறுமையற்றவனாகி விட்டாய். நீ கோபத்தைப் பொறுமையுடன் ஏற்கத் தயாராக இல்லை. 'நான் கோபப்படுவது நியாயமாகுமா? நான் புனிதமானவன். நான் கோபிப்பது பொருந்தாது. எனக்குக் கோபத்திலிருந்து விடுதலை வேண்டும். நான் அதற்கான உபாயம் செய்வேன். சடங்குகளை மேற்கொள்ளுவேன், ஆசனங்கள்-உடற்பயிற்சிகள் செய்வேன், தியானத்தில் ஈடுபடுவேன்' என்றெல்லாம் கூறுவது உன் பொறுமையின்மையைக் காட்டுகிறது. நீ கோபத்துடன் சமரசம் செய்து கொள்ளாமல் வேறு ஏதோ விரும்புவது தெரிகிறது. இந்தக் கட்டத்திலிருந்துதான் நீ சாந்தம் இழக்கிறாய்.

சகிப்புத்தன்மை இன்றேல் அமைதியும் இல்லை.

ஜனகர் சொல்கிறார்: இவை அலைகள். கோபம், காமம், பேராசை, இவை மாறி-மாறி வருகின்றன. இங்கும் அங்குமாகத் திரிகின்றன. இது தானாகவே நிகழ்கிறது. நான் வெறுமனே பார்த்தபடி உள்ளேன். இவற்றுடன் எனக்குக் கொடுக்கல்-வாங்கல் கிடையாது. நான் குறிப்பிட்ட விதமாகத்தான் ஆகவேண்டும் என்று எனக்குப் பிடிவாதம் கிடையாது. நான் எப்படி உள்ளேனோ அதில் மகிழ்ச்சியுடன்தான் இருக்கிறேன்.

பொறுமை காத்தலில் முக்தி உள்ளது. ஆனால் நான் அந்த லட்சியத்தையும் கைவிட்டவனைத்தான் சந்நியாசி என்பேன். நீயோ உலகைத் துறந்தவனையே சந்நியாசி என்கிறாய். பொறுமை காக்க வேண்டும் என்ற குறிக்கோளையும் நீ கைவிட்டால், பொறுமை இழப்பதற்கும் சந்தர்ப்பம் ஏற்படாது.

நீ சோதனை செய்துபார். நீ எப்படி உள்ளாயோ அப்படியே ஒரு மாதத்திற்கு உன்னை ஏற்றுக்கொள். ஒருவன் ஏதோ சொன்னான். உனக்குக் கோபம் வந்தால் அதை ஒத்துக்கொள். இதற்கு உன்

கோபத்தை நியாயமானதென நிரூபிக்க வேண்டும் என்று அர்த்தமில்லை. 'நான் கோபக்கார மனிதன்' என்று ஒத்துக் கொண்டால் மட்டும் போதும். அடுத்தவனிடம், "என்னோடு நட்புக்கொண்டால் முள் குத்துவதுபோல் இருக்கும். அப்படி நட்புக் கொண்டால் அது உன் தப்பாகத்தான் இருக்கும். என்னோடு சேர்ந்தால், எனக்கு அடிக்கடி கோபம் வரும் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். நான் நாளையிலிருந்து கோபத்தை விட்டுவிடுவேன் என்று உனக்கு வாக்குத் தரமுடியாது. நாளை நடக்கப்போவது யாருக்குத் தெரியும்? கடந்த காலம் முழுவதும் நான் கோபக்காரனாக இருந்ததால் நாளைக்கும் நான் கோபக்காரனாக நீடிக்கவே வாய்ப்பு அதிகமுள்ளது. நான் வருத்தம் தெரிவிக்கவும் இயலவில்லை. ஏனெனில் எத்தனையோ முறை சுய இரக்கம் (பச்சாதாபம்) ஏற்பட்டும் பிரச்சினை தீரவில்லை. அது சுய ஏமாற்றத்தில் முடிவடைந்தது. கோபிக்கிறேன், அதற்காக வருந்துகிறேன், மறுபடியும் கோபம் மூள்கிறது. பச்சாதாபப்படுவதில் என்ன சாரம் உள்ளது? இந்த பச்சாதாபம் மெழுகிப்பூசி மறைக்கும் வேலை தவிர வேறென்ன?

நீ ஒருவரைக் கோபித்தாய். வீடு திரும்பியபின் யோசித்தாய். 'இதென்ன, கடைத்தெருவில் என் கோபத்தை மோசமான முறையில் வெளிப்படுத்தி விட்டேனே! பார்த்தவர்கள் என்ன நினைத்திருப்பார்கள்? இதுவரை என்னைப் பண்பாளன் என்றுதானே நினைத்தார்கள்; கம்பீரமானவன் என்று புகழ்ந்தார்கள். உண்மையில் நான் அற்பமானவன் என்று கண்டுபிடித்திருப்பார்களே. என்னைத் தங்க பாத்திரம் எனக் கருதியவர்களுக்கு நான் அலுமினிய பாத்திரம் என்பது வெளிப்பட்டிருக்குமே. ஒரு நொடியில் கொதித்துப் போய்விட்டேன். என் ஆளுமை என்னும் சிலை பிளவுபட்டுக் குப்புறக் கிடக்கிறது. ஏதாவது செய். அதைத் தூக்கி நிறுத்து. மீண்டும் அரியணையில் அமர்த்து.' இவ்வாறு யோசித்து நீ உன் கோபத்திற்காளானவனிடம் செல்கிறாய், "சகோதரரே, மன்னித்துவிடுங்கள். நான் கோபிக்க நினைக்கவில்லை. ஆனால் எதிர்பாராமல் கோபம் வந்துவிட்டது. சைத்தான் என் தலைமேல் ஏறி உட்கார்ந்து விட்டான்" என்று விளக்கம் தருகிறாய்.

மற்றவர்களும் இப்படித்தான் தங்கள் செயலை நியாயப்படுத்து கிறார்கள். உண்மையில் அவர்கள்தான் சைத்தான்கள். ஆனால்

வெளியிலிருந்து சைத்தான் வந்து தலையிலேறி அமர்ந்ததாகக் கூறுவது கெட்ட புத்தி காரணமாகத்தான். புத்தி சற்று தெளிவானதும், "வருந்துகிறேன், மன்னியுங்கள்" என்கிறார்கள். இதன் அர்த்தம் என்ன? கடைத்தெருவின் நட்ட நடுவே உனது ஆளுமை என்ற சிலை உடைந்து கீழே கிடந்ததல்லவா? அதை நீ தூக்கி நிறுத்துகிறாய். "நான் கெட்டவனில்லை. என்னை அறியாமல் தவறு நிகழ்ந்துவிட்டது. உலகத்தில் தப்பே செய்யாதவர் யார் உள்ளனர்? மனிதன் என்றால் தப்பு செய்துதான் தீருவான்," என்கிறாய்.

நீ தப்பு செய்யும்போதுதான் நீ மனிதன் என்பது உனக்கு ஞாபகம் வருகிறது. அப்போது நீ 'தவறிழைத்தல் மனித சுபாவம்'* என்று நியாயப்படுத்துகிறாய். யாரைக் கோபித்தாயோ அவன் காலில் விழுந்து, மன்னிப்புக் கேட்டதும் அவனும் உன்னை நல்ல மனிதன் தான் என்று நினைத்துவிடுகிறான். முதலில் அவனுக்கும் கோபம் வந்தது. ஏனெனில் நீ கோபத்தை வெளிப்படுத்தி அவனது அகங்காரத் துக்கு சவால் விட்டாய். பிறகு நீ அவன் காலைப் பிடித்தாய், மலர் தூவினாய், பூங்கொத்து அளித்தாய் இப்போது அவனது அகங்காரம் திருப்தியடைந்து விட்டதால் நீ நல்லவன்தானென நினைக்கிறான்.

நீ அவனைக் கோபித்ததும் அவனது முகம் சினத்தால் சிவந்தது. பழிவாங்க யோசித்தான். நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்க நினைத் தான். நீ பூங்கொத்து கொடுத்ததால் சிக்கல் தவிர்க்கப்பட்டது. நீதிமன்றம் செல்லும் வேலையும் தேவைப்படவில்லை. உனது கௌரவம் பிழைத்தது. அவனது அகங்காரமும் திருப்தியடைந்தது. அது மீண்டும் நிலைநாட்டப்பட்டது. நீ அவனைக் கோபிக்கும் முன்னால் உலகம் எவ்வாறு இருந்ததோ அவ்வாறே மீண்டும் இயங்கலாயிற்று. எல்லாம் அதனதன் இடத்திற்குத் திரும்பி நிலைபெற்றன.

ஆனால் நிலைமையைப் புரிந்துகொள்ள விரும்புபவன் பச்சாதாபத்தை வெளியிடப் போகமாட்டான். நிலைமையை அப்படியே ஒப்புக்கொள்ளவே முன்வருவான். அவன் சொல்வான், "சகோதரா, நான் எப்படிப்பட்ட மனிதன் என்பதைப் பார்த்துக் கொண்டாயல்லவா? உன் இரண்டாவது மதிப்பீடு தவறானது. நான் நல்லவனென்று நீ நினைப்பது தவறு. கோபம் வந்தபோது என் நிஜ

* To err is human. to forgive divine (Alexander Pope)
Humanum est errare (Latin)

சொரூபம் வெளிப்பட்டது. அது நல்லதற்குத்தான், மேற்கொண்டு என்னுடன் தொடர்பு வைத்துக் கொள்ளலாமா, கூடாதா என்பதை நீயே முடிவுசெய். நாளை அல்லது பிறகு மறுபடியும் கோபிக்க மாட்டேன் என்று உறுதிகூற முடியாது. நான் நம்பத்தகுந்த ஆசாமியில்லை. இனி கோபிக்க மாட்டேன் என்று உனக்கு நம்பிக்கையூட்டினாலும் அதை நீ நம்பாதே. முன்பும்கூட நான் பலருக்கு வாக்களித்து ஏமாற்றி யிருக்கிறேன். நான் உண்மையில் கெட்டவன். சுபாவத்தில் நான் சைத்தான் போன்றவன்.''

இவ்வாறு நீ வாக்குமூலம் கொடுத்துவிட்டால் அதன் விளைவு எப்படி இருக்கும் தெரியுமா? அதைக் கேட்கின்றவன் எப்படி உணர்கிறானோ அது அவனுக்குத்தான் தெரியும். ஆனால் அதன் மூலம் உனக்குள் நெகிழ்ச்சி உண்டாகும். நீ பணிவுமிக்கவனாக ஆகிவிடுவாய். இது தன்னிரக்கம் இல்லை; ஏற்றுக்கொள்ளும் மனப்பான்மை. நீ உன்னைப் பற்றிய எல்லா விஷயங்களையும் வெளிச்சம் போட்டு தெளிவுபடுத்தி விட்டாய். நீ எத்தகைய மனிதன் என்பது குறித்து பொய்யான தகவல் தரவில்லை. இந்நிலையில் ஒரு புரட்சி தோன்றுகிறது. உள்ளதை உள்ளபடியே தெரிவித்ததும் இது நிகழ்கிறது. பிறகு கோபப்படுவது நாளாக-நாளாக முடியாது போகிறது. கோபித்துக் கொள்ள காரணம் இருப்பதில்லை. உனது அகங்காரத்தைச் சேதப்படுத்த ஒருவன் முயல்கிறான் என்பதால்தான் உனக்கு இதுவரை கோபம் வந்தது. இப்போது நீயே அகங்காரம் என்ற சிலையை வீழ்த்திவிட்டாய்; உடைத்துக் குப்பையில் கடாசிவிட்டாய். இனி யாரும் உனக்குக் கோபமூட்ட முடியாது.

ஒரு விஷயம் நினைவில் வை. நமது மனம் எப்போதும் பொறுப்பைத் தட்டிக்கழித்து மற்றவர்கள் மேல் சுமத்துகிறது. நாம் எல்லோருமே இதைத்தான் செய்கிறோம். இதற்காக நாம் எத்தனையோ உபாயங்களை மேற்கொள்ளுகிறோம்.

எனக்கு ஒருவனைத் தெரியும்-மகாகோபி. அவனிடம் நான், "நீ இவ்வளவு முரட்டுக் கோபக்காரனாக எப்படி ஆனாய்?'' என்று விசாரித்தேன். அதற்கு அவன், "என் அப்பா பயங்கர கோபக்காரர் அவரிடமிருந்து எனக்குச் சிறுவயதிலேயே அந்தக் கெட்ட குணம் வந்து சேர்ந்துவிட்டது.'' என்று தெரிவித்தான்.

இந்த மனிதன் கூறியது நகைப்பிற்குரிய விஷயமில்லை. ஃபிராய்டும்* மற்ற மனத்தத்துவ அறிஞர்கள் கூறுவதும் இதுவே. 'பொறுப்பை யார் தலையிலாவது தள்ளிவிடு' என்பதே இதன் சுருக்கம். மதங்களும் இந்த மாதிரியே ஆலோசனை தருகின்றன. மானிட வரலாற்றை ஆராய்ந்தால் அஷ்டாவக்ரர், ஜனகர் போன்ற விரல்விட்டு எண்ணக்கூடிய சிலர்தான் தங்கள் சுபாவத்தை மறைக்காமல், தங்கள் செயலுக்குத் தாங்களே பொறுப்பு என ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். மற்றவர்கள் பொறுப்பைத் தவிர்ப்பவர்களாகவே இருந்து வந்துள்ளனர்.

**கி**றிஸ்தவ மதம் பரமபிதா ஆதமையும் ஏவாளையும் சுவர்க்கத் தோட்டத்திலிருந்து வெளியேற்றி விட்டார் என்று கூறுகிறது. ஏனெனில் அவர்கள் கடவுளின் கட்டளையை மீறிவிட்டனர். கடவுள் ஆதமிடம், "நான் இந்தக் குறிப்பிட்ட மரத்தின் பழத்தை உண்ணக்கூடாது என்று தடைவிதித்தேன். பிறகும் ஏன் பழத்தைப் பறித்துச் சாப்பிட்டாய்?" என்று கண்டித்தார்.

அதற்கு ஆதம், "இறைவா, நான் என்ன செய்வேன்? இந்த ஏவாள்தான் என்னைத் தூண்டினாள்," என்றான். இப்படித்தான் கதை ஆரம்பமானது. ஆதம் தனது பொறுப்பை ஏவாளின் தலைக்கு மாற்றி விட்டான். "நான் கணவன்தான். கணவனின் நிலைமை எத்தகையது என்பது தங்களுக்குத் தெரிந்ததுதான். மனைவி ஒன்று சொல்லி, கணவன் ஒப்புக் கொள்ளாவிடில் நிலைமை சிக்கலாகிவிடும். கணவனுக்கு மனைவியா, கடவுளா என்று தேர்ந்தெடுக்கும் நிலைவரின் மனைவியைத்தான் ஆதரிப்பான். எனக்கு உங்கள் கட்டளை ஞாபகமுள்ளது. ஆனால் இவளும் ஒரு கட்டளை பிறப்பித்து விட்டாள். அவள் பழத்தை எடுத்துவந்து என்னைச் சாப்பிடச் சொல்லிக் கட்டளையிட்டாள். வேறு வழியின்றி நான் அதைச் சாப்பிட நேர்ந்தது," என்று ஆதம் விளக்கினான்.

கடவுள் ஏவாளைப் பார்த்து, "உனக்கும்தான் என் கட்டளை தெரியுமே. பிறகு ஏன் நீ பழத்தைக் கொண்டுவந்தாய்?" என்று காரணம் கேட்டார். அவள் அப்பாவிபோல் சொன்னாள்: "நான் என்ன செய்வேன்? சாத்தான் பாம்பு வடிவில் வந்தான். என்னைப் பழத்தை

* Sigmund Freud (1856-1939), Austrian neuropsychologist, founder of psychoanalysis

உண்ணும்படி சொன்னான். அவன் என்னை மிகவும் தூண்டினான். நான் பழத்தைச் சாப்பிட்டால் மனிதப் பிறவியிலும் மேம்பட்டதான இறை நிலையை அடைய முடியுமென்று ஆசைகாட்டினான். மேலும் அவன், 'பரமாத்மா இந்தப் பழத்தைத்தான் சாப்பிடுகிறார். ஆனால் நீ புசிக்கக்கூடாது என்கிறார். எத்தகைய மோசடி பார். இது ஞானப் பழம். இப்பழத்தை உண்டுதான் கடவுள் ஞானியாகத் திகழ்கிறார். ஆனால் நீ சாப்பிடுவதைத் தடுத்து உன்னை முட்டாளாகவே நீடிக்க வைக்கிறார்' என்றான். நான் சாதாரணமான பெண். அவன் இப்படியெல்லாம் தந்திரமாகப் பேசி வசப்படுத்தி விட்டான்.''

பெண்களின் சுபாவம் எப்போதுமே இப்படித்தான். மற்றவர்கள்தான் தந்திரமாகப் பேசித் தங்களை வசப்படுத்தி விட்டதாகப் பெண்கள் புகார் கூறுவது வழக்கம். தாங்கள் கணவனை எதுவும் செய்யத் தூண்டியபோதிலும் சிக்கலேற்பட்டால் கணவன்மேல் பழிபோட்டு நழுவுவார்கள்.

சரி, சாத்தான் பாம்புக்குப் பேசும் சக்தி இருந்தால் அது வேறு ஒருவரைக் குற்றவாளியாக்கும். ஒருவேளை அது மரத்தின்மீது பழி சுமத்தியிருக்கும். 'இந்த மரம்தான் என் பழத்தைச் சாப்பிடுபவன் ஞானியாவான் என்று மௌன விளம்பரம் செய்தது' என்று பாம்பு கூறியிருக்கும். ஆனால் பாம்புவரை கேள்வி வராமல் கடவுள்-மனிதர்களிடையே மட்டும் பேச்சு நடந்ததால் கதை இத்துடன் முடிந்தது. இல்லாவிடில் பாம்பிற்கு அடுத்தபடியாக மரம் தன்மீது சுமத்தப்பட்ட பழியை வேறு எதனிடமாவது தள்ளிவிட்டிருக்கும். கதை இழுத்துக் கொண்டே போயிருக்கும்.

கார்ல் மார்க்ஸ்* வேறு விதத்தில் விளக்குகிறார். மனிதனின் தவற்றுக்கு சமூக அமைப்பை அவர் காரணமாக்குகிறார். ஒருவன் கெட்டவன் என்றால் சமூகம் கெட்டுப்போயிருப்பதால் அப்படி ஆனது என்கிறார். அடிப்படையில் அவரது கண்ணோட்டமும் பழைய அணுகுமுறையிலேயே உள்ளது. சமூகம் என்று பெயர் மட்டும் மாறியுள்ளது.

---

* Karl Marx (1808-83), German philosopher of leftist politics; author of 'Das Capital'

இந்துக்கள் தலைவிதிக் கோட்பாட்டைப் பின்பற்றுகின்றனர். அதாவது, பிரம்மா தலையில் எழுதிவிட்டான். இனி நீ என்ன செய்ய முடியும்? பிறக்கும்போதே நம் நெற்றியில் (தலையில்) எதிர்காலம் எழுதப்பட்டுவிட்டது. இப்படி-இப்படி நடக்கும்; நீ கோபக்காரனாவாய்; காம வெறியனாக இருப்பாய்; சாமியார்-சந்நியாசியாகி விடுவாய்- இவ்வாறு உன் வாழ்க்கை எப்படி இருக்கும் என்று எல்லாம் எழுதப்பட்டுவிட்டது. எல்லாம் முன்பே முடிவாகிவிட்டது. இனி நம் கையில் என்ன உள்ளது? ஆட்டுவிப்பவன் அவன். அதன்படியே நிகழ்கிறது.

ஃப்ராய்டின் கண்ணோட்டத்தில், குழந்தைப் பருவத்தில் பெற்றோர் எப்படியெல்லாம் பழக்குகிறார்களோ அதற்கேற்ற குணநலன்கள் படிந்துவிடுகின்றன. அதன் காரணமாகவே மனிதன் குறிப்பிட்ட விதமாகச் செயல்படுகிறான்.

இந்த விளக்கங்களெல்லாம் ஒருவித தந்திரமே. 'இது என் சுபாவம். அதற்கேற்பவே ஒவ்வொன்றும் நிகழ்கிறது,' இவ்வாறு ஒப்புக்கொள்வதைத் தவிர்ப்பதற்காக இந்த விளக்கங்கள் தோன்றின. ஆனால், ஜனகரைப் போல், 'என் சுபாவம் என்னும் காற்றினால் அலைக்கழிக்கப்படும் அலைகளால் நான் இயக்கப்படுகிறேன்' என்று ஒப்புக் கொள்பவனையே நான் வீரன் என்று கருதுகிறேன்.

'நான் எரிச்சலடையவில்லை. இப்போதுள்ளதில் மாற்றம் செய்ய நான் விரும்பவில்லை. எது எப்படியோ எனக்கு சம்மதமே.'

இவ்வாறு நினைத்ததும் மகத்தான புரட்சி தோன்றுகிறது. இந்த சத்தியத்தை நீ உணர்ந்த பிறகு நீ எதுவும் செய்யாமலே எல்லாமும் நிகழ்வதைப் பார்க்கலாம்.

'நான் என்னும் எல்லையற்ற மாகடலில் உலகமென்னும் அலை தனது சுபாவத்தால் எழுந்தாலும் வீழ்ந்தாலும் எனக்கு வளர்ச்சியு மில்லை, தேய்வுமில்லை' **(சுலோகம் 75)**

இங்கே எதுவும் இழக்கப்படுவதில்லை; சம்பாதிக்கப்படுவதும் இல்லை. பிறகு கவலை ஏன்? கோபத்தால் இழப்பும் இல்லை; கருணையினால் வரத்தும் இல்லை. எல்லாம் கனவு. இது அற்புதமான விஷயம்.

உலகியல் அலைகள் இயற்கையாகவே எழுகின்றன. சிறியவை-பெரியவை, நல்லவை-கெட்டவை, பல வடிவானவை, ஓசை எழுப்பி உபத்திரவம் செய்பவை, சாந்தமானவை. இவ்வாறு எல்லாவித அலைகளும் எழுகின்றன. விருத்தியும் இல்லை, சேதமும் இல்லை. எவ்விதக் கொடுக்கல்-வாங்கல் பிரச்சினை எனக்கில்லை.

தூக்கத்தில் இரு கனவுகள் கண்டாய். ஒன்றில் நீ திருடன்; இன்னொன்றில் நீ முனிவன், கண் விழித்ததும் எல்லாக் கனவுகளும் சமமாகி விடுகின்றன. பொழுது விடிந்து விழித்ததும், 'நான் கௌரவமான கனவு கண்டேன். அதில் நான் முனிவராக இருந்தேன்' என்று நீ பெருமைப்பட்டுக் கொள்ள முடியாது. அதேபோல், 'நான் கனவில் திருடனாக, கொலைகாரனாக இருந்தேன்' என்று நீ சோகப்பட முடியாது. எல்லாம் கனவு. அக்கனவு கலைந்தது.

அஷ்டாவக்ரரிடம் ஜனகர் கூறுகிறார்: கனவுகள் தோன்றட்டும் அல்லது அழியட்டும். உலகத்திலிருந்து என்னை முக்திபெறச் சொல்கிறீர்கள். நீங்கள் சொல்வது விந்தையாக உள்ளது. இங்கே என்ன நடக்கிறதோ, அதுவே நடைபெறும். எனக்கும் அதற்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. இப்படிச் செய்வதால் லாபமோ, அப்படிச் செய்வதால் நஷ்டமோ எனக்கில்லை. இங்கே தேர்ந்தெடுக்க மாற்றுகள் இல்லை. இங்கு லாபம்-நஷ்டம் இரண்டும் சமம்.

நீ தேவையின்றிக் கணக்குப் பேரேட்டை விரித்துப் போட்டு, இதனால் லாபம், இதனால் நஷ்டம், இதைச் செய்வதால் லாபம், இதைச் செய்தால் நஷ்டம் என்றெல்லாம் பதிவு செய்கிறாய்.

ஜனகர் சொல்கிறார்: நான் பார்வையாளன் மட்டுமே ஆவேன். நான் முயன்று எந்த மாற்றமும் ஏற்படப்போவதில்லை. ஏனெனில் சுபாவம் மாறுவது கிடையாதே. இலையுதிர்காலம் வருகிறது. இலைகள் வீழ்கின்றன. வசந்தம் வருகிறது. புதிய மலர்ச்சி தெரிகிறது. இளமைக் காலம்—ஆசைகள் பொங்குகின்றன. பிறகு முதுமை—ஆசைகள் மங்குகின்றன. நான் செய்து எதுவும் நடைபெறுவதில்லை. நான் கர்த்தா அல்லன் ஆகவே நான் எதைத் துறக்க வேண்டும்? எதைவிட்டு ஓட வேண்டும்; எதைத் தியாகம் செய்ய வேண்டும்?

அஷ்டாவக்ரர் ஜனகரைச் சோதிக்க வலை விரிக்கிறார். அதற்காக அவர் சொல்கிறார்: உனக்கு ஞானம் கிடைத்துவிட்டதாக நீ

சொல்கிறாய் அல்லவா? அப்படியானால் நீ எல்லாவற்றையும் தியாகம் செய்துவிடு. 'இந்த உடல், இந்தச் செல்வம், இந்த நாடு ஆகியவை என்னுடையவை' என்று நீ நினைப்பதை உதறித்தள்ளு.

ஜனகர் வலையில் மாட்டிக் கொள்ளவில்லை. அவர் கேட்கிறார்: நான் கைவிடவோ, பிடித்துக்கொள்ளவோ என்ன உள்ளது? என்னுடையது என்று எதுவும் இல்லையே. தானாகவே ஏற்பட்டது. தானாகவே போய்விடும். எனவே இதனால் எனக்கு எந்த லாபமும் இல்லை. இது இல்லாமல் போனால் லாபம் என்றும் அர்த்தமில்லை.

இது அற்புதமான கருத்து. இது சந்நியாசத்தின் சிகரம். நீ கடை விரித்து உட்கார்ந்தாய். வியாபாரம் நடைபெறுகிறது. விற்பனையில்லை. சரி மூடிவிடு. திவாலாகிவிட்டாய். மகிழ்ச்சியுடன் வெளியேறு. ஓடும்வரை வண்டி ஓடட்டும். அதில் ஏறிக்கொண்டாய். பிறகு நின்றுவிட்டது. வேறு என்ன செய்ய முடியும்? இப்படி நிலைமையை அப்படியே எடுத்துக் கொள்பவன் என்றாவது அமைதி இழப்பானா? படபடப்பாக இருப்பானா? அவனது வாழ்க்கையில் இறுக்கம் ஏற்படுமா? உண்மையில் அவன் சாந்தமாக இருப்பான்.

குழந்தைப் பருவமாக இருந்தது. பொம்மைகளுடன் விளையாடினான். இளமை வந்தது. எதிர்பாலாரோடு களித்தான். முதுமை வந்தது. தத்துவக் கருத்துகளோடு உறவாடுகிறான்.

குழந்தைப் பருவத்தில் காம உணர்வு இருப்பதில்லை. சிறு வயதினர்க்குக் காமத்தை போதித்தாலும் அவர்களால் அதைப் புரிந்துகொள்ள முடியாது. இந்தப் பருவத்தில் சுபாவத்தில் ஆசைகள் இன்னும் குடியேறவில்லை. உள்ளத்தில் ஆசை அலை எழும்ப வில்லை. இளமை வந்தது. காமம் உள்பட ஆசைகள் தலைதூக்கின. பிறகு எவ்வளவு உபதேசித்தாலும் இளவயதினர் அவர்கள் வழியிலேயே போவார்கள்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் மரணப் படுக்கையில் இருந்தார். மகனை அழைத்தார். இறுதி வார்த்தைகள் பேசினார்: "மகனே, உன்னிடம் சொல்வதற்கு நிறைய விஷயம் இருக்கிறது. ஆனால் சொல்லப் போவதில்லை." மகன் காரணம் கேட்டான். முல்லா சொன்னார், "என் அப்பாவும் இந்த நிலையில் சில விஷயங்கள் சொன்னார். ஆனால் நான் கேட்டு நடந்தால்தானே."

மகன் பதிலளித்தான், “நீங்கள் விஷயத்தைச் சொல்லி விடுங்கள். நான் கேட்கிறேனா, இல்லையா என்பது இரண்டாம் பட்சம்.” வேறு வழியின்றி முல்லா சொல்ல ஆரம்பித்தார்: “பெண்களின் ஆசை வலையில் சிக்கிவிடாதே என்று என் அப்பா எச்சரித்தார். நானோ ஒன்பது பெண்களை மணந்து நரக வாழ்க்கை வாழ்ந்தேன்! இது பற்றி நானும் உனக்கு எச்சரிக்க விரும்பினேன். ஏனெனில் நீயும் பெண் வலையில் போய் விழுவாய். நான் சொல்வதால் என்ன லாபம் ஏற்படப் போகிறது?

“இறக்கும் தறுவாயில் என் அப்பா கள் குடிக்காதே என்று கூறியிருந்தார். ஆனால் நான் குடித்தேன், அளவு மீறிக் குடித்தேன். உன்னைத் தடுத்தாலும் நீ குடிப்பாய். அப்பாவைப் போல்தானே பிள்ளையும் இருப்பான். மனிதன் அனுபவித்துத்தான் பாடம் கற்கிறான். நீ ஒரு தப்பு செய்ய நேர்த்தால் செய்துவிடு. அதை நன்கு அனுபவி. ஆனால் அதே தப்பை இரண்டாம் முறை செய்யாதே. ஒரு சமயத்தில் ஒரு பெண்ணுடன் மட்டும் வாழ்க்கை நடத்து. நமது மதம் அனுமதித்த போதிலும் பல தார வலையில் மாட்டிக் கொள்ளாதே.

மனித வாழ்க்கையில் ஒவ்வொரு கட்டத்திலும் ஒரு குறிப்பிட்ட உணர்ச்சி தலைதூக்குவது இயற்கை. சிறுவன் இளைஞனாகும்போது அவனுக்குப் பல விஷயங்களில் ஆசை ஏற்படுகிறது. கிழவனாகி விட்டால் ஆசைகளில் நாட்டம் (ராகம்) குறைகிறது. மனத்தில் வைராக்யம் (வைராகம்) தோன்றுகிறது. இந்த வைராக்ய உணர்வை வயோதிகர்கள் பெரிய சொத்துப்போல் நினைக்கிறார்கள். தங்களை வைராகி (பைராகி) எனக் கருதுகிறார்கள். பற்றும் வைராக்கியமும் அந்தந்த வயதில் சுபாவமான குணங்கள்தான்.

இதற்கேற்ப முற்காலத்தில் இந்துக்கள் வாழ்க்கையை நான்கு கட்டங்களாகத் தெளிவாகப் பிரித்து வைத்திருந்தார்கள். முதல் 25 ஆண்டுகள் வரை கல்வி, பிரம்மச்சரியம், அடுத்த 25 ஆண்டுகள் போகம், இல்லற வாழ்க்கை. பிறகு 75 வயதுவரை வானபிரஸ்தம், காட்டிற்கு ஏகுதல். அதாவது அன்றாடக் கடமைகளை, பொறுப்புகளைக் கைவிட்டு வெளியேறுதல். அந்த 75 வயதிற்குள் மரணம் நிகழாவிடில் அதன்பின் சந்நியாசியாதல். பெரும்பாலும் 75 வயதுக்குள்ளேயே சாவு நிகழ்ந்துவிடும். ஆகவே சந்நியாசியாகும் சிரமம் பெரும்பாலும் உண்டாகாது.

இந்துக்கள் 75க்குப் பிறகு சந்நியாசத்தை வைத்தமை அவர்களது அறிவுபூர்வமான சிந்தனைக்குச் சான்றாகிறது. இந்த வயதிற்குப் பிறகு சந்நியாசம் வருவது இயற்கையானது. இளமைப் பருவத்தில் பணம்-பதவி-சமூக அந்தஸ்து சம்பாதிக்க வேண்டுமென்று மனத்தில் பேராசை அலைகள் எழுவது இயற்கையானது. அதுபோல் ஒரு கட்டத்தில் (முதுமையில்) உடல் சக்தி குறைந்து மனிதன் களைப்படைகிறான். அப்போது வைராக்கிய உணர்வு தலைதூக்குகிறது. களைப்பு வைராக்கியத்தைக் கொண்டுவருகிறது.

இந்த சந்நியாசம் அறிவுபூர்வமானதாயினும் இந்துமதத்துடன் சம்பந்தப்பட்டதால் வயதைக் காரணம் காட்டி புத்தரும் மகாவீரரும் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். அவர்கள் 75க்குப் பிறகு வரும் சந்நியாசத்தில் என்ன சிறப்பு இருக்க முடியும் என்று கேலிசெய்தனர். இயந்திரத்தின் சுழற்சிபோல் தானாக இவ்வயதில் வைராக்கியம் எழத்தான் செய்யும் என்றனர். சாவு நெருங்கும்போது அதன் நிழல்போல் வரும் வைராக்கியத்திற்கு என்ன மதிப்பு? இளமையில் எழும் வைராக்கியம்தான் மதிப்பு வாய்ந்தது என்று வாதிட்டனர்.

பௌத்த, சமண கலாச்சாரங்கள் ஸ்ரமண கலாச்சாரம் (ஒழுகுமுறை) எனப்படுகின்றன. அவற்றில் ஸ்ரமம் (சிரமம், உழைப்பு, முயற்சி) முதன்மை இடத்தைப் பெறுகிறது. அம்மதங்களில் தலைவிதி, அதிர்ஷ்டம், சுபாவப் பாதிப்பு ஆகியவற்றுக்கு இடம் தரப்படவில்லை. மனவுறுதியுடன் பாடுபடுதலே முக்கியமானது. இளமையிலேயே சிரமப்பட்டு மனத்துடன் போராடி சந்நியாசியாக வேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது. இவ்வாறு இளமையிலேயே சந்நியாசியானவன் சிறிதளவாவது அகங்காரியாக இருந்தால் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. ஏனெனில் அனுபவிக்க வேண்டிய வயதில் வீடு, வசதி, செல்வம் ஆகியவற்றைத் துறந்து, ஆசைகளை அடக்கி இளமையில் துறவு மேற்கொள்ள எத்துணை உழைப்பு தேவை என்பதை நாம் கற்பனை செய்ய முடியும்.

ஓர் அலுவலகத்தில் தட்டச்சர் வேலை காலி என்ற விளம்பரம் கண்டு முல்லா நஸ்ருத்தீன் விண்ணப்பித்தார். விளம்பரத்தில் சம்பளம் தெரிவிக்கப்பட்டிருந்தது. முல்லா இரண்டு மடங்குச் சம்பளம்

கேட்டிருந்தார்! எனினும் நேர்காணலுக்கு அழைக்கப்பட்டார். அலுவலக மேலாளர் கேட்டார், "உமக்கு டைப் செய்யத் தெரியுமா?"

முல்லா அப்பாவியாகச் சொன்னார், "எனக்கு டைப்பிங் தெரியாது, சார்!"

மேலாளர் திடுக்கிட்டார். "பிறகு ஏன் விண்ணப்பித்தாய்?"

"இதுவரை டைப்பிஸ்ட் வேலைக்கு முயற்சி செய்யாததால் கற்றுக் கொள்ளும் தேவை எழவில்லை."

மேலாளருக்குக் கோபம் மூண்டது. "இதென்ன அநியாயமாக இருக்கிறது. டைப்பிங் தெரியாதபோது விண்ணப்பமும் அனுப்பி விட்டு இரண்டு மடங்கு சம்பளம் கேட்கிறாயே," என்று அதட்டினார்.

முல்லா அமைதியாகச் சொன்னார், "டைப்பிங் தெரியாததால் தானே இரண்டு மடங்கு சம்பளம் கேட்கிறேன். டைப்பிங் தெரிந்திருந்தால் வேலை சுலபம் என்று பாதிச் சம்பளத்திற்கே ஒப்புக்கொண்டிருப்பேன். ஆனால் டைப்பிங் தெரியாததால் நான் இரண்டு மடங்கு உழைத்து வேலைபார்க்க நேரிடும். அதற்கேற்பவே இரண்டு மடங்குச் சம்பளம் கேட்கிறேன்."

இதுபோலவே இளமையில் சந்நியாசி ஆகின்றவரிடம் கர்வம் இருக்கும். அவர் தன்னை மற்றவர்கள் கூடுதலாக மதிக்க வேண்டுமென எதிர்பார்ப்பார். அவர் நம்மிடம், "என்னைப் பாருங்கள். இளைஞனாக இருக்கும் இந்நிலையிலேயே நான் துறவியாகிவிட்டேன். வாழ்க்கைப் பிரவாகத்தில் எதிர்நீச்சல் போடுகிறேன். நான் சாதனையாளன் அல்லவா?" என்று கூறுவது போலிருக்கும்.

சூஃபி* சம்பிரதாயத்தில் குருவை அடையாளம் காண்பது மிகவும் கடினம். ஏனெனில் அவருக்கு மனைவி-குடும்பம் இருக்கும். அவர் கடை வைத்து வியாபாரம் செய்து கொண்டிருக்கக் கூடும்; கம்பளம் நெய்து கொண்டிருக்கக்கூடும்; அவர் செருப்புத் தைப்பவராக இருக்கலாம்.

* Mystical movement within Islam that seeks to find divine love through personal experience of God.

**த**த்துவ அறிஞர் குர்ஜியேஃப் சூஃபி குருக்களைத் தேடிக் கொண்டு கிழக்கத்திய நாடுகளுக்கு வந்தபோது பெருங்குழப்பத்தில் ஆழ்ந்தார். யார் குருவின் ஸ்தானத்தில் உள்ளவர்கள் என்று அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. குரு என்று சுட்டப்பட்டவர்கள் குடும்பத்திலும் தொழில்களிலும் ஈடுபாட்டுடன் தெரிந்தனர்.

அவர் (சிரியாவின் தலைநகரான) டமாஸ்கசில் சூபி குரு யாரும் கிடைப்பாரா என்று தெருக்களில் அலைந்து தேடிச் சென்றார். ஓர் இஸ்லாமியர் சொன்னார், "நீங்கள் இப்படி அலைந்து கண்டுபிடிக்க முடியாது. ஒன்று செய்யுங்கள். நீங்கள் மசூதிக்குச் சென்று அதிகபட்ச நேரம் நமாஸ் செய்வதில் ஈடுபடுங்கள். யாராவது சூஃபி அங்கு வந்து நீங்கள் கண்ணில் பட்டால் அவரே உங்களைப் பிடித்துக் கொள்வார். நீங்களாக குருவைத் தெரிந்து கொள்ள முடியாது. சீடனால் எப்படி குருவைக் கண்டுபிடிக்க முடியும்? குருதான் தேடி சீடனை அடையாளம் காண்பார்."

குர்ஜியேஃப் இதுவே சரியான வழியென நினைத்தார். அவர் மசூதிக்குச் சென்று நள்ளிரவு வரை தொழுகையில் ஈடுபட்டார். பெரியவர் ஒருவர் அவரைக் கவனித்தார். சில நாள் தொடர்ந்து கவனித்த பிறகு ஒருநாள் குர்ஜியேஃபிடம் வந்தார். "உங்களைப் பார்த்தால் முஸ்லீமாகத் தெரியவில்லை. பிறகு ஏன் தினமும் பல மணி நேரம் தொழுகை செய்கிறீர்?" என்று விசாரித்தார்.

குர்ஜியேஃப் அவரை வணங்கி, "நான் சத்குருவைத் தேடி வருகிறேன். நானாகக் கண்டுபிடிக்க முடியாது என்று ஓர் அன்பர் கூறினார். நான் தொடர்ந்து இங்கே தொழுகை செய்தால் இங்கே யாராவது சூஃபி வரும்போது அவரது பார்வைபட்டு எனக்கு வழிகாட்டுவார் என்று கூறினார். உங்களுக்கு அப்படி யாரையும் தெரியுமாயின் அவரிடம் என்னை அனுப்புங்கள் அல்லது அவரது இருப்பிடம் தெரிவியுங்கள்," என்று கேட்டுக் கொண்டார்.

வந்தவர் சம்மதித்து, "இன்று இரவு பன்னிரண்டு மணிக்கு ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வரவும். நான் ஒரு குருவை அறிமுகப்படுத்து கிறேன்" என்றார். அதன்படி குர்ஜியேஃப் அந்த இடத்தை அடைந்ததும் அவருக்குத் தூக்கிவாரிப் போட்டது அந்த இடம்-ஒரு டீ கடை! குரு என அறிமுகப்படுத்தப்பட்டவர் அந்த டீ கடை

நடத்துபவர். டீ தயாரித்து வழங்குபவரும் அவரே. அந்தக் கடையில் முன்பே பலமுறை குர்ஜியேஃப் தேநீர் பருகியிருக்கிறார். அது மட்டுமல்ல, கடைக்காரரிடம் சூஃபி அன்பர் யாரும் இப்பக்கம் வந்தால் தனக்குத் தெரிவிக்குமாறு சொல்லி வைத்திருந்தார். அதற்குக் கடைக்காரர், "மத சம்பந்தமான விஷயங்களில் எனக்கு ஆர்வமில்லை. ஆகவே குரு பற்றித் தெரியாது," என்று சிரித்தபடியே பதிலளித்து வந்தார்.

குர்ஜியேஃப் அந்தக் கடைக்காரர் உண்மையிலேயே ஒரு சூஃபி குரு என்பதை உணர்ந்து கொண்டார். அவரை ஆன்மிகப் பயிற்சி தருமாறு வேண்டினார். அந்த டீ கடை குரு சொன்னார், "நீ ஒன்றிரண்டு வருஷம் இங்கேயே இருந்து தட்டுக்களையும் கோப்பைகளையும் தேய்த்து அலம்பும் பணியைச் செய்துவா. இதுவே தியானத்தின் முதல்படியாகும்."

**அ**மெரிக்கர் ஒருவர் டாக்கா நகரத்திற்குச் சென்றார். அங்கு ஒரு சூஃபி குரு வசிப்பதாக அவர் கேள்விப்பட்டிருந்தார். ஞானத்தின் சிகரத்தைத் தொட்டவர் என்றும் அவரிடம் சமர்ப்பணம் ஆகின்றவர்களுக்கு ஆன்மிக லாபம் விளைகிறதென்றும் அந்த குருவைப் பற்றி பேச்சு பரவியிருந்தது.

விமானத்திலிருந்து இறங்கிய அந்த அமெரிக்கர் டாக்சி டிரைவர்களிடம் அந்த சூஃபி குருவைப் பற்றி விசாரித்தார். ஒரு டிரைவர், "என் வண்டியில் உட்காருங்கள். எனக்கு அந்த இடம் தெரியும்," என்றார். சில நிமிடப் பயணத்திற்குப்பின் டாக்சி ஒரு குடிசை முன் சென்று நின்றது. "ஐந்து நிமிடம் கழித்து உள்ளே வாருங்கள்," என்று கூறிவிட்டு டிரைவர் குடிசைக்குள் நுழைந்தார்.

ஐந்து நிமிடம் கழித்து குடிசைக்குள் நுழைந்து பார்த்த அமெரிக்கருக்குத் திகைப்பு ஏற்பட்டது. மையத்தில் டிரைவர் குருபோல் அமர்ந்திருக்க, சுற்றிலும் சிலர் சீடர்கள்போல் காணப்பட்டனர். "நீங்கள் சூஃபி குருவா?" என்று அமெரிக்கர் கேட்க, "ஆம். ஆனால் டாக்சி ஓட்டுதல் என் வாழ்க்கைத் தொழில். இதனால் குருவைத் தேடுபவர்களை நானே சந்தித்து இங்கு அழைத்துவர முடிகிறது," என டிரைவர் பதிலளித்தார்.

சூஃபி குருவை நீ எங்கே தேடுவாய்? எப்படித் தேடுவாய்? சூஃபி யாரென்பதே தெரிந்துகொள்ள முடியாதே. அவர்கள் வாழ்க்கையை அதன் போக்கிலேயே விட்டு சகஜமாக வாழ்கின்றவர்கள். ஜனகரின் பேச்சு இதே அடிப்படையைக் கொண்டுள்ளது. 'எல்லையற்ற கடல்போன்ற நான் உலகை நிச்சயமாக ஒரு கற்பனை மட்டுமே என்று கருதுகிறேன். ஆகவே நான் உருவமற்றவனாகவும் சாந்தமாகவும் உள்ளேன்' என்கிறார் அவர். **(சுலோகம் 76)**

உலகம் என்பது ஒரு சொல் மட்டுமே. அது கற்பனை மட்டுமேயாகும். அது ஒரு தோற்றம் மட்டுமே. அது உண்மையில் இல்லை. நமது கருத்தளவில் மட்டுமே அது உள்ளது. நாம் உறக்கத்தில் காணும் கனவு போன்றது அது. நாம் அஞ்ஞான உறக்கத்தில் ஆழ்ந்திருப்பதால் உலகம் உள்ளதாகத் தெரிகிறது. ஞான விழிப்பு ஏற்பட்டுவிட்டால் பிறகு உலகம் கிடையாது.

சற்று யோசித்துப் பார். உன் உள்ளத்தில் பற்று எதுவும் மிஞ்சியிருக்கவில்லை எனில், எதையும் அடைய வேண்டும் என்ற ஆசை உனக்கு இல்லாவிடில், சமூகத்தில் பெரிய மனிதனாக வேண்டும் என்று உனக்கு வெறி இல்லாவிடில்—

நீ இதே உலகத்தவனாக இருக்க முடியுமா? திடீரென உனது உலகமே மாறிவிட்டதாகத் தோன்றும். ஒரு மனிதன் எதைத் தேடி அலைகிறானோ அதற்கேற்ப அவனது உலகம் உருவெடுக்கும். உதாரணமாக, நீ தினமும் குறிப்பிட்ட சாலை வழியாகப் போகிறாய். ஓரிடத்தில் ஓரத்தில் அனுமார் நிற்பதுபோல் சிவப்பான தபால்பெட்டி பதிக்கப்பட்டிருக்கிறது. நீ அதைக் கவனித்திருக்கவே மாட்டாய். ஆனால் என்றைக்காவது கடிதம் எழுதினால் அன்று அந்தத் தபால் பெட்டி உன் கண்ணில் நிச்சயமாகப்படும். நீண்ட காலமாக அது அங்குதான் இருந்தது. கடிதம் எழுதி அதனுடன் சம்பந்தம் ஏற்படுத்திக் கொள்ளும் அளவிற்கு ஆசை எழாதவரையில் அது இருந்ததே உனக்குத் தெரியவில்லை.

இன்னொரு உதாரணம். நீ உபவாசம் இருக்கிறாய். வேலையாய் நகரத்தின் முக்கியமான தெரு வழியே செல்கிறாய். எங்கு பார்த்தாலும் ரெஸ்டாரண்ட், ஹோட்டல், காபி ஹவுஸ் இவையே உன் கண்ணில் படும். உனது மூக்கும் கடைத்தெருவின் மற்ற வாசனைகளை

உணராமல், ஆங்காங்கே விற்கப்படும் உணவுப் பண்டங்களிலிருந்து வரும் விதவிதமான வாசனைகளையே உள்ளிருக்கும். வீட்டிலேயே வயிறு நிரம்பச் சாப்பிட்டுவிட்டுச் செல்பவனின் கண்ணில் ஹோட்டல்கள் படுவதில்லை. துணி விஷயத்திலும் இப்படித்தான். நாம் துணி வாங்க ஆசைப்பட்டால், மற்ற கடைகள் கண்ணில்படாமல் எங்கும் துணிக் கடைகளாகவே தெரியும். மனைவியுடன் திருப்தியாக வாழ்பவன் சிவப்பு விளக்குப் பகுதி வழியாகச் செல்ல நேர்ந்தாலும் அவன் கண்ணில் எதுவும் படாது. திருப்தியான தாம்பத்திய வாழ்க்கை அமையப் பெறாதவன் அவ்வழியே சென்றால் அவனது கவனத்தையும் மனத்தையும் சுண்டியிழுக்கும் காட்சிகளாகத் தெரியும்.

நீ எதை விரும்புகிறாயோ அதன்படியே உன் உலகம் நிர்மாணிக்கப்படுகிறது. ஆகவே நாம் எல்லோரும் ஒரே உலகில் வாழவில்லை. ஒவ்வொருவரும் தத்தம் உலகில் வசிக்கின்றனர். எத்தனை மனிதர்கள் உள்ளனரோ, எத்தனை மனங்கள் உள்ளனவோ, அத்தனை உலகங்கள் உண்டு! அந்தத் தனி-தனி உலகைப் பற்றித்தான் நாம் இப்பொழுது பேசிக் கொண்டிருக்கிறோம். இதை நினைவில் வை. இல்லாவிடில் குழப்பம் உண்டாகும்.

கிழக்கத்திய ஞானிகளின் பேச்சு குழப்பத்தை ஏற்படுத்தக்கூடும். 'உலகம் கற்பனையா? அவ்வாறு கருதி சாந்தநிலையை அடைந்தால் வீடுகள் சரிந்துவிடுமா? மரங்கள் காணாமல் போகுமா?' என்று நீ கேட்பாய். அப்படியானால் நீ சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. உலகம் என்பது இருக்கத்தான் செய்கிறது. ஆனால் நீ கற்பனை செய்த பகுதி மட்டும் காணாமல் போய்விடும். உண்மையான உலகம் முதல் தடவையாக உன் கண்ணில் படும். இதுவரை அது உன் மனத்தின் கற்பனை காரணமாகத் தெரியாமலிருந்தது-நிஜத்தில் இருந்த தபால்பெட்டி கண்ணில் படாமல் இருந்ததைப் போன்ற நிலைமை. நீ எதைக் காண ஆர்வம் கொண்டாயோ அதுதான் உனக்குக் கண்ணில்பட்டது. உனது ஆர்வம் படைப்பாற்றலைப் பெற்றிருக்கிறது. அந்தப் படைப்பாற்றல் காரணமாகக் கனவுகள் தோன்றுகின்றன; கற்பனை பிறக்கிறது.

உனது உலகமென்பது நீ காணும் கற்பனை. உன் பக்கத்து வீட்டுக்காரனின் உலகம் உன்னுடையதைப் போன்றே இருக்க

வேண்டியதில்லை. ஒரே பெஞ்சில் அருகருகே இருவர் அமர்ந்திருந் தாலும் அவர்கள் வெவ்வேறு உலகங்களில் சஞ்சரித்துக் கொண்டிருப்பார்கள்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் மனைவியுடன் திரைப்படம் பார்க்கச் சென்றார். ஆனால் இருவரும் படத்தைப் பார்க்காமல் சளசளவென்று உரையாடியபடியே இருந்தனர். சுற்றிலும் அமர்ந்து திரைப்படம் பார்த்தவர்களுக்கு இவர்களின் உரையாடல் தாங்க முடியாத தொந்தரவாகி விட்டது. முல்லாவின் இருக்கைக்குப் பின் இருக்கையில் இருந்த ஒருவர் எரிச்சலுடன், "இதென்ன இரண்டு கழுதைகள் மாற்றி-மாற்றிக் கத்துவதுபோல இருக்கிறதே! ஒரு நிமிஷம்கூட வாயை மூடமாட்டார்கள் போலுள்ளதே," என்று கத்தினார்.

முல்லாவுக்குக் கோபம் வந்துவிட்டது. அவர் திரும்பிப் பார்த்து, "யாரைக் கழுதைகள் கத்தற மாதிரி இருக்குன்னீங்க? எங்க ரெண்டு பேரையுமா சொல்றீங்க?" என்று பதிலுக்குக் கத்தினார்.

பின்னிருக்கையில் இருந்தவர் கிண்டலாக சமாதானப்படுத்தினார். "சே, சே, உங்களைப் போய் குறைசொல்வேனா? சினிமாவுல நடிக்கிற வங்க பேசற சத்தம் தாங்க முடியலை. அவங்க வாயை மூடிக்கிட்டா தானே நீங்க ரெண்டு பேரும் பேசற காதல் பேச்சை நாங்களும் கேட்க முடியும்கிற அர்த்தத்தில் நடிகர்களைத்தான் திட்டினேன்" என்றார் அவர்!

திரையரங்கில் திரைப்படம் ஓடிக்கொண்டிருக்கும் போதே கணவன்-மனைவி தமக்குள் பேசிக் கொண்டிருக்கக் கூடும். பின் இருக்கையில் இரு ஆண்கள். அவர்களை தம்பதிகளின் பேச்சு வெவ்வேறு விதமாகப் பாதிக்கலாம். இவர்களது அரட்டையால் திரையிலிருந்து ஒலிக்கும் சினிமா வசனம் சரியாகக் காதில் விழவில்லை என்று ஒருவர் எரிச்சலடையலாம். இன்னொருவரோ, சினிமா சப்தத்தில் இந்த தம்பதிகளின் காதல் பேச்சைக் கேட்க முடியவில்லையே என வருத்தப்படலாம். அருகருகே உட்கார்ந்துள்ள இந்த இரு ஆண்களின் கண்ணோட்டம் வெவ்வேறாக உள்ளது.

நாம் பார்க்கும் விதம் நமது பார்வையாகும்; அதன் விளைவே படைப்பாகும். உனக்கென்று குறிப்பிட்ட பார்வை இல்லாவிடில், உனது

உள்ளத்தின் உட்புறத்தை அது உள்ளவிதமாகவே பார்ப்பது சரளமாகிறது. அதன் மீது எதையும் பதிக்க அல்லது பொருத்த வாய்ப்பு இல்லாது போகிறது. உன் உள்ளத்தின் ப்ரொஜக்டர் (திரைப்படம் காட்டும் கருவி) இயங்கவில்லையானால் திரை காலியாக இருப்பதை நீ உணர்வாய். அந்தத் திரை உண்மையானது. திரையில் வண்ணச் சித்திரங்கள் தென்பட்டால், உன் உள்ளமாகிய ப்ரொஜக்டர் உன் கண்ணோட்டப்படி ஒளி பிம்பங்களை அனுப்புவதாக அர்த்தம்.

சாஸ்திரங்கள் இந்த உலகை ஒரு கற்பனை மாத்திரமே என்று கூறுவது உனக்குத் தெரியும். நீ ஞான விழிப்புப் பெற்றால், சமாதி நிலையை அடைவாய். அப்போது உலகம் முழுவதும் காணாமல் போய்விடும்; கனவுபோல் மறைந்துவிடும் என்று அர்த்தமில்லை. **உனது** உலகம் மறைந்து விடும் என்றே கூறப்படுகிறது.

இந்த உலகம் உனது அன்று. நீ பிறப்பதற்கு முன்பேகூட அது இருந்தது. நீ நிரந்தரமாக நீங்கிய பிறகும் அது இருக்கும். இந்த மரங்கள், பறவைகள், வானம் முதலியவை தொடர்ந்து நீடிக்கும். இவற்றின் மீது உனக்குத் தனி உரிமை கிடையாது. நீ தூங்கி விட்டாலும், விழித்துக் கொண்டாலும், தியானத்தில் ஈடுபடினும், ஆசைகளின் வசப்பட்டாலும் இந்த உலகம் இருக்கத்தான் செய்யும். இது அழியாது. ஆனால் இந்த உலகைத் திரைச்சீலை எனக் கருதி நீ கற்பனைகளாலான வலையொன்றை பின்னியுள்ளாய். இந்த வலையை அடையாளம் காண முயற்சிசெய். நீ தினமும் கொஞ்சம்-கொஞ்சமாக இந்த வலையைப் பின்னியதை யோசித்துப் பார்.

ஆகவே ஜனகர் சொல்வது: நான் என்னும் எல்லையற்ற பெருங்கடலில் இந்த உலகம் கற்பனை மட்டுமே. இவையெல்லாம் என் அலைகள். நான் முழுமையாக சாந்தமாகிவிட்டேன். நான் உருவமற்றவனாகி விட்டேன். கைவிடுவதற்கென்று எதுவும் இல்லை. நான் மட்டுமே மிஞ்சியுள்ளேன்.

'ஆத்மா புலனாசைகளில் இல்லை. அந்த ஆசைகள் எல்லையற்ற பரமாத்மாவிலும் இல்லை. இவ்வாறு நான் பற்றற்றவனாக உள்ளேன்; ஆசைகள் நீங்கியவனாக உள்ளேன். அத்தன்மைதான் என் புகலிடம்.' **(சுலோகம் 77)**

புலனாசைகள் என்னில் இல்லை. நான் புலனாசைகளில் இல்லை. எல்லாம் கடற்பரப்பிற்கு மேல் எழும் அலைகளின் விளையாட்டுப் போன்றது. அவை கடலின் ஆழம்வரை சென்று ஸ்பரிசிப்பதில்லை.

நீ கடலின் மேற்பரப்பில் எண்ணற்ற அலைகள் எழுவதைப் பார்க்கிறாய். நீச்சலடித்து நீரில் மூழ்கி எழுபவர்களைக் கேட்டுப்பார். கடலின் ஆழத்திலும் அலைகள் உண்டா என்று விசாரி. ஆழத்தில், அடிமட்டத்தில் அலைகள் எழுவதில்லை என்று அவர்கள் தெரிவிப் பார்கள். அங்கு தனிமை, சாந்தம், உருவமின்மை, ஆசையின்மை போன்றதொரு சூழ்நிலை பரவியிருக்கும். அத்தகைய நிலையே எனது புகலிடமாக அமையும். அதுவே எனது நிஜமான சொரூபமாக இருக்கும். பிறகு எதை விடுவது? எதை தியாகம் செய்வது? எதை அறிய வேண்டும்? இவ்வாறு நான் உணர்ந்தால் அதுவே ஞானம்.

'அஹோ, நான் ஆத்ம உணர்வானவன் (சைதன்யம்). இந்த உலகம் இந்திரஜாலம் போன்று பிரமையில் ஆழ்த்துகிறது. எதை விடுவது, எதை பிடிப்பது என்று யாரால் கற்பனை செய்ய முடியும்?' **(சுலோகம் 78)**

விடுதல்-பிடித்துக்கொள்ளல், லாபம்-நஷ்டம், நல்லது-கெட்டது, சுபம்-அசுபம்—இம்மாதிரியெல்லாம் கற்பனை செய்வது வீண், நடப்பதெல்லாம் அவரவர் இயற்கை குணத்தின்படியே நடைபெறு கிறது. ஆகவே நடைபெறுவதெல்லாம் அவரவர்க்கு சரியானதுதான். இதில் தேர்ந்தெடுக்கவோ, கைவிடவோ என்ன உள்ளது? ஜனகர் மொழிகின்ற மாற்றற்ற சுய உணர்வை (ஞானத்தைத்)தான் ஜே.கிருஷ்ண மூர்த்தியும் choiceless awareness என்று வழிமொழிகிறார்.

நான் சைதன்யம் மட்டுமே. அதாவது நான் சாட்சி (பார்வையாளன்) மாத்திரமே ஆவேன். உலகம் செப்பிடு வித்தை, இந்திரஜாலம், போன்றது. எல்லாம் மேலோட்டமானது. எதிலும் சத்தில்லை. இருப்பது போல் தோன்றுகின்ற எதுவும் உண்மையில் இல்லை. அடிப்படையில் கற்பனையான ஒன்றைச் சரியென்றோ, தவறென்றோ எப்படிக் கூறுவது? ஆகவே இந்தக் கற்பனையைக் கைவிட்டால் அதுவே ஞானம், அதுவே விழிப்பு, இதுவே ஐயத்தெளிவு.

போகமும் (அனுபவித்தலும்) ஒருவிதக் கற்பனை. தியாகம் இன்னொரு விதமான கற்பனை. போகத்திலிருந்து தப்பினவன் தியாகத்தில் மாட்டிக் கொள்கிறான். இது கிணற்றில் விழுந்து தப்பித்தவன் அகழியில் விழுவது போலாகும். சரியான பாதை இரண்டிற்கும் நடுவே செல்கிறது. நீ போகியும் ஆகவேண்டாம்; தியாகியும் ஆகவேண்டாம். நீ போகம்-தியாகம் இரண்டிலிருந்தும் தப்பிவிட்டால், இரண்டையும் கடந்துவிட்டால், இரண்டையும் சாட்சிபோல் பார்க்க முடிந்தால், அப்போது நீ நிஜமான சந்நியாசி ஆகிறாய்.

சம்சாரி சந்நியாசி இல்லை. தியாகியும் சந்நியாசி இல்லை. ஏனெனில் அவர்கள் இதுவா-அதுவா என்று தேர்ந்தெடுக்கின்றனர். போகி உலக இன்பங்களைத் தேர்ந்தெடுக்கிறான். அப்போதுதான் சுகம் கிடைக்குமென நம்புகிறான். தியாகி எல்லாவற்றையும் கைவிடுகிறான். அதன் மூலம் ஆனந்தம் எதிர்பார்க்கிறான். சந்நியாசி சொல்வது 'சுகம் என்பது ஏற்கெனவே இருக்கிறது. எதையும் கைவிட்டோ, எதையும் அடைந்தோ பெறுவதில்லை சுகம். தன்னில் லயித்தலே சுகம், அதுவே ஞானம்.'

இல்லாவிடில் நீ மாற்றி-மாற்றி வலிகளால் கஷ்டப்படுவாய். ஒரு தோள் சுமையை இன்னொரு தோள் மீது மாற்றுவாய். ஒரு நரகத்திலிருந்து இன்னொரு நரகத்திற்குச் செல்வாய். கீழே இறக்காமல் சுமக்கும்வரை உனக்குக் கஷ்டம்தான்.

**மு**ல்லா நஸ்ருத்தீனின் மகள் ஃபரீதாவிற்குத் திருமணம் நிச்சயிக்கப்பட்டது. வரப்போகும் மருமகனைப் பற்றி அவரும் அவர் மனைவியும் மதிப்பீட்டில் ஈடுபட்டிருந்தனர். முல்லாவின் மனைவி சொன்னாள்: "நாம் ஃபரீதாவிற்குப் பாத்திருக்கும் மாப்பிள்ளை நல்ல தேர்வுதான். ஆனாலும் அவரிடம் இரண்டு குறைகள் உள்ளன. முதல் மனைவி இறந்ததால் அவருக்கு இது இரண்டாவது திருமணம். ஃபரீதா இரண்டாம் தாரமாகப் போகிறாள் என்பது ஒரு குறை. இது பெரிய விஷயமில்லை. மாப்பிள்ளை இளைஞராகத்தான் காணப்படுகிறார். நல்ல நிறம், கம்பீரமான உயரம், நல்ல ஆரோக்கியம், முகப்பொலிவு எல்லாம் அமைந்துள்ளது. ஆனால் அவருக்குள்ள ஒரு குறை உறுத்துகிறது."

"அது என்ன குறை?"-முல்லா கேட்டார்.

மனைவி முறைத்தாள். "நீங்கள் மாப்பிள்ளையை சரியாகக் கவனித்துப் பார்க்கவில்லையா? அவர் சிரித்தால் அவருடைய நீளமான பற்கள் வெளியே தெரிந்து அவர் அசிங்கமாகத் தென்படுகிறார்."

முல்லா சமாதானப்படுத்தினார். "இதற்காக நீ ஏன் அலட்டிக் கொள்கிறாய்? முதலில் அவருக்கும் ஃபரீதாவுக்கும் கல்யாணம் நடந்து முடியட்டும். பிறகு அவருக்கு என்றுமே சிரிக்கும் வாய்ப்புக் கிடைக்காது!"

ஒரு மனைவி இறந்துபோனால் மனிதன் இன்னொரு திருமண பந்தத்தில் மாட்டிக் கொள்கிறான். சிக்கல்கள் இல்லாமல் மக்களால் வாழ முடிவதில்லை. ஒரு சிக்கல் தீர்ந்தால் நிம்மதியடையாமல் எதையோ பறிகொடுத்ததுபோல் நினைக்கிறோம். அந்த வெற்றிடத்தை நிரப்பப் புதிய சிக்கலை உண்டாக்குகிறோம். இப்படி வாழ்க்கை முழுதும் சிக்கல்களிலேயே மும்முரமாக இருக்கிறோம்.

திருமணம் செய்து கொள்ளாதவர்களில்தான் திருமணமானவர் களைவிட அதிகம் பைத்தியக்காரர்கள் இருப்பதாக மனத்தத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள். இது விசித்திரமான கண்டுபிடிப்பாக இருக்கிறது; தலைகீழாக இருக்கிறது. திருமணமானவர்களுக்குப் பைத் தியம் பிடித்தால் அதைப் புரிந்து கொள்ளலாம். அதிக எண்ணிக் கையில் பைத்தியம் பிடித்தாலும் நியாயமாகத்தான் தோன்றுகிறது.

அது மட்டுமல்ல, உலகெங்கும் திரட்டப்பட்ட புள்ளி விவரத்தின் அடிப்படையில் திருமணமாகாதவர்கள்தான் அதிக எண்ணிக்கையில் தற்கொலை செய்துகொள்வது தெரியவருகிறது. இதையும் நம்புவது சங்கடமாக உள்ளது. முதலில் ஏன் இப்படி என்று எனக்குப் புரியவில்லை. மனத்தத்துவ அறிஞர்கள் நீண்ட ஆராய்ச்சிக்குப் பிறகு கண்டுபிடித்தது என்னவெனில், திருமணமானவர்கள் மாற்றி-மாற்றிச் சிக்கல்களை எதிர்கொள்ள நேருவதால், பைத்தியம் பிடிக்கவோ, தற்கொலை பற்றி நினைக்கவோ நேரமே கிடைப்பதில்லை. மாறாக, திருமணமாகாதவர்களுக்குச் சிக்கல்கள் குறைவு என்பதால், யோசிக்க ஏராளமாக நேரம் கிடைத்து, தீவிர யோசனை காரணமாகப் பைத்தியம் பிடிக்கும் அபாயமுள்ளது.

மனத்தத்துவ வல்லுநர் ஒருவர் எந்த வகையான மனிதர்கள் அதிக அளவு சந்தோஷமாக இருக்கிறார்கள் என்று ஆராய்ந்தார். அந்த ஆராய்ச்சியின் முடிவும் விசித்திரமாக இருந்தது. யாருக்கு நாம் சுகமாக உள்ளோமா அல்லது துக்கப்படுகிறோமா என்று பிரித்துப் பார்க்கக்கூட நேரம் கிடைப்பதில்லையோ அவர்கள் அதிகபட்ச மகிழ்ச்சியுடன் விளங்குகிறார்கள். நேரம் கிடைத்துப் பொழுது போகாதவர்களுக்கு துக்க சிந்தனை துவங்கிவிடுகிறது.

அரசியல்வாதிகள் உற்சாகமாக, மகிழ்ச்சியாகத் தெரிவதை நீ கவனித்திருப்பாய். கழுத்தில் மாலைகள் ஊஞ்சலாட அவர்கள் அங்குமிங்கும் ஓடியபடி இருக்கிறார்கள். காரணம் என்ன? ஓரிடத்தில் உட்கார்ந்து தாங்கள் சுகமாக இருக்கிறோமா, துக்கப்படுகிறோமா என்று யோசித்துப் பார்க்க அவர்களுக்கு நேரம் கிடைப்பதில்லை. அதற்கெல்லாம் நேரம் எங்கே இருக்கிறது? செக்குமாடு போல் ஓய்வின்றி சுழன்றுகொண்டே இருக்கிறார்கள். அதிகார மையமான தில்லிக்குப் படையெடுக்கிறார்கள். அரசியல்வாதிகள் அங்கே கும்பலாக வருகிறார்கள். பரஸ்பரம் இடித்துத் தள்ளுகிறார்கள். ஒருவன் கையைப் பிடித்திழுக்கிறான். ஒருவன் காலை இடறிவிடுகிறான். ஒருவன் முன்னால் இழுக்கிறான். இன்னொருவன் பின்னுக்குத் தள்ளுகிறான். எங்கே என்ன நடக்கிறதெனப் புரியவில்லை. அதிகார மையம் நோக்கிப் பாய்கிறார்கள். தில்லி நகரத்தைச் சுற்றிப் பார்க்க அவர்களுக்கு நேரமில்லை.

மனத்தத்துவ நிபுணர்களின் கருத்துப்படி, எப்பொழுதும் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருப்பவர்களுக்குப் பைத்தியம் பிடிப்பது குறைவு. அவர்கள் தற்கொலை செய்து கொள்வதும் அரிது. தாங்கள் இருக்கிறோமா, இல்லையா என்ற நினைவுகூட இல்லாதபடி அவர்கள் வேலைகளில் மூழ்கியுள்ளனர். எனினும் அவர்களது அளவற்ற ஆற்றலும், அவர்களது முழு வாழ்க்கையும் பயனற்ற நடவடிக்கை களில் செலவாகி விடுவதை நாம் மறுக்க முடியாது.

ஆகவே சில நாள் மௌனமாகத் தனிமையில் இருந்தால் நல்லதெனச் சிலர் முயல்வார்கள். ஆனால் வேலை பரபரப்பு இல்லாமல் போவதால் அவர்கள் அமைதியை அனுபவிக்க மாட்டார்கள். சும்மா இருப்பதை அவர்கள் சித்திரவதையாக உணர்வார்கள்.

மக்களுக்குப் பொதுவாகத் துன்பம் ஏன் பிடிக்கிறது என்று பலர் என்னிடம் கேட்கின்றனர். மக்கள் வேலையின்றிச் சும்மா உட்கார்ந் திருப்பதைவிட துன்பப்படுவதை அதிகம் விரும்புகின்றனர். தலைவலி வந்தால்கூட போதும். தலை காலியாக இருப்பதைவிட கனமாக இருப்பது மேலானது என நினைக்கின்றனர். சிக்கல் ஏற்பட்டால் அதைப் போக்கிக் கொள்ள உபாயம் தோன்றும். பிறகு அந்த உபாயத்தைச் செயல்படுத்தும் பரபரப்பு ஆரம்பித்துவிடும்.

தான் சூன்யமாவதை ஏற்காத மனிதன் தனது ஆத்மாவரை சென்றடைய முடியாது. ஏனெனில் தன் ஆத்மாவரை செல்லும் பாதை தடையின்றி காலியாக இருக்க வேண்டும். அதையே தியானம் என்கிறோம். அவ்வழியில் செல்வதே சமாதி நிலை.

நீ மும்முரமாக இருப்பதைச் சிறிது நேரம் ஒதுக்கிவைத்து ஓர் ஆற்றின் கரையில் உட்கார்ந்துகொள். ஆறு ஓடுவதைப் பார்த்தபடி இரு. அப்போது எதுவும் யோசிக்காதே; எதுவும் செய்யாதே. அக்கணங்களில் உனக்குள்ளிருக்கும் சாட்சி விழித்துக் கொள்வான். ஆனால் சாட்சி மனப்பான்மை உண்டாவதற்கு முன்னால் நீ ஆள் அரவமற்ற சூன்யப் பாலைவனத்தின் வழியாகப் பயணிக்க நேரிடும். அப்பயணம்தான் அதன் விலை. அந்த விலையைக் கொடுக்க—சூன்யப் பயணத்தை மேற்கொள்ள—தயாராக இல்லாதவன் ஒருபோதும் சாட்சியாக முடியாது.

சிறிது இடைவெளி தேவை. நாம் எண்ணக் குவியலின், பொருட் குவியலின் நடுவில் நிற்பதால் நாம் இவற்றிலிருந்து வேறுபட்டவர்கள் என்று நமக்குத் தோன்றுவதில்லை. நாம் யாரென்று நம்மையே நாம் கண்டுகொள்ள சிறிது இடைவெளி, சிறிதளவு காலி இடம், கொஞ்சம் அவகாசம் தேவை. அப்போது உலகம் என்பது என்ன; நம் வாழ்க்கை எவ்வாறெல்லாம் பாதிக்கப்படுகிறது என்பதைக் கண்டுபிடிக்க முடிகிறது. கொஞ்சம்-கொஞ்சம் இடைவெளி ஏற்படுவது ஆத்ம அறிமுகத்திற்கு காரணமாக அமையும். அந்த இடைவெளிகளின்போது 'நான் ஆத்ம உணர்வு மட்டுமே' என்றும் நீ உணர்வாய். வேலைகளில் மும்முரமாக இருக்கும்போது ஆத்ம அறிவு கிடைக்காது. அச்சமயம் பொருட்கள் சம்பந்தப்பட்ட சிக்கல்களில், மற்றவர்களுடன் சம்பந்தப்பட்ட சிக்கல்களில் தத்தளித்தபடி இருப்பாய். நீ எதிலும் ஈடுபடாமல் இருக்கும்போது (unoccupied), யார்

சம்பந்தமான சிக்கலிலும் மாட்டிக் கொள்ளாதபோது, உனக்கு உன் நினைவு வரும். நீ ஆத்ம உணர்வு மாத்திரமே என்றும், இந்த உலகம் ஒரு மாயாஜாலம் என்றும் உனக்கு ஞாபகம் வரும்.

அந்த நிலையில் இதுவரை நீ பரபரப்பாக என்னென்னவோ செய்து கொண்டிருந்ததெல்லாம் குழந்தைத்தனமான விளையாட்டு என்பது புரியவரும். பணம் சம்பாதித்துக் குவிக்கிறாய். அதனால் என்ன பலன் கிடைக்கும்? மிகப் பெரிய பதவியை அடைந்துவிட்டாய். அதனால் என்ன பலன் கிடைக்கும்? வெற்றி பெற்றவர்களில் ஒருவனாயினும் உன்னைப்போல் தோல்வி கண்டவனை எங்கும் பார்க்க முடியாது. வெற்றிக்குப் பிறகு யோசித்தால் மகிழ்ச்சிக்குப் பதில் சுய இரக்கமே மனத்தில் தோன்றும். 'வாழ்க்கை ஓடிப்போய் விட்டதே, கையில் ஒன்றும் மிஞ்சவில்லையே' என்று தவிப்பாய்.

**சி**கந்தர் (அலெக்ஸாந்தர்)* இந்தியா மீது படையெடுத்து வந்து போரஸை (புருஷோத்தமனை) வெற்றிகொண்டார். போர் முடிந்ததும் கூடாரத்துக்குள் சென்றவர் அழ ஆரம்பித்தார். படைத் தலைவர்கள் கவலைப்பட்டனர். சிகந்தர் அழக்கூடியவர் என்று அவர்கள் நினைத்த தில்லை. அவர் அழுவதை எப்படித் தடுப்பது என்று குழம்பினர். பிறகு படைத்தலைவர் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கூடாரத்துக்குள் சென்றார். அவர் சிகந்தரைப் பார்த்து, "தாங்கள் ஏன் அழுகிறீர்கள்? வெற்றிபெற்ற சூழ்நிலையில் தங்களது சோகம் புரியவில்லையே. தோல்வியுற்றிருந்தால் அழுவதைப் புரிந்துகொள்ளலாம். போரஸ் அழுதால் நியாயம்தான். ஆனால் நாம் மகிழ்ந்து கொண்டாட வேண்டிய சமயமல்லவா இது?" எனப் பணிந்து கூறினார்.

சிகந்தர் நிமிர்ந்து பார்த்தார். "இனி உலகில் நான் ஜெயிப்பதற்கு யாரும் மிஞ்சியிருக்கவில்லையே. மேற்கொண்டு நான் செய்வதற்கு என்ன வேலை உள்ளது என்று விளங்காத காரணத்தால் அழுதேன்." என்றார்.

ஒருவேளை போரஸும் அழுதிருப்பார். அது குறித்துத் தகவல் இல்லை. போரஸுக்கு இன்னும் வேலை பாக்கியிருந்தது. குறைந்த

---

* மகா அலெக்ஸாந்தர் (கி.மு.356-323). இவர் கி.மு.326இல் இந்தியாவைத் தாக்கினார்.

பட்சம் சிகந்தரைத் தோற்கடிக்கும் கடமையாவது மிஞ்சியிருந்தது. ஆனால் சிகந்தர் கைவசம் வேலை இல்லாததால் அவர் நிலை குலைந்தார். அவரது பரபரப்பு முழுதும் முடிவுபெற்று விட்டது. சிகரத்தை அடைந்துவிட்டார். அதற்குமேல் போக ஒன்றுமில்லையே. இனி என்ன செய்வது?

இத்தகைய அச்சம் வெற்றிகண்ட மனிதர்கள் எல்லோருக்குமே ஏற்படுகிறது. செல்வம் திரட்டினர், உயர் பதவிகளைப் பெற்றனர், சமூக கௌரவம் கிடைத்தது. ஆனால் இதிலெல்லாம் ஈடுபட்டதால் வாழ மறந்துவிட்டனர். வாழ்க்கையை உணரும் வாய்ப்பு நழுவிவிட்டது. வெற்றிகளை அடைந்து இனி ஒன்றும் பாக்கியில்லை என்ற நிலை வரும் அதேசமயம் வாழ்க்கையில் வாழாமல் தோற்றுப் போனோமே என்னும் சோகமும் சூழ்ந்து கொள்ளும். தணல் அணைந்துவிட்டது. மிஞ்சியது சாம்பல் குவியல் மட்டுமே.

நீ அப்படி ஆகிவிடாதே. வேலையின்றி அமைதியாக இருப்பதற்கும், தனக்குள் மூழ்கிச் சிந்திக்கவும் நேரம் ஒதுக்கு. உலகை மற. உலகின் அலைவீச்சுகளிலிருந்து விலகு. மனத்தின் உள் அமைதியில், உள் ஆழத்தில் சிறிதாவது மூழ்கிவிடு. அப்போது ஜனகர் சொல்கின்ற இதுவே ஞானம் என்பதைப் புரிந்துகொள்வாய். நீ அடிப்படையில் ஆத்ம உணர்வு (சைதன்யம்) மட்டுமே என்பது புரிந்துபோகும். இதுவே முக்தி. நீ பல்வேறு வேலைகளில் சிக்கியிருக்கும்போது உனக்குள்ளேயே பல பிரிவுகள், பிளவுகள் தோன்றுகின்றன. நீ சாட்சி மனப்பான்மையைப் பெற்றதும் எல்லாப் பிளவுகளும் மறைந்து நீ முழுமை பெற்றுவிடுவாய்.

ஒவ்வொருவனும் தன்னுடைய செயல்களுக்கேற்ற விளைவை அனுபவிக்கிறான். குடும்பஸ்தர்கள், அநாதைகள் ஆகிய எல்லோருக்கும் சூரியன் ஒரே மாதிரி பிரகாசிப்பதுபோல் பரமாத்மாவும் பாரபட்சமற்றவர். நீ உன்னுடைய செயல்களால் கட்டப்பட்டிருக்கிறாய். அதற்கேற்ற பரிசோ, தண்டனையோ பரமாத்மா வழங்குகிறார்.

உன் செயல்களை ஒட்டுமொத்தமாக ஒரு பாத்திரம் எனலாம். ஒவ்வொருவரிடமும் அப்படி பாத்திரம் உள்ளது. சிறிதும் பெரிதுமாக, அசுத்தமானதும் அழகானதுமாக அந்த பாத்திரங்கள் உள்ளன. பாவத்தால் நிறைந்த பாத்திரமும் உண்டு. புண்ணியத்தால் நிரம்பிய கலனும் உண்டு. கடவுள் எல்லோரையும் சமமாக நடத்தி

அவரவர்க்குரிய பலனை வழங்குகிறார். நீ பாத்திரத்தை அகற்று; கர்மத்தை மற; கர்த்தாவாகச் செயல்புரியும் உன்னை மற. நீ சாட்சி என உணர். உடனே நீ எல்லையற்ற மாகடல் என்பதையும், பரமாத்மாவின் அருள் உன்மீது பொழிவதையும் அறிந்துகொள்வாய். அப்போது, ஜனகர் முன்பு கூறியதுபோல், நீ உன் காலையே தொட்டு வணங்க வேண்டுமென்றும், உனக்கே நமஸ்காரம் சொல்லிக் கொள்ள வேண்டுமென்றும் உன் மனத்தில் தோன்றும்.

உன் உள்ளத்தினுள் தெய்வமழை பொழியவில்லை எனில் உனது அன்பு (பக்தி) காய் நிலையில் உள்ளதென்றும், உன் உள்ளுணர்வுகள் பக்குவப்படவில்லை என்றும் தெரிந்துகொள். கடவுளின் அருள் மழை எல்லோரை நோக்கியும் பொழிகிறது. அவர் பாரபட்சம் காட்டுவதில்லை. ஆனால் அது கிடைக்கவில்லைபோல் தோன்றினால், நீ சைதன்ய (ஆத்ம உணர்வு) நிலையை இன்னும் அடையவில்லை என்றுதான் பொருள்.

கர்மங்களின் விளைவுகளிலிருந்து தப்பினால் அந்த நிலையை அடையலாம். தப்பிக்க இரண்டு வழிகள் உள்ளன. நீ செய்த கெட்ட செயல்களை நல்லவையாக மாற்று. அசுப கர்மங்களை சுபமானவை யாக்கு. பாவத்தை அகற்று. புண்ணியத்தை அமர்த்து. ஆனால் இது மிகவும் நீண்ட வழியாகும். இம்முறையில் வெற்றி பெறுவது சிரமம். எதனால் எனில் எத்தனையோ பிறவிகளில் செய்த கர்மங்களின் விளைவுகளை ஒரே பிறவியில் நீக்கிக் கொள்வது சாத்தியமில்லை. இந்த முயற்சி உன்னையே ஏமாற்றிக் கொள்வது போன்றது.

இன்னொரு வழியும் உள்ளது. உண்மையில் அது ஒன்றுதான் வழி. நீ கர்த்தாவாக இராதே. எல்லாச் செயல்களிலிருந்தும் விலகிநின்று சாட்சியாகிவிடு. நீ இப்பொழுதே, இந்த நிமிடமே சாட்சியாகிவிட முடியும்.

அஷ்டாவக்ரரின் மகாகீதையின் சாரமும் இதுவே. நீ மட்டும் விரும்பினால் உடனுக்குடன் கரையிலேறி அமர்ந்துவிட முடியும். உடனே சாட்சியாகிவிட முடியும். மாறாக, நீ கெட்ட கர்மங்களை நல்லவையாக மாற்ற முயன்றால் புதிய சிக்கல்களில் அகப்பட்டுக் கொள்வாய். ஏனெனில் ஒவ்வொரு பாவத்துடன் சிறிதளவு புண்ணியமும் ஒட்டிக் கொண்டிருக்கும். ஒவ்வொரு புண்ணியச் செயலின் பின்னணியிலும் ஏதாவது பாவம் இருக்கும்.

யோசித்துப் பார் பாவம் கலவாத புண்ணியச் செயல் எதுவும் உன்னால் செய்ய முடியுமா? நீ பெரிய அளவில் தானம் செய்ய, நன்கொடை வழங்க விரும்புகிறாய். அப்படியானால் நீ பெரிய அளவில் சம்பாதிக்க வேண்டும். உழைப்பால் ஓரளவே சம்பாதிக் கலாம். ஆனால் பாவம் கலக்காமல் பெரிய அளவில் சம்பாதிப்பது சாத்தியப்படுமா?

நீ கோயில் கட்ட திட்டமிடுகிறாய். ஆனால் பல குடிசைகளை அழித்தால்தானே இடம் கிடைக்கும். இது ஒருவகையான சுரண்டல் ஆகும். கோயில் கட்டுவது புண்ணியச் செயலென்றால் அங்கே வசித்தவர்களை விரட்டிய பாவமும் சேர்ந்து விடுகிறதே. நீ எந்த நல்லது செய்தாலும் அதனுடன் கெடுதலும் சேர்ந்திருக்கும். நீ கெடுதலாக எதையும் செய்கையில் அதில் நல்ல அம்சமும் கலந்திருக்கும். அதனால்தான் கெட்டவன் ஏதாவது தப்புச் செய்கிறான். அதன் மூலம் நல்லது விளையாதெனில் அவன் எதற்காகக் கெடுதல் செய்யப் போகிறான்?

திருடன் திருடுகிறான். ஏன் என்று விசாரித்தால், தன் குழந் தைக்கு ஏதோ நோய், மருந்துக்கும் சிகிச்சைக்கும் பணம் தேவைப்படு கிறது என்பான். ஆம், குழந்தைக்கு மருந்து வாங்குவது அவசியமான கடமை. உயிர் மிகவும் விலை உயர்ந்தது அல்லவா? இதை மன்னிக் கலாம். நீ தானம் செய்வதற்காகத் தப்பான வழியில் சம்பாதிப்பது கட்டாயமான தேவையில்லை. உன் குற்றம் மன்னிக்க முடியாதது.

**நா**கார்ஜுனர்* பெயர் கேள்விப்பட்டிருப்பாய். அவர் தத்துவஞானி, சிந்தனையாளர் என்பதுடன் வேதியியல் வல்லுநராகவும் திகழ்ந்தார். அற்புதமான ஞானி. இந்தியாவில் அவரைப்போல் இன்னொருவர் தோன்றியதில்லை. அவருக்கு அடுத்த இடத்தைத்தான் ஆதிசங்கராச்சாரியாருக்கு (சுமாராக கி.பி.700-750) தரலாம். ஏனெனில் சங்கரரின் உபதேசங்களில் நாகார்ஜுனரின் பிரதிபலிப்பு உள்ளது நாகார்ஜுனர் பல அரிய விஷயங்கள் கூறியுள்ளார்.

வேதியியல் ஆராய்ச்சிகளும் அவர் செய்து வந்தார். ஒரு சமயம் அவருக்கு உதவியாளர் ஒருவர் தேவைப்பட்டார். இரண்டு பேர்

* நாகார்ஜுனர் (கி.பி.150-250) துறவி மற்றும் ஞானி. புத்த சமயத்தின் மாத்யமிகா பிரிவை நிறுவினார். சூன்யவாதம் (வெறுமைக் கோட்பாடு) என்பதைப் பரப்பினார்.

விண்ணப்பித்தனர். நாகார்ஜுனர் அவர்களுக்கு ஒரு பரீட்சை வைத்தார். சில ரசாயனப் பொருட்களைத் தந்தார். அவற்றைக் கொண்டு ஒரு கலவை தயாரித்து மறுநாள் கொண்டுவரச் சொன்னார்.

மறுநாள் இருவரும் திரும்பிவந்து நாகார்ஜுனரைச் சந்தித்தனர். ஒருவன் கலவை தயாரித்து எடுத்து வந்திருந்தான். மற்றவன் ரசாயன மூலப்பொருட்களை அப்படியே கொண்டுவந்திருந்தான். இரண்டாமவன் ஏன் கலவை எதுவும் தயாரிக்கவில்லை என்று நாகார்ஜுனர் வினவினார். அவன் விளக்கினான்:

"நேற்று நான் திரும்பிப்போகையில் வழியில் ஒரு பிச்சைக்காரனைப் பார்த்தேன். அவன் இறக்கும் தறுவாயில் இருந்ததால் அவனுக்கு சேவை செய்வதில் ஈடுபட்டேன். அவனைக் காப்பாற்ற ஒரு முழுநாள் தேவைப்பட்டது. நீங்கள் சொன்ன ரசாயனக் கலவை தயாரிக்கவும் 24 மணி நேரம் தேவைப்படும். என்னை மன்னித்து விடுங்கள். எனக்குப் பதவி கிடைக்காமல் போகும் ஆபத்து இருந்தும் வேறு வழி தெரியவில்லை. ஆனால் என் முயற்சியால் பிச்சைக்காரன் உயிர் பிழைத்துவிட்டதற்காக நான் மகிழ்கிறேன். இதனால்தான் உங்களுக்கு சேவை செய்யும் வாய்ப்பை இழந்துவிட்டேன்."

ஆனால் நாகார்ஜுனர் அவனைத்தான் உதவியாளராக நியமித்தார். மற்ற உதவியாளர்கள் ஆச்சரியப்பட்டார்கள். "இதென்ன இப்படிச் செய்கிறீர்களே, ரசாயனக் கலவை தயாரித்தவனை அல்லவா தேர்ந்தெடுத்திருக்க வேண்டும்," என்று சுட்டிக்காட்டினர்.

நாகார்ஜுனர் பதிலளித்தார்: "ஒரு மனிதனின் உயிரின் மதிப்பு ரசாயனத்தைவிட பல மடங்கு அதிகமானது. இது இரண்டாம் விண்ணப்பதாரருக்குத் தெரிந்திருக்கிறது. எது முக்கியம், எது இரண்டாம் பட்சமானது என்ற வேறுபாட்டை அவன் அறிந்துள்ளான்.

திருடனின் குழந்தை இறக்கும் நிலையில் உள்ளது. செலவுக்கு அவன் திருடியாக வேண்டும். திருடுவது பாவம் என்று நீ உபதேசித்தால் அதை அவன் லட்சியம் செய்ய முடியுமா? தனி மனிதனின் சொத்துக்கு மரியாதை தரவேண்டும் என்று அவன் பின்வாங்க முடியுமா? 'நான் திருடி, சிறைக்குப் போனாலும் சரி. என் குழந்தை பிழைத்தால் போதும்' என்றுதானே அவன் சொல்லுவான்.

இவ்வாறு பாவத்திலும் சிறிது புண்ணியமுண்டு. இரண்டு திருடர்கள் கூட்டாகச் சேர்ந்து திருடினாலும் ஒருவரையொருவர் ஏமாற்ற மாட்டார்கள். அவர்களிடமும் நேர்மை உண்டு. நேர்மையே நல்ல கொள்கை என்று அவர்கள் நம்புகிறார்கள் (Honesty is the best policy). மற்றவர்களிடம் நேர்மையாக நடக்காவிடிலும் திருடர்கள் தங்களுக்குள் நம்பத் தகுந்தவர்களாக உள்ளனர். அந்த அளவிற்கு அவர்களுக்குப் புண்ணியம் கிடைத்து விடுகிறது. புண்ணியம் சிறிதளவாவது கலவாத பாவம் எதையும் உன்னால் கண்டுபிடிக்க முடியாது.

ஒரு திருடன் ஒருமுறை அகப்பட்டுக் கொண்டான். நீதிமன்றத்தில் ஆஜர் செய்யப்பட்டான். வழக்கை விசாரித்த நீதிபதிக்கு வியப்பாகிவிட்டது. "நீ அந்த சூப்பர் மார்க்கெட்டில் ஒரே இரவில் ஒன்பது தடவை நுழைந்தாயாமே. அது ஏன்?" என்று காரணம் கேட்டார்.

"எஜமான், வேற என்ன செய்யறது? பெரிய கடையாச்சே. நான் ஒண்டியாளே சுற்றி-சுற்றி கொள்ளையடிக்க வேண்டியிருந்தது." என்று திருடன் அப்பாவியாகப் பதில் சொன்னான்.

"ஏன், உனக்கு கூட்டாளி யாரும் கிடைக்கலியா?"

"எசமான், காலம் ரொம்ப கெட்டுப் போச்சுங்க. யாரை கூட்டாளியா சேர்த்துக்கிறது? எவனை சேர்த்துக்கிட்டாலும் ஏமாத்தி துரோகம் பண்ணிடுவானுங்க, ஐயா."

காலம் கெட்டுவிட்டது என்று திருடன்கூட சொல்கிறான். இந்த விஷயம் நமக்கும் தெரியும். யாரைக் கூட்டாளியாக, நண்பனாகச் சேர்த்துக் கொள்வது?

திருடுவதற்கும் நல்ல காலம் வேண்டும். யாரையாவது ஏமாற்றவும் சாதகமான காலம் வேண்டும். யாரை ஏமாற்றவுள்ளோமோ அவர் நம்மை நம்பும் அளவிற்கு நல்ல தன்மை பெற்றிருக்க வேண்டும்.

பாவமும் புண்ணியமும் ஒன்றுடனொன்று பின்னிக் கிடக்கின்றன. நீ பாவம் செய்யாமல் புண்ணியமோ, புண்ணியம் கலக்காமல் பாவமோ செய்ய முடியாது.

**தோழனாகத் தழுவும் சுகம்**
**திருடவும் செய்யும் உன்னிடம்**

**உள்ளத்து ஆனந்த இல்லத்தில்**
**சோகமும் ஒட்டி வசிப்பதுண்டு**

**எழுதப்பட்ட உன் தலைவிதியை**
**எதிர்த்துக் குறை கூறுபவனே!**

**நிலவுடன் இரவும் சேர்ந்தே இருக்கும்**
**என்பதை நீ அறியாயோ?**

இவையெல்லாம் ஒன்றுடனொன்று இணைந்துள்ளன. இரண்டில் ஒன்றிடமிருந்து நீ தப்ப விரும்பினால், அதிக பட்சமாக, நீ அதை மறைக்கத்தான் முடியுமே தவிர அதனிடமிருந்து தப்பித்து ஓடிவிட முடியாது.

பாவமும் புண்ணியமும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள். அதன் ஒரு பக்கத்தை மட்டும் பிடித்துவைத்துக் கொள்ள முடியாது. செலவழிக்கும்போது முழு நாணயத்தையுமே தர நேரிடும்.

ஆகவே அஷ்டாவக்ரருக்கும் ஜனகருக்கும் இடையே நடைபெறுவது புரட்சிகரமான உரையாடல் ஆகும். சாட்சி மனோபாவத்தைப் பெறவேண்டும் என்பது அதன் மையக் கருத்து. நீ பாவத்தை ஏற்கவோ, கைவிடவோ வேண்டாம். நீ புண்ணியத்தை ஏற்கவோ, கைவிடவோ வேண்டாம். பிடித்தல்-விடுதல் இரண்டையும் கைவிட்டுத் தொலைவில் நில். பார்வையாளனாக மட்டும் இரு. சாட்சியாகிவிடு.

ஆகவே ஜனகர் சொல்கிறார்: எது சரி, எது தப்பு என்று என்னால் கற்பனைகூட செய்ய முடியவில்லை. இப்பொழுது எல்லாம் சரி, எல்லாம் தப்பு என்றும் கூற முடியவில்லை. நான் தர்க்க வலையிலிருந்து வெளியேவந்து நிற்கிறேன். நான் ஆத்ம உணர்வு மட்டுமே, சாட்சி மட்டுமே ஆவேன். 'தியாகம் செய்' என்று யாரைப் பார்த்து உபதேசிக்கிறீர்கள்? 'ஞானத்தைத் தேடிப் பெறு' என்று யாருக்குக் கட்டளையிடுகிறீர்கள்? நான் சாட்சி மாத்திரமே என்பதை அறிந்துகொண்டேன். ஞானம் என்பது இதுதானே?

**ஹரி ஓம்தத்ஸத்!**

## முதல் கேள்வி:

> **எல்லா லட்சியங்களும் தவறு என்று நீங்கள் சொன்னீர்கள். ஆனால் நமது சேருமிடத்தை அடைய, நமக்கு விதிக்கப்பட்டதைப் பெற முயலும் லட்சியமும் தவறானதா?**

**ல**ட்சியம் என்பதே தவறானது. எதைப் பெறுவதற்கான லட்சியம் என்பது முக்கியமில்லை. லட்சியம் பூர்த்தியாவது எதிர்காலத்தில்தான். நாளையே நிறைவேறும் என்றாலும் அது எதிர்காலம்தான். இன்று கைவசமில்லை, நாளைக்கு ஒத்திப்போடப்பட்டுள்ளது என்று பொருள்.

உனது தலைவிதி என்பதை உனது லட்சியம் என நினைக்க வேண்டியதில்லை. அது எப்படியும் நடைபெறத்தான் போகிறது. அது ஏற்கெனவே நிச்சயிக்கப்பட்டுதான் இருக்கிறது.

உனது சுபாவம், இயற்கை குணம், எதுவோ அதுவே உன் தலைவிதி. இந்த கணம் உன் கைவசம் முழுமையாக உள்ளது எதுவோ அதுவே உனக்கு விதிக்கப்பட்டிருக்கிறது. எல்லா லட்சியங்களும் விதிக்கு எதிரானவை. ஏனெனில் இக்கணத்துடன் அவை சம்பந்தப்பட வில்லை.

லட்சியம் என்பதன் அர்த்தம் என்ன? எதுவாக நீ ஆவது முடியாதோ, கடினமோ, அதுவாக நீ ஆசைப்படுவதுதான் லட்சியம் என்பது. தாமரைப்பூ ரோஜா ஆக முடியாது. அவ்வாறு ஆக விரும்பினால் அது ஒரு லட்சியம் எனலாம். தாமரை, தாமரையாக விரும்புகிறது என்றால் அது லட்சியமன்று, பைத்தியக்கார எண்ணம்.

விதைப் பருவத்திலிருந்தே நீ யாராக உள்ளாயோ அது நீதான். அதிலிருந்து நீ வேறுபட்டவனாக இருக்க வாய்ப்பு இல்லை.

ஆகவே விதியுடன், அதாவது சுபாவத்துடன், லட்சியத்தைச் சேர்த்துப் பார்ப்பது முரண்பாடு ஆகும். ஆனால் லட்சிய வேட்கை நமது மனத்தை மிகவும் பாதித்துள்ளது. நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக நமக்கு போதிக்கப்படுவது என்ன? நாம் இப்படி ஆக வேண்டும்; இந்த நிலையை அடைய வேண்டும்; இந்தப் பொருளைப் பெற வேண்டும் என்றெல்லாம் நாம் தூண்டி விடப்படுகிறோம். நாம் விரைந்து ஓட, போட்டி போட, ஆசைப்பட எல்லையற்ற வடிவங்களில் கற்றுத் தரப்படுகிறது.

அஷ்டாவக்ரர் செய்யும் அறிவிப்பின்படி, எதுவாக நீ ஆக வேண்டுமென உள்ளதோ அதுவாக நீ ஆகித்தான் இருக்கிறாய். நீ புதிதாகக் குறிப்பிட்ட விதமாக உருவாக வேண்டியதில்லை. இப்போதே உனக்குத் தேவையான எல்லாம் உன்னிடம் இருக்கிறது. நீ ஒரு நொடிகூட தள்ளிப்போட எந்தத் தேவையும் இல்லை. ஒரு நொடி தள்ளிப் போட்டால்கூட நீ பிரமைவசப்படுவாய். ஆகவே உடனே வாழ ஆரம்பி, நீ ஏற்கெனவே பூரணமானவனாகத்தான் உள்ளாய்.

அனைத்து ஆன்மிகமும் அடிப்படையில் விடுக்கும் செய்தி என்னவெனில், நீ எப்படி உள்ளாயோ அதன்படி உன்வரையில் நீ ஏற்கெனவே பரிபூரணமானவன்தான். கடவுள் நீ இன்னும் எவ்வாறோ ஆக வேண்டுமென நினைத்து எதையும் பாக்கி வைக்கவில்லை. உன் லட்சியப்படி உன் வளர்ச்சியில் எதுவும் மிச்சமிருந்தால், உனக்கு ஏற்கெனவே அமைந்துவிட்ட வரம்பை மீறி, உன்னால் எதுவும் செய்ய முடியாது. கடவுள் உனக்கு இதுவே போதும் என்று முடிவுசெய்த பிறகு, அவரை மீறி, உன்னை நீ எவ்வாறு மேம்படுத்திக் கொள்ள முடியும்? அப்படி உனக்கு மமதை இருந்தால் அதை விட்டொழி. உனக்கு எந்த அளவிற்கு நடைபெற முடியுமோ அது முடிந்துபோன கதை பரமாத்மா தன்னளவில் உன்னை தயாரித்து அனுப்பிவிட்டார். அடுத்து, நீ வாழ ஆரம்பி, தள்ளிப் போடாதே.

ஆன்மிகம் இக்கணமே உத்சவ காலம், கொண்டாடும் சமயம் என அறிவிக்கிறது. நீ புதியதாக ஏற்பாடு செய்வதைத் தடுக்கிறது. தயாரிப்புகளில் ஈடுபட்டிருப்பவர் (அமைப்பாளர்) விழாவைக் கண்டுகளிப்பதில்லை. அவர் எப்பொழுதும் கால அட்டவணையில் (டைம்டேபிளில்) ஆழ்ந்திருப்பார். ரயில் எதிரே நின்று கொண்டிருந்

தாலும் அதை அவர் கவனிப்பதில்லை. பெட்டி-படுக்கை கட்டியபடி இருப்பார். ஆனால் பயணத்தைத் தொடங்குவதில்லை. வீடுகட்ட வரைபடங்கள் தயாரிக்கிறார். ஒன்றையாவது கட்டி அதில் வசிப்ப தில்லை. பணம் சம்பாதிக்க தயாரிப்புகள் செய்கிறார்; சம்பாதிப்பதும் உண்டு. ஆனால் அனுபவிப்பதில்லை.

இவ்வாறு தயாரிப்புகளிலேயே ஈடுபடுபவர்களைக் கோடிக் கணக்கில் நாலா பக்கமும் காணலாம். அவர்கள் பெருங்கூட்டமாக இருக்கிறார்கள். தங்கள் தயாரிப்பின் மூலம் 'நாளை அனுபவிப்போம், நாளை மறுநாள் அனுபவிப்போம்' என்று சொல்லித் திரிகிறார்கள். அவர்களில் இல்லறத்தாரும் உண்டு, துறவியரும் உண்டு. நீ வணங்கும் மகாத்மாக்கள் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? 'இந்த உலகத்தில் என்ன சாரம் இருக்கிறது? சுவர்க்கத்தில் இன்பமாக இருப்போம்,' என்கிறார்கள். சாதாரண மனிதன் எதையும் அனுபவிப்பதை மரணத்திற்கு முன்பே முடித்துக் கொள்ள விரும்புகிறான். சந்நியாசியின் தயாரிப்பு மரணத்திற்கு அப்பாலுள்ளதை எதிர்பார்க்கிறது. 'இறந்தபின் அனுபவிப்போம். இங்கே அனுபவிக்க என்ன உள்ளது? எல்லாம் நொடியில் அழிபவை. இங்கே வேதனையும் கவலையுமே கொட்டிக் கிடக்கிறது. எனவே மரணத்திற்கு அப்பாலுள்ள நிலைக்கு இப்போதே தயாரிக்க வேண்டும்,' என்கிறார் சந்நியாசி.

நாளையப் பொழுது என்பது வருவதில்லை என்பதை நீ கவனித்திருப்பாய். அது ஒருபோதும் வந்ததில்லை. ஆகவே சுவர்க்கம் ஒருபோதும் வருவதில்லை, வந்ததுமில்லை என்று நான் சொல்கிறேன். நாளைய காலத்தின் - எதிர்காலத்தின் - நீட்டிப்பிற்கு அப்பால்தான் சுவர்க்கம் இருக்க முடியும். நாளை என்பதே வராத நிலையில் சுவர்க்கம் எப்படி வரும்?

ஒருவன் நாளைய தினத்தில் சுவர்க்கத்தை எதிர்பார்ப்பானாகில் அவனது இன்றைய தினம் நரகமாக இருக்கும் என்பது உறுதி. நாளை என்பது வரப்போவதில்லை. அது வந்ததும் அது 'இன்று' ஆகிவிடும். நாளைய தினத்தை நோக்கியே பார்வையைச் செலுத்துவது தவறான பழக்கம். இதனால் இன்றைய வாழ்வைக் கோட்டை விடுவாய். நாளைய தினம் வரும்போது 'இன்று' ஆகிவிடுவதால் உன் பார்வை அதற்கு மறுநாளை நோக்கிச் செல்லும். இவ்வாறு நீ தினமும்

வஞ்சிக்கப்படுவாய். கையில் கிடைத்ததையும் அனுபவிக்காது போய்விடுவாய். கைமேல் இருப்பதைப் பார்க்கத் தவறிவிடுவாய். கண்ணெதிரே நடைபெறும் நடனத்தில் கலந்துகொள்ள மறந்து விடுவாய்.

ஆன்மிகம் அறிவிப்பதும் இதுவே. காலம் என்ற வலையில் சிக்கிக் கொள்ளாதே. காலம் என்பது மனம் பின்னும் மாயவலை. நீ வாழும் நேரம் இது. அதில் குதி, துள்ளு. தயாரிப்பு எப்பொழுதும் சூழ்நிலை பூரணமாக உள்ளது. உன் பங்குதான் பாக்கி. கூத்தாடு. 'நாளைக்கு ஆடுவேன்' என்று சொல்லாதே. 'முற்றம் கோணலாக இருக்கும்போது எப்படி ஆடுவது?' என்று கேட்காதே. ஆடத் தெரிந்த வனால் கோணல் முற்றத்திலும் நன்கு ஆட முடியும். ஆடத் தெரியாதவனுக்குச் சீரான, சமசதுரமான முற்றத்திலும் ஆட வராது.

**மு**ல்லா நஸ்ருத்தீனுக்குக் கண்ணில் கோளாறு. கண் புரை. அதற்கு வைத்தியம் பார்க்கச் சென்றார். டாக்டர் சோதனை செய்யும் போது முல்லா அவரிடம் "கண்ணுக்கு ஆபரேஷன் செய்யப்பட்ட பிறகு என்னால் எழுத-படிக்க முடியுமா?" என்று விசாரித்தார். டாக்டர் சொன்னார், "நிச்சயமாக உங்களால் முடியும். புரையை அகற்றிவிட்டால் போதும்."

"அது எப்படி சாத்தியம், டாக்டர்? என்னால் நம்ப முடிய வில்லையே," என்றார் முல்லா.

"இதில் சந்தேகப்பட என்ன உள்ளது?" என்று டாக்டர் குழப்பத்துடன் கேட்டார்.

"நான் ஏன் கேட்டேன் என்றால் எனக்கு எழுதப் படிக்கவே தெரியாதே," என்றார் முல்லா. டாக்டர் மயங்கிவிழாத குறைதான்.

எழுத்தறிவு இல்லாத ஒருவனுக்குக் கண் ஆபரேஷன் செய்வதால் படிக்க வந்துவிடாது. இங்கு ஆடத் தெரியாவிட்டால் சுவர்க்கத்திலும் ஆட முடியாமல் அழுவாய். சுவர்க்கத்திற்கு அப்புறம் ஏதாவது உள்ளதா என்று புராணங்களில் தேட ஆரம்பித்துவிடுவாய். சுவர்க்கத்தில் ஒரு சுவாரசியமும் இல்லை என்பாய். ஏனெனில் நீயாக ஒரு மனக்கணக்குப் போட்டு வைத்துள்ளாய். இருக்கும் இடத்தில் எதுவும் பிரயோஜனமில்லை. சாவுக்களைதான் இங்கே. எப்போதும் வேறு எங்கேயோ வாழ்வில் இன்பமழை பொழிந்து கொண்டிருக்கிறது.

உனது இந்தக் கண்ணோட்டம் காரணமாக, நீ சுவர்க்கத்திற்குப் போனாலும் அதை நரகமாக மாற்றிவிடுவாய். எதையும் நரகமாக மாற்றிவிடும் கலையில் நீ தேர்ச்சி பெற்றுள்ளாய். அக்கலையின் அடிப்படைத் தத்துவம் என்னவெனில், 'இன்றைய தினத்தைப் பார்க் காதே. நாளைய தினத்தை நம்பு. நாளை எல்லாம் நடைபெற்றுவிடும். இன்று பொறுத்துக் கொள். இன்று அழுது முடித்துவிடு. நாளைக்குச் சிரிக்கலாம். இன்று கண்ணீர், ஆனால் நாளை புன்முறுவல்.'

ஆனால் நாளை என்பது வரும்பொழுது உன் அழுகையும் தொடரும். ஏனெனில் அழுவதில் நீ பயிற்சி பெற்றுவிட்டாய். நாளை-நாளை என்று ஒவ்வொரு இன்றைய தினத்திலும் அழுதாய். கண்கள் வீங்கிவிட்டன. நாளை என்பது உன் வீட்டு வாசலுக்கு வரும்போது அழும் பழக்கத்தைச் சட்டென்று நிறுத்திவிட முடியாதே. ஆகவே நாளையும் தொடர்ந்து அழுவாய். இப்படியே பிறவிகள்தோறும் அழுதபடி இரு. 'நாளை' என்பதை லட்சியமாகக் கொண்டதால் இப்படியெல்லாம் நேர்கிறது.

'லட்சியத்திலிருந்து விடுதலை பெறு' என்பதே என் ஆலோசனை. ஆனால் உனது மனமும் அகங்காரமும் உன்னைத் தடுக்கிறது. இந்நிலையில் லட்சியம் மூலம் நீ என்றும் முழுமை பெற முடியாது. உன்வரையில் நீ ஏற்கெனவே முழுமையானவன்தான். பரமாத்மா பூரணமானவர் என்பதால் அவரது படைப்பு அரைகுறை யாக இருக்காது. ஆனால் ஒவ்வொரு படைப்பிற்கும் அவர் வெவ்வேறு பூரணத் தன்மை நிச்சயித்துள்ளார். உனக்கும் ஓர் எல்லை வகுத்துத்தான் படைத்துள்ளார். அந்த எல்லை வரையிலும் நீ முழுமையானவன்தான். கடவுள் உன்னை அரைகுறையாக சிருஷ்டித்து விட்டதாக நீ கருதினால் இதற்கு மேலும் நீ பூரணம் பெறுவதற்கு வாய்ப்பில்லை.

கணக்குப் போட்டுப் பார். பூரணத்திலிருந்து அபூரணம் தோன்றக் கூடும் என நீ நினைப்பதே தவறு. பூரணத்திலிருந்து பூரணமே தோன்ற முடியும். பூரணத்திலிருந்து பூரணத்தைக் கழித்தால் மிஞ்சுவது பூரணமே என்கிறது உபநிடதம்.* பூரணத்திலிருந்து நீ அபூரணத்தைக் கொண்டுவர முடியாது. அந்த அபூரணத்தை நீ

* பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாஸிஷ்யதே (ஈஸாவாஸ்ய உபநிடதம்). இதன் பொருள்: முழுமையிலிருந்து முழுமையை எடுத்த பின்பும் முழுமை முழுமையாகவே மிஞ்சி நிற்கிறது.

எங்கிருந்து பெறுவாய்? உனது முதல் பிரமை, பூரணத்திலிருந்து அபூரணம் தோன்ற முடியும் என்பது. இரண்டாவது பிரமை, இந்த அபூரணத்தை பூரணமாக்க முடியும் என நம்புவது. வேறுவிதமாகக் கூறினால், கடவுளின் படைப்பில் குறை இருக்கும் என்றும், அதை நிறைவானதாக ஆக்க முடியும் என நீ நம்புவதுபோல் தெரிகிறது. பூரணத்திலிருந்து அபூரணம் தோன்றாது. கடவுளின் படைப்பில் அபூரணம் என நீ நினைப்பதை முழுமையாக்க முடியாது.

நீ கொண்டுள்ள கண்ணோட்டப்படி உனக்கு நரகமே உண்மையாக இருக்கும். என் கண்ணோட்டப்படி சுவர்க்க வாழ்க்கை சாத்தியமானதுதான். தேர்ந்தெடுப்பது உன் கையில், ஏனெனில் இது உனது வாழ்க்கை. நீ இந்த நிமிடம் உன் கையிலுள்ள வாழ்க்கையை அனுபவி. ஆடு, பாடு, ஆனந்தப்படு. இந்த சூழ்நிலையில் நாளையப் பொழுது வரும். நீ பெற்ற ஆனந்தப் பயிற்சியால் நாளையும் மகிழ்ச்சி யாக இருப்பாய். தொடர்ந்து அன்றைக்கே அன்றைய வாழ்க்கையை ரசம் நிறைந்ததாக ஆக்கிக் கொண்டால் அடுத்துவரும் ஒவ்வொரு நாளும் ஆனந்தம்தான். முற்றம் கோணலாயினும் சமசதுரமாயினும் உன்னால் ஆட முடியும் நிலை ஏற்படும். பிறகு நீ சாந்தமாக அமர்ந்திருந்தாலும் உன் உள்ளத்தில் நடனம் தொடரும். நீ பேசாமல் இருந்தாலும் உள்ளத்தில் பாடல்கள் எதிரொலிக்கும். நீ ஒன்றும் செய்யாவிடிலும் இதய கமலம் மலரும்.

தலைவிதி, சுபாவம் என்பவை இப்போது தானாக எது நடைபெறுகிறதோ, எதிர்காலத்திலும் தானாகவே எது நடைபெறுமோ அவற்றைக் குறிக்கின்றன. எதைச் செய்ய முயற்சி தேவைப்படுகிறதோ அது உன் தலைவிதி இல்லை. முயற்சி என்பதன் பொருள் உனக்கு விதிக்கப்பட்டிருப்பதற்கு எதிராகச் செல்வது என்பதாகும். நீ சுயமாக ஒரு திட்டம் தயாரிக்கிறாய். கடவுள் உனக்கென ஒரு 'ப்ளூபிரின்ட்' (வரைபடம்) தயாரித்தளித்தார். வாழ்க்கைப் பயணத்திற்கு திசை காட்டினார். சேருமிடம் அமைத்தார். அதிலிருந்து வித்தியாசமான ஒரு திட்டத்தை நீ தயாரித்தாய். ஆகவே உனது திட்டம் நிறைவேறுவ தில்லை, உன் திட்டம் எப்பொழுதும் முறிகிறது; தோல்வி காண்கிறது.

நீ பரமாத்மாவுடன் மோதி அவரை வெல்ல முடியாது. அவரை வெல்வதற்கு ஒரே வழி அவரிடம் தோல்வியை ஒப்புக் கொள்வதுதான்.

அன்புலகில் தோல்விதான் வெற்றி. பிரார்த்தனையிலும் தோல்வியே, சரணடைவதே, வெற்றியாகிறது. ஆனால் நீ லட்சியத்தைப் பிடிவாதமாகப் பிடித்துக் கொண்டுள்ளாய். அதை வைத்து என்ன செய்வாய்? வாழ்க்கை முழுதும் முயன்றாலும் உனக்கு லட்சியத்தின் மூலம் என்ன கிடைக்கும்?

உதாரணமாக, ஒருவன் பிரம்மச்சரியத்தைத் தனது குறிக்கோளாக எடுத்துக் கொள்கிறான். அதற்காக அவன் எல்லா விதத்திலும் தன் உணர்ச்சிகளை இறுகக் கட்டிப்போடுகிறான். தன்னைச் சுற்றிலும் சுவர்கள் எழுப்புகிறான். முட்டுக்கட்டைகளைப் பரப்புகிறான். நெஞ்சில் பாறையை வைத்துக் கொள்கிறான். காம உணர்வு எழக்கூடாது என்பதில் எச்சரிக்கையாக இருக்கிறான். ஆனால் மற்ற வகை உணர்வுகளுடன் கடவுள் காமத்தையும் சேர்த்தே உன்னைப் படைத்திருக்கிறார். ஆனால் மணங்கொள்ளா நோன்பைக் கொண்டு வந்தவன் நீ. மற்ற ஆசைகளைப்போல் காமமும் சுபாவமானது, இயற்கையானது. பிரம்மச்சரியம் என்பது வெளியிலிருந்து வந்த லட்சியம்.

பிரம்மச்சரியம் பலன் தராது என்று நான் கூறமாட்டேன். அதுவும் ஆசையைப் போலவே தீவிரமடைந்து பயன்தரக்கூடும். எப்போது? நீ கடவுளின் மீது பாரத்தைப் போட்டுவிட்டு இயற்கையாக நீரோட்டத்தில் மிதந்தபடியே செல். அது உன்னை இட்டுச்செல்லும் இடம் இருட்டாக, வெளிச்சமாக, கண்ணீரில் தோய்ந்ததாக, புன்சிரிப்புகளால் நிறைந்ததாக எப்படி இருந்தாலும் நீ அந்த இயற்கையான வழியிலேயே முன்னேறு. நம்பிக்கை வை. அனைத்தும் கடவுளின் விருப்பம் எனக் கொள். அவர் விரும்பியது நடைபெறு கிறது. உன்னுடன் பிறந்த ஆசைகளை உண்டாக்கியவன் நீ அல்லவே.

**ஒ**ரு துறவி என்னைச் சந்தித்தபோது அவர் காமத்திலிருந்து தப்பிக்க விரும்புவதாகச் சொன்னார். “நீர் அதைப் படைத்தீரா?” என்று கேட்டேன். “நான் படைக்கவில்லை,” என்று அவர் ஒப்புக் கொண்டார், நான் விளக்கினேன்: “நீங்கள் அதைப் படைக்கவில்லை என்றால் உம்மால் அதை அழிக்க முடியாது. நீங்கள் ஏற்படுத்தியதைத் தான் உங்களால் அகற்ற முடியும். நீங்கள் மனைவியைவிட்டு ஓடிப்போக முடியும். ஏனெனில் ஒரு பெண்ணை மனைவியாக்கிக்

கொண்டது நீங்கள்தான். ஆனால் காமத்தைவிட்டு எங்கே ஓடுவீர்கள்? எங்கும் காமம் உண்டு. நீங்கள் பெண்களைக் கண்டால் கண்ணை மூடிக்கொண்டு விடலாம். கண்ணைக் குருடாக்கிக் கொள்ளலாம். ஆனால் இதனால் என்ன வித்தியாசம்? காமத்தை எப்படி அழிப்பீர்கள்? பார்வையற்றவருக்கும்கூட காமம் உண்டுதான்."

கிருஷ்ண பக்தரான கவிஞர் சூர்தாஸ் கதை கேள்விப்பட்டிருப் பாய். அக்கதை சரியானதாக, உண்மையானதாக இருக்குமென நான் நினைக்கவில்லை. அக்கதை சூர்தாசரின் மதிப்பைக் கெடுத்து விடுகிறது. சூர்தாசர் அற்புதமான மனிதர். அவரது வாழ்க்கையில் நிகழ்ந்ததாகக் கூறப்படும் ஒரு முக்கிய சம்பவத்தை என்னால் ஏற்க முடியவில்லை அந்த சம்பவம் நடந்திருந்தால் அவர் பைசா பெறமாட்டார். அது என்ன நிகழ்ச்சி?

சூர்தாசர் ஒரு முறை ஓர் அழகிய இளம்பெண்ணைக் கண்டார். அவளிடம் மயங்கிவிட்டார். துறவியாதலால் பிட்சை கேட்டு ஒருநாள் அவள் வீட்டிற்குச் சென்றவர் தினம்-தினம் அங்கு போக ஆரம்பித் தார். ஒற்றைக் கம்பி வீணை மீட்டி பக்திப் பாடல் பாடும் வழக்க முடையவர் அவளைக் குறித்தே பாடலானார். ஒருநாள் அவர் விழித்துக் கொண்டார். கண்ணனைப் பாடும் வாயால் இந்தக் கன்னியைப் பாடினேனே என அவர் நடுக்கமுற்றார். பார்வை இருப்ப தால்தான் இந்தப் பாவம் நிகழ்ந்தது என்று பதறி அவர் தம்முடைய கண்களைக் குருடாக்கிக் கொண்டார். தன்னை வழிதவற வைத்த கண்களோடு இனி உறவுகூடாது என்று முடிவெடுத்ததன் விளைவு இவ்வாறானது.

இது முட்டாள்கள் உருவாக்கிய கதைபோல் இருக்கிறது. கண்களைக் குருடாக்கிக் கொண்டால் நெஞ்சிலிருந்து காமம் மறைந்துவிடுமா? கண்களில் காமம் பிரதிபலிக்க முடியாமல் போகலாம். ஆனால் உள்ளத்தில் அப்படியே தானிருக்கும்.

ஒரு பெண் சாலையில் செல்வதைப் பார்க்கிறாய். பார்த்தது தப்பு என்று நடுங்கிக் கண்களை மூடிக்கொள்கிறாய். இதனால் அவள் மறைந்து விடுவாளா? இப்போது அவள் மனக்கண்ணில் தோன்று கிறாள்-பேரழகியாக! உண்மையில் அவள் சராசரிப் பெண். அவளைக் கண் திறந்து பார்த்திருந்தால் எந்த ஈர்ப்பும் இல்லாது போயிருக்கும்.

ஒழுங்காகக் கண்ணை விரித்துப் பார்த்தால் எந்தப் பெண்ணும், எந்த ஆணும் முழுமையான அழகுடையவர்களாகத் தெரியமாட்டார்கள். கவனமாகப் பார்த்தால் கவர்ச்சி தெரியாது. நீ காம உணர்விலிருந்து விடுபடுவாய். சட்டெனக் கண்களை மூடிக்கொண்டதால்தான் வந்தது வினை. சாதாரணப் பெண் தேவலோக அழகியாகத் தெரிகிறாள்.

கனவுகளிலும் ரூபவதியான பெண்கள் தோன்றுவார்கள். அத்தகைய அழகிகள் உலகில் உண்மையில் கிடையாது. கவிஞர்கள், ஓவியர்கள், சிற்பிகள் கற்பனை செய்வது போன்ற பெண்களை அவர்கள் நிஜமான வாழ்க்கையில் பார்க்க முடிவதில்லை. இதனால் அவர்கள் திருப்தியற்றவர்களாக உள்ளனர்.

சிற்பி சிலையை மிகுந்த அழகுணர்வோடு செதுக்குகிறான். ஒவ்வோர் அங்கத்தையும் விகிதக் கணக்குப்படி அளந்து நிர்மாணிக் கிறான். உண்மையில் அப்படி ஓர் அழகிய முகத்தைக் காண முடியாது. யதார்த்த உலகில் தென்படும் முகங்கள் அந்த சிலையின் முகத்தின் முன் எடுபடா.

கற்பனை ஆற்றல் மிகுதியாக உள்ளவனுக்கு வாழ்வில் திருப்தி கிடைக்காது. அவனது கற்பனை, ஒவ்வொன்றையும் ஒப்பீடு செய்து எதுவும் நிறைவாக இல்லை என்ற முடிவிற்கு வரும்.

கண்களை மூடிக்கொள்வதால் கற்பனை மறைந்து போகாது. கனவுகள் அழிவதில்லை. கண்கள் திறந்திருக்கும்போது வெளியுலகை நோக்கிப் பாயும் சக்தி, கண்களை மூடிக்கொண்டபின் கனவுகளாக வெளிப்படும்.

ஒருவன் காமத்தை எதிர்த்து நிற்பதற்காக பிரம்மசரியத்தை லட்சியமாகக் கொண்டால் அந்த முயற்சியில் அவன் வெற்றியடை வதில்லை. மனத்துக்குள் விபசாரம் நடக்கும். காமம் உள்நோக்கிப் பாயத் தொடங்குகிறது.

பிரம்மசரியம் எடுத்த எடுப்பில் வெற்றி பெறுவதில்லை. காமத்தைப் புரிந்துகொண்டு, வாழ்க்கையில் அதற்கு இடம் கொடுத்து, அந்த அனுபவத்தின் மூலம் காலப்போக்கில் காமத்தால் பலன் இல்லை என்பது உனக்குத் தெரியவரும். இதனால் காமத்திலிருந்தே காமம் இன்மை, காமத்தில் விரக்தி, உனக்குள் தொடங்கும். இந்த வரிசையில்

வரும் பிரம்மசரியமே இயற்கையானது. எந்தப் பின்னணியும் இல்லாமல் சுமத்தப்பட்ட, ஏற்பாடு செய்யப்பட்ட பிரம்மசரியத்திற்கு மதிப்புக் கிடையாது.

நீ வன்முறையாளன். ஆகவே அகிம்சையை உன் குறிக் கோளாகக் கொள்கிறாய். ஒருவனது லட்சியம் எது என்பது தெரிந்தால் அவன் எப்படிப்பட்டவன் என்பதை நீ சொல்லிவிட முடி-யம். அதாவது, அவன் அடிப்படையில் அந்த லட்சியத்திற்குத் தலைகீழாக இருப்பான். பிரம்மசரியத்தை லட்சியமாக எடுத்துக் கொள்பவன் காமம் மிகுந்தவனாக இருப்பான். இல்லாவிடில் அவன் பிரம்மசரியத்தை ஏன் நாட வேண்டும்? தானம் செய்வதை லட்சியமாகக் கொண்டவன் பேராசைக்காரனாக இருப்பான். கருணையை லட்சியமாகக் கொண்ட வன் கோபக்காரனாக இருப்பான். வாழ்க்கையில் அமைதியுடன் விளங்குவதே லட்சியம் என்று கூறுபவன் அமைதியற்றவனாக, குழப்பமுள்ளவனாக இருப்பான்.

ஒருவனது லட்சியம் என்ன என்பதை நீ சொன்னால் அவன் உண்மையில் எத்தகையவன் என்பதை நான் கூறிவிடுவேன். யதார்த்த நிலை லட்சியத்திற்கு நேர் எதிராக இருக்கும். இந்தக் கணக்கில் பிழை ஏற்படுவதில்லை. ஒருவனிடம் அவனது லட்சியம் பற்றிக் கேட்டுப்பார். அவனது பதிலுக்கு எதிரான நிலையே யதார்த்தமாக இருக்கும். ‘திருடாமை எனது லட்சியம்’ என்று ஒருவன் உன்னிடம் சொன்னால் நீ உன் ஜேபியை (சட்டைப் பையை) பத்திரமாகப் பார்த்துக் கொள். அவன் திருடும் மனப்பான்மை கொண்டிருப்பான். ஏனெனில் திருடனுக்குத்தானே திருடாமை லட்சியமாக அமையும். திருட்டுப் புத்தி இல்லாத நமக்கெல்லாம் திருடாமை என ஒரு லட்சியம் இருப்பதுகூடத் தெரியாது. இதேபோல் ஒருவன் ‘நேர்மையே எனது லட்சியம்’ என்றால் அவனிடமும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அவன் நுணுக்கமான முறையில் மோசடிப் பேர்வழியாக இருப்பான்.

ஒருவன் தனது லட்சியத்தைச் சொன்னால் அதைக் கவனிக் காதே. அதற்கு எதிரான தன்மையைக் கண்டுபிடி. அந்த மனிதனின் மனத்தின் திறவுகோல் உனக்குக் கிடைத்துவிடும்.

ஏற்கெனவே நேர்மையானவன் நேர்மையைப் பற்றி நினைக்கக் கூட மாட்டான். ஆரோக்கியமான மனிதனின் வாழ்வில் ஆரோக்கியம்

என்பது ஒரு குறிக்கோளாக இருக்காது. நோயாளிதான் ஆரோக்கியம் பற்றிச் சிந்தித்தபடி இருப்பான். கையில் கிடைக்கும் மருத்துவ நூல்களை எல்லாம் படிப்பான். அலோபதி, ஹோமியோபதி, பயோகெமிஸ்ட்ரி என்று மருத்துவ நூல்களைத் தேடி வாசிப்பான். இயற்கை வைத்தியத்தையும் நாடி, வயிற்றில் களிமண்ணை அப்புதல், தலையை ஈரத்துணியால் கட்டுதல், தொட்டியில் கிடத்தல், உபவாசம், எனிமா என்பவற்றையும் செய்து பார்ப்பான். அவனை விசாரித்தால், 'ஆரோக்கியமே எனது லட்சியம்' என்பான். ஏனெனில் அவன் கடுமையான நோயாளி.

ஆரோக்கியமானவனுக்கு உடலின் நினைவு இருப்பதில்லை. உடலின் நினைவு எழாமைதான் ஆரோக்கியத்தின் அடிப்படை லட்சணம், அடையாளம். உடல் நினைவு உடலில் கோளாறு சமயம் வரும். தலை வலிக்கும்போது தலை என்ற உறுப்பு உள்ளதை உணர்கிறோம். வலி இல்லாவிடில் தலைபற்றி நமக்கு ஞாபகம் இருப்பதில்லை. முள் குத்தினால் கால் ஞாபகம் வருகிறது. செருப்பு கடித்தால் நாம் செருப்பு அணிந்திருப்பதை உணர்கிறோம். வலி ஏற்பட்ட பிறகுதான் அப்பகுதி நினைவிற்கு வருகிறது. அப்போது அதற்கு விரோதமான ஒன்றை லட்சியமாகக் கொள்கிறோம்.

நோயுற்ற மனத்தின் பாதிப்பின் விளைவாகவே லட்சியம் அமைகிறது. ஆரோக்கியமான மனமுள்ளவன் லட்சியம் ஏற்படுத்திக் கொள்வதில்லை. அவன் நிலைமையைப் புரிந்துகொள்ள முயலுகிறான். அதன்படி கவனமாக உணர்வுபூர்வமாக வாழ முயலுகிறான். நிலைமையை ஏற்று, உணர்ந்து வாழ்வதில் அவனது ஆரோக்கியம், பிரம்மசரியம், கருணை முதலிய லட்சியங்கள் வெற்றி பெறுகின்றன.

நீ உன் கோபத்தைப் புரிந்துகொள். அதை ஒப்புக்கொண்டு வாழ்க்கை நடத்து, கருணை என்னும் லட்சியம் தானாகவே உனக்கு சித்திக்கும். நீ உன்னிடமுள்ள காமத்தை அடையாளம் கண்டுகொள். அதை உணர்ந்து வாழ்க்கை நடத்து. பயந்தபடி, தயங்கியபடி, கவலையுடன், நடுக்கத்துடன், விறைப்பாக, விருப்பமின்றியும் வேறு வழியின்றி, குற்ற உணர்வுடன் காமத்தில் ஈடுபடாதே. அதில் சாரமில்லை. உடலின் இயற்கை என்ற முறையில் சகஜமாக அனுபவி. காமமும் கடவுள் கொடுத்தது. அதில் ஏதோ அர்த்தமிருக்கும். ஏனெனில் அவர் பூரணமானவர்.

காமம் என்பது இல்லாவிடில் நீயோ, நீ வணங்கும் புனிதர்களோ, பிரம்மசரியத்தை உபதேசிப்பவர்களோ தோன்றியிருக்க முடியுமா? புத்தரின் பிறப்புக்குக் காரணமான பெற்றோரின் காமத்தைத் திட்டலாமா? பெற்றோரின் காமத்தின் பலன்தானே மகாவீரர். அது இழிவானதா? அ்தேபோல் அஷ்டாவக்ரரும் பிறக்க காரணமான காமத்தை நிந்திப்பதற்கு நீ வெட்கப்படவில்லையா?

பிரம்மசரிய விருப்பமே காமத்திலிருந்துதானே தோன்றியது. பழத்திற்கு மதிப்பளிக்கும் நீ மரத்தை அவமதிப்பது ஏன்? இது தவறு. வாழ்க்கை குறித்து நீ போடும் கணக்கு தெளிவின்றிச் சிக்கலாக உள்ளது. புத்தர், மகாவீரர், கிருஷ்ணர் ஆகிய மாமனிதர்களும்கூட காமம் என்னும் கடலில் எழும்பிய அலைகள் போன்றவர்களே ஆவர். இந்த அலைகள் பிரம்மசரியத்தின் சிகரத்தைச் சென்றடைகின்றன. கடலுக்கு நன்றி கூறு. அதற்கு எதிர்ப்புத் தெரிவிக்காதே.

எல்லா வகையான லட்சியங்களும் ஆபத்தானவை என்கிறேன். இதன் பொருள், கையிலுள்ள வாழ்க்கை போதுமானது. அதன்மீது உன் லட்சியத்தை சுமத்தாதே. உனக்கென்றே அமைக்கப்பட்டுள்ள வாழ்க்கையில் ஆழமாக இறங்கு. இரத்தினங்கள் கிடைக்கும்.

காமத்தில் இறங்கி முயலுவதால் பிரம்மசரியம் கைவசமாகிறது. காம உணர்வுடைய எல்லோருக்கும் பிரம்மசரியம் என்னும் லட்சியம் கைகூடும் என்றோ, வசமாகிவிட்டது என்றோ நான் கூறவில்லை. அதற்கென நான் கூறிய நிபந்தனையை நினைவில்கொள். காமத்தில் எச்சரிக்கை உணர்வுடன் இறங்க வேண்டும். சாட்சி மனப்பான்மை யுடன் அணுக வேண்டும். அப்போதுதான் காமம் திகட்டி உண்மை யான பிரம்மசரிய நிலை தோன்றும்.

உலகில் பொதுவாக இருவகை மனிதர்கள் உண்டு. சிந்தனை யின்றிக் காமத்தில் ஆழ்பவர்களுக்கு எதுவும் கிடைப்பதில்லை. ஆகவே காமத்திற்குப் பயந்து பிரம்மசரியத்தை நோக்கிப் பாய்ந்தோடு கிறார்கள். அதனாலும் பலன் கிடைப்பதில்லை. எச்சரிக்கையாக இருப்பவனுக்கு, விழிப்புடன் உள்ளவனுக்கு, வாழ்க்கையில் கிடைப் பதை அப்படியே ஏற்பவனுக்குத்தான் நல்ல பலன் கிடைக்கிறது. அவன் கூறுவான், 'எனக்கென்று தனி விருப்பம் கிடையாது. கடவுள் என் வாழ்க்கையில் என்னென்ன காண்பிக்கிறாரோ அவற்றையே

பார்ப்பேன். ஆனால் சாட்சி மனப்பான்மையுடன் காண்பேன்.' அப்போது லட்சியமும் வசப்படுகிறது.

லட்சியங்களைக் கைவிடு என்று நான் சொல்லும்போது நான் அவற்றை விரோதிப்பதாக நினைக்கக்கூடாது. உன்னுடைய அணுகு முறை தவறு என்பதால்தான் அவ்வாறு கூறுகிறேன். நான் லட்சி யங்களை ஆதரிக்கிறேன். நான் சொல்வதைக் கடைப்பிடித்தால்தான் அவை பலிக்கும்.

லட்சியத்தைத் துரத்திக் கொண்டு அதன் பின்னால் நீ ஓடினால் அது உனக்கு வசப்படாது. நான் சொல்வது வேறு. நீ அதைத் துரத்தாதே. கைவசம் உள்ளதில் இறங்கு. லட்சியம் தானாகக் கனிந்து கிடைக்கும். சுபாவம் என்பது இதுதான். உன் தலைவிதி என்பதும் இதுதான். நீ செய்வதற்கு எதுவுமில்லை. விழி, வாழு. விழித்தல் என்பது ஒரு செயலன்று. அது ஏற்கெனவே உன்னிடமுள்ள ஆற்றல்தான்.

அகங்கார உணர்வு லட்சியங்களின் மூலமாக வளர்ச்சி பெறுகிறது. ஏனெனில் லட்சியங்கள் வாழ்க்கையை ஓட்டப் பந்தயம் போல் ஆக்கிவிடுகின்றன. பணம், பதவி, மோட்சம், தியாகம் என எந்தப் பந்தயத்தில் இறங்கினாலும் பின்னணியில் அகங்காரம் இருக்கிறது. நீ எதுவாகவும் ஆக வேண்டாம். நீ நீயாகவே இரு. பிறகு ஓட்டப் பந்தயம் நின்றுவிடும். ஓடுவது நின்றால் அகங்காரம் வீழ்ந்துவிடும்.

அகங்காரம் மிகவும் நுணுக்கமான உணர்வாகும். நீ அகங்காரமின்மையை லட்சியமாகக் கொண்டால் அப்போதும் அகங்காரம் நீடிக்கும். அகங்காரமற்றவனாக நீ ஆகவேண்டும் என்று சொல்வதை அகங்காரம்தானே! மறுபடியும் அகங்காரத்தின் யாத்திரை தொடங்குகிறது. நீயும் அதனுடன் சேர்ந்து செல்கிறாய்.

நீ லட்சியம் எதையும் நிச்சயிக்காதே. பிறகு என்ன நடக்கிறது என்று பார். 'நான் எப்படி இருக்கிறேனோ அப்படிப்பட்டவன்தான் நான்' என்று சொல்லிவிடு. உன் வாழ்க்கைப் புத்தகத்தை மூடி மறைக்காமல் திறந்துகாட்டு. ஓர் அறிவிப்புச் செய்: 'நான் கெட்டவன், பாவி, கோபக்காரன், காமம் உடையவன். இது உண்மைதான். ஆனால் நான் என்னை அவ்வாறு படைத்துக் கொள்ளவில்லை. நான்

இத்தகையவனாக ஆக விரும்பியதில்லை. ஆனால் இப்படித்தான் படைக்கப்பட்டவனாக என்னையே நான் காண்கிறேன். இனி நான் என்ன செய்வது? என்ன நடக்கிறது என்று பார்க்கிறேன். ஓரிடத்தில் அமர்ந்து இந்த வாழ்க்கை விளையாட்டைப் பார்க்கிறேன். கடவுள் இந்த விளையாட்டை நடத்துவதால் இதில் நிச்சயமாக ஏதோ ரகசியம் உள்ளது.' அந்த ரகசியம் என்னவெனில் நீ பார்வையாளனாக மட்டும் இருந்த இந்த விளையாட்டை ரசித்துப் பார்.

லட்சியம் உன்னை கர்த்தாவாக, செய்பவனாக ஆக்கிவிடுகிறது. ஏதாவது செய்ய வாய்ப்பாக அமைகிறது.

நான் உன்னிடமிருந்து லட்சியத்தைப் பிடுங்குகிறேன். அஷ்டாவக்ரரும் உன்னிடமிருந்து பறிக்கிறார். அப்போதுதான் நீ கர்த்தாவா இருப்பதற்கு இடம் கிடைக்காது. லட்சியத்தைத் தலைமுழுகிவிட்டால் அதை நிறைவேற்றுவதற்கான எல்லா உபாயங்களும் நீங்கிவிடும். பிறகு நீ செய்வதற்கு எதுவும் மிஞ்சாது. பிறகு இருத்தல் என்ற நிலையே பரிசுத்தமாக நிலவும்.

லட்சியங்களிடம் எச்சரிக்கையாக இரு. லட்சியம் காரணமாகத் தான் உன் வாழ்க்கையில் வெறுமை ஏற்பட்டுவிட்டது. உண்மையில் உன் லட்சியங்கள் பலிக்க வேண்டுமாயின் நீ உன் வாழ்க்கைக்கு கர்த்தாவாக உன்னை நினைக்காமல் சாட்சியாகிவிடு. எது இருக்கிறதோ, எப்படி இருக்கிறதோ அப்படியே இருந்துவிடட்டும். இந்த யதார்த்த நிலையில் உன்னை ஸ்தாபித்துக்கொள். நீ எதையும் மாற்ற ஆசைப்படாதே. மாற்றுவதற்கு நீ யார்? நீ எப்படி எதை மாற்றுவாய்?

'அவன்' அன்றி ஓர் இலையும் அசையாது என்கிறார்கள் மதவாதிகள். 'அவன்' அசைக்காமல் தாங்களாகவே தங்களை மகாத் மாக்களாக அறிவித்துக் கொள்கிறார்களே. 'அவன்' விருப்பமின்றி இலையும் அசையாதெனில் பாவிகள் எப்படிச் சீர்திருந்துவார்கள்? சரி, 'அவன்' அசைத்தால் நாம் அசைவோம். அசைக்காத வரையிலும் அதில் ஏதோ ரகசியம் உள்ளதென ஒப்புக் கொள்வோம். நமக்கு துக்கம் கொடுத்தால் அது நிச்சயம் நம்மைக் கழுவித் தூய்மையாக்குவதற்காக இருக்கும். ஆகவே அதை வரவேற்று ஏற்போம். 'அவன்' கட்டளை யின்றி இலையும் அசையாதெனில், லட்சியம் என்ற பெயரில் உன் முழு வாழ்க்கையும் மாற்றிக் கொள்ள நீ யார்?

அகங்காரி பணிவுடையவன் ஆவதற்கு முயலுகிறான். ஆகவே பணிவானவர்களைப் போல் திமிர் பிடித்தவர்கள் இருக்கமாட்டார்கள்! ஒருவன் உன்னிடம் வந்து 'நான் உங்கள் கால்தூசி போன்றவன்,' என்றால் இதற்கு அப்படியே பொருள் கொள்ளக்கூடாது. தான் பணிவு நிறைந்தவன் என்பதை அவன் அப்படிச் சொல்கிறான்.

ஆனால் நீ என்ன சொல்ல வேண்டுமென எதிர்பார்த்து அவன் நிற்கிறான் தெரியுமா? 'நீங்களாவது என் கால் தூசியாவது. நீங்கள் தலைவர் போன்றவராயிற்றே' என்ற வார்த்தைகளை எதிர்பார்க்கிறான். அதாவது, நீ அவன் கால்களைத் தொட்டு வணங்கத் தூண்டுவதற்காக அவன் இப்படிப் போலிப் பணிவு காட்டுகிறான்.

இதற்கு மாறாக நீ அவனிடம், "ஆமாம், நீங்கள் சொன்னது சரிதான். நான் எப்பொழுதுமே உங்களைக் கால்தூசிக்கு சமம் என்றே கருதிவந்திருக்கிறேன்," என்று சொன்னால் எப்படியிருக்கும்! அவன் பிறகு ஆயுள் காலம் முழுவதும் உன்னை மன்னிக்க மாட்டான்.

ஆனால் உண்மையில் அவன்தானே அப்படிச் சொன்னான். நீ அதனுடன் எதையும் சேர்த்துச் சொல்லவில்லையே. "நீங்கள் சொன்னது சரிதான்" என்று மட்டும்தானே சொன்னாய். நீ சொன்னது உண்மை. அவன் கால்தூசிபோல் அற்பமானவன் என்பது ஊரில் எல்லோருக்குமே தெரிந்த விஷயம்தான்.

உன் பேச்சைக் கேட்டு அவன் கண்கள் சிவக்கும். அதிலிருந்தே நீ ஒரு விஷயம் தெரிந்து கொள்ளலாம். பணிவின் பின்னணியிலும் அகங்காரம் இயங்குகிறது. என்பதே அவ்விஷயம். இது இயற்கையே. அகங்காரம்தான் இப்படிப் பணிவாக மாற முயலுகிறது.

ஆகவே நான் உன் சுபாவத்திற்கு எதிரான லட்சியங்களை உன் மீது சுமத்த விரும்பவில்லை. உனக்கு வாழ்க்கை எப்படி அமைந் துள்ளதோ, உனது வாழ்க்கையின் யதார்த்தம் எதுவோ, அதுதான் உனக்குரிய உண்மையான வாழ்க்கை என்பதை நீ புரிந்துகொள்ள வேண்டும். இதையே நான் விரும்புகிறேன். இந்த உண்மை நிலையை நீ அறிந்தால் உன் இதயப் பூ மலரும்; ஆத்மாவின் கீதம் கேட்கும்; உன் வாழ்க்கையில் புரட்சி நிகழும். அந்தப் புரட்சியை நீ நிகழ்த்தவில்லை. நீ விழித்து எது எப்படியோ அப்படியே காண். புரட்சி நிகழும். அந்தப் புரட்சி கடவுள் அளிக்கும் பிரசாதம்.

**இரண்டாம் கேள்வி: (கேட்பவர் அஜித்சரஸ்வதி)**

> **எனக்கு ஒரு குறிப்பிட்ட கனவு அடிக்கடி வருகிறது. நான் கார் ஓட்டுகிறேன். மலைப் பாதை. மேல் நோக்கிப் பயணம். திடீரென கார் பின்னோக்கிச் செல்ல ஆரம்பிக்கிறது. எவ்வளவு முயன்றும் என்னால் தடுக்க முடியவில்லை. கியர், பிரேக், ஸ்டீயரிங் ஆகியவற்றை என்னால் உபயோகிக்க முடியவில்லை. விபத்து நேரும் போல் இருக்கும் தருணம் நான் விழித்துக் கொள்கிறேன். கார் கீழ்நோக்கிச் செல்லும் போதும் அது என் கட்டுப்பாட்டில் இருப்ப தில்லை. நான்தான் டிரைவர் எனினும் என்னு டைய கால் ஆக்சிலேட்டரில் பதிந்திருக்க வில்லை. வண்டி தானாகவே ஓடுகிறது. என் னால் அதைக் கட்டுப்படுத்த முடியவில்லை.**

இந்தக் கனவு முக்கியமானது. இதன் உட்பொருள் எல்லோருடனும் சம்பந்தப்பட்டது; எல்லோருக்கும் உபயோகமானது. நான் முதல் கேள்விக்குச் சொன்ன பதிலுடன் இணைந்துள்ளது. அதன் அடிப்படையில் கனவைப் புரிந்துகொள்ள முயற்சிசெய்.

நீ கனவில் காரை மேல்நோக்கி ஓட்டுவதைப்போல் எல்லோரும் வாழ்க்கையை மேல் நோக்கி இழுக்கிறார்கள். லட்சியம் என்னும் மலை உச்சியை நோக்கி இழுக்கிறார்கள். கங்கையின் ஓட்டப்படியே அதில் நீந்தி முன்னேறுவதற்கு மாறாக, பிரவாகத்தை எதிர்த்து, அது உற்பத்தியாகும் கங்கோத்திரியை நோக்கி எதிர்நீச்சல் போடுவதுபோல் மக்களின் செய்கை முரணாக உள்ளது. வழக்கத்திற்கு மாறாக, பிரவாகத்திற்கு எதிராகச் சென்றால்தான் அகங்காரத்திற்கு திருப்தி.

நதியின் ஓட்டத்தோடு அதே திசையில் மிதந்து செல்வதில் அகங்காரம் மகிழாது. இதில் உன் முயற்சி என்றும் எதுவும் இல்லை. கை-கால்களை அப்படியே விட்டுத் தண்ணீரில் மிதந்தால், கங்கை உன்னைக் கடல்வரை இட்டுச்செல்லும். வங்காள விரிகுடாக் கடலில் உன்னைத் தள்ளிவிடும். நீதான் அந்த யாத்திரையை சுயமாகச் செய்ததாகச் சொல்லிக் கொள்ள முடியாது. அப்படிச் சொன்னால் மக்கள் சிரிப்பார்கள். "நீயா யாத்திரை செய்தாய்? கங்கைதான் யாத்திரை செய்தது. அதில் உன் பங்காக என்ன இருந்தது? நீ உன்னை

பிரவாகத்தின் போக்கில் விட்ட அன்றே நீ என்பவன் இல்லாமல் போனாய். நீ விரும்பியிருந்தால் அகங்காரத்தின் உதவியுடன் நீரோட்டத்துடன் போராடியிருக்க முடியும். எதிர்நீச்சல் போட்டு மேல் நோக்கிப் பயணித்திருக்க முடியும்,'' என்பார்கள்.

மகாத்மா என்றும் தியாகி என்றும் நீ போற்றுபவர் மிகுந்த அகங்காரியாக இருக்கின்றார். ஆகவே அவர் பிரவாகத்தை எதிர்த்துச் செல்கிறார். அவர் சொல்கிறார்-'நீ எம்மாத்திரம்? நீ அற்பமான மனிதன், பாவி, காமம் நிறைந்தவன். என்னைப் பார். நான் பிரம்மசரியத்தைக் கடைப்பிடிக்கிறேன். நீ பூமியில் நெளியும் புழு. நீ பேராசைக்காரன், கோபக்காரன். நீ நொடியில் அழியக்கூடியவன். என்னைப் பார். கடவுளைக் குறித்து நான் உலகளாவிய தேடுதலில் ஈடுபட்டுள்ளேன்.'

நீ இத்தகைய மகாத்மாக்களை நன்கு கவனித்துப்பார். அவர்கள் கண்களாலேயேகூட உன்னை ஏசுவது தெரியும். உன்னை நோக்கி அவர்கள் மேற்கொள்ளும் ஒவ்வோர் உடலசைவிலும் அவர்கள் உன்னை ஏசுவது பிரதிபலிக்கிறது. அவர்கள் பிரவாகத்திற்கு எதிராக நீந்துகிறார்கள். ஆகவே கர்வமாக உள்ளனர். அவர்கள் காமம், குரோதம், பண ஆசை, குடும்ப வாழ்க்கை ஆகிய எல்லாவற்றையும் உதறித்தள்ளினர். ஆகவே உன்னை அலட்சியம் செய்கின்றனர். நீ சாதாரணமானவன். போகத்தில் ஆழ்ந்தவன். நதியின் ஓட்டத்தில் அப்படியே மிதந்து செல்பவன். இவ்வாறு உன்னை ஏளனம் செய்கின்றனர்.

அவர்கள் சொல்வது சரிதான் என்று உனக்கும் தோன்றுகிறது. அதன் விளைவாக நீ அந்த மகாத்மாக்களின் பாதம் பணிகிறாய். இதன் மூலம் நீ ஒரு செய்தி தெரிவிக்கிறாய். 'நானும் உங்களைப் போலவே காமம், குரோதம் முதலியவற்றைக் கைவிடவே விரும்புகிறேன். ஆனால் முடியவில்லை. தவிர்க்க முடியாத சூழ்நிலை உள்ளது. ஏராளமான பிரச்சினைகள், வீடு-வாசல், மனைவி-குழந்தைகள் இப்படிச் சிக்கல்களை வளர்த்துக் கொண்டுவிட்டேன். உங்களைப் பார்த்து நீங்களாவது உருப்பட்டீர்களே என்று சந்தோஷமாக உள்ளது' என்று சொல்லாமல் சொல்கிறாய்.

ஒருவன் சிரஸானம் (தலைகீழாக நிற்றல்) செய்வதைக் கண்டால் கவனித்துப் பார்க்கிறாய். கால்களை ஊன்றி சாதாரணமாக நிற்பவனை

யார் பார்க்கிறார்கள்? ஆணிப் படுக்கையில் கிடப்பவனைக் காணக் கூட்டம் திரள்கிறது. மக்கள் அவனுக்கு மாலை சூட்டுகிறார்கள். ஆனால் நீ நடுத்தெருவில் வழக்கமான கட்டில்-மெத்தை போட்டுப் படுத்தால் எவன் போடுவான் மாலை? மாறாக, உன் மீது கல்லெறி வார்கள். 'நடுத்தெருவில் படுக்கை போட்டு ஏன் உபத்திரவம் கொடுக்கிறாய்? வீட்டுக்குள்ளே போய் படு' என்று அதட்டுவார்கள். ஆணிப் படுக்கையில் படுத்தால் பாராட்டு, மெத்தையில் படுத்தால் திட்டு!

ஏன் இப்படி? வழக்கத்திற்கு மாறாக ஏதாவது செய்வதில் மனிதன் சுவை காண்கிறான். அப்போதுதான் ஏதாவது செய்வதுபோல் அவனுக்குத் தோன்றுகிறது. ஆகவே நீ கனவில் காரை மேல்நோக்கி ஓட்டுகிறாய். எல்லோரும் இப்படித்தான் எதிர்ப்பாக எதுவும் செய்கிறார்கள். எல்லோர் வாழ்க்கையும் இப்படித்தான் உள்ளது. உன் வாழ்க்கையும் உன் கனவிலிருந்து வித்தியாசமானதில்லை.

கனவில் அடுத்த கட்டத்தில் கார் பின்னோக்கிச் செல்வதையும் அதை நீ தடுக்க முயல்வதையும் கண்டாய். வாழ்க்கையிலும் இம்மாதிரி அடிக்கடி ஏற்படுவதுண்டு. நீ மலை உச்சியைத் தொடுவதற்கான பயணத்தில் ஈடுபடுகிறாய். ஆனால் வாழ்க்கையில் நிகழும் சம்பவங்கள் உன்னைப் பின்வாங்கும் அளவிற்கு இழுக்கின்றன. இதனால் உனக்குக் கலவரம் ஏற்படுகிறது. நீ இமய உச்சியில் கங்கோத்ரியை அடைய விரும்புகிறாய். ஆனால் கங்கை உன்னைக் கடலை நோக்கி இழுத்துச் செல்கிறது. அதைத் தவிர்க்க முயன்று பலமுறை நீ களைத்துப் போனாய். பல முறை நீ தோல்வியுற்றாய். இயற்கையான முன்னேற்றத்தை எவ்வளவு காலத்துக்குத்தான் நீ எதிர்க்க முடியும்? காரை மேலே கொண்டுபோக நிறைய பெட்ரோல் தேவை. கீழே கொண்டுவர அவ்வளவு தேவைப்படாது. பெட்ரோல் வேண்டாம். கார் தானாகவே ஓடும். கீழ்நோக்கிச் செல்வது அதற்கு இயற்கையானது. பூமியின் ஈர்ப்பு விசை அதை இழுக்கும். ஆனால் மேற்புறமாக ஏறிச் செல்வது இயற்கைக்கு முரணானது. ஆகவே நிறைய சக்தி தேவை.

கார் பின்னோக்கி இழுக்கப்படுவதைப் போல் ஏராளமாக சம்பவங்கள் வாழ்க்கையில் குறுக்கிடும். நீ அவற்றைத் தடுக்க முயற்சி செய்வாய். ஏனெனில் நீ விரும்பியதற்கு (உன் அகங்காரத்துக்கு) எதிராக அல்லவா நடக்கிறது. காரைப் பின்னோக்கிச் செல்லவிட்டால்

அது உன் தோல்வியாகிவிடும். அது உன் அகங்காரத்துக்கு அடி. இதை உன்னால் பொறுக்க முடியாது.

"அஜித் சரஸ்வதி, உன்னால் கியர், பிரேக், ஸ்டீயரிங் மூலம் கார் பின்புறம் செல்வதைத் தடுக்க முடியவில்லை. காரணம், நீ என்னுடன் வசிப்பதுதான்! உன்னால் இனி காரைக் கட்டுப்படுத்த முடியாது. ஏனெனில் நான் உனக்கு அடிப்படையில் உபதேசிப்பது வாழ்க்கையுடன் அதன் போக்கில் ஒன்றிவிடு என்பதுதான். வாழ்க்கை உன்னை எங்கே எதுவரை கொண்டு செல்கிறதோ அங்கே போய்ச் சேர். நீ சென்றடைய வேண்டிய இடம் அதுதான்.

நீ கனவிலும் உன் காரைத் தடுக்க முடிவதில்லை. தடுத்து மேலே செல்ல முயன்றிருந்தால் விபத்து விளைந்திருக்கும். தடுக்க முடியாமை உன் நன்மைக்கே. உனது கட்டுப்பாடு நெகிழ்கிறது என்று அர்த்தம். உன் அகங்காரம் மறைகிறது என்பது இதன் உள்ளர்த்தம். பிறகு உன் வாழ்க்கை நடப்பதைக் கடவுள் தமது கரத்தில் எடுத்துக் கொள்வார். உனக்கு அகங்காரம் இருக்கும்வரை நீதான் உன் வாழ்க்கையை நடத்துபவன் என்னும் திமிர் இருக்கும். அந்நிலையில் கடவுள், ஆன்மிகம் என்றெல்லாம் நீ எவ்வளவு பேசினாலும் கடவுளுடன் உனக்குத் தொடர்பு ஏற்பட முடியாது. 'நீ' இருக்கும்வரை கடவுள் கிடையாது. உன்னால் கியர், பிரேக், ஸ்டீயரிங்கைச் சமாளிக்க முடியவில்லை என்பது உனக்கு நல்லதே நடப்பதைக் காட்டுகிறது.

கார் உனக்குக் கட்டுப்படாததால் விபத்து நிகழுமோ என நீ பயப்படுகிறாய். நீ நினைப்பதுபோல் அது விபத்தன்று. நீ மேற்புறமாக கார் ஓட்ட முயல்வதால்தான் அது பின்னோக்கிச் செல்வது விபத்தாகத் தோன்றுகிறது. ஒரு சம்பவம் விபத்தா, இல்லையா என்பது உன் விளக்கத்தைப் பொறுத்திருக்கிறது. நீ எதிர்பார்த்ததற்கு எதிராக ஒன்று நடந்தால் அது உனக்கு விபத்தாகத் தோன்றுகிறது. நீ விரும்பியபடியே நடந்தால் சௌபாக்கியம் என்பாய். விபத்து ஏற்படுமோ என அஞ்சுவது அகங்காரம் மனத்தின் மூலையில் சிறிதளவு ஒட்டிக் கொண்டிருப்பதைக் காட்டுகிறது. விபத்து ஏற்படாமல் தடுத்து மேலே ஏறலாம் என அது தூண்டுகிறது.

நீ உன் கார் பின்னோக்கிச் செல்வதை விரும்பவில்லை. ஆகவே வேறு வழியில்லைபோல் உணர்கிறாய். நீ முயன்றால் உன்

கண்ணோட்டத்தை மாற்றிக் கொள்ளலாம். ஏனெனில் எல்லா ஆதரவையும் இழந்து, நீ நிராதரவாகப் போகும் அந்த நிலையில் கடவுளின் ஆதரவு கிடைக்கும் நிலையை அடைவாய். அது முதல் முறையாக இப்போது கிடைத்திருக்கும். இதுவரை அகங்காரத்தை, சுய ஆற்றலை, நம்பினாய். துரும்பின் உதவிகொண்டு கடலில் மூழ்காமல் தப்ப நினைத்தாய். காகிதப் படகின் உதவியுடன் கடலைக் கடக்க நினைத்தாய். நீ முழுமையாக ஆதரவற்றவனாக ஆனபிறகே உனக்கு ஆதரவு கிடைக்கத் தொடங்கும். தோற்றவனுக்கு தெய்வம் துணை! பலமற்றவனுக்கு பகவான் துணை. உன் கஷ்டங்களுக்கு நீ (அகங்காரம்)தான் காரணம். நீதான் உனக்கே தடை. 'நீ' அகன்றால் கடவுள் அருள் நேராக வந்தடையும்.

கனவில் விபத்து நடக்கும்போலிருந்து நீ திடுக்கிட்டு விழித்துக் கொள்வதாகச் சொன்னாய். அகங்காரம் உன் ஆதரவு கிடைக்காமல் வீழ்ச்சியடைந்தது என்று இதற்குப் பொருள். இது ஓர் அழகிய கனவு. இதில் வரும் கார், மலை போன்றவை சிறப்பான அர்த்தம் உள்ளவை. ஆகவேதான் இக்கனவு அடிக்கடி வந்தது. இதை வெறும் கனவு என்று ஒதுக்கித்தள்ள முடியாது. இது வாழ்க்கையில் நிகழ்கின்ற விஷயம். அது கனவில் பிரதிபலிக்கிறது. கனவு என்பதை வாழ்க்கையில் நிகழும் சம்பவத்தின் நிழல் எனலாம். அது ஆழ்மனத்தில் படிந்துள்ளது எனலாம்.

கனவிலிருந்து நீ விழித்தது நீ ஆதரவற்ற நிலையை அடைந்துவிட்டாய் என்பதைக் காட்டுகிறது. 'நானே சமாளித்துக் கொள்வேன்' என்ற செருக்குடன் இருக்கும்வரை நீ உறக்கத்தில் இருப்பாய். 'செய்பவன் நான்' என்னும் கர்த்தா உணர்வு நீங்கியதும் கியர், பிரேக், ஸ்டீயரிங் ஆகியவற்றிற்குக் கட்டுப்படாமல் கார் ஓடும். அக்கணமே நீ விழித்துக் கொள்கிறாய். அகங்காரத்தை மயக்கம், தூக்கம் என்றால், கர்வம் ஒழிவதை நினைவு நிலை, விழிப்பு எனலாம்.

'கார் சிலசமயம் கீழ்நோக்கிச் செல்கையில் என்னால் கட்டுப்படுத்த முடியாமல் போகிறது' என்றாய். கீழிறங்குதல் அல்லது சரிவு என்றாலே நாம் பயப்படுகிறோம். ஏறுதலில் அகங்காரம் சுவை காண்கிறது. இறங்குதலில் அச்சம் நிறைந்த கவலை துவங்குகிறது. இதனால்தான் இளமை இனிக்கிறது. முதுமையில் அமைதி இழக்கிறோம். யாரும் கிழவனாக இஷ்டப்படுவதில்லை; ஆனால் அவ்வாறு

ஆகத்தான் நேரிடுகிறது. மேலும், மற்றவர்கள்தான் கிழவர்களாவது போல் நினைக்கிறோம். யாராவது நம்மை வயதானவராகத் தெரியவில்லையே என்று கூறினால் கேட்டு மகிழ்கிறோம்.

ஜவாஹர்லால் நேரு முதுமையிலும் 'நான் இளைஞனாகத்தான் உணர்கிறேன்' என்பார். அதை நாட்டு மக்களும் ஆமோதித்து மகிழ்ந்தனர். நாட்டின் பிரதமர் 'நான் 60-65 வயது இளைஞன்' என்று கூறுகையில் மக்கள் மகிழ்வது இயற்கைதானே. நமது மகிழ்ச்சி நாம் யாருமே கிழவராக விரும்பவில்லை என்பதன் அடையாளமாக விளங்குகிறது. நாம் எப்பொழுதும் ஏறுமுகமாகவே இருக்க விரும்பு கிறோம்.

ஆனால் யோசித்துப் பாரேன். ஏறினால் இறங்கத்தானே வேண்டும். இறங்காமல் ஏறியபடியே இருந்தால் பைத்தியம் பிடிக்கும். ஒவ்வொரு மலையின் அருகிலும் பள்ளத்தாக்கும் உண்டு. அதுபோல் இளமையுடன் முதுமையும் இணைந்தே உள்ளது. இளமையிலேயே நீடித்தால் பிரவாகம் தடைப்படும், தேக்கம் ஏற்படும், நாற்றமடிக்கும். முதியவராவது என்பது வாழ்க்கையின் இயற்கை. இளமையை வரவேற்றதுபோல் முதுமையையும் ஏற்றுக்கொள்.

வயோதிகம் என்றாலே எல்லோருக்கும் நடுக்கம் உண்டாகிறது. முதல் நரை தோன்றியதும் மனிதன் பயப்படுகிறான். நடக்கும்போது கால் முதல் முறையாகத் தடுமாறினால், விரல் நடுங்கினால் அவனது பயம் விருத்தியாகிறது. வாழ்க்கையில் சரிவு ஏற்படத் தொடங்கியதை உணர்கிறோம். நிரந்தரமாக இளைஞனாகவே இருப்போம் என்றல்லவா நாம் நினைத்தோம். என்றும் சிரஞ்சீவியாக உயிர்வாழ்வோம் என்றல்லவா நினைத்திருந்தோம். மரணம் அதிகத் தொலைவில் இருக்க முடியாது. அதன் தூதுவனாக நரையும் உடல் நடுக்கமும் வந்து விட்டனவே!

முதுமையை நாம் மறுக்க முயலுகிறோம். ஏனெனில் நாம் சாவை எதிர்கொள்ள தயாராக இல்லை. முதுமையை மரணத்திற்கு இட்டுச் செல்லும் மாடிப்படியாக அல்லது ஏணியாகப் பார்க்கிறோம். ஆனால் ஒரு விஷயத்தைக் கவனி. முதுமையை மறுப்பவன், சாவை மறுப்பவன் வாழ்க்கையையும் ஏற்பவனாக இருக்க மாட்டான். ஆனால் வாழ்க்கையில்தானே முதுமையும் மரணமும் அடுத்தடுத்து

வருகின்றன. இவை வாழ்க்கையின் கடைசி இரண்டு கட்டங்களாக உள்ளன. வாழ்க்கையெனும் தந்தியில் எழும் கடைசி ஒலியே மரணம். பிறகு வாழ்க்கையை நேசிப்பதும் சாத்தியப்படாது.

எப்பொழுதாவது எந்தப் பொருளாவது கீழே விழுந்தால், உன் கட்டுப்பாட்டில் எல்லாமும் அடங்கியிருக்கவில்லை என்பதை அப்போதுதான் தெரிந்து கொள்கிறாய். எல்லாம் சரிவர நடக்கும்வரை நீ உன்னை ஆதரவற்றவனாக நினைப்பதில்லை. மனைவி சண்டை போடுவதில்லை; குழந்தைகள் பள்ளியில் நன்றாகப் படிக்கிறார்கள்; தொழில் முன்னேற்றம் காண்கிறது; கடையில் வியாபாரம் நடக்கிறது. இந்நிலையில் உனக்கு யாருடைய ஆதரவும் தேவைப்படுவதில்லை. திடீரென வியாபாரம் சரிவடைகிறது. நீ திவாலாகிறாய். நிலைமை கட்டுக்கடங்காமல் போவது கண்டு நீ பயப்படுகிறாய்.

மனைவி அனுசரித்துப் போகிறாள். சண்டை-சச்சவு இல்லை. வாழ்க்கை மகிழ்ச்சியால் நிறைந்திருக்கிறது. அப்போது அகங்காரம் பலம் பொருந்தி விளங்குகிறது. மனைவி திடீரென ஒருநாள் சண்டை போட்டால், எதற்காவது உபத்திரவம் செய்தால், உன் குடும்பமென்னும் சங்கீதத்தில் அபசுரம் கேட்கும். குடும்பத்தைப் படகாக நினைத்தால் கவிழ்ந்துவிடப் போகிறதோ எனக் கவலைப்படுவாய்.

குடும்பத்தில் சிறு சண்டைக்கே நீ தீவிரமாக சிந்திப்பாய். ஏன் தான் கல்யாணம் செய்து கொண்டு இந்த வம்பில் மாட்டிக் கொண்டோமோ, இவள் செத்துப்போனால் நல்லது. வீட்டைவிட்டு இவள் வெளியேறி விட்டாலும் நல்லதுதான். சண்டைக்கும் சில நிமிடங்கள் முன்புகூட எல்லாம் சரியாக இருந்ததே. ஏனெனில் அப்போது அகங்கார அலை வீசிக் கொண்டிருந்தது.

சண்டையின்போது அகங்காரம் தோல்வியால் அஞ்சுகிறது. தன் கை ஓங்கியிருப்பதாக நினைத்து முதலில் அகங்காரப்பட்டவன் இப்போது சரிவினால் நிலைகுலைந்து போகிறான். ஆனால் தோல்வி, சரிவு அல்லது பின்னடைவு மனிதனைக் கடவுளை நோக்கி இட்டுச்செல்கிறது. நீ வெற்றி மேல் வெற்றி என ஏறுமுகமாக இருக்கையில் நீ ஆன்மிகவாதியாக மாட்டாய். திவாலானால் கடவுள் நினைவு எழும். தோல்வி ஏற்பட்டால் உனக்கு உன் உண்மையான நிலை முதல் முறையாகத் தெரியவரும். இந்த பிரம்மாண்டமான

பிரபஞ்சக் கடலில் நாம் ஒரு சிற்றலை, சிறு துளி. நமது வெற்றிக்கு என்ன மதிப்பு? நமது தோல்வியால் உலகுக்கு என்ன இழப்பு?

உன் கனவு வர்ணனையில் நீ டிரைவராக இருந்தும் உன் கால் ஆக்சிலேட்டர் மீது ஒருபோதும் அழுந்தவில்லை என்றாய். அது சரிதான். யார் காலும் ஆக்சிலேட்டர்மீது அழுந்தியிருக்கவில்லை. கார் நமது. ஆனால் ஆக்சிலேட்டர் மீது பரமாத்மாவின் திருவடியே பதிந்திருக்கிறது.

உனது நிலைமை தன் தந்தையிடம் கார் ஓட்டத் தன்னை அனுமதிக்கக் கேட்கும் சிறுவனதுபோல் உள்ளது. சிறுவன் டிரைவரின் இருக்கையில் உட்காருகிறான். தந்தை ஆக்ஸிலேட்டர் மீதும், பிரேக் மீதும் காலை வைக்கிறார். ஸ்டீயரிங்கையும் பிடித்துக் கொள்கிறார். சிறுவன் கர்வமாக, ஆனந்தமாக ஸ்டீயரிங்கை அசைக்கிறான். அப்போது அவன் தானே கார் ஓட்டுவதுபோல் குதூகலிக்கிறான். அவன் முகம் பிரகாசமாக இருக்கிறது. ஜன்னலுக்கு அப்பால் தென்படுபவர்கள் தான் காரோட்டுவதைக் காண வேண்டும் என்று முகத்தைத் திருப்பிக் காட்டுகிறான்.

இதுபோல் வாழ்க்கையென்னும் காரில் ஆக்சிலேட்டர் மீது உன் கால் பதிந்திருக்கவில்லை. ஸ்டீயரிங்கும் உன் கையில் இல்லை. பிரமை வசப்பட்ட அந்தச் சிறுவனின் நிலையில்தான் நீயும் உள்ளாய். வண்டி தானாகவே ஓடுகிறது. நீ அதைச் செலுத்த வேண்டியதில்லை. வண்டியை நீதான் ஓட்டுவதுபோல் தேவையின்றி சங்கடப்படுகிறாய்; வியர்வையில் நனைகிறாய். அந்தச் சிறுவனும் தானே வண்டி ஓட்டுவதாகக் கற்பனை செய்து அடிக்கடி 'ஹார்ன்' அடிக்கிறான். தான் ஹார்ன் அடிக்காவிடில் போக்குவரத்து குழப்பமாகிவிடும் என்று அவனுக்கு பிரமை. கார் எதன் மீதாவது மோதி விபத்து ஏற்படுமென அவன் நினைக்கிறான். அவன் ஹார்ன் அடிக்காவிடில் ஒன்றும் ஆகாதென்றும், வண்டியை அவன் ஓட்டவில்லை என்பதையும் அவன் அறிந்திருக்கவில்லை. வண்டியைச் செலுத்துவது வேறு ஒருவர். உலகளாவிய கடவுள் அதைச் செலுத்துகிறார். நாம் சாட்சிகளாக இருந்துவிடுவோம். நாம் கர்த்தா (செய்பவர்) இல்லை என்பதை உணர்ந்ததும் வாழ்க்கையின் விசித்திரம் குறித்து நமக்குச் சிரிப்பு வரும். வாழ்க்கையில் தன்னை கர்த்தாவாக நினைக்காவிடில் எல்லாம் வேடிக்கையாக இருக்கும்.

'வண்டி தானாகவே நகர்கிறது. தடுக்க முயலுகிறேன். ஆனால் கட்டுப்படுத்த முடியவில்லை' எனக் கதறுகிறாய். நீ கட்டுப்படுத்து வதைக் கைவிட வேண்டும் என்பதுதான் என் உபதேசம். 'உன் கைகள் சிறியவை. இவற்றால் நீ காரைக் கட்டுப்படுத்த முடியாது. நீ பொறுப்பைக் கடவுளிடம் விடு. அவர் கட்டுப்படுத்தட்டும். நீ பிறப்ப தற்கு முன்பும் உலகம் இயங்கித்தான் வந்தது. பூக்கள் மலர்ந்தன. சந்திரன் தோன்றியது. மழை பெய்தது. வெயிலடித்தது நட்சத்திரங்கள் மின்னின. சூரியன் உதித்தது. நீ இல்லாத காலத்திலும் இவை நடைபெற்றன. இப்பொழுது நீ உள்ளாய். உன் காலத்திற்குப் பிறகும் இவை தொடர்ந்து நடைபெறும். உலகில் உன்னை மையப்படுத்திக் கொண்டு தேவையில்லாத கவலைக்கு ஆளாகிறாய்.'

ஒரு பல்லி ஓர் அரசனின் அரண்மனையில் வசித்துவந்தது. ஆகவே தன்னை அரச பல்லியாக நினைத்து கர்வப்பட்டது. தான் அரசனுக்கு எந்த விதத்திலும் தாழ்ந்ததல்ல என நினைத்தது. ஆகவே உள்ளூர் பல்லிகள் அந்த அரச பல்லியிடம் மரியாதையாக நடந்துகொண்டன. பல்லி உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்கு அரச பல்லிக்கு அழைப்பு வரும். திறப்பு விழா, புதுவீடு, திருமணம், குழந்தை பிறப்பு என்று எத்தனையோ அழைப்புகள். ஆனால் அரச பல்லி ஒரு நிகழ்ச்சிக்கும் அரண்மனையை விட்டு வெளியே செல்லாது. அழைக்க வரும் பல்லிகளிடம் அது, "அரண்மனையை விட்டு நான் எப்படி வர முடியும்? அரண்மனையின் மேற்பகுதியின் முழு பாரத்தையும் நான்தானே தாங்குகிறேன். நான் நகர்ந்து வெளியேறினால் மொத்த அரண்மனையும் விழுந்துவிடுமே," என்று கவலையுடன் சொல்லும்!

நாமும் அப்படித்தான் எதை-எதையோ தாங்கி நிற்பதுபோல் கற்பனை செய்கிறோம். ஆனால் எதுவும் நிலைத்து நிற்பது நாம் தாங்குவதால்தான் என்று சொல்ல முடியாது. நாம் இல்லாவிடிலும் வீடும் உலகமும் அப்படியேதானிருக்கும். ஆனால் அகங்காரம் காரணமாக இதை நாம் ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை. நாம் கண்களை மூடினால் உலகம் இருண்டுவிடுமென நினைக்கிறோம். அவ்வாறெல்லாம் நடக்காது.

**வ**ர்னர் இர்ஹார்ட் எழுதியுள்ள ஒரு கதை. அமெரிக்காவில் மலைப் பிரதேசத்தில் வசித்த காட்டுவாசிகளுக்கு ஒரு குரு இருந்தார். அவரிடம் ஒரு கம்பளம் இருந்தது. அதைக் காட்டுவாசிகள் மாயக் கம்பளம் எனக் கருதினர். அவர் தினமும் சூரியன் மறையும் நேரத்தில் கம்பளத்தை ஒருமுறை சுழற்றுவார். உடனே வானத்தில் நட்சத்திரங்கள் மின்னத் தொடங்கும். அவர் கம்பளத்தைச் சுழற்றுவது வீட்டுக்குள்தான். நட்சத்திரங்கள் கண்ணில் தெரிவது வெளியே. ஆகவே காட்டுவாசிகள் அவரிடம் பயப்பட்டனர். என்றைக்காவது அவர் கம்பளத்தைச் சுழற்றாவிடில், அல்லது அதைத் தூக்கி எறிந்துவிட்டால், இதனால் நட்சத்திரங்கள் தோன்றாவிடில் பிறகு என்ன ஆகும்?

பக்கத்துக் காட்டில் வசிப்பவர்கள் பொறாமை கொண்டனர். அவர்களில் ஒருவன் சென்று கம்பளத்தைத் திருடி எடுத்துப் போய்விட்டான். குரு பெரிய சங்கடத்தில் மாட்டிக் கொண்டார். பல முறை சொன்ன பொய் உண்மையாகத் தோன்றுவதுபோல், குருவும் தினம்-தினம் கம்பளத்தைச் சுழற்றி அதனால்தான் நட்சத்திரங்கள் உதிக்கின்றன என்னும் பிரமைக்கு அவரும் உள்ளானார். காட்டு வாசிகள் அடுத்து என்ன செய்வது என்று கவலைப்பட்டனர். வாழ்க்கை குழப்பமாகிவிடுமே எனக் கலங்கினர். ஆனால் அப்படியெல்லாம் ஆகிவிடவில்லை. சூரியன் மறைந்ததும் சட்டெனத் தாரகைகள் தோன்றின. பார்த்தார் குரு. இனி நம் பருப்பு வேகாது என்று தெரிந்தது. அவ்வளவுதான். அவர் தற்கொலை செய்துகொண்டு விட்டார்! மக்கள் வாய்விட்டுச் சிரித்தார்கள். ‘நாம் படுமுட்டாள்கள். நட்சத்திரங்கள் தாமாகவே தோன்றி வந்திருக்கின்றன. கம்பளத்திற்கும் அவை உதிப்பதற்கும் சம்பந்தம் இல்லை. சூரியன் மறையும் நேரம் நட்சத்திரங்கள் தோன்றிவிடுவதால் அந்த நேரம் .பார்த்து இவர் கம்பளத்தைச் சுழற்றி நம்மை ஏமாற்றி இருக்கிறார்" என அவர்கள் தமக்குள் பேசிக் கொண்டனர்.

நீ செய்தாலும் செய்யாவிட்டாலும் நடப்பது நடந்தே தீரும். எதையும் செய்வது உன் வசமில்லை. என்றைக்கு உனக்கு இது புரியவருகிறதோ, என்றைக்கு உன் கம்பளம் திருடப்பட்டு விடுகிறதோ, கார் நழுவுவதைத் தடுக்க முடியவில்லையோ, அன்றிலிருந்து உனக்கு கார் கனவு வராது. ‘நாம் தேவையில்லாமல் வாழ்க்கையில் மிகவும் அலட்டிக் கொண்டோம். வாழ்க்கை அதன் போக்கில் சென்றபடிதான்

இருக்கிறது. வாழ்க்கை அழகாகவே செல்கிறது. நாம் தேவையின்றிக் கூச்சல் போட்டபடி இருந்தோம்,'' என்றெல்லாம் நமக்குப் புரியவரும்.

ஏன் கூச்சல் போட்டோம் என்றால் நாம் இல்லாவிடிலும் உலகம் இயங்கியபடிதான் இருக்கும் என்பதை நமது அகங்காரத்தால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. பல்லி தான் அகன்றதும் அரண்மனையின் மேற்பகுதி விழுந்துவிடும் என நினைத்ததுபோல நாம் இல்லாமல் உலகம் இயங்காது என நினைத்தோம்.

அரண்மனையின் மேற்பகுதியை நீ தாங்கவில்லை. கம்பளத்தைச் சுழற்றி நீ நட்சத்திரங்களை உதிக்கச் செய்யவில்லை. இந்த பிரமையைக் கைவிடுவதுதான் ஆன்மிகம். கடவுள் இருப்பதை நீ ஒப்புக் கொண்டாலும், ஏற்காவிடிலும், 'என்னால்தான் எல்லா காரியங்களும் நடைபெறுகின்றன' என்ற பிரமையைக் கைவிட்டாலே போதும். நீ ஆன்மிகவாதியாகிவிட்டாய்; நீ கடவுளை உணர்ந்து விட்டாய்; உன் மனத்தில் கடவுள் அவதரித்துவிட்டார்; நீ அவரது சந்நிதியை அடைந்துவிட்டாய்; கடவுளின் தரிசனம் கிடைக்க அதிக நேரம் ஆகாது என்றெல்லாம் கூறலாம்.

**மூன்றாவது கேள்வி: (கேட்பவர் சுவாமி யோகசின்மயர்)**

> **நம் நாட்டின் அநேக ஆசிரமங்களில் சாதகர் களுக்குச் சில பயிற்சிகள் கட்டாயமாக்கப் பட்டுள்ளன என்பதை நான் கண்டுள்ளேன். அவற்றை அவர்கள் கட்டாயமாகப் பின்பற்ற வேண்டியுள்ளது. ஆனால் உங்களுடைய ஆசிரமத்தில் எந்தவிதக் கட்டுப்பாடும் தென்படவில்லையே, காரணம் என்ன?**

நான் இங்கே உங்கள் முன்னால் உள்ளேன். நான் உங்கள் கட்டுப்பாட்டின் அடையாளமாக உள்ளேன். நான் உலகைவிட்டு நீங்கியதும் விதிமுறைகள், ஒழுங்கமைவு, கட்டுப்பாடு ஆகியவை உங்களுக்குத் தேவைப்படும். ஆள்பவன் இருக்கும்போது ஆட்சி அமைப்பு அவசியமில்லை. நான் போனபிறகு உங்களால் கட்டுப் பாட்டு விதிமுறைகள் இல்லாமல் வாழ முடியாது. உங்களிடம் அடிமை மனப்பான்மை வேரூன்றி உள்ளது. 'நீங்கள் சுதந்திரமாக இருங்கள்' என்று நான் நூற்றுக்கணக்கான தடவை சொல்லியும் நீங்கள் விதிமுறைகள் கேட்கிறீர்கள்.

நீ காலை ஐந்து மணிக்கு எழுந்து விடுவதால் ஞானம் கிடைத்துவிடுமா? இதென்ன மடத்தனம்! காலையில் எவ்வளவு சீக்கிரம் எழுந்தாலும் அதற்கும் ஞானத்திற்கும் சம்பந்தமில்லை. கடிகாரம் ஞானம் பெறுவதற்கான கருவியன்று. குறைந்த அறிவுள்ளவர்கள் காலூன்றி நிற்க ஏதாவது ஓர் ஆதாரம், தர்க்கம் தேவைப்படுகிறது. காலையில் ஐந்து மணிக்குக் கண் விழிப்பது சிரமமாக இருந்தாலும் அதில் அவர்களுக்கு மகிழ்ச்சி கிடைக்கிறது. காரை மேல்நோக்கிச் செலுத்த சிரமப்படுவதுபோல்தான் இதுவும்.

நான் சாதகர்களை தினமும் காலையில் சிரஸானம் செய்யும்படி கட்டளையிட்டால் எல்லோரும் தலைகீழாக நிற்பார்கள்! அந்த நிலையில் எல்லோரும் பார்க்கக் குரூபமாகத் தெரிவார்கள். ஆனால் தலைகீழாக நிற்பது கஷ்டமானது. கழுத்தும் வலிக்கும். ஆனாலும் சாதகர்கள் அதில் சுவை காண்பார்கள். ஏனெனில் ஏதாவது ஒரு பயிற்சி நிச்சயிக்கப்படுவதை அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். அதன் மூலம் மோட்சத்தை நோக்கித் தாங்கள் முன்னேறுவதாக அவர்கள் கற்பனை செய்கிறார்கள்.

'நீ சுதந்திரமானவன்' என்றே நான் உறுதியாகக் கூறுகிறேன். ஆனால் ஐந்து மணிக்கு எழுந்திருப்பது உனக்கு ஆனந்தமாக இருந்தால் தாராளமாக எழுந்திரு. இதனால் மோட்சம் கிடைக்கும் என்று பிரமை கொள்ளாதே. தலைகீழாக நிற்பது உனக்குப் பிடித்திருந்தால் தாராளமாக நில். நான் உன்னைத் தடுக்கவில்லை. இதனால் உனக்கு பூரண புத்தி சித்திக்கும் என்று நான் கூறமாட்டேன். நீ ஞானம் பெற, மோட்சம் பெற மலிவான உபாயங்களை நாடுகிறாய். நான் உனக்கு எந்த உபாயமும் தருவதாக இல்லை.

நான் உள்ளவரையிலும் இந்த ஆசிரமத்தில் விதிமுறைகளோ, கட்டுப்பாடோ இருக்காது. இங்கு யாரும் இஷ்டப்படி இருக்கும் அராஜகம் நிலவும். கட்டுப்பாடின்றித் திரிவது துடிதுடிப்பான வாழ்க்கையின் சின்னம். நீ என்னவாக வேண்டுமானாலும், எப்படி ஆக வேண்டுமானாலும் ஆகு, தடுக்கவில்லை. ஆனால் நன்றாக உணர்ந்து விழிப்புடன் அவ்வாறு ஆக வேண்டும்.

இக்கேள்வியைக் கேட்ட சுவாமி யோக சின்மயர் உயிரோட்டம் இல்லாத ஆசிரமங்களில் வசித்துக் கசப்பான அனுபவம் பெற்றவர். சில

இடங்களில் ஒருவேளைதான் சாப்பிடுகிறார்கள்; சில இடங்களில் அதிகாலை மூன்று மணிக்கே எழுந்து விடுகின்றனர்; தலை கீழாக நிற்கின்றனர்; யோகாசனம் செய்கின்றனர்; வெவ்வேறு வகை யோகத்தில் ஈடுபடுகின்றனர். இவை எல்லாமுமே மேலேயிருந்து கட்டாயப்படுத்தப் பட்டு மேற்கொள்ளப்படுகின்றன. செய்யாவிடில் பாவம், தண்டனை கிடைக்கும் என்றும் செய்தால் புண்ணியம், நற்பலன் கிடைக்கும் என்றும் பயமுறுத்தப்படுகின்றனர்.

நான் உனக்கு சுதந்திரம் கொடுக்கிறேன். எக்காரணத்தாலும் நீ ஒரு குற்றவாளி என்று நிறுவ நான் விரும்பவில்லை. ஏனெனில் விதிமுறை தயாரித்து அளித்தால், அதன் பின்னணியில் குற்ற உணர்வும் சேர்ந்தே வரும். என்றாவது விதிமுறைப்படி காலை ஐந்து மணிக்கு நீ எழ முடியாமல் போனால், கட்டளையை மீறிவிட்டோமே, குற்றவாளியாகி விட்டோமே என்னும் உணர்வு தோன்றும். ஐந்து மணிக்கு எழுவதால் ஒன்றும் கிடைத்துவிடப் போவதில்லை. ஞானம் அத்துணை மலிவான ஒரு பொருளன்று. ஆரோக்கியக் கண்ணோட் டத்துடன் வேண்டுமானால் ஐந்து மணிக்கு எழு. அதற்கும் மோட்சத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. காலை ஐந்து மணிக்குப் புதுக்காற்று வீசுகிறது. பொழுது அழகாக விடிகிறது. கலை உணர்வு, அழகியல் உணர்வு உள்ளோர் காலையில் ஐந்து மணிக்கு எழட்டும். ஆனால் இந்த உணர்வு ஆன்மிகத்துடன் தொடர்புடையதன்று. கவி உள்ளம் படைத்தவர்கள் அதிகாலையில் எழலாம். அறிஞர்கள்-அறிவிலிகள் எல்லோரும் உறக்கத்தில் இருப்பார்கள். மனிதனால் மாசுபடாத நேரம் அது. கடவுள் படைத்தபோது உலகம் இருந்தது போல் இந்த அதிகாலைப் பொழுதும் காணப்படுகிறது. வாழ்க்கையை ரசிப்பவர்கள் காலையில் எழுவார்கள்.

நான் சொல்வதைச் சரியாகப் புரிந்துகொள். ஐந்து மணிக்கு எழுந்திருக்காதே என்று நான் உன்னைத் தடுக்கவில்லை. இயற்கையை நேசிப்பவர்கள் நிச்சயமாக அதிகாலையில் எழுந்துவிடுவார்கள். ஆனால் இது கட்டுப்பாட்டின்கீழ் வராது. எழுவது உன் இஷ்டம். எழுந்தால் ஆரோக்கிய லாபம் பெறுகிறாய். ஆனால் நீ ஐந்து மணிக்கு எழுந்துவிடுவதால் மகாஞானி ஆகிவிட்டாய் என்று உனக்கு நற்சான்றிதழ் தரமாட்டேன். ஆரோக்கியம் மேம்படுவதே பாராட்ட வேண்டிய ஒன்று. எழுந்திருக்காவிடில் நீ விடியலின் எழிலை ரசிக்கத் தவறிவிட்டாய் என்று அர்த்தம். வெளியில் விடியலின் இனிய ஒலிகள்

கேட்கின்றன. பாலசூரியன் தோன்றுகிறான். நீயோ குறட்டைவிட்டுக் கொண்டிருந்தாய். துயில் மயக்கத்தில் ஆழ்ந்திருந்தாய். இதுவே உனக்கு தண்டனை. நான் வேறு உன்னைக் குற்றவாளி என நிரூபித்துக் கூடுதலாக தண்டனை தர வேண்டிய தேவை என்ன?

முல்லா நஸ்ருத்தீன் ஒருநாள் தனது காரில் சென்று கொண்டிருந்தார். அளவு மீறிய வேகத்தில் அவர் காரைச் செலுத்தினார். ஒரு போலீஸ்காரர் காரைத் தடுத்து நிறுத்திவிட்டார். பின்னிருக்கையில் முல்லாவின் மனைவி உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு முல்லா மீது கோபம் வெடித்தது. போலீஸ்காரர் காதில் விழும்படி அவள் கத்தினாள்:

"உங்களுக்கு நூறு தடவை எச்சரித்தாகி விட்டது. கண் என்ன குருடா? இப்படி வேகமாகக் கார் ஓட்டுகிறீர்களே. எதுவும் கண்ணில் படவில்லையா? வலப்பக்கம் திரும்பு, இடப்பக்கம் திரும்பு, வேகத்தை மட்டுப்படுத்து என்று கத்தினேனே. ஸ்பீடு மீட்டர் கண்ணுக்குத் தெரியவில்லையா? எதிரே வரும் வண்டிகளின் விளக்கைப் பார்த்து நம் காரின் விளக்கை அணைப்பதில்லை. வகையாக போலீஸிடம் மாட்டிக் கொண்டோம். காரையும் பிடித்துக் கொள்வார்கள், தண்டனையும் கொடுப்பார்கள்."

முல்லா அதிர்ச்சியிலிருந்தார். போலீஸ்காரர் அவரது தோளில் தட்டிக் கொடுத்தார். "பரவாயில்லை, நீங்கள் காரை மேற்கொண்டு ஓட்டிச் செல்லலாம். உங்களுக்குத்தான் தண்டனை கொடுக்கப்பட்டு விட்டதே. புதிதாக என்ன தண்டனை தரவேண்டும்? இப்படி ஒரு மனைவியே போதும்!" என்றார் கனிவாக.

இதேபோல், அதிகாலையில் எழாதவன் இயற்கையின் அழகை ரசிக்கத் தவறியதையே ஒரு தண்டனையாக அடைந்துவிடுகிறான். அவனை பாவி, குற்றவாளி, ஆசிரம விதியை மீறியவன் என்றெல்லாம் குரு ஏன் கூடுதல் தண்டனை அளிக்க வேண்டும்? ஆகவே நான் உனக்குக் கட்டுப்பாடு எதுவும் விதிப்பதில்லை. நீ எச்செயல் புரிந்தாலும் மந்தை ஆடாக இராமல் விழிப்புடன் செய் என்று மட்டுமே கூறுகிறேன்.

கட்டாயப் பயிற்சி பற்றி சொல்ல வேண்டியுள்ளது. அந்த மாதிரிக் கட்டாயம் எதுவும் என் ஆசிரமத்தில் கிடையாது. கட்டாயம்

என்று ஒன்றைச் சொன்னால் அது விலங்குபோல் ஆகிவிடுகிறது. இவ்வாறு நாம் பல அழகிய பழக்கங்களைச் சிதைத்து விட்டோம். ஒன்றை வலுக்கட்டாயமாகச் செய்ய வைத்தால் அதன் சுவையே நீங்கிவிடுகிறது. ஊருக்குப் போகிறாய். தாயாரின் காலைத் தொட்டு வணங்குகிறாய். இது கட்டாயமென்று செய்தால், தவிர்க்க முடியாத சடங்காகக் கருதினால், சந்தோஷம் ஏற்படாது. பாசத்துடன் வணங்கு வது-அம்மா என்பதால் என்றுமே வணங்குவது-வேறு விஷயம்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் எங்கோ வெளியில் அலைந்துவிட்டு அப்போதுதான் வீடு திரும்பினார். அவர் கண்ட காட்சி அவரைத் திகைக்கவைத்தது. அவருடைய நண்பன் ஒருவன் அவர் மனைவியை முத்தமிட்டுக் கொண்டிருந்தான்! அப்படியே நின்றுவிட்டார். அவர் மனைவியும் நண்பனும் பயத்தால் நடுங்கினார்கள். நண்பன் சமாளித்தபடி முல்லாவிடம், "ஏன் வாயடைத்துப் போய் நிற்கிறீர்கள்? ஏதாவது சொல்லுங்களேன்," என்று கேட்டுக் கொண்டான்.

முல்லா அனுதாபக் குரலில் சொன்னார், "எனக்குத்தான் தலைவிதி. நீ இப்போது செய்ததை நான் கட்டாயமாகச் செய்ய வேண்டியுள்ளது. ஆனால் உனக்கு என்ன கேடு? நீ ஏன் இப்படிச் செய்தாய்? உன் புத்திக் குறைவைப் பார்த்து உன்மீது எனக்கு இரக்கம் தான் உண்டாகிறது. அவள் என் மனைவி ஆகவே முத்தமிட வேண்டிய கட்டாயமுள்ளது. உனக்கு என்ன கட்டாயம் வந்தது?"

கட்டாயமாகச் செய்ய வேண்டிய காரியம் சுவை இழக்கிறது. முத்தம், தழுவுதல், கொஞ்சுதல் எல்லாமே கட்டாயப்படுத்தப்பட்டால் கஷ்டம் தருகின்றன.

**நா**ன் ஒரு சமஸ்கிருதப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியராக இருந்தேன். அங்கே சமஸ்கிருத பண்டிதர்களின் ஆட்சி நடைபெற்று வந்தது. நான் அதற்கு முன் இருந்த இடத்தில் உபத்திரவம் செய்ததால் அரசாங்கம் இந்தப் பள்ளிக்கூடத்திற்கு என்னை மாற்றிவிட்டது. ஆறு மாதத்தில் அரசாங்கம் தவற்றை உணர்ந்து அங்கிருந்து என்னை அகற்றிவிட்டது! அங்கும் நான் தொல்லை கொடுத்ததுதான் காரணம்! அந்தப் பள்ளிக்கூடத்துப் பண்டிதர்கள் விசித்திரமான நிலையை உருவாக்கியிருந்தார்கள்.

வெளியில் தங்க இடம் கிடைக்காததால் நான் பள்ளிக்கூடத்து விடுதியில் அறை எடுத்துக் கொண்டேன். அங்கு 70 மாணவர்கள் வசித்தனர். எல்லோரும் அதிகாலை மூன்று மணிக்குக் கட்டாயமாக எழுந்துவிட வேண்டும். ஏனெனில் அங்கு முற்கால குருகுல முறை நிலவியது. குளிர், உஷ்ணம், மழை என சூழ்நிலை எப்படியிருந்தாலும் மூன்று மணிக்கு எழுந்துதான் ஆகவேண்டும். அடுத்து, எல்லோரும் கிணற்றடிக்குப் போய்க் கிணற்றின் குளிர்ந்த நீரில்தான் குளிக்க வேண்டும்.

விடுதியில் சேர்ந்த மறுநாள் நானும் மூன்று மணிக்கு எழுந்து கிணற்றடிக்குச் சென்றேன். நான் அப்போது வயதில் சிறியவன். விடுதிக்குப் புதியவன். ஆகவே மற்ற மாணவர்கள் என்னைப் பொருட்படுத்தவில்லை. அவர்கள் குளித்தபடியே சுதந்திரமாகத் தங்கள் பிரின்சிபலைத் திட்டித்தீர்த்தனர்! காதால் கேட்க முடியாத அளவிற்கு ஆபாசமான திட்டுகள். கடவுளையும் திட்டினார்கள். பிறகு அவர்கள் விடுதிக்குத் திரும்பி, வரிசையில் நின்று காலை பிரார்த்தனை செய்வார்கள்.

நான் பிரின்சிபலைச் சந்தித்தேன். "உங்களுக்கு நரகம்தான் கிடைக்கும்," என்றேன். "என்ன விஷயம்?" என்று அவர் கேட்டார். "விடுதி மாணவர்கள் எழுபது பேரும் அதிகாலையில் எழவேண்டிய கட்டாயம் காரணமாக உங்களையும் கடவுளையும் மோசமாகத் திட்டுகின்றனர். உங்களைத் திட்டுவது சரிதான். ஆனால் கடவுளுக்கும் திட்டு விழுவதற்கு நீங்கள்தானே காரணம். பிறகு உங்களுக்கு நரகம்தானே கிடைக்கும். மாணவர்களை இப்படிக் கட்டாயப்படுத்துவது ஆபத்து," என்று விளக்கினேன்.

அவர் என் வாதத்தை ஏற்கவில்லை. மாணவர்கள் தாமாக விரும்பி சந்தோஷமாகத்தான் மூன்று மணிக்கு எழுந்து வருகிறார்கள் என்றார். "சரி, நான் மாணவர்களுக்கு ஓர் அறிவிப்பு செய்கிறேன். அதிகாலை மூன்று மணிக்கு நான் கிணற்றடிக்குச் செல்கிறேன். நீங்களும் வந்து பாருங்கள்," என்று அவரைக் கேட்டுக் கொண்டேன்.

அறிவிப்புப் பலகையில் நோட்டீஸ் ஒட்டினேன் "யார் மூன்று மணிக்குக் குளிக்க விரும்புகிறார்களோ அவர்கள் மட்டும் எழுந்து கிணற்றடிக்கு வந்தால் போதும். அதிகாலை பிரார்த்தனையில்

கலந்துகொள்ள விரும்புகிறவர்கள் மட்டும் எழுந்தால் போதும். இன்றிலிருந்து இவை இரண்டும் கட்டாயமில்லை' என்று அறிவித்தேன்.

மறுநாள் அதிகாலையில் கிணற்றடியில் பிரின்சிபலையும் என்னையும் தவிர வேறு யாரும் வந்திருக்கவில்லை! பிரின்சிபலுக்கு வாயடைத்துப் போய்விட்டது. ஆனால் நீண்ட காலமாக நடைமுறையில் இருந்த வழக்கத்தில் குழப்பமுண்டாக்கியதற்காக அங்கிருந்து என்னை மாற்றும்படி அவர் அரசாங்கத்திற்குப் பரிந்துரை செய்தார்.

இது சரியா, பிரார்த்தனையைக் கட்டாயப்படுத்தலாமா? அன்பைக் கட்டாயப்படுத்த முடியுமா? பூஜையைத் திணிக்கலாமா? சிறை வாழ்க்கையில்தான் கட்டாயங்களெல்லாம் உள்ளன. வாழ்க்கையில் எதுவும் கட்டாயமில்லை. எந்த விஷயத்தையும் மறந்தும்கூட வலியுறுத்தாதே. கட்டாயப்படுத்தினால் அதன் மதிப்பு நீங்கிவிடும்.

வாழ்க்கை மிகவும் மென்மையானது. பூவைப்போல் மிருதுவானது. அதன் மீது கட்டாயம் என்ற பாறையைத் தூக்கி வைக்காதே. வாழ்க்கைப் பூ நசுங்கிவிடும். இங்கே என் ஆசிரமத்தில் உள்ள சிலர், "நீங்கள் காலையில் நிகழ்த்தும் சொற்பொழிவிற்கு நாங்கள் கட்டாயம் வரவேண்டுமா?" என்று கேட்பதுண்டு.

என் பதில்-"அப்படி மறந்தும் வராதீர்கள். கட்டாயமா? என் பேச்சைக் கேட்பதா? உங்கள் கேள்வி ஒருவகையில் என்னைத் திட்டுவதுபோல் அல்லவா உள்ளது. விரும்பினால் வா. இஷ்டமில்லையேல் வரவேண்டாம். தொலைவிலிருந்தெல்லாம் மக்கள் சொற்பொழிவைக் கேட்க வரும்போது, ஆசிரமத்தில் வசித்து கொண்டு நாம் போகவில்லையே என்று குற்ற உணர்வு கொள்ள வேண்டாம். இதைப் பற்றிக் கவலைப்படாதே. மனத்தில் தூண்டுதல் ஏற்படும் பொழுது மட்டும் வந்தால் போதும். மாதத்தில் ஒருமுறை வந்தால்கூட நன்மையே. கட்டாயத்தின்பேரில் ஒரு மாதத்தில் நீ பெறும் பலனை அந்த ஒரே நாளில் பெறலாம். ஏனெனில் பெறுதல் என்பது அன்பின் வழியே நடைபெறுவதாகும்.

இங்கே எதுவும் கட்டாயமில்லை. வெளியிலிருந்து சுமத்தப்படும் கட்டுப்பாடு விலங்கு மாட்டுவதற்கு சமம். நான் உன்னை தியானம் செய்யச் சொல்கிறேன். இது ஒரு கட்டளையில்லை. நான் தினமும்

தியான இன்பம் பற்றி கூறுகிறேன். இதற்குமேல் உன் இஷ்டம். தியானம் பற்றி இவ்வளவு புகழ்கிறேன். தியானம் செய்ய விரும்பினால் செய். இஷ்டமில்லையென்றால் வேண்டாம். ஆனால் கட்டாயம் நீ தியானம் செய்தாக வேண்டும் என்று வற்புறுத்த மாட்டேன். வற்புறுத்தப்படும் விஷயம் முள்போல் உறுத்தும். தியானம் புனிதமான விஷயம். வெறுக்கப்படும் அளவிற்கு அதைத் திணிக்கக் கூடாது.

இங்கே என் ஆசிரமத்தில் எந்தக் கட்டுப்பாடும் இல்லை. பயிற்சிகளும் இல்லை. பயிற்சிகள் அகங்காரத்தை வளர்க்கின்றன. ஆன்மிகத்துக்கென விசேஷப் பயிற்சி கிடையாது. நான் சொல்வது என்ன? விழிப்புப் பெறு-இதுவே ஞானம், இதுவே தியானம், இதுவே மோட்சம்.

நீ விழிப்புப்பெற்று வாழ்க்கை நடத்து. தியானம் 24 மணி நேரமும் உன் வாழ்க்கையில் பரவி நிற்கும். தியானம் என்பது காலையில் சிறிது நேரம் செய்துவிட்டு மறக்கும் விஷயமில்லை. தியானம் உனக்குள் பெருக்கெடுத்துப் பாய வேண்டும். உன்னுடைய பணிகளையெல்லாம் ஒரு மாலைபோல் கட்டும் கயிறாக தியானம் அமைய வேண்டும். மாலையில் பூக்கள் கண்ணுக்குத் தெரியும். நார் தென்படாது. தியானமும் வெளிப்படையாகத் தனித்துத் தெரியாமல், எல்லா பூக்களையும் கட்டும் நார்போல், அன்றாடம் நிற்றல்-அமர்தல், உண்ணுதல்-பருகுதல், நடத்தல், பேசுதல், கேட்டல் என்று நாம் மேற்கொள்ளும் பணிகள் அனைத்திலும் ஊடுருவியிருக்க வேண்டும்.

என் கண்ணோட்டத்தில் தியானம் என்பது விழிப்பு நிலை, சாட்சி நிலைப்பாடு.

நான் காலமான பிறகு இங்கும் நிச்சயமாக உபத்திரவம் தொடங்கும். யாராவது ஒரு 'யோகி' என் ஆசனத்தில் உட்காருவார். இந்த ஆசனம் காலியாக இருக்கப்போவதில்லை. யாராவது அமர்ந்து விதிமுறைகளையும் கட்டுப்பாடுகளையும் அமல்படுத்துவார். அத்துடன் இந்த இடத்திற்கும் எனக்குமுள்ள சம்பந்தம் நீங்கிவிடும். கட்டாயப்படுத்திப் பயிற்சிகள் மேற்கொள்ளப்பட்டால் இது எனது ஆசிரமமாக இருக்காது. உயிர் சக்தி இல்லாத மற்ற எல்லா ஆசிரமங்களுடன் இதுவும் ஒன்றாக இணைந்துவிடும். நான் உயிருடன் உள்ளவரையிலும் அவ்வாறு நடக்காது. நான் உயிருடன் உள்ளதுபோல்

உன்னையும் உயிர்த்துடிப்புடன் உள்ளவனாகக் காண விரும்புகிறேன். உன்னை சராசரி சாதகராக நீ கருதக்கூடாது. நீ உன்னைத் தனித்தன்மை வாய்ந்த சித்த புருஷர் என்றே நினை.

**நான்காம் கேள்வி: (கேட்பவர் ஹேமா)**

> **ஆபூ* ஆசிரமத்தில் கிடைத்த ஆழ்ந்த அனுபவம் நிரந்தரமான இன்பம் அளிக்கிறது. அதை வர்ணிக்க முடியவில்லை. வாழ்க்கையின் முழுப் பயனைப் பெற்றுவிட்டேன். அந்த மகாசுக மாகடலில் நீந்துகிறேன்.**

ஹேமாவுக்கு ஆபூ ஆசிரமத்தில் கிடைத்த அனுபவம் நிச்சயமாக அபூர்வமானது. ஜென் சம்பிரதாயத்தில் கூறப்படும் சமாதியின் முதல் அனுபவம் ஹேமாவிற்கு வாய்த்திருக்கிறது. திடீரெனக் கிடைத்த இந்த அனுபவத்தை அவளாலேயே நம்ப முடியவில்லை. மூன்று நாள்கள் அவள் சிரித்தபடியே இருந்தாள். அவளது சிரிப்பு பார்க்கத் தகுந்ததாய் இருந்தது. அந்தச் சிரிப்பொலியை வேறு எங்கும் கேட்க முடியாது.

அந்த சமயம் நான் அவளிடம் 'இது சமாதி நிலை' என்று தெரியப்படுத்தவில்லை. இன்றுதான் சொல்கிறேன். அப்போது சொல்லியிருந்தால் அவளது அகங்காரம் வலுவடைந்திருக்கும். இப்போது அந்த பயம் இல்லை. அந்த சமயம் அவளது சிரிப்பு தெய்விகமாக இருந்தது. அவளால் சிரிப்பை நிறுத்த முடியவில்லை.

போதிதர்மரின் வாழ்க்கையிலும் இப்படி நடந்தது. அவருக்கு முதல் முறையாக சமாதி நிலை வாய்த்ததும் மூன்று நாள் சிரித்தபடியே இருந்தார். தனக்கு உள்ளே யாரோ இருந்துகொண்டு கிச்சுகிச்சு மூட்டுவதுபோல் தொடர்ந்து சிரித்தார்.

ஹேமாவின் குடும்பத்தினர் கவலைப்பட்டனர். பைத்தியம் பிடித்து விட்டதோ என அஞ்சினர். சேர்ந்தாற்போல் இரண்டு நிமிடம்கூட நம்மால் சிரிக்க முடியாது. நமக்கு அழுதுதான் பழக்கம். ஒருவன் தொடர்ந்து மூன்று நாள் அழுதால்கூட அவனைப் பைத்தியம் என்று கூறமாட்டார்கள். இதை ஒப்புக்கொள்ளும் நாம் தொடர்ந்து

* ஆபூ குன்று, ஸிரோஹீ மாவட்டம், ராஜஸ்தான்.

மூன்று நாள் சிரிப்பை அங்கீகரிப்பதில்லை. நம் சமூகத்தில் ஆனந்தமாக இருப்பது ஆபத்து! எப்பொழுதும் இங்கே மக்கள் விசனப்பட்டுக் கொண்டே இருப்பார்கள். ஆனந்தம் இங்கே கிடையாது என்றும், பைத்தியங்கள்தான் சந்தோஷமாக இருப்பார்கள் என்றும் மக்கள் முடிவுகட்டி விட்டார்கள்.

மனத்தத்துவ அறிஞரான ஸிக்மண்ட் ஃப்ராய்ட் வாழ்க்கை முழுதும் நிகழ்த்திய ஆராய்ச்சிகளின்படி மனிதனால் சுகமாக இருக்க முடியாது என்று தீர்ப்பு எழுதியுள்ளார். நாற்பது ஆண்டுகள் தொடர்ந்து நடத்திய மனச் செயல்பாடு பற்றிய ஆராய்ச்சி, ஆயிரக் கணக்கில் மனநோயாளிகளுக்கு சிகிச்சை ஆகியவற்றின் அடிப்படையில் அவர் இந்த முடிவுக்கு வந்தார். சோகமாக இருப்பதுதான் மனிதனின் சுபாவம், மனிதனுக்குப் பழக்கம் என அவருக்குத் தோன்றியது.

ஸிக்மண்ட் ஃப்ராய்ட் மனத்தத்துவத்தில் பேரறிஞர் என்பதால் அவரது முடிவு சிந்தனைக்குரியது. துக்கப்படுவது மனிதனின் வழக்கம் என்பதற்கு விதிவிலக்காக கிருஷ்ணரைக் கூறலாம். ஆனந்தமாக அவர் குழலூதிக் கொண்டிருந்தார். நம் வாழ்க்கையின் குழலில் இன்னொலி கேட்பதாகவே தெரியவில்லை. நாம் எப்போதாவது புல்லாங்குழல் இசையில் ஆழ்ந்து போனாலும் அது வாழ்க்கையில் விளைந்த துன்பத்தை மறப்பதற்காகவே இருக்கும். நமக்கு உண்மையில் இசையில் ஆர்வமில்லை துன்பத்தை மறக்கும் ஓர் உபாயமாகவே இசையை நாம் பயன்படுத்துகிறோம்.

ஹேமாவின் சிரிப்பு போதிதர்மரின் சிரிப்பிற்கு சமம். அவள் மூன்று நாள் சிரித்ததால் குடும்பத்தினர் பயந்துவிட்டனர். என்மீது அவர்களுக்குக் கோபம். அவளுடைய குடும்பத்தினரிலும் நண்பர்களிலும் சிலர் என் சொற்பொழிவைக் கேட்க வருவதுண்டு. அவர்கள் வருவதை நிறுத்திவிட்டனர். அவளுக்கு மூளைக் கோளாறென நினைத்தனர். ஆனால் அவள் பெற்றது அபூர்வமான அனுபவம்.

பிறகு சிரிப்பு படிப்படியாகக் குறைந்தது. அந்த ஆவேசம் தணிந்தது. ஏனெனில் அந்த ஆவேசம் சமாதியின் ஆரம்ப நேரத்தில் தான் எழுகிறது. அப்போது எழுந்த சிரிப்பு பிறகு உடலிலுள்ள ஒவ்வொரு ரோமத்திலும் ஊடுருவிப் பரவுகிறது. உதட்டில் தெரிந்த சிரிப்பு இறங்கி உடல் முழுதும், உள்ளம் முழுதும் வியாபித்து நிற்கிறது.

அந்த அனுபவத்தை ஹேமாவால் மட்டுமல்ல, யாராலும் வர்ணிக்க முடியாது.

**தெளிவாய்க் கண்டேன் உருவத்தை**
**அடையாளம் புரிந்து கொண்டேன்**
**வர்ணிக்கக் குரல் கிடைத்தது**
**வார்த்தைகளும் வந்து உதவின**

**ஆனால் நாளாக நாளாக**
**தினமும் வயது கூடக்கூட**
**மங்கியது உருவம் கண்களிலிருந்து**
**வாய் திக்கத் தொடங்கியது**
**தொண்டையும் அடைத்தது அவ்வப்போது**

**ஆவிப் படலம் மூடியதுபோன்ற**
**உனது ஆனந்தக் கடல்**
**ஆழமானது விசாலமானது**

**எங்கள் கரங்கள் குட்டையானவை**
**உள்ளங்கையோ சிறிதினும் சிறிது**
**எப்படி ஏந்துவோம் கடல்நீரை?**
**எப்படித் தேக்குவோம் கடல்நீரை?**

சமாதிநிலை அனுபவத்தை ஒருவன் எந்த அளவிற்குப் பெறுகிறானோ அதற்கேற்ப அதை வெளியிட முடியாமல் திக்குகிறான். அவனுக்குத் தொண்டை அடைத்துக் கொள்கிறது. எதையும் தெளி வாகச் சொல்ல முடியவில்லை. உண்மையில், அதை முழுமையாக உரைக்க முடியாது. ஆகவே நீ கவலைப்படாதே. வலுக்கட்டாயமாக உரைக்க முயன்றால் மன இறுக்கம் உண்டாகும்.

பலருக்கு சமாதிநிலை கிட்டியுள்ளது. சிலர் அதை வர்ணிப்பதில் சிறிதளவு வெற்றியும் கண்டுள்ளனர். ஹேமாவால் முடியாமல் போனது. பரவாயில்லை. அவள் வர்ணிக்க முயன்றால் அவளுக்குள் நடைபெறும் ஆன்மிக நிகழ்ச்சியில் தடை ஏற்படும். ஹேமா, நீ வர்ணிக்க முயலாதே. ஆனால் பிறருக்குத் தெரிய வேண்டும் என்று நீ விரும்பத்தான் செய்வாய். ஏனெனில் மனத்தில் அரிய உணர்வு எழுந்தால், பிறருக்கும் பங்குகொடுத்து அவர்களுக்கும் அதைப் பிரித்துத்தர விரும்புகிறோம். மக்களிடம் ஆன்மிகப் பசியும் தாகமும் மிகுந்துள்ளன. அவர்கள்

பிரச்சினை நெருப்பில் வாடுகிறார்கள். ஆகவே நாம் பெற்ற ஞானத்தை மற்றவர்களுக்கும் தர முயல்கிறோம்.

ஒன்று செய். வர்ணனை செய்வதற்குப் பதிலாக வாய்விட்டுச் சிரி, வண்டுபோல் முரலு. ஆடித்திரி. இவை மூலம் உன் அனுபவத்தைப் பிறர் புரிந்துகொள்வர். உன்னால் பொருத்தமான சொற்களைத் தேர்ந்தெடுக்க முடியாது. நான் சொன்னது மீராபாய் காட்டிய வழி. மீரா பாடினாள்; புத்தர் புன்னகை செய்தார்; சைதன்யர் கஞ்சிரா, மிருதங்க ஒலியின் பின்னணியில் ஆடினார் இப்படித்தான் அவர்கள் தமது ஆன்மிக அனுபவத்தை வெளிப்படுத்தினர். சொற்களால் உன்னால் வர்ணிக்க முடியாதுபோனால் வேறு எத்தனையோ வழிகள் உண்டு. சிரி, பாடு, ஆடு, அல்லது உனக்கு ஏற்றதான வேறுவழியைத் தேடு.

அரிய அனுபவம் நேரிட்டால் அதை வெளியிட தனக்குப் பொருத்தமான வழியைத் தேடித்தான் ஆகவேண்டும். இல்லாவிடில் அந்த அனுபவ உணர்வு கொதித்துப் பொங்கும். மேகங்கள் தங்களிடமுள்ள நீரின் பாரத்தைத் தாங்க முடியாதபோது மழையாகப் பொழிகின்றன. அதுபோல, ஓர் அனுபவம் உள்ளத்திற்குள் தயாராகிப் பக்குவம் பெற்றபின் அதை வெளியிட முடியாமல் போனால் அது நம்மைச் சுமையாக அழுத்தும்.

அனுபவத்தை பிறரிடம் வெளியிடும் விதம் எல்லோருக்கும் ஒரேமாதிரியாக அமையாது. ஒவ்வொருவரது வழியும் தனி வழி. அதை அவர்தான் கண்டுபிடிக்க வேண்டும். மேலும், ஆண்கள் வெளியிடும் விதமும் பெண்கள் வெளியிடும் விதமும் வெவ்வேறானவை. இதனால்தான் சத்குரு என்று கூறப்படும் பெண்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைவாக உள்ளனர். இதனால் பெண்கள் மோட்ச நிலையை அடைவதில்லை என நினைக்கக் கூடாது. ஆண்களைவிட பெண்கள் எளிதில் மோட்சம் பெற முடியும் என்பது என் கருத்து. ஏனெனில் அகங்காரத்தைக் கைவிட ஆண்களுக்கு அதிக காலம் ஆகிறது. பெண்களால் சுலபமாக அகங்காரத்தைக் கைவிட முடியும். ஆனாலும் புத்தர், மகாவீரர், ஏசு கிறிஸ்து, கிருஷ்ணர், சங்கரர், நாகார்ஜுனர் என்று நீண்ட சங்கிலியின் கண்ணிகளைப் போல் ஆண் சத்குருமார்களின் வரிசை உள்ளது. இதனுடன் ஒப்பிட்டால் பெண் சத்குருக்களை விரல்களால் எண்ணிவிட முடியும். ஸஹஜோபாய், மீராபாய், ராபியா

என்று சில பெயர்களையே கூற முடிகிறது. இதை வைத்து பெண்கள் மோட்சம் அடைவது சாத்தியமன்று அல்லது மோட்சம் அடைந்ததில்லை என்று வாதம் செய்யக்கூடாது.

ஆண்களைப்போல் பெண்களும் மோட்சம் பெற்றுள்ளனர். அவர்களின் எண்ணிக்கை ஆண்களைவிட சற்று அதிகமாகவும் இருக்கலாம். ஆனால் பெண்களால் அந்த நிலையைச் சொற்களின் மூலம் வெளிப்படுத்த முடிவதில்லை. இதுதான் பிரச்சினை. சொற்கள் இல்லாவிட்டால் உனக்கு புத்தர் இருப்பதே தெரிந்திருக்காது. போதி மரத்தின் கீழமர்ந்திருந்த புத்தர் மௌனத்தைக் கடைப்பிடித்திருந்தால் அப்படி ஒருவர் தோன்றியதை உலகம் அறிந்திருக்காது. நான் உபதேச உரை நிகழ்த்தாவிடில் நீங்கள் இங்கே வந்திருக்க முடியாது. நான் பேசா விடிலும் நான் என்று ஒருவன் இருப்பேன். என்னைப் பொறுத்த வரையிலும் பாதிப்பில்லை. ஆனால் நீ இங்கே வந்திருக்கமாட்டாயே!

நீ என் சொற்பொழிவைக் கேட்க வந்துள்ளாய். என் உரையைக் கேட்டு ஒருவேளை நீ என்னிடம் மாட்டிக் கொள்வாய். என் கருத்து களில் சிறிது-சிறிதாகத் தோய்ந்துவிடுவாய். என்னருகில் அமர்ந்து பாடல்களை முணுமுணுக்கும் பழக்கமும் ஏற்படலாம். அடிப்படை யில், நான் பேசுவதைக் கேட்பதற்குத்தான் நீ இங்கே வந்தாய்.

உலகில் சொற்களுக்குத்தான் செல்வாக்கு; சொற்கள்தாம் செல்லுபடியாகின்றன. பிறருடன் உரையாட வேறு உபாயம் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே பெண்கள் ஸத்குரு நிலையை அடைந்திருப்பினும் அவர்களைப் பற்றி அறிய முடிவதில்லை. அவர்கள் ஞானம் பெற்றவர்கள். எனினும் குரு ஆகவில்லை. அதற்குச் சீடர்கள் வரவேண்டுமே. சீடர்களை வரவழைக்க குரு உரையாற்ற வேண்டுமே. மீராபாய் அற்புதமான பக்திப் பாசுரங்கள் (பஜன்) பாடினார். கேட்டவரெல்லாம் அதன் இனிமையில் மயங்கினர். ஆனால் அவரை குரு என்று கருதி யாரும் அவருடைய சீடர் ஆகவில்லை. தான் பெற்ற ஞானத்தைப் பிறரும் அடையச் செய்வது குருவின் பணி. இதற்கு அடிப்படை சொற்பொழிவு. மீராவிற்கு இது சாத்தியப்பட வில்லை.

நான் ஹேமாவிற்குச் சொல்ல விரும்புவது இதுதான்: உன் உள்ளத்தில் ஆன்மிக உணர்வுகள் நிறைந்திருந்தால், அவற்றைப்

பிறருடன் பகிர்ந்து கொள்ள மனம் விழைந்தால், சொல்வதற்கு வார்த்தைகள் கிடைக்காவிடில், யாருக்காவது மெல்லக் கால் பிடித்து விடு; யாருக்காவது தலையை (நெற்றியைப்) பிடித்துவிடு; யாருக்காவது அன்பைக் கொடு; ஆடு, பாடு, பாடலை முணுமுணுத்தபடி இரு. ஏதாவது உபாயம் தேடு. 'வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல' என்று நீயே கூறிவிட்டாய்.

ஆனால் அனுபவத்தைப் பகிர்ந்து கொண்டுதான் ஆக வேண்டும். அப்படியே அடக்கிவைக்க முடியாது. பூ மலர்ந்தால் பூவிதழ்கள் திறந்து வாசனையை வெளியிட்டுத்தான் ஆகவேண்டும். காற்றைச் சிறகாகக் கொண்டு நறுமணம் நாற்றிசையிலும் பறந்து பரவும்; தொலைவிலுள்ள உலகங்களையும் அது தொடும். சுழற்சி பூரண மடையும்.

**மனத்தின் கற்பனைக் கண்ணாடியில்**
**உனது தரிசனம் கிடைக்கும்போது**
**எந்தன் உடலும் உள்ளமும் ஒன்றாய்**
**உனக்கே அர்ப்பணமாகிவிடும்**
**நெஞ்சம் துடிக்கும் அவ்வேளை**
**மனத்தில் மகிழ்ச்சி பொங்கியெழும்**

**மாமரத்தின் கிளைகளில்**
**'குக்கூ' ஒலி எழுகையில்**
**குயிலைப்போல என் மனமும்**
**சஞ்சலமடைந்து துவளும் துள்ளும்**

சமாதிநிலை வாய்க்கத் தொடங்கும்போது உன் இதயத்தின் துடிப்பு அதிகரிக்கும். அதே நேரத்தில் உன் இதயத்துடன் சேர்ந்து உலகமெங்கும் துடிப்பதை உணர்வாய். பாறைகள், மரங்கள், சந்திரன், நட்சத்திரங்கள் முதலிய எல்லாமே துடிக்கின்றன. உனது இதயத் துடிப்பின் தாளத்திற்கு இசைவாக உலகமும் ஒன்றி இயங்கும். உலகின் இந்த சங்கீதத்திலிருந்து உன்னைத் தனியாகப் பிரிக்க முடியாது. ஒரு விசாலமான ஆர்கெஸ்ட்ராவில் (பல்லியத்தில்) நீயும் பங்கு பெற்றுவிட்டாய்.

பாட்டில் வரும் குயிலும் மாமரமும் வெளியிலுள்ளவை அல்ல. உள்ளத்தின் உள்ளேயும் வசந்த காலம் வருகிறது. உள்ளேயிருக்கும் குயில் குக்கூ எனப் பாடுகிறது.

ஹேமா இந்த நிலைக்கு அருகில் வந்து சேர்ந்துள்ளாள். இவளுக்கு சமாதியின் ஆரம்ப அனுபவம் கிடைத்திருக்கிறது என்று கேள்விப்பட்டு அவள் கர்வப்படவில்லை. தன் முயற்சியைத் தொடர்கிறாள். கர்வப்பட்டால் அதுவரை கிடைத்த சித்தியெல்லாம் நசித்துவிடும். ஆகவே ஆபூ குன்று ஆசிரமத்தில் அவளுக்கு அனுபவம் கிடைத்தபோது நான் கருத்துத் தெரிவிக்கவில்லை. மௌனமாக இருந்தேன். இப்போதுதான் என் கருத்துகளை விவரித்தேன். ஆயினும் அபாயம் எப்பொழுதும் நீடிக்கிறது. அகங்காரம் தோன்றினால் முன்னேறும் முயற்சி தடைப்பட்டுவிடும்.

உனக்கு சமாதி அனுபவம் ஏற்பட்டதற்கு நான் காரணமென நினைத்துவிடாதே. பிரபுவின் பிரசாதம்-கடவுளின் அருள்-உனக்குக் கிடைத்ததாக நினைத்துக்கொள். எல்லாம் அவரது ஆசீர்வாதம். அவருக்குக் கடமைப்பட்டுள்ளாய். 'நான் தகுதியற்றவள். எனக்கு ஏற்பட வாய்ப்பில்லையே. எனக்கு எப்படி இந்தப் பேரதிர்ஷ்டம் கிடைத்தது?' என்று உன்னையே கேட்டுக்கொள்.

கடவுளின் கருணை கரையற்றது.

**கடைசிக் கேள்வி (கேட்பவர் ஹம்ஸர்)**

**கையில் கோப்பை இல்லாடிவில் என்ன**
**கண்களால் பருகவிடு-அது போதும்**

**மேற்கொண்டு வாழ யாருக்கு அக்கறை**
**எனவே அழித்துவிடு-அது போதும்**

**உன் கையில்தானே நூல் உளது**
**ஆசைதீர ஆட்டிப்படை-அது போதும்**

**துளியும் சுய உணர்வு மிஞ்சாதபடி**
**பைத்தியமாக்கிவிடு-அது போதும்**

**யாருக்கு வேண்டும் அமுதம் இனி**
**விஷமே குடிக்கவிடு-அது போதும்**

இவ்வாறு உணர்ச்சிகளைக் கொட்டுகிறார் ஹம்ஸர். அவருக்குக் கவி இதயம் வாய்த்துள்ளது. அவர் உள்ளத்தில் ஓடும் எண்ணங்களைச் சொற்களால் கட்ட முயலுகிறார். உள்ளத்தில் சட்டெனத் தோன்றும் ஓர்

எண்ணம் காலத்தால் முதிர்ந்து சரியான பருவத்தில் பழம்போல் பழுக்கும். அந்த நேரம் நீ ஆவேசம் கொண்டு ஆடுவாய். அந்த அன்பு ஆவேசத்தில் (மீராவைப்போல்) விஷத்தைக்கூட பருக சம்மதிக்கும் ஒருவனுக்கு அந்த விஷமே அமுதமாகி விடும். குடிக்க விஷம்தான் இருந்தாலும், நரகத்திற்கே அனுப்பப்படினும், இறைவனுடன் சேர்ந்து நடக்க தயாராக உள்ளவனுக்கு, நரகமே சொர்க்கமாகும்.

இதெல்லாம் நடக்கும். விஷம் குடிக்க வைப்பேன். நம்பிக்கை நிறைந்து, எதிர்பார்ப்போடு அதை ஏற்க தயாராக இரு. அந்த சம்பவம் நடைபெறத் தொடங்கிவிட்டது. உனது கீதத்தில் வெளிப்படும் உணர்ச்சி விடியல் சூரியனின் முதல் கிரணம் போன்றது. கிழக்கு சிவக்கத் தொடங்கிவிட்டது. சூரியன் உதிக்கும் வேளை இதோ நெருங்கி விட்டது.

நாம் விரும்பாவிடிலும் சூரியன் உதிக்கத்தான் போகிறது. ஆனால் நாம் கண் திறந்து பார்த்தால்தானே. நாம் இருட்டிலேயே இருக்கிறோம். நமது இரவு நேரம் தொடர்கிறது. ஒவ்வோர் இரவுக்குப் பிறகும் காலைப்பொழுது வருகிறது. ஒவ்வொரு முறையும் வழிதவறி அலைந்த பிறகு முகாம் தென்படுகிறது. ஒவ்வோர் உலக வாழ்க்கைக்குப் பிறகு மோட்சம் உள்ளது. நாம் கண் திறந்து பார்க்க வேண்டும் என்பதுதான் நிபந்தனை.

**ஹரி ஓம்தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

**ததா பந்தோ யதா சித்தம் கிஞ்சித்வாஞ்சதி ஸோசதி!**
**கிஞ்சின்முக்சதி க்ருஹணாதி கிஞ்சித்ருஷ்யதி குப்யதி!!** (79)

**ததா முக்திர்யதா சித்தம் ந வாஞ்சதி ந ஸோசதி!**
**ந முக்சதி ந க்ருஹணாதி ந ஹ்ருஷ்யதி ந குப்யதி!!** (80)

**ததா பந்தோ யதா சித்தம் ஸக்தம் காஸ்வபி த்ருஷ்டிஷு!**
**ததா மோக்ஷோ யதா சித்தம்ஸக்தம் ஸர்வ த்ருஷ்டிஷு!!** (81)

**யதா நாகம் ததா மோக்ஷோ யதாஹம் பந்தனம் ததா!**
**மத்வேதி ஹேலயா கிஞ்சித் மா க்ருஹாண விமுக்ச மா** (82)

மனிதன் தன் துன்பங்கள், கவலைகள், சங்கடங்கள், துயரங்கள் ஆகியவை பற்றியே பேசுகிறான். இது இயற்கையே. ஒருவனுக்கு என்ன அனுபவம் கிடைக்கிறதோ அதைப் பற்றித்தானே பேச முடியும். ஆனந்தத்தின் கிரணம் அவன் உள்ளத்தில் எழும்போது ஒரு புது விஷயம் ஆரம்பமாகிறது. இறை அனுபவம் கிடைக்கும்போது முற்பிறவிகள் என்னும் தன்னைப் பிணைத்த வலைகளை மனிதன் மறந்து விடுகிறான். முற்பிறவியே ஏற்பட்டதில்லை என்றும், அவ்வாறு தான் நினைத்தது இரவில் கண்ட கனவுக் காட்சி போன்றது எனவும் அவன் நினைக்கிறான். காலை சூரியன் இரவைப் பொய்யாக்கி விடுகிறான். சூரியன் உதித்த பிறகு இரவைப் பற்றி யார் பேசுவார்கள்?

ஜனகரின் வாழ்க்கையில் இப்படித்தான் ஞானசூரியன் உதித்திருக்கிறான். ஜனகருக்கு ஏற்பட்டது திடீர் அனுபவம். அதை அவரால் சமாளிக்க முடியவில்லை. அவர் அப்படியே அடித்துச் செல்லப்படுகிறார். திடீரென ஓர் அருவி தோன்றி அது பெருகிப் பாய சீரான வழியின்றி அலைக்கழிக்கப்படுவதுபோல் ஜனகரின் நிலை

உள்ளது. அவரது ஞான பிரவாகத்துக்கு அஷ்டாவக்ரர் வழி அமைக்கிறார்.

அஷ்டாவக்ரர் முதலில் ஜனகரை பரீட்சித்துப் பார்த்தார். பிறகு அவரைத் தடுமாறச் செய்யும் தூண்டுதல்களை முன்வைத்து ஆசை காட்டிப் பார்த்தார். மேல்வரும் சூத்திரங்கள் ஜனகரைப் பாராட்டுவது போல் உற்சாகம் தருபவையாக உள்ளன. ஜனகர் பரீட்சையில் தேர்ச்சி பெற்றார். கவர்ச்சி அவரைப் பாதிக்கவில்லை. அவர் ஆசை வார்த்தைகளில் சிக்கிக் கொள்ளவில்லை. தனக்கு ஏற்பட்ட ஞான அனுபவம் உண்மையானது என்பதில் அவர் உறுதியாக இருந்தார். சோதனை உரைகல் அவர் கலப்படமற்றவர் எனக் காட்டியது. அஷ்டாவக்ரருக்குத் திருப்தி. அடுத்து அவர் ஜனகரை உற்சாகப் படுத்துகிறார். முதுகைத் தட்டிக் கொடுக்கிறார். நடைபெற்றது சரியாகவே நடந்தது என்கிறார்.

துன்பமே கிடைக்கப் பெறுபவன் அதைப் பற்றியே பேசுவான். இங்கே கடவுள் அனுபவம் கிடைத்த சம்பவம் நிகழ்ந்தது. ஜனகருக்கும் அஷ்டாவக்ரருக்கும் இடையே கடவுள் தோன்றியிருக்கிறார். ஆகவே அவர்களிடையே வேறு பேச்சு எழ முடியாது. மீண்டும்-மீண்டும் அவர்கள் இறை அனுபவம் பற்றியே பேசுவார்கள். இதை கூறியது கூறல் என்னும் வகையில் சேர்க்க முடியாது.

நீ பார்த்திருப்பாயே, மிகச் சிறிய குழந்தை பேசத் தொடங்கும்போது அரைகுறையான சொற்களே பேசுகிறது. அவற்றிற்கு அர்த்தம் இருக்காது. ப-ப-ம-ம என்று சொல்வதுபோல் இருக்கும். வார்த்தைகள் தெளிவாகப் பேச வந்ததும் குழந்தை நாள் முழுதும் அதையே திரும்பத் திரும்பச் சொல்லும். அதனால் பயனுண்டோ, இல்லையோ, சூழ்நிலைக்குப் பொருந்துமோ, பொருந்தாதோ குழந்தைக்கு அந்தச் சொற்களையே சொல்லியபடி இருப்பது இன்ப மளிக்கிறது. ஓர் அற்புதமான ஆற்றல் அதற்குக் கிடைத்துவிட்டது. அதன் உலகில் புதியதோர் அனுபவம் உண்டாகிவிட்டது. குழந்தை சமூகத்தின் ஓர் அங்கமாக ஆகிவிட்டது. இதுவரை அது சமூகத்திற்கு அப்பாலிருந்தது. வனவாசம் போன்ற நிலையில் இருந்தது. பாப்பா, மாமா என்று தெளிவாகப் பேச வந்ததும் குழந்தை சமூகத்தில் பிரவேசிக்கிறது.

அதுபோலவே ஜனகர் வாழ்க்கையில் நிகழ்கிறது. அவருக்குப் புதுப்பிறவி கிடைக்கிறது. இறைவனின் அனுபவம் முதல் முறையாக விளைந்திருக்கிறது. அது உயிர்வரை சென்றடைந்திருக்கிறது. ஒவ்வொரு முடியையும் சிலிர்க்கச் செய்திருக்கிறது. இனி அவர் பேசுவது, பார்ப்பது, கேட்பது எல்லாம் கடவுளுடைய விஷயமாகவே இருக்கும். இறை அனுபவம் சொற்களில் அடங்கும் விஷயமன்று என்றாலும் அனுபவம் ஏற்பட்ட பின் அதை வெளியிடுவதற்கு எத்தனையோ உபாயங்கள் முயன்று பார்க்கப்படுகின்றன.

அத்தியாய ஆரம்பத்திலுள்ள சுலோகங்கள் அஷ்டாவக்ரர் ஜனகரின் முதுகைத் தட்டிக் கொடுப்பதுபோல் அமைந்துள்ளன. 'நீ வென்றாய். வெற்றியுடன் திரும்பியுள்ளாய். நீ சொல்வது சரியாக உள்ளது. உனது பரீட்சை பூரணமடைந்தது. நீ அதில் தேர்ச்சி பெற்றுவிட்டாய்,' என்று ஜனகரைப் பாராட்டுகிறார்.

அஷ்டாவக்ரர் சொல்கிறார்: 'மனம் எதையாவது விரும்பும் போது, யோசிக்கும்போது, கைவிடும்போது, ஏற்கும்போது கட்டப்பட்டு விடுகிறது. தளையில் மாட்டிக் கொள்கிறது.' **(சுலோகம் 79)**

கட்டப்படுதல் என்பதைச் சரியாக் வரையறுக்க முடியுமானால் மோட்சம் என்றால் என்ன என்பதையும் வரையறுக்கலாம். கட்டப் படாத நிலையே மோட்சம் என்பது. ஆகவே கட்டப்படுதலை முதலில் வரையறுத்தல் தேவை. கட்டப்படுதலை நாம் அறிந்திருப்பதால் அதைப் பற்றி சொல்வது எளிது.

ஆனந்தத்தை வரையறுத்து புத்தர் கூறுகிறார்: 'அது துக்க மின்மை.' துன்பம் என்றால் என்ன என்பதை நாம் அறிந்துள்ளோம். எங்கே துன்பம் இல்லையோ அங்கே ஆனந்தம் உதிக்கிறது. இரவின் இருட்டு நாம் அறிந்த ஒன்று. காலைப் பொழுதை வரையறுக்க வேண்டுமானால், இருட்டு இல்லாத சூழ்நிலை என்று சொன்னால் போதும்.

சிலர் இதைத் தவறாகப் புரிந்து கொள்கின்றனர். இரவை அழித்துவிட்டால் பொழுது விடிந்துவிடுமென நினைக்கிறார்கள். காலைப் பொழுது வரும்போது இருட்டு தானாகவே நீங்குகிறது. இருட்டைத் தனியாக அழிக்கவேண்டிய தேவை இருக்காது. நீ

காலைப் பொழுதைக் கூப்பிடு, தேடு. மாலைப் பொழுதானால் விளக்கேற்று. இருட்டில்லாத இடத்தில் வெளிச்சம் இருக்கும்.

இதேபோல், துன்பம் இல்லாத இடத்தில் மகிழ்ச்சி கொலுவிருக்கும். ஆகவே நீ துன்பத்தைப் போக்கும் முயற்சியில் ஈடுபடாதே. அப்படி முயன்றால் நீ ஆனந்தத்தைப் பெறமாட்டாய். அதற்குப் பதிலாக நீ ஆனந்தத்தைக் கூப்பிடு; அதை எழுப்பு.

என்னைச் சந்திப்பவர்களில் சிலர் துன்பத்திலிருந்து எப்படி விடுபடுவது என்று விசாரிக்கிறார்கள். துன்பத்தைக் கவனிக்காதே என்பது என் ஆலோசனையாகும். துக்கத்திலிருந்து விடுபட நீ விரும்பும்வரை நீ அதிலிருந்து விடுபட முடியாது! ஏனெனில் துக்கத்திலிருந்து விடுபடுவதற்காக உன் பார்வை அதன் மீதே மையம் கொள்கிறது. உன் கண்களை அதன் மீதே பதிக்கிறாய். அதைப் பற்றியே யோசிக்கிறாய். ஆகவே அதன் நினைவு வளரத்தான் செய்யும். நீ சிறிது நேரம்கூட துன்பத்தை மறப்பதில்லை. எதை மறக்கவில்லையோ அது மனத்தின் ஆழத்தில் இறங்கிச்செல்லும். எதையே நினைத்து வருகிறாயோ அதற்கேற்ப நீ மாறிவிடுவாய். எதைக் கைவிட விரும்புகிறாயோ அதையே அடிக்கடி நினைக்க நேரிடும்.

ஒருவரை வலிந்து மறக்க வேண்டுமென நினைத்தால் அது கடினமானது. நம் வாழ்க்கையில் ஆயிரக் கணக்கானோர் குறுக்கிடுகிறார்கள். அவர்களை மறந்து விடுகிறோம். ஆனால் வலுக்கட்டாயமாக ஒருவரை மறக்க முயல்வது சிரமம். ஏனெனில் மறப்பதற்காக அவரையே நினைத்துக் கொண்டிருக்கிறோம்! இதனால் அவர் முன்பைவிட வலுவாக நம் மனத்தில் பதிந்து விடுகிறார்.

ஒருவரை மறக்க வேண்டுமாயின் அதற்காக ஒருபோதும் விசேஷ முயற்சி எடுக்காதே. அவ்வாறு முயன்றால் அவரை உன்னால் என்றும் மறக்க முடியாது. ஒருவரை மறக்க முயல்வது என்பது அவரை நினைவுக்குக் கொண்டு வந்தால்தானே சாத்தியப்படும். மறக்க வேண்டுமானால் அக்கறை காட்டாதே, அலட்சியம் செய்துவிடு. உன் கவனத்தை வேறு திசைக்குக் கொண்டு செல். மறக்க முயல்வதும் கவனத்தை நிலைநாட்டுவதும் ஒன்றேயாகும்!

இம்முயற்சி ஒருவன் தனக்கேற்பட்ட காயத்தைச் சொரிந்து கொள்வதற்கு ஒப்பாகும். இதனால் சுகமாகத் தோன்றலாம். ஆனால்

இதனால் காயம் ஆறாது. அது அதிகரித்துவிடும். நீ சொரிவதன் மூலம் தினமும் காயத்தை அதிகரிக்கச் செய்வாய். காயம் ஏற்பட்டதை மற. அது தானாக ஆறிவிடும்.

நோயாளியை பரிசோதிக்கும் டாக்டர் அவரது தூக்கப் பழக்கம் பற்றி விசாரிக்கிறார். நோயாளி நன்றாகத் தூங்க வேண்டும் என்கிறார். ஏன்? சரியாகத் தூங்கினால் பாதி நோய் நீங்கிவிடும். தூக்கத்திற்கு ஏன் அவ்வளவு மதிப்பு? ஏனெனில் தூக்கம் வராவிடில் நோயாளி நோயை மறக்க முடிவதில்லை. சிரங்கைச் சொரிபவன்போல் அவன் நோயைப் பற்றியே யோசிக்கிறான். தலைவலித்தால் அதைப் பற்றியே சொல்லியபடி திரிகிறான். இதனால் வலி மேலும் வலுப்பெறுகிறது.

மிகையான காமம் உடையவன் அதிலிருந்து தப்ப விரும்புகிறான். ஆகவே அவன் சிந்தனையெல்லாம் காமத்திலேயே பதிந்திருக்கிறது. இது பாவம், கெட்ட செயல், குற்றம் என்று அதையே நினைத்தபடி உள்ளான். கோபக்காரன் கோப குணத்திலிருந்து விடுபட விரும்புகிறான். ஆனால் கோபத்தைப் பற்றியே சிந்திப்பதால் அதிலேயே தொடர்ந்து சிக்கியபடி உள்ளான். நீ எதிலிருந்து விடுபட விழைகிறாயோ அதில்தான் சிக்கிக் கொள்வாய்.

உன் கவனத்தை மாற்று. இரவைப் பற்றிய கவனத்தை விடியலுக்கும், இருட்டின் மீதுள்ள கவனத்தை விளக்கிற்கும் மாற்று. துன்பத்தைக் குறித்துப் பேச்செடுக்காதே. துன்பம் இருப்பது உண்மையே. அதை அலட்சியப்படுத்து. சுகத்தைக் கண் விழிக்கச்செய். சுகம் கண்விழித்ததும் துக்கம் மறைந்து விடும்.

வரையறுத்துக் கூறுவது திசை காட்டுவது போன்ற செயல் மட்டுமே ஆகும். வரையறுத்துக் கூறுதல் பேச்சு வகையில் ஒரு பாணியாகும். அதாவது, எதிர்மறையில் கூறும் பாணி. ஏனெனில் நீ எதிர்மறையைத்தான் அறிந்திருக்கிறாய். ஆனந்தத்தை புத்தர் மொழியில் நம்மால் வரையறுக்க முடியாது. அதற்கு அவரிடமேகூட மொழியில்லை. மௌனம்தான் அவரது மொழி. நம்மிடம் மொழி உள்ளது. ஆனால் ஆனந்தத்தின் அனுபவம் இல்லை. இந்த இரண்டு நிலைகளுக்கிடையில் ஒற்றுமை எப்படி ஏற்படும்? ஆகவே நாம் மொழிபெயர்ப்புபோல் சொல்கிறோம். ஆனந்தம் என்பது துக்கமின்மை; விடியல் என்பது இரவின் முடிவு என்று கூறுகிறோம்.

நம்மிடம் மொழி உள்ளது. நேரடி அனுபவம் இல்லை. அனுபவம் பெற்றவர்கள் மொழியால் கூறுவதில்லை.

மனம் துடிப்பாக இயங்க ஆரம்பத்தால் நீ கட்டப்படுகிறாய். தளையில் மாட்டிக் கொள்கிறாய். கோபம், காமம், பேராசை ஆகியவை நம்மைக் கட்டிப்போடுவதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் நீ யோசித்து தானதர்மம் செய்தாலும் சரி, திட்டமிட்டு கருணை காட்டினாலும் சரி, அவையும் உன்னைப் பிணிக்கின்ற தளைகள்தாம். மனம் இயங்கத் தொடங்கினாலே விலங்கு மேல் விலங்காக வந்து நம்மைக் கட்டிப்போடும் என்று அஷ்டாவக்ரர் புதுமையாகச் சொல்கிறார். மனம் இயங்குவது நின்றால் நீ முக்தி நிலையை அடை கிறாய். நீ ஒன்றை அடைய விரும்பினால் உன்னைக் கட்டிப்போடும் சூழ்நிலையும் தொடங்கும். ஷேக்சில்லி நிலைமை ஏற்படும்.

**ஷே**க்சில்லி பால் விற்கப் புறப்பட்டான். தலையில் பெரிய பால் பானை. யோசித்தபடியே நடந்து சென்றான்-'கையிலுள்ள சரக்கை விற்றால் நாற்பது ரூபாய் கிடைக்கும். இப்படி நாற்பது-நாற்பதாகச் சேமித்து சீக்கிரமே ஒரு எருமை மாடு வாங்குவேன். அது ஏராளமாகப் பால் தரும். இப்படி நிறைய எருமைகள் வாங்கிவிடுவேன். மாற்றி-மாற்றி பால் விற்பேன், எருமை வாங்குவேன். என் திறமையைக் கண்டு ஊரில் தலைசிறந்த அழகான பெண் தன்னை மணந்து கொள்ளுமாறு என்னை வேண்டுவாள்.

அவன் தொடர்ந்து கற்பனையில் லயித்துவிட்டான். இன்னும் பால் விற்பனையாகவில்லை. கையில் நாற்பது ரூபாய் முதல் தடவையாகச் சேரவில்லை. கற்பனையில் திருமணம் நடைபெற்றது. மனைவி வீட்டிற்கு வந்துவிட்டாள். ஓர் ஆண் குழந்தையும் பிறந்து விட்டது! பாலை விற்பதற்கு அவன் இன்னும் கடைத்தெருவை அடையவில்லை. அதற்குள் கல்யாணம்-குடும்பம்-குழந்தை என்றெல் லாம் அமைந்துவிட்டது.

கற்பனை தொடர்கிறது. ஒருநாள் அவன் குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு உணவூட்டுகிறான். குழந்தை அவனது நீண்ட தாடியைப் பிடித்திழுக்கிறது. இதுவரை மௌனமாகத் தனக்குள்ளேயே பேசிக்கொண்டு வந்த ஷேக்சில்லி இப்போது வலிப்பதாக நினைத்து,

"ஏ போக்கிரி, விடு என் தாடியை," என்று சத்தமாகச் சொல்கிறான். மேலும் குழந்தையின் கைகளிலிருந்து தாடியைக் காப்பாற்ற முயல்வதுபோல் தன் கைகளை தாடியின் மேல் வைத்தான். இதுவரை கைகளால் தாங்கியிருந்த பால்பானை விழுந்து, உடைந்து, பாலெல்லாம் புழுதியில் கலந்தது.

விழுந்தது பானை மட்டுமன்று. அவனது மனக்கோட்டையும் விழுந்து சிதறியது. அந்தக் கற்பனை உலகில் தோன்றிய பணம், எருமைகள், மனைவி, மகன் எல்லாம் அழிந்துவிட்டன. கிடைத்திருக்க வேண்டிய நாற்பது ரூபாயும் கைக்கு எட்டாமல் போய்விட்டது. கீழே விழுந்து உடைந்தது சாதாரணப் பானைதான். ஆனால் அதனுடன் சேர்ந்து எத்தனை எதிர்பார்ப்புகள் மண்ணோடு கலந்தன என்பதை நீ அறிந்திருக்க மாட்டாய்.

அஷ்டாவக்ரர் இதை உனது மனவுலகம் என்கிறார். கற்பனை உலகம் என்றும் சொல்வதுண்டு. எல்லாம் விளையாட்டுதான். ஆனால் மனம் அதில் லயித்து விடுகிறது. ஆழ்ந்துவிடுகிறது. கற்பனை உலகமாயினும் சரி, மனம் துடிப்பாக இயங்கினால் நீ கட்டப்பட்டு விடுவாய். சுதந்திரமின்றி, சுயசிந்தனையின்றி அதன் போக்கிலேயே செல்வாய்.

யதா சித்தம் வாஞ்சதி-மனம் எதையாவது விரும்பும் இடத்தில்.

விரும்பும் பொருள் முக்கியமில்லை. பணத்தாசை உள்ளவர்கள் தான்-சம்சாரிகள்தான்-உலகத்தால் கட்டப்படுகிறார்கள் என்றில்லை. கடவுள் பக்தியையோ, சத்தியத்தையோ நீ விரும்பினாலும் வெவ்வேறு விதமாகக் கட்டப்படுகிறாய். ஆக்வேதான் எதை விரும்புதல் நம்மைக் கட்டிப்போடும் என்று குறிப்பாகச் சொல்லாமல் யார் மனத்தில் ஆசை எழுகிறதோ-யதா சித்தம் வாஞ்சதி-என்று அஷ்டாவக்ரர் பொதுவாகச் சொல்கிறார்.

எதை விரும்பினாலும் சரி, அதிலிருந்து அலைகள்போல் எழுகின்றன. மனமாகிய ஏரி-மானஸரோவர்-இதனால் கொந்தளிப்புக்கு உள்ளாகிறது. சாந்தமான ஏரியில் கல்லை எறிந்தால் அலை அலையாகப் பரவுவதைப் போல்தான் இது. மனமாகிய ஏரியில் விருப்பம் என்ற கல்லை எறிந்தால் நீர் கலங்கிப் போகிறது.

இது உன் அன்றாட அனுபவம்தான். நீ உன்னை ஆராய்ந்தால் உனக்குள்ளேயே ஷேக்சில்லி அவ்வப்போது பிரவேசிப்பதை உணரலாம். சுயநினைவுடன் நீ உன்னிடம் ஒளிந்துள்ள ஷேக்சில்லியை அடையாளம் கண்டுபிடித்தால் வாய்விட்டுச் சிரி. உன் மடத்தனத்தை நினைத்துச் சிரி. தன்னைப் பார்த்தே சிரிப்பவன் அறிவாளியாக வளர்வான். அவன் சாட்சி மனப்பான்மையையும் வளர்த்துக் கொள்வான்.

யதா சித்தம் வாஞ்சதி கிஞ்சித் ஸோசதி...!

சிந்தனை செய்தால் சிக்கிக்கொள்வாய். சிந்தனை என்பது வலை மாதிரி. எதைப் பற்றியாவது சிந்திக்கத் தொடங்கினால் நீ அதில் மூழ்கிவிடுவாய். எண்ணங்கள் எழ ஆரம்பித்ததும் நீ இரண்டாம் பட்சமாகிவிடுவாய். எண்ணங்களே முக்கியத்துவம் பெறும். உள்ளுக் குள்ளே எல்லா மதிப்பீடுகளும் மாறிப்போகின்றன. சிந்தனையில் அடியோடு மூழ்கிப் போய் நீ வெறும் பார்வையாளன் என்பதை மறக்கிறாய். அதற்குப் பதிலாகச் சிந்தனையாளன் ஆகிவிடுகிறாய்.

உனக்கு மூன்று நிலைப்பாடுகள் உள்ளன. முதலாவது சாட்சி நிலை. இந்த நிலையில் மனம் என்னும் ஒன்று இருப்பதாகக் கூட தெரிவதில்லை. ஏனெனில் அலை எதுவும் எழவில்லை. அலைகளின் சேர்க்கைதானே மனம். மனத்தில் எண்ணம் பிரவாகமாகப் பாய்கிறது. சாட்சி நிலை என்பது காற்றால் துளியும் சலனப்படாத, மௌனமான, சாந்தமான ஏரியின் நிலை போன்றது.

இரண்டாவது நிலை சிந்தனையாளரின் நிலை. ஏரியில் சலனம், நடுக்கம் தோன்றிவிட்டது. எண்ணம் என்ற கல் அதில் விழுந்தது. விருப்பம் மூண்டது. தெளிவான கண்ணாடிபோல் சந்திரனை இதுவரை ஏரி பிரதிபலித்தது. இப்போது அது பாதிக்கப்பட்டுள்ளது. அதில் சந்திரன் துண்டு-துண்டாகத் தெரிகிறது. ஏரியின் பரப்பு வெள்ளிபோல் மின்னியபோதிலும் சந்திரனின் பிரதிபிம்பம் எங்கும் முழுமையாகத் தெரியவில்லை. அது சேதமடைந்திருக்கிறது.

மூன்றாவது நிலை கர்த்தாவின் (செயல்புரிபவனின்) நிலை. இந்த நிலையில் நீ மனத்தில் தோன்றும் எண்ணத்திற்குச் செயல்வடிவம் தருகிறாய். சாட்சி, அடுத்து சிந்தனை, பிறகு கர்மம் (செயல்). செயலில்

இறங்கும் நிலையில் நீ உலகமெனும் அடர்ந்த காட்டுக்குள் பிரவேசித்து விடுகிறாய். சிந்தனை நிலையில் ஒருவன் சாட்சி நிலையிலிருந்து சரிந்து விடுகிறான். இன்னும் கர்மபூமிக்கு வந்துசேரவில்லை. திரிசங்கு நிலையில், நடுவில், மாட்டிக்கொள்கிறான். சாட்சி மனப்பான்மை யுள்ளவன் ஆன்மிகவாதியாக இருப்பான். சிந்தனையில் சிக்கிக் கிடப்பவன் தத்துவ அறிஞனாக இருப்பான். செயல்புரிவதில் சுறுசுறுப்புள்ளவன் அரசியல்வாதியாக இருப்பான்!

ஆன்மிகம் (மதம்), தத்துவம், அரசியல்-இவை உன் உள்ளத்தின் மூன்று நிலைகளாகும். ஆன்மிகம் சிந்தனை உலகுடனும், செயல் உலகுடனும் தொடர்பு கொண்டிருக்காது. அது பரிசுத்தமான சாட்சி உணர்வுடன் சம்பந்தப்பட்டிருக்கும். அடுத்து, தத்துவ சாஸ்திரம். அது சிந்தனையுடன் மட்டுமே சம்பந்தப்பட்ட இயல். அது அலைகளை எண்ணுவதுபோன்ற மூளைவேலையில் ஈடுபடுகிறது. இந்த நிலையில் அந்த இயல் அலைகள் எழுவதன் அடிப்படையான ஏரியை மறந்துவிடுகிறது. அரசியல் ஈடுபாடுடையவனின் மனம் அதிகம் தடுமாறுகின்ற மனம் எனலாம். அவன் அலைகளைக் கொண்டு என்ன செய்யலாம் என்று கணக்குப் போடுவான். சிந்தனை செயலாக மாறிய பிறகே அரசியல் பிறக்கிறது.

பகவத்கீதைக்கு உரை எழுதியவர்கள் மூன்று வகையினர். திலகர், அரவிந்தர், காந்தியடிகள் மூவரும் கீதைக்கு உரை எழுதியுள்ளனர். கீதையில் கர்மயோகம் முக்கியம் என்பதை நிலை நாட்டுவதே-கர்மமே தலையாயது என்பதே-இவர்களது முயற்சியாக இருந்தது. வேறு அறிஞர்கள் சிலரும் உரை எழுதியுள்ளனர். அவர்கள் இந்தியச் சிந்தனைப் பிரவாகங்களில் ஏதேனும் ஒன்றுடன் இணைத்தே விளக்கம் தந்தனர். இவ்வாறு பக்தியை நிரூபித்து அல்லது ஞானம், அத்துவைதம், துவைதம், துவைதாத்துவைதம் இவற்றில் ஒன்றை அடிப்படையாகக் கொண்டே உரை எழுதினர். இவை சிந்தனையாளர்களின் உரையாகும்.

மூன்றாவது வகையான விளக்கவுரை இதுவரை செய்யப்பட வில்லை. அது முடியாத செயலும்கூட. சாட்சி மனப்பான்மையுடன் கீதையைப் புரிந்து கொண்டவர்களுக்கு அது ஓர் அனுபவமாக மட்டுமே நிறைவு பெற்றுவிடும். மூன்றாவது வகையான விளக்கம் எழுத முடிந்தாலும் அது இரண்டாவது வகையில் போய்ச் சேர்ந்து

விடும். கீதையின் அடிப்படை நோக்கம் சாட்சி மனப்பான்மை, தியானம், சமாதி என்றெல்லாம் விளக்க முயன்றால் அது இரண்டாம் வகை-சிந்தனை வகை-விளக்கமாகிவிடும். மூன்றாவது வகை விளக்கத்தை, அனுபவமாகிவிடும் விளக்கத்தை அறிந்தவர்களே கீதையைப் புரிந்து கொண்டவர்களாவர். மற்றவர்கள் தங்களது எல்லைக்குட்பட்ட அறிவின் காரணமாக கிருஷ்ணனின் பேரறிவைத் துண்டு துண்டாக்கிவிட்டனர்.

'மனம் எதையாவது விரும்பினால், சிந்தித்தால், தியாகம் செய்தால், ஏற்றுக்கொண்டால், சுகம்-துக்கத்தை உணர்ந்தால் அப்போது உலக பந்தத்தில் அகப்பட்டுக் கொள்கிறது.'

சிலர் பிடித்துக் கொள்கிறார்கள், சிலர் கைவிடுகிறார்கள். சிலர் உலகத்தைப் பிடித்துக் கொள்கிறார்கள். அவர்களைப் பார்த்துச் சிலர் 'எல்லாவற்றையும் கைவிடு; உலகில் சுகம் கிடையாது; உலகைவிட்டு ஓடிவிடு' என்று எச்சரிக்கிறார்கள். ஆனால் அப்படி ஓடிப்போன வர்கள் சுகமாக இருப்பதாகத் தெரியவில்லை. இவ்வாறு உலகைத் துறந்து காடு-மலைகளிலும் மடங்களிலும் போய் உட்கார்ந்து விட்டவர்களின் வாழ்க்கை ஒளிமயமாக அமையவில்லை. ஏன்?

எதையும் பிடித்துக் கொள்வதாலும் ஒன்றும் கிடைப்பதில்லை. எதையும் தியாகம் செய்வதாலும் ஒன்றும் கிடைப்பதில்லை. ஏனெனில் பிடித்துக் கொள்பவனும் நீயே, விடுபவனும் நீயே. பிடித்துக் கொள்பவன் ஒருவேளை கொஞ்சமாவது எப்பொழுதாவது சந்தோஷமாக இருப்பதாகக் கருதலாம். உலகைத் துறந்து ஓடியவர்கள் துளிக்கூட மகிழ்ச்சியாகத் தெரிவதில்லை. உலகிலேயே நீடிப்பவர்கள் குறைந்தபட்சம், சாதாரணமான, தற்காலிகமான இன்பமாவது அனுபவிக்கின்றனர். ஒருவன் ஒருத்தியின் மேல் கொள்ளும் காதல் தற்காலிக இன்பமே தரினும் அந்த அளவிற்காவது அந்த இன்பம் உண்மைதானே. ஓடிப்போய்த் துறவியானவர்களுக்கு நிரந்தரமான இன்பமும் கிடைப்பதில்லை; சம்சாரிகளின் தற்காலிக இன்பத்தையும் அவர்கள் அனுபவித்ததில்லை.

ஒரு குரு சீடர்களுக்குப் பின்வரும் கதையைக் கூறிவிட்டு, அவர்கள் அதன் அர்த்தத்தைக் கண்டுபிடித்து மறுநாள் வந்து சொல்ல

வேண்டும் என்று பணித்தார். ஓர் அரசனின் அந்தப்புரத்தில் ஐந்நூறு ராணிகள்! அரசன் அந்தப்புரத்தை ஐந்து மைல் தொலைவில் காட்டில் அமைத்திருந்தான். நம்பிக்கையான சேவகன் ஒருவன் அங்கே போய் ஒவ்வோர் இரவும் ஒரு ராணியை அரசனிடம் அழைத்துவந்து ஒப்படைப்பான். அவன் 40 வயதில் இறந்துவிட்டான். அரசன் வேறு ஒருவனை இப்பணிக்கு நியமித்தான். அவனும் சில ஆண்டுகளில் மாண்டு போனான். தினமும் ஒரு பெண்ணை அனுபவித்த அரசனோ 90 வயதுவரை உயிருடன் இருந்தான். இக்கதை உணர்த்துவது என்ன என்று குரு கேட்டார்.

சீடர்கள் எவ்வளவோ யோசித்தும் இந்தக் கதையின் கருத்தென்ன என்று ஊகிக்க முடியவில்லை. அவர்கள் குருவிடம் தங்கள் தோல்வியை ஒப்புக்கொண்டனர். குரு விளக்கினார். ''மனிதன் பெண்போகத்தால் சீக்கிரம் இறந்துவிட மாட்டான். பெண்ணைத் தேடி, பின்னால் ஓடுபவன்தான் சீக்கிரம் இறப்பான். அரசனின் சேவகன் தினமும் பெண் தேர்ந்தெடுக்கச் சென்றான். ஆகவே அவன் 40 வயதில் இறந்தான்.''

பணத்தைப் பொறுத்தவரையில், அதைத் துரத்துபவன் அதிகம் பாதிக்கப்படுவதில்லை. அதை அனுபவிப்பவனும் பெரிய அளவில் பாதிப்பிற்கு உள்ளாவதில்லை. பணம் என்றாலே பாவம் என்று ஓடுபவன் பாதிக்கப்படுகிறான். சம்சாரிகளின் முகத்தில்கூட சிலசமயம் சிறிதளவாவது சோபை, பிரகாசம் தென்படும். தவசிகள் என்று ,நீ வணங்குவோரின் முகம் களையாக இருக்காது. பிணக் களைதான் தெரியும்! ஆனால் உன் பக்தியின் காரணமாக அவர்கள் முகத்தில் ஏதோ விசேஷம் இருப்பதாக நீ கற்பனை செய்கிறாய். அவர்கள் உபவாசமிருந்து உடல் வெளுத்துப் போயிருந்தால் பக்தர்கள் தங்கத் திருமேனி என்று போற்றுவார்கள். பக்தர்கள் அல்லாதவர்களிடம் கேட்டுப்பார். 'இதுவா தங்க நிறம்? பித்தளையைவிட மோசமான நிறத்தில் அல்லவா தவசி தென்படுகிறார்' என்பார்கள். 'நீ தவசியிடம் எதை எதிர்பார்த்தாயோ அந்த ஜொலிப்பையே கண்டாய். ஆனால் மின்னுவதெல்லாம் பொன்னல்ல,' என்பார்கள்.

தியாகிகள் என்று நீ போற்றுபவர்கள் எப்பொழுதாவது ஆனந்தமாகத் தெரிந்திருக்கிறார்களா? துறவிகள் ஆனந்தமாக இருப்பதைப் பார்த்துள்ளாயா? அவர்களில் யாராவது பாடியபடி,

ஆடியபடி தென்படுகிறார்களா? இவர்கள் உண்மையில் குதூகலமாகத் தானே இருக்க வேண்டும். அவர்கள் உலக வாழ்க்கையைத் துறந்து விட்டார்கள். ஆகவே துன்பம் விளைவிக்கும் வழிகளில் இவர்கள் கால் வைக்கவில்லை. உறவுகளை விட்டார்கள். இவர்களின் கை ஒற்றைத் தந்தி இசைக் கருவியை வாசிக்க வேண்டும். மனத்தில் வீணை ஒலி எழும்ப வேண்டும். கால்களில் சிலம்பு கொஞ்ச வேண்டும். இந்தத் துறவிகளிடம் இதெல்லாம் கிடையாது. எல்லோரும் சோகமாக, சூனியமாக, பிணக் களையுடன் தோற்றம் தருகின்றனர்!

நீ மகாத்மாக்கள் எனக் கருதுபவர்கள் உயிருடன் இருக்கும் போதே மயானவாசிகள் போலல்லவா தோன்றுகிறார்கள். போகம் தப்பு என்றால் தியாகமும் தப்புதானோ? போகி அறிவிலிதான். தியாகியும் அறிவிலியே; போகியைவிட அதிகம் அறிவிலி. ஏனெனில் தியாகியால் சிந்திக்க முடியும். பிடி-விடு; இரண்டும் கட்டிப்போடும் தளைகள்தாம்.

சுகத்தை அனுபவிப்பவன் ஒரு காலத்தில் துன்பமும் அடைவான். இந்த இரண்டிலுமே ஆனந்தம் என்பது கிடையாது. ஆனந்தம் என்பது உலகைக் கடந்த அனுபவம். சுகவாசி ஆனந்தமாக இருக்கிறான் என்பது நிச்சயமில்லை. அவன் துக்கத்தை அடக்கி வைத்திருக்கிறான் என்றுதான் பொருள். அவன் சிறிது நேரம் துக்கத்தை மறந்திருக்கிறான், அவ்வளவுதான்.

நீ சுகமாக இருப்பதாக நினைத்த சூழ்நிலைகளை யோசித்துப் பார். இரண்டு மணி நேரம் திரைப்படம் பார்த்தாய். 'ஆஹா, என்ன சுகம்!' என்று நினைக்கிறாய். ஆனால் திரைப்பட அரங்கிலிருந்து வெளியே வந்ததும் வாசலில் உன் துன்பங்கள் எல்லாம் அப்படியே காத்துக் கொண்டிருப்பது உன் கண்ணில் படும். அல்லது மதுபானக் கடைக்குச் செல்கிறாய். மது அருந்துகிறாய். 'ஆஹா, என்ன சுகம்!' என்று நினைக்கிறாய். அப்படியே போதையில் உறங்கியும் விடுகிறாய். காலையில் எழுந்து பார்த்தால் உன் துக்கம் அப்படியே எதிரே நிற்கிறது! ஒருவேளை அது அதிகரித்தும் இருக்கக்கூடும். உலகில் எதுவும் எப்பொழுதும் அப்படியே இருப்பதில்லை. எல்லாம் கூடிக் கொண்டே செல்கின்றன. நீ இரவில் தூங்கினாய். உன் உடல் (வயது) வளர்ந்தது. வெளியே மரங்கள் வளர்ந்தன. உன் மகன் வளர்ந்தான்.

அதுபோல் உன் துக்கமும் அதிக வலுப்பெறுவதற்கு வாய்ப்புண்டு. நீ மது பருகியதால் நினைவிழந்து கிடந்தாய். போதையால் தற்காலிகமாக உணர்வு மழுங்குவதால் யதார்த்த நிலையில் மாறுதல் ஏற்படாது. இது நெருப்புக்கோழியின் கண்ணோட்டமாகும்.

நெருப்புக்கோழி தனது எதிரியைப் பார்த்துவிட்டால் தலையை மண்ணிற்குள் புதைத்துக் கொள்ளும் என்று சொல்வார்கள். இதனால் எதிரி கண்ணுக்குத் தெரியாமல் போய்விடுவான். கண்ணில் படாதவன் உண்மையில் இருக்கமாட்டான் என்பதை நெருப்புக்கோழியின் தர்க்கம் அல்லது கண்ணோட்டம் என்பார்கள். நாத்திகர்கள் இந்தத் தர்க்கப்படிதான் கடவுள் கிடையாது என்கிறார்கள். ஏனெனில் கடவுள் நம் கண்களுக்குத் தெரிவதில்லை. அரிஸ்டாட்டிலின்[1] தத்துவமும் இதுவே. கண்ணுக்குத் தெரியத ஒன்று உண்மையில் எப்படி இருக்க முடியும்? எந்த தர்க்கத்துக்கும் நேரடியான நிரூபணம் தேவைப் படுகிறது.

நெருப்புக்கோழி தலையை மண்ணில் மறைத்துக் கொண்டாலும் எதிரி அதைப் பார்த்துவிடவே செய்யும்.[2] நெருப்புக்கோழி தன்னை மறைக்காமல் கண்ணைத் திறந்து வைத்திருந்தால் தப்பிக்க வழி தேடலாம். அவ்வாறு அது செய்வதில்லை. ஆகவே எதிரியிடம் சுலபமாக அது சிக்கி விடுகிறது. தானே தன்னை எதிரியின் கையில் ஒப்படைத்து விடுகிறது. இதைத் தற்கொலை எனலாம். எதிரி அதைக் கொன்றால் அதன் முயற்சி குறைவாகவும், நெருப்புக்கோழியின் தற்கொலை மனப்பான்மை அதிகமாகவும் காரணமாக அமையும். நீ தீக்கோழி ஆகிவிடாதே. கண்களை மூடிக்கொள்ளாதே.

நீ சுகம் தருபவையாக நினைப்பவை உனக்குள் நெருப்புக்கோழி மனப்பான்மை இருப்பதைக் காட்டுகின்றன. ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு பொழுதுபோக்கில் ஈடுபட்டு சுகம் தேடுகிறாய். சிலர் சீட்டாட்டத்தில் மெய்ம்மறக்கிறார்கள். சிலர் சதுரங்கம் விளையாடு கிறார்கள். யானை, குதிரை, ராஜா, ராணி, மந்திரி என்றெல்லாம் மரப்பொம்மைகளுக்குப் பெயர்கள் சூட்டி விளையாடுகிறார்கள்.

---

1. அரிஸ்டாட்டில் (384-322 கி.மு.) கிரேக்க தத்துவ அறிஞர், பிளேட்டோவின் மாணவர், அலெக்ஸாந்தரின் ஆசிரியர்.

2. ஏனெனில் தலையை மறைத்தாலும் நெருப்புக்கோழி தன் உடலை மறைத்துக்கொள்ள முடியாது. ஏனெனில் அதன் உயரம் எட்டு அடி!

விளையாட்டில் லயித்துப்போய் உலகத்தையே மறந்துவிடுகிறார்கள். தங்கள் முழுக்கவனத்தையும் தாங்களே தயாரித்த யானை-குதிரை பொம்மைகள்மேல் குவிக்கிறார்கள். நிஜமாக இல்லாத ஒன்றில் கவனத்தைச் செலுத்துகிறார்கள்.

சதுரங்க விளையாட்டில் உபயோகிக்கும் யானை-குதிரைகள்தாம் போலி என்பதில்லை. அரசர்களிடமும் ஆட்சியாளர்களிடமும் உள்ள யானை-குதிரைகளும் பொய்யே. உலகில் நடைபெறும் செயல் களெல்லாம் வெறும் விளையாட்டு. அதை கம்பீரமாக, தீவிரமாக எடுத்துக் கொள்வது பிரமை ஏற்படுத்தும். ஆனால் விளையாட்டை நாம் நிஜமாக எடுத்துக் கொண்டு உணர்ச்சிவசப்படுகிறோம். அதுதான் துக்கத்தை மறக்கும் வழி எனக் கருதுகிறோம். கிரிக்கெட், ஹாக்கி, வாலிபால் போட்டிகளைக் காண லட்சணக்கானவர்கள் திரள்கிறார்கள். "என்ன பார்க்கப் போகிறீர்கள்?" என்று அவர்களிடம் கேட்டுப்பார். பதில் கிடைக்காது அல்லது "பொழுதுபோக" என்பார்கள். அடிப்படையில் அவர்கள் வாழ்வின் துயரத்தைச் சிறிது நேரம் மறக்கவே போட்டிகளைப் பார்க்கச் செல்கிறார்கள்.

நீ சைக்கிளில் எங்கோ போய்க் கொண்டிருக்கிறாய், தலைமேல் நிறைய வேலை உனக்கு. வழியில் இரண்டு பேர் சண்டை போடுவதைக் காண்கிறாய். சைக்கிளைவிட்டு இறங்குகிறாய். சைக்கிளை ஓரமாக வைத்துவிட்டு சண்டையைப் பார்க்கிறாய். இதைப் பார்ப்பதே தப்பு இல்லையா? நீ கவனிப்பதைக் கண்டு அவர்களின் சண்டை தீவிர மடைகிறது. நீ சண்டையை வலுப்படுத்தும் பாவத்திற்கு உள்ளாகிறாய். நீ அவர்களுக்குத் தூண்டுதல் தருகிறாய். யாரும் கவனிக்காமல் போனால் அந்த இருவரும் சலித்துப்போய் சண்டையை நிறுத்திவிட்டு அவரவர் வழியில் போய்விடுவார்கள். ஆனால் கூட்டம் கூடிவிட்டால் சண்டையை நிறுத்திவிட்டுப் போவது கடினமாகிவிடும்; ஏனெனில் கூட்டத்தைக் கண்டு அவர்களது அகங்காரம் தலைதூக்குகிறது. மனத் துக்குள் பந்தயம் வைத்ததைப் போல் இருவரும் ஆவேசம் கொள் கிறார்கள். இத்தனை பேர் பார்த்துக் கொண்டிருக்கும்போது இருவரில் யாரும் கோழையாகத் தயாராக இல்லை. நீ ஒருவன் பார்ப்பது மட்டுமேகூட அவர்களது சண்டை தொடரக் காரணமாக அமையும்.

ஒருவேளை சண்டை மேற்கொண்டு தொடராமல் அவர்கள் இருவரும் சமாதானம் செய்துகொண்டு, ஒருவரை ஒருவர்

வணங்கிவிட்டு அங்கிருந்து அகன்றால், உனக்கு எதையோ இழந்ததுபோல், ஏதோ நஷ்டமேற்பட்டதுபோல் தோன்றும். சுவாரசியம் நீங்கி 'சப்'பென்று ஆகிவிடும். உன் மனத்தினுள் ஓர் ஆசை ஒளிந்திருக்கும். 'இருவரும் தொடர்ந்து சண்டையிட்டு, அடித்து உதைத்து, ரத்தம் வந்தால் பார்க்கக் கிளர்ச்சி ஏற்படும்; சலித்துப்போன உன் வாழ்க்கையில் ஒரு மாறுதலாக இருக்கும்; மனத்துக்கு நிறைவாயிருக்கும்; அப்படியில்லாமல் போனதே' என்று நீ ஏமாற்றம் அடைந்திருப்பாய். வெறுங்கையோடு திரும்புவதுபோல் உணர்ந்திருப் பாய். நீ உன் ஏமாற்றத்தை வெளியிடவும் முடியாத நிலை. உள்ளே ஏதோ கசப்பாக உணர்வாய். நீ எதிர்பார்த்தது நடைபெறவில்லை. அந்த இருவரும் மாறி-மாறிக் கூச்சல் போட்டார்களே தவிர நீ விரும்பியதுபோல் கைகலப்பு நடைபெறவில்லை.

நீ காலையில் செய்தித்தாளைப் புரட்டுகிறாய். எந்தச் செய்தியைத் தேடுகிறாய்? எங்கே கொலை-கொள்ளை நடந்தது? எந்த நாட்டு பிரதமர் சொல்லப்பட்டார்? எந்த பிரதமர் பதவி இழந்தார்? இதுபோன்ற செய்திகளைத்தானே கவனிக்கிறாய். இப்படிப் பரபரப்பான விஷயம் தென்படாவிடில் இன்றைய பேப்பரில் செய்தியே இல்லை என்று செய்தித்தாளைத் தூக்கி எறிகிறாய். உன்னையே ஆராய்ந்து பார். நீ தேடுவது உன் மந்தமான வாழ்க்கையில் கிளர்ச்சியைத் தூண்டும் சம்பவங்களைத்தான்.

ஸ்பெயின் நாட்டில் பொலிகாளைகளை அடக்கும் போட்டி நடைபெறுகிறது. அவற்றை அடக்க முயலும் வீரர்களும்* ஆக்ரோஷ மான காளைகளும் பரஸ்பரம் மூர்க்கமாகத் தாக்குகின்றனர். இப்படி வீரர்களைத் தூண்டுவதும் காளைகளை உசுப்புவதும் நியாயமில்லை தான். ஆனால் இந்தப் போட்டியைக் கண்டுகளிக்க லட்சக் கணக்கில் மக்கள் கூடுகின்றனர். மக்கள் இந்தப் போட்டியில் காண்பிக்கும் தீவிர கவனத்தை வேறு எதிலும் செலுத்துவதில்லை.

ரோம் நாட்டில் முற்காலத்தில் அரசர் பொழுதுபோவதற்காக யாராவது அடிமையை மூடப்பட்ட விளையாட்டு அரங்கத்தில் நிறுத்தி, அங்கே கூண்டில் வைக்கப்பட்ட பட்டினி போடப்பட்ட சிங்கத்தை

* Matadors எனப்படும் இவ்வீரர்கள் எதிர்க்கும் காளையைக் கத்தியால் கொல்வதுதான் வழக்கம். சில சமயம் அவர்களும் கொல்லப்படுவது உண்டு.

அவன்மேல் ஏவிவிடுவது உண்டு.* சிங்கம் அவனை அடித்துக் கொன்று அங்கேயே உண்ணும். இந்த கோரத்தைக் காணவும் லட்சக் கணக்கில் மக்கள் திரள்வார்கள்!

மக்கள் கோழிச் சண்டை, புறாச் சண்டை முதலியவற்றையும் நடத்தி, கண்டுகளிக்கிறார்கள். பக்கத்து வீட்டில் கணவன்-மனைவி சண்டை போட்டால், நீ சுவரில் காதை வைத்துக் கேட்கிறாய்! உனக்கு இம்மாதிரி விஷயங்களில் சுவாரசியம் உள்ளது. இதன் மூலம் நீ உன்னைப் பற்றி, உன் பிரச்சினைகளைப் பற்றி உன் கவனத்தைத் தவிர்க்க வாய்ப்புக் கிடைக்கிறது.

மதங்கள் உன்னை உன் மீதே கவனம் செலுத்தும்படியும், அப்போதுதான் பலன் கிடைக்கும் என்றும் கூறுகின்றன. ஆனால் நீ உன் மீது கவனத்தைத் தவிர்க்கும் முயற்சிகளில் ஈடுபடுகிறாய். அந்த சூழ்நிலைகளில் நீ சுகமாக இருப்பதாக நினைக்கிறாய். இசையில், காதலின்பத்தில், மதுவில் என்று எதிலாவது மூழ்கி சுகம் உணர்கிறாய். மறப்பது உண்மையில் சுகமா? புத்தர் முதலியோர் கூறுவது தவறா? அவர்கள் உன் கவனம் எப்பொழுதும் உன் ஆத்மாவில் பதிந்திருக்க வேண்டும் என்று கூறுகிறார்களே-ஆத்ம ஸ்மரணம் ஆனந்தம்.

ஆனந்தம், சுகம், துக்கம் இம்மூன்றையும் பின்வருமாறு வரையறுக்கலாம். சுயமாக விரும்பி ஆத்மாவில் லயித்திருப்பது ஆனந்தம். ஆத்ம நினைவு இல்லாமல் இருக்கும் சமயம் அற்ப சுகத்தை உணர்கிறோம். வலுக்கட்டாயமாகத் தன்னை நினைவுபடுத்தும் சூழ்நிலையே துக்கம் என்பது. தலையில் வலி என்றால், முள் குத்திவிட்டால் வலி காரணமாக நமக்கு நம்மைப் பற்றிய நினைவு மேலோங்குகிறது. வலியை மறக்க வேண்டும் என்னும்போது தன்னை யும் மறக்க வேண்டிய தேவை ஏற்படுகிறது. இதற்கு ஒவ்வொருவர் தேடும் உபாயமும் வேறு. சிலர் இதற்காக மதுவை நாடுகின்றனர். கோயிலுக்குப் போவதும் தன்னை மறக்க, தன் வலியை அல்லது துன்பத்தை மறக்க மனிதன் மேற்கொள்ளும் உபாயங்களுள் ஒன்று.

தவம் இதற்கு எதிரான அணுகுமுறையாகும். வாழ்க்கையில் துன்பம் நேர்கையில் அதிலிருந்து தப்பி ஓட சிறிதளவுகூட

* Androcles and the Lion கதையில் அடிமையைச் சிங்கம் கொல்லவில்லை. அவன் முன்பு அதன் காலிலிருந்து முள் எடுத்திருக்கிறான்.

முயலக்கூடாது. அந்த துக்கத்தின் நடுவே தியானத்தில் ஈடுபடு. கண்களை விரித்து துக்கத்தைப் பார். அதைப் பற்றி விழிப்புக்கொள். அதனால் பாதிக்கப்படாமல் அதை சாட்சி மனப்பான்மையுடன் அணுகு. இதுவே தவம் செய்தல் என்பது.

ஆகவே சுகத்தைவிட துக்கமே ஆனந்தத்திற்கு அருகில் உள்ளது. ஆனால் நீ வலிய முயன்று துக்கத்தை உண்டாக்கிக்கொள் என்று நான் கூறவில்லை. நீ உன்னைத் துன்புறுத்திக்கொள் என்று ஆலோசனை தரமாட்டேன். வாழ்க்கையில் ஏற்கெனவே இருக்கின்ற துன்பங்களே ஏராளம். அதன் எண்ணிக்கையை நீ அதிகரிக்க வேண்டியது அவசியமில்லை. வாழ்க்கையே துன்பத்தால் நிரம்பி வழிகிறது. பிறப்பு துன்பம், முதுமை துன்பம், சாவு துன்பம், இங்கே எல்லாம் துன்பம். 'இங்கே துக்கத்திற்கு என்ன குறைச்சல்?' என்று புத்தரே கேட்டாரே.

நீ தனியாக துக்கத்தை உற்பத்தி செய்யவேண்டிய தேவை யில்லை. நீ துக்கத்திலிருந்து ஓடிப் போகாமலிரு. துக்கம் பற்றி விழிப்புக்கொள். நீ துக்கத்தை அற்ப சுகத்தில் மறக்க முயலாதே. நீ துக்கத்தையே தியானம் செய். அப்போது நீ ஆத்மாவின் நினைவில் (ஆத்ம ஸ்மரணம்) பிரவேசிப்பாய். காலப்போக்கில் ஒரு கட்டத்தில் துக்கத்தைப் பார்ப்பவனும் உன் கண்ணில் படத் தொடங்குவான்! சுகத்தில் அந்தப் பார்வையாளன் தூங்கிவிடுகிறான். ஆகவே சுகத்தில் நமக்குக் கடவுளின் ஞாபகம் வருவதில்லை. இதனால் சுகவாசியை ஒருவிதத்தில் சபிக்கப்பட்டவன் எனலாம். துக்கம் இந்த நிலையில் வரத்திற்கு சமம். சுகத்தில் மனிதன் தன்னையே மறந்துவிடுவதால் கடவுளை எங்கே நினைவில் வைத்துக் கொள்ளப் போகிறான்? கடவுள் நமது அடிப்படையான மையம். நாம் சுகத்தில் நம்மையே மறக்கும் போது கடவுள் மையத்தின் நினைவு நமக்கு இருக்க முடியாது. கடவுள் நமக்குள்ளே மறைந்து நிற்கிறார். நாம் நம்மை மறந்தால் கடவுளையும் மறந்ததாகத்தான் அர்த்தம். துக்கத்தில் கொஞ்சமாவது கடவுளின் நினைவு வருகிறது. சுகத்தில் அவர் நினைவிற்கு வருவதில்லை.

வாழ்க்கையில் சுகம் வருகிறதா? அதை அதிர்ஷ்டமெனக் கருதாதே. நீ அதை சாட்சியாகப் பார்த்தபடி இரு. துன்பம் உண்டாகிறதா? அதை துர்ப்பாக்கியமென நினைக்காதே. அதையும் சாட்சிபோல் நோக்கு. சுகம்-துக்கம் ஆகிய இரண்டையும் நீ சாட்சி

போல் பார்த்தால் அவை இரண்டையும் கடந்துவிடும் ஆற்றலைப் பெறுவாய். 'களிப்படையாமலும் கதறாமலும் இருப்பவன் கட்டிப் போடும் தடைகளைக் கடந்து சென்றுவிடுவான். கட்டப்படும் நிலை யானது சுகம், துக்கம், பிடித்தல், விடுதல் இவற்றுடன் சம்பந்தப்படும் மனிதனுக்கே ஏற்படுகிறது. அவ்வாறு கட்டப்படாதவனுக்கு முக்தி வாய்க்கிறது.' **(சுலோகம் 80)**

முக்தி அல்லது மோட்சம் கிடைக்குமிடம் எங்கே உள்ளது? மோட்சபுரி என்று தனியாக பூகோளத்தில் இவ்வுலகிற்கு அப்பால் ஓரிடம் இருப்பதாக மக்கள் கற்பனை செய்கிறார்கள். நில இயல் (ஜியாக்ரபி) அடிப்படையில் அப்படி ஓர் இடம் கிடையாது. உன் உள்ளத்தின் ஆழம்வரை சாந்தம் ஊடுருவிப் பரவியிருந்தால் அதுவே மோட்ச நிலை.

உலகம் நமக்கு வெளியே இருப்பதாக மக்கள் நினைக்கிறார்கள். அதுவும் தவறு. உலகம் வெளியில் இல்லை. அது உனது கொந்தளிக் கும் உள்ளத்தின் பிரதிபலிப்பாகும். மோட்சலோகமும் ஆகாயத்துக்கு அப்பால் இல்லை. ஆத்மா சாந்தமாக இருப்பதே மோட்சம்.

உலகம் என்பது ஜுரம் (காய்ச்சல்) பாதித்த உள்ளம் போன்றது. மோட்சம் என்பது காய்ச்சல் இல்லாத ஆரோக்கியமான உள்ளம் போன்றது. உலகம் என்பது உன் உள்ளத்தில் கொந்தளிக்கும் அலைகளின் வடிவம். மோட்சம் என்பது அலைகள் ஓய்ந்துபோன நிலை. மனமென்னும் ஏரி (மானஸரோவர்) சலனமற்று இருந்தால், அதில் சந்திரனின் பிரதிபிம்பம் பிரதிபலிப்பாகும் அளவிற்குத் தெளிவாகத் தெரிந்தால், அது மோட்ச நிலை. ஏரி கொந்தளித்தால், அலைகள் பரவினால், சந்திரன் துண்டுகளாகத் தெரிந்தால் அது உலகம், உலக வாழ்க்கை.

இதுவே பரிசுத்தமான மோட்சம். இதன் அர்த்தம் என்னவெனில் உனக்கு என்றோ ஒருநாள் மோட்சம் கிடைக்கும் என நினைக்காமல், நீ விரும்பினால், இப்போதே, உலகில் வாழும்போதே, மோட்ச இன்பத்தை அனுபவிக்கலாம் என்பதாகும். ஏனென்றால், சிறிது நேரம்கூட சிந்தனை நின்றுவிட்டால், எந்த விருப்பமும் இல்லாவிடில், இயக்கம்-போக்குவரத்து இல்லாவிடில், எதையும் பிடிக்கவோ, விடவோ தோன்றாவிடில், அந்த நொடியிலேயே நீ மோட்ச நிலையில் உள்ளாய்.

அந்த ருசி உன்னை மேலும்-மேலும் மோட்சத்திற்கு இட்டுச்செல்லும். தியானம் என்றால் விட்டு விட்டுத் தெரியும் திவ்வியத் தோற்றம். சமாதியென்றால் அலைகள் ஓய்ந்த சாந்தமான ஸ்திரமான நிலை.

மனம் எதையும் விரும்பாதிருக்க வேண்டும். ஆனால் தியாகி என்று கூறுபவர்களுக்கும் விருப்பம் இருக்கிறது. அவர்கள் மோட்சத்திற்கு ஏங்குகிறார்கள். அஷ்டாவக்ரர் கூறும் தியாகி வேறு.

நீ தியாகியிடம் அவர் ஏன் உலக வாழ்க்கையைத் துறந்தார், வீடு-சொத்து-சுகம் ஆகியவற்றை ஏன் கைவிட்டார் என்று கேட்டுப்பார். அவர் சொல்வார், "நான் மோட்சத்தை, ஆத்மாவின் ஆனந்தத்தை, சத்தியத்தைத் தேடிவருகிறேன்." அப்படியானால் அவர் இன்னும் முழுமையான தியாகி ஆகவில்லை என்று பொருள்.

ஒரு குன்றின் மேல் இரண்டு கிராமங்கள் அடுத்தடுத்து இருந்தன. ஒன்று க்ஷத்திரியர்களின் கிராமம் மற்றதில் நெசவாளர்கள் வசித்தனர். க்ஷத்திரியர்கள் நெசவாளர்களைத் துன்புறுத்தினர். நெச வாளர்கள் அவர்களிடம் பயந்தனர். க்ஷத்திரியர்களின் கிராமத்திற்கு யாராவது நெசவாளர் செல்ல நேர்ந்தால் அங்கே மீசையை முறுக்கக் கூடாது! பொறுமைக்கும் எல்லை உண்டல்லவா? பகலில் க்ஷத்திரி யர்களை எதிர்க்க முடியாது. அவர்கள் விழித்திருப்பார்கள். அவர் களுக்கு நெளவாளர்களிடம் பயமில்லை. ஆகவே இரவில் நன்றாகத் தூங்குவார்கள். அந்த சமயத்தில் அவர்களைத் தாக்கி அடித்து, உடை மைகளையும் சூறையாடலாம் என நெசவாளர்கள் முடிவு செய்தனர்.

அவர்கள் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு க்ஷத்திரியர் களின் கிராமத்திற்குச் சென்றனர். சுபாவமாகவே அவர்கள் மென்மையானவர்களாதலால் தயங்கியபடியே முன்னேறினர். எங்கேயிருந்து தாக்குவது, யாரை முதலில் தாக்குவது, யார் தலைமை தாங்கித் தாக்குதலை நடத்துவது என்று குழம்பியபடியே சென்றனர். திடீரெனத் தாக்காமல் இப்படித் தயக்கம் காட்டியதால், அவர்கள் வரும் சத்தம் கேட்டு க்ஷத்திரியர்கள் விழித்துக் கொண்டனர். அவர்கள் கத்திகளை உருவிக்கொண்டு பாய்ந்ததும் நெசவாளர்கள் தலைதெறிக்க ஓடினார்கள். ஒருவன் ஆலோசனை சொன்னான், "நம்மால் இவர்களைத் தாக்க முடியவில்லை. இப்படி பயந்து ஓடும்போது

'கொல்லு-கொல்லு' என்றாவது கத்தியபடி ஓடலாமே." அந்த ஆலோசனைப்படி அந்த புறமுதுகிட்டவர்களின் கும்பல் 'கொல்லு-கொல்லு' என்று ஆவேசமாகக் கத்தியபடி தங்கள் கிராமத்தை நோக்கி ஓடியது. இப்படிக் கத்தியதால் நாமும் ஏதோ முயற்சி செய்தோம் என்று ஒரு திருப்தியாவது மிஞ்சியது.

தியாகிகள் என்பவர்களும் உன்னைப் போன்றவர்களே. அவர்கள் மனத்திலும் ஆசை உண்டு. அவர்கள் ஆசைப்படும் விஷயம் வேறாக இருக்கலாம். எதற்கு ஆசை என்பது முக்கியமில்லை. எதையாவது விரும்பினாலே தியாகம் என்பது சேதப்படுகிறது. அதே சமயம் அவர்கள் 'மனிதா! எதற்கும் ஆசைப்படாதே. ஆசையைவிட்டு ஓடு' என்றும் முழங்குகிறார்கள்.

அவர்களிடம் ஒரு கேள்வி கேட்டுப்பார். "மகாத்மாக்களே! நீங்கள் உண்ணாவிரதம் இருக்கிறீர்கள். வீட்டைத் துறந்து கோயிலில் அமர்ந்திருக்கிறீர்கள். நீண்ட, ஆழ்ந்த தியானம் செய்கிறீர்கள். இதெல்லாம் எதற்காக?" என்று விசாரி. எதை அடைவதற்கு என்று அவர்கள் பதில் சொன்னால் அவர்கள் முழுமையான மகாத்மாக்கள் அல்லர் என்பதைப் புரிந்துகொள். ஏனெனில் ஆசைப்படுதல் என்பது அவர்களிடம் இன்னும் மிஞ்சியுள்ளது.

இதற்கு மாறாக, ஒரு மகாத்மா உன்னிடம் பின்வருமாறு சொல்கிறார் என வைத்துக் கொள்—"நான் எதையும் தேடி துறவியாக வில்லை. வாழ்க்கை அர்த்தமற்றதாக எனக்குத் தோன்றிவிட்டது. நான் வாழ்க்கையை விடவில்லை. அதுவாகவே என்னிடமிருந்து நழுவி விலகிவிட்டது. நான் எதையும் நாடவும் இல்லை; எதையும் தேடவு மில்லை. தேடப்பட வேண்டியர் என் உள்ளத்திலேயே வீற்றுள்ளார். நான் வெளியுலகில் அலையவில்லை. என் பயணங்கள் முடிந்து விட்டன. நான் மோட்சமும் தேடவில்லை. கடவுளையும் தேடவில்லை. எதையும் யாசித்து நான் பிரார்த்தனை செய்யவில்லை. ஆனந்தத்துடன் உண்ணாநோன்பு மேற்கொள்கிறேன். ஆனந்தமாக தியானம் செய் கிறேன். உபவாசத்தையும் தியானத்தையும் எதையும் அடைவதற்கான கருவிகளாகப் பயன்படுத்தவில்லை."

மகாத்மாக்கள் எனப்படுவோரில் சிலர் இப்படிச் சொல்வதில் உண்மை இருக்கும். உண்மையான மகாத்மாக்கள் தங்களைப் பற்றி இவ்வளவு சொல்வதுகூட அரிது. அவர்கள் வாழ்ந்து, காட்டுவார்கள்.

'கொல்லு-கொல்லு' என்று கூவிக்கொண்டு புறமுதுகு காட்டிய நெசவாளர்களைப் போன்றே மகாத்மாக்கள் பலர் முரண்பாடு உடையவர்கள்.

ஆனால் எதையும் தேடவில்லை என்றால், அவர்கள் கண்ணிலும் சகவாசத்திலும் அவர்கள் கூறுவது பிரதிபலித்தால் அவர்களை நம்பு. அவர்கள் எதையும் பற்றிக் கொள்ளவில்லை, துறக்கவுமில்லை; தியாகம் செய்யவில்லை, அனுபவிக்கவும் இல்லை; நடப்பதை அப்படியே பார்த்தபடி கரையில் அமைதியாக உட்கார்ந் திருக்கிறார்கள். இப்படியெல்லாம் உனக்குத் தோன்றினால் அவர்கள் எதிரில் தலைதாழ்த்தி வணங்கு. அவர்கள் இருக்குமிடம் ஆலயம்.

யாரை நீ மகாத்மாவென நினைக்கிறாயோ அவர்களது உள்ளத்தில் எதையாவது அடைய வேண்டுமென்ற ஆசை ஒரு மூலையில் ஒளிந்திருந்தாலும் அவர்கள் சம்சாரிகள் அல்லது உலகிய லார்தான். அவர்கள் சிரசாசனம் செய்தாலும் சரி, உபவாசமிருந்தாலும், ஆடையின்றி நின்றாலும் அவர்கள் துறவிகள் அல்லர்.

அஷ்டாவக்ரரின் பார்வையில் உலகமும் மோட்சமும் மனத்தின் வெவ்வேறு நிலைகள்தாம். ஆசைகள் இருந்தால் நீ உலகில் நீடிக்கிறாய். ஆசைகளற்ற நிலையில் நீ மோட்சத்தில் இருப்பதாகக் கருத வேண்டும்.

தியானம் என்பது யாது? அந்நிலையில் கவனம் ஒரே சுவையில் லயிக்கிறது. மனம் வசத்தில் இருக்கிறது. செயலேதும் நடைபெறுவ தில்லை. சலனம் எதுவும் கிடையாது. நடுக்கம் கிடையாது. ஆடாது விளக்கு எரிவது போன்ற நிலை. எங்கும் போக வேண்டியதில்லை. எதுவாகவும் ஆக வேண்டியதில்லை. எது எப்படியோ அப்படியே ஏற்கப்படுகிறது. நிர்மலமான கண்ணாடி போல், எதுவும் எழுதப்படாத வெண் காகிதம்போல் மனம் சுத்தமாக இருத்தல் வேண்டும். எழுதப் படாத காகிதம்போல் மனத்தில் எதிர்பார்ப்பு எதுவும் இருக்கக்கூடாது. சில வகைக் காகிதங்களில் 'ரசாயன மசியால் எழுதலாம். நெருப்பொளியில் காண்பித்தால் எழுத்துகள் கண்ணுக்குத் தெரியும். அப்படியும் இல்லாமல், என்ன செய்தாலும் காலியாகவே இருக்கும் காகிதம்போல் மனம் பக்குவப்பட்டுவிட்டால், நீ சேருமிடத்தை அடைந்து விட்டாய். முகாமை அடைந்துவிட்டாய் என்று அர்த்தம். இதுவே முக்தி.

மனம் பார்வை முதலிய புலன்களின் வழியில் ஈடுபட்டால், ஆசைகளில் ஆழ்ந்தால் அது மனிதனைக் கட்டிப்போடும் தளை. புலன் வழித் தொடர்புகளில் பற்று வைக்காமல் எதிலும் ஒட்டிக் கொள்ளாமல் இருந்தால் மோட்ச நிலை கிட்டும். **(சுலோகம் 81)**

கண்ணால் பார்க்கப்படும் பொருளில், காதால் கேட்கப்படும் ஒலியில், கையால் தொடப்படும் பொருளால், இப்படிப் புலன்கள் செல்லும் வழியில் நாமும் செல்கிறோம்.

நீ பாதையில் செல்கையில் ஓர் அழகிய பெண் முன்னால் செல்வதைப் பார்க்கிறாய். நீ அவளைப் பின்தொடராமல் இருக்கலாம். முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொள்ளலாம். கண்களை மூடிக் கொள்ளலாம். அவள் போகும் திசையைப் பார்க்காமலே இருக்கலாம். ஆனால் உன் மனம் அவள் பின்னால் போகத்தான் தொடங்கிவிட்டது. நீ நடக்காவிடிலும், உடல் அசையாவிடிலும், மனம் தான் போவதை நிறுத்தவில்லை.

அவ்வழியாக ஒரு தியாகியும் செல்கிறார். அவரும் அந்த அழகியைப் பார்க்கிறார். அவர் தனது தடுமாற்றத்தைக் கட்டுப்படுத்த சாஸ்திரங்களில் கூறப்படும் எச்சரிக்கையை நினைவு கூர்கிறார். 'பெண்ணிடம் அப்படி என்ன விசேஷம் இருக்கிறது? எலும்பு, மாமிசம், தசை, அசுத்த நீர்கள் இவைதானே பெண்ணிடம் உள்ளன?' என்று தன்னையே கேட்டுக் கொள்கிறார். ஆனால் அவர் மனத்தில் எதிர்மறையான ஈர்ப்பு இருக்கிறது. சரி, பெண் உடலில் இருப்ப தெல்லாம், அசுத்தமெல்லாம் இவர் உடலிலும்தானே உண்டு?

பெண் உடலை இகழ்ந்து சாஸ்திரங்கள் எழுதிய மகாத்மாக்களின் உடலிலும் அதே அசுத்தங்கள்தானே உள்ளன. அதைப் பற்றி அவர்கள் ஏன் வாய் திறப்பதில்லை? சாஸ்திரங்கள் ஆண்கள் எழுதியவை. பெண்கள் உடலில் எலும்பும் மாமிசமும் உள்ளதென எழுதியுள்ளனர். ஆண்கள் உடல் தங்கம்-வெள்ளியினாலானதா? பெண்கள் சாஸ்திர நூல்கள் எழுதியிருந்தால் ஆண்களை ஒரு பிடி பிடித்திருப்பார்கள். ஆண்கள் அப்படி எதிர்மறையாக எழுதக் காரணம் பெண்களிடம் அவர்களுக்கு ஈடுபாடு இருக்கிறது என்பதால் தான். தமக்குள்ள பெண் ஆசைக்குக் கடிவாளம் போடுவதற்காக இப்படி எதிர்மறையில் வர்ணிக்கிறார்கள். நீ உன் மனத்தில்

பெண்ணைப் பற்றி வெறுப்பேற்ற நூறு தடவை முயன்றாலும் வெற்றி பெற மாட்டாய். நீ உன் தோல்விக்காக வெட்கப்படுவதுதான் மிஞ்சும்.

மனம் போகத்தை நாடத்தான் செய்கிறது. மனத்தைத் தடைசெய். கட்டிப்போடு. சங்கிலியால் பிணை. ஒரு பயனும் இல்லை. நீ பாதையில் செல்லும் பெண்ணைப் பார்த்து மோகிக்கிறாய். அவளைப் பார்க்கும் தியாகியின் மனத்திலும் மோகம் தோன்றுகிறது. அவன் தியாகம், பாவம் என்றெல்லாம் சொல்லி மோகத்தைக் கொன்றுவிட முயல்கிறான். இருவருமே தாங்கள் கண்ட காட்சியில், பொருளில் சிக்கிக் கொண்டுவிட்டனர்.

நீ வேறுவகையான ஒருவனைக் கற்பனைசெய். அவனும் அதே வழியில் வருகிறான். பெண்ணைப் பார்த்தும் அவனுக்கு எந்தச் சிக்கலும் இல்லை. பெண் போகிறாளா? சரி, போகட்டும். பெண் என்ன மானிட சாதிதானே. சுவர்க்கமே ஒயிலாகப் போவதாக சத்தமிட வேண் டாம். அல்லது வெறுப்பைக் காட்டி கார்ப்பரேஷன் குப்பை லாரி போகிறதென்று நிந்திக்க வேண்டாம். எந்த மதிப்பீடும் செய்யாமல் அவளை அப்படியே போகவிடுவது பார்வையைக் கடக்கும் நிலையாகும்.

நீ காதால் ஏதோ கேட்டாய். சுவையாக இருந்தது. ஒரு பாட்டைக் கேட்டாய். மீண்டும் அதைக் கேட்கும் ஆவல் எழுந்தது. அவ்வளவுதான் நீ செவிப்புலனில் சிக்கிக்கொண்டாய். நீ ஒன்றைத் தொட்டாய். சுகமாக இருந்தது. மீண்டும்-மீண்டும் தொட விருப்பம் ஏற்பட்டது. ஸ்பரிச உணர்வில் சிக்கிக்கொண்டாய்.

நீ ஒரு துறவியின் சொற்பொழிவைக் கேட்கிறாய். கேட்பதன் காரணத்தாலேயே உனக்குப் பிடித்திருந்தால் நீ மாட்டிக்கொண்டாய். பேச்சின் அர்த்தத்தைப் புரிந்துகொண்டு லயிப்பது வேறு விஷயம். காதுக்கு மட்டும் இனிமையாக இருப்பதால், சொற்களின் ஒலிநயத்தில் ஆழ்ந்துபோனால் நீ புலன் ஆசையில் சிக்கிக் கொண்டு விட்டாய் எனலாம்.

பார்த்தும் பார்க்காமல், நடந்தும் நடக்காமல், தொட்டும் தொடாமல், காதால் கேட்டும் கேளாமல், சுற்றிலும் நடவடிக்கைகள் நடைபெற்றும் நீ வெறும் பார்வையாளனாக மட்டும் இருந்துவிட்டால்,

சலனப்படாவிட்டால், உன் உள்ளொளி ஆடாமல், காற்றால் அலைக்கழிக்கப்படாமல் இருந்தால், ஏதேதோ வந்தாலும் ஏதேதோ போனாலும், நீ மாறாமல் அப்படியே இருந்தால் அதுவே மோட்ச நிலை. மோட்ச லோகம் ஆகாயத்தில் எங்கோ ஏழு உலகங்களைக் கடந்து அமைந்திருக்கவில்லை.

அது போலவே உலகம் என்பது கடைத்தெருவிலோ, கடையிலோ, உன் தொழிலிலோ இல்லை. உலகம் என்பது உன் மனத்தின் ஒருவகை நிலைப்பாடு மட்டுமே. மோட்சமும் அவ்வாறே மனத்தின் ஒரு நிலைப்பாடு ஆகும். மோட்ச மனோநிலை உனக்கு இயற்கையாகவே அமைந்திருந்தால் நன்று. உலகியல் மனோநிலை நோயால் பீடிக்கப்பட்டது போன்றதாகும். உலகம் என்பது நோய் பீடித்த உடல். மோட்சம் என்பது ஸ்வஸ்த (ஆரோக்கியமான) ஆத்மா.

'ஸ்வஸ்த' என்பது அர்த்தமுள்ள சொல். ஸ்வ+ஸ்த-சுயத்தில் (தன்னில்) ஸ்தாபித்த (நிலைத்த) என்று பொருள்படுகிறது. சுயம் என்பது ஆத்மாவைக் குறிக்கிறது. அந்த சுயத்தில், ஆத்மாவில், நிலை பெற்ற வனே ஆரோக்கியமானவன். மற்றவர்கள் எல்லாம் நோயாளிகளே. உடலில் ஏற்படும் நோய் சாதாரணமானது. ஆத்மா பாதிக்கப்படுவது தான் உண்மையான நோய். அதை 'அஸ்வஸ்த' (சொஸ்தமில்லாத) நிலை என்கிறோம். தன்னிலிருந்து சரிதல், தன்னிலிருந்து விலகுதல், தன் மையத்தில் நிலைக்காமல் தடுமாறுதல்—நோய். தன் மையத்தில் உறுதியாக நிற்றல்—ஆரோக்கியம். இதையே அஷ்டாவக்ரர் மோட்சம் என்றார்.

'நான்' என்பது உள்ளபோது கட்டப்படுகிறாய். 'நான்' என்பது இல்லாவிடில் அது மோட்ச நிலை. இவ்வாறு சிந்தனை செய்து, எதற்கும் ஆசைப்படாதே, எதையும் ஏற்று அனுபவிக்காதே, எதையும் தியாகம் செய்யாதே. **(சுலோகம் 82)**

எளிமையான சுலோகம். அர்த்தம் கடினமானது. கடினமானதைச் செய்வதில் அகங்கார உணர்வு ஆர்வம் கொள்கிறது. அச்செயல் நம் அகங்காரத்திற்கு விடப்படும் சவால். எதையாவது செய்து முடிப்பதில் அலாதியான சந்தோஷம் ஏற்படுகிறது. கடினமான வேலையில் நாம் கர்த்தா ஆக முடிகிறது. இதனால் கடினமான பணியைச் செய்வதில் மனிதன் ஆர்வம் கொள்கிறான். கடினம் என்று தெரிந்தேதான் அதில்

ஈடுபடுகிறான். பெரிய வீடு கட்டுவது சிரமம். பெரிய கார் வாங்குவதும் கஷ்டம். குவியல்-குவியலாகப் பணம் சம்பாதிப்பது கஷ்டம். ஒருவேளை உன் அகங்காரத்தின் திருப்திக்காக நீ இதிலெல்லாம் ஈடுபடுகிறாய் எனலாம். உண்ண-பருக-உடுக்கப் பணம் தேவைதான். ஆனால் பணக்குவியல் எதற்கு? பணம் சம்பாதிப்பது கடினம், ஒரு சவால், என்பதால் குவியலாகப் பணம் சம்பாதிப்பதன் மூலம் 'நானும் மதிப்புள்ளவன்தான்; சாதனையாளன்தான்' என்று உலகிற்குத் தெரியப் படுத்துவதில் ஒருவித மகிழ்ச்சி, கர்வம் ஏற்படுகிறது. எளிமையான வேலையைச் செய்வதில் யாருக்கும் சுவையில்லை, ஆர்வமில்லை.

சிகந்தர் (அலெக்சாந்தர்) உலகம் முழுவதையும் வென்று ஆட்சிசெய்ய விரும்பினார். அவரிடம் டாயோஜனீஸ்,* "உலகத்தை வென்ற பிறகு நீ என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டார். "பிறகு என்ன செய்ய வேண்டும்? முழுமையாக ஓய்வெடுத்துக் கொள்வேன்," என்று சிகந்தர் பதிலளித்தார்.

டாயோஜனீஸ் சிரித்தார். "நான் இப்பொழுதே, இந்த நிலையி லேயே ஓய்வாகத்தான் இருக்கிறேன். நீயும் இப்பொழுதே வேண்டு மானாலும் ஓய்வெடுத்துக்கொள். 'உலகம் முழுவதையும் வென்றபின் ஓய்வெடுப்பேன்' என்கிறாய். உன் தர்க்கம் எனக்குப் புரியவில்லை. நான் எதையும் வெல்லாமலே ஓய்வாகவே உணர்கிறேன். என்னைப் பார்த்துக் கற்றுக் கொள்," என்றார்.

அந்த சமயம் அவர் உண்மையிலேயே ஓய்வாக, கவலை இல்லாத மனிதனாகவே தெரிந்தார். அச்சமயம் அவர் நதிக்கரையில் நிர்வாணமாகப் படுத்திருந்தார்! காலை சூரியனின் கிரணங்கள் அவரது உடலை குளிப்பாட்டின. அவர் ஆனந்தமாகத் தெரிந்தார்.

"சிகந்தர்! உனக்குப் பைத்தியம் பிடித்துள்ளது. உலகை வென்ற பிறகுதான் ஓய்வு கிடைக்கும் என்கிறாய், டாயோஜனீஸ் எனப்படும் நான் இப்போதே எப்படி ஓய்வாக இருக்க முடிகிறது? நான் எதையும் வெல்லவில்லையே. என்னிடம் பொருள் எதுவும் கிடையாது.

* Diogenes (இறப்பு கி.மு.320) கிரேக்க தத்துவ அறிஞர், வெறுப்பு வேதாந்தி ('ஸினிக்'). குடும்ப வாழ்க்கையை எதிர்த்தவர். வாழ்நாள் முழுதும் நாடோடியாக அலைந்தார். பொதுக் கட்டடங்களின் வாசலில் தூங்கினார். யாசித்து உண்டார். வெட்கம் விடுதல், வெளிப்படையான பேச்சு, கடுமையான எளிமை ஆகியவற்றை ஆதரித்தார்.

என்னிடம் ஒரு பிட்சை பாத்திரம் வைத்திருந்தேன். அதையும் நான் கைவிட்டேன். காரணம், இதோ என் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் நாயுடன் ஏற்பட்ட நட்புதான்,'' என்று தெரிவித்தார்.

அந்த நாய் அவரைவிட்டு ஒருபொழுதும் பிரியாது. 'நாய்க்கார டாயோஜனீஸ்' என்றே அந்த ஞானி அறியப்பட்டார். நன்றிகெட்ட மனிதர்களைவிட நாய்கள் மேல் என்று அவர் மனிதத் தொடர்பைக் கைவிட்டார். அவர் சிகந்தரிடம் மேலும் கூறினார்:

''இந்த நாயிடமிருந்து நான் ஒரு பாடம் கற்றுக்கொண்டேன். அதனால்தான் என்னிடம் பிட்சை பாத்திரம்கூட இல்லை. ஒருநாள் இந்த நாய் நதியில் தண்ணீர் குடிப்பதைப் பார்த்தேன். நான் யோசித் தேன். 'அடடே! இது குவளை இல்லாமலே தண்ணீர் குடிக்கிறதே! நான் மட்டும் ஏன் பாத்திரம் வைத்திருக்க வேண்டும்?' என நினைத்து என்னிடமிருந்த பாத்திரத்தை எறிந்துவிட்டேன். எளிமையில் இந்த நாய் என்னைத் தோற்கடித்து விட்டது. என்னையும் முந்திக் கொண்டு விட்டது. பாத்திரமின்றி இது உண்கிறது, குடிக்கிறது. நான் மட்டும் ஏன் பாத்திரத்தைத் தூக்கிக் கொண்டு அலைய வேண்டும்? இவ்வாறு என்னிடமிருந்த ஒரே பொருளையும் கைவிட்டபின் எனக்கு வாழ்க்கை யில் முழுமையான ஓய்வு கிடைத்துவிட்டது. என் ஓய்வை நீ சந்தேகிக்கிறாயா?''

சிகந்தரால் அவர் மீது சந்தேகப்பட முடியவில்லை. அவர் பேச்சில் உண்மை வெளிப்பட்டது. அவர் ஓய்வாக, நிறைவாகத் தெரிந்தார். அவருடைய கண்கள், முகபாவனை, கை-கால் அசைவுகள் ஆகிய எல்லாவற்றிலுமே திருப்தி பிரதிபலித்தது. வாழ்க்கையில் எல்லாவற்றையும் பெற்றுவிட்டதைப் போலவும், இனி பெறுவதற்கு ஒன்றுமில்லை போலவும் அவர் தென்பட்டார். எதன் மீதும் நாட்டமும், எதையாவது இழந்துவிடுவோம் என்ற பயமோ அவருக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

சிகந்தர் பதிலளிக்கையில், ''எனக்கு உங்கள் மீது பொறாமை யாக உள்ளது. எனக்கும் உங்களைப் போலவே ஓய்வாக இருக்க ஆசை. ஆனால் தற்சமயம் என்னால் ஓய்வெடுக்க முடியாது. நான் உலகை வென்றுதான் ஆகவேண்டும். 'சிகந்தர் உலகை வெல்லாமலே செத்தான்' என்ற பழிச்சொல்லுக்கு நான் ஆளாக விரும்பவில்லை,'' என்று கூறினார்.

டாயோஜனீஸ் தொடர்ந்தார், "சரி, செல், ஒரு விஷயம் நான் விரும்பாவிடிலும் சொல்லித்தான் ஆகவேண்டும். நீ ஓய்வு எடுப்பதற்கு முன்பே இறந்துவிடுவாய்."

அப்படியே நடந்தது. இந்தியாவிலிருந்து திரும்பும் வழியில் அவர் இறந்துபோனார்.* தனது நாட்டை, வீட்டை அவரால் வந்தடைய முடியவில்லை. மருத்துவர்கள் அவரிடம் அவர் மேற்கொண்டு பிழைக்கமாட்டார் என்று தெரிவித்து விட்டனர். மாவீரரான அலெக்ஸாந்தர் அவர்களிடம் கெஞ்சினார்: "ஏதாவது செய்து நான் மேற்கொண்டு 24 மணி நேரம் உயிருடனிருக்க உதவுங்கள். நான் என் தாயாரைக் கடைசி முறையாகப் பார்க்க ஆசைப்படுகிறேன். நான் இதுவரையிலான வாழ்க்கையைப் பணயம் வைத்து எத்தனையோ நாடுகளை வென்றுள்ளேன். அவை அனைத்தையும் மருத்துவக் கட்டணமாகத் தருகிறேன். இறப்பதற்குமுன் நான் தாயாரைக் கட்டாயம் சந்திப்பேன் என்று அவருக்கு வாக்குக் கொடுத்துள்ளேன்."

ஆனால் மருத்துவர்கள், "இருபத்து நான்கு மணி நேரம் உங்களால் தாக்குப் பிடிக்க முடியாது. எத்தனை நாடுகளைக் கொடுத்தாலும் கெடுவிற்கு மேல் சுவாசத்தை நீட்டிக்க முடியாது." என்று கூறிவிட்டனர்.

சிகந்தர் ஆயாசத்துடன் சொன்னார்: "படையெடுப்பைத் துவங்கும் முன்பே யாராவது எச்சரித்திருந்தால் என் உயிருக்கு இந்த வயதிலேயே ஆபத்து ஏற்பட்டிருக்காது. இத்தனை நாடுகளை வென்ற தற்கு விலையாக நான் இப்போது உயிரைக் கொடுக்க நேரிடுகிறது. ஒரேயொரு மூச்சுகூட கூடுதலாகப் பெற முடியாத நிலை. நான் ஓய்வெடுக்க வாய்ப்பில்லை என்று டாயோஜனீஸ் சொன்னது பலித்துவிட்டது."

கடினமானதைச் செய்வதற்கு நமது அகங்காரம் ஆகர்ஷிக்கப் படுகிறது. எளிய பணியில் அகங்காரத்திற்கு ஈடுபாடு இல்லை. ஆகவே நாம் எளிய விஷயங்களில் இறங்குவதில்லை. ஆனால் பரமாத்மா

* விருந்துக் கொண்டாட்டங்களாலும், மிகையாகக் குடித்ததாலும் அவருக்கு விஷக்காய்ச்சல் ஏற்பட்டு பாபிலோன் நகரில் கி.மு.323இல் 33 வயதிலேயே மரணமடைந்தார். எகிப்தில் அலெக்ஸாந்திரியாவில் புதைக்கப்பட்டார்.

அடைவதற்கு எளிதானவர். சத்தியமும் எளிதானது. எந்தச் சிக்கலும் கிடையாது.

யதா அஹம் ததா பந்தனம்—'நான்' உணர்வு இருந்தால் கட்டுக்குள்ளாகிறேன். இந்த உணர்வு என்னைக் கடவுளிடமிருந்து தொலைவிலேயே நிறுத்திவிடுகிறது. எனக்கும் அவருக்கும் நடுவில் இடைவெளியை உருவாக்குகிறது. 'நான் இல்லை, அவர் மட்டுமே உண்டு' என்று நினைத்த மாத்திரத்தில் எனக்கு முக்தி, மோட்சம் சித்திக்கிறது—யதா அஹம் ந ததா மோக்ஷ:

நாம் வீழ்த்த வேண்டிய ஒரே விஷயம் 'நான்' என்னும் உணர்வாகிய அகங்காரம். உள்ளத்தில் உணர்ச்சி அலைகள் கொந்தளிக்கும்வரை அகங்காரம் அழியாது. ஏனெனில் அது அந்த எல்லா அலைகளின் கூட்டு வடிவமாக எழுகிறது. அதுவே உன் அமையின்மைக்குத் திரண்ட காரணம். அகங்காரம் ஒரு பொருளில்லை தூக்கி எறிவதற்கு. உனக்குள் இருக்கும் வெறி போன்ற உணர்ச்சியின் திரட்சிதான் அகங்காரம். உன் சாந்த குணத்தின் அதிகரிப்புக்கு ஏற்ப உன் திமிர் கரைந்து குறையும்.

கடலில் புயல் வீசுவதைக் கண்டாய். சிறிது நேரத்தில் புயல் ஓய்ந்து விடுகிறது. புயல் எங்கே போனது? கடல் சாந்தமாகி விட்டதால் புயலும் ஒடுங்கிவிட்டது என்று சொல்ல முடியுமா? புயல் என்று தனியாக ஒன்றும் கிடையாதே. புயல் சூழ்நிலையிலும் கடல் என்பது மட்டும்தானே இருந்தது. ஆம், கடலில் கொந்தளிப்புத் தெரிந்தது. ஆகாயத்தைத் தொட முயலுவதுபோல் வெறிகொண்டு பேரலைகள் எழுந்தன. கடல் எதையோ சாதித்துக்காட்ட விரும்புவதுபோல் பொங்கியது. சிறிது நேரம் கழித்து அது களைத்துப் போனது; தோல்வியடைந்தது; இப்படிப் பொங்குவதில் சாரம் இல்லை என உணர்ந்தது; உறங்கி ஓய்வெடுக்கலானது. விளைவு? புயல் மறைந்தது.

புயல் என்று தனியான ஒன்று இல்லை. அது ஒரு வெறிநிலை. அகங்காரமும் புயல் போன்றதே. உன் உள்ளத்தில் பேரவா காரணமாக எழும் உணர்ச்சியே அகங்காரம். உன் வெறி தணிந்து அமைதி மேலிடும்போது உன் அகங்காரமும் விடைபெறுகிறது. பரம சாந்த நிலையில் உன் எல்லை காணாமல் போகிறது. நீ திடீரென எல்லையற்ற சக்தியுடன் இணைந்து விடுகிறாய்.

அஷ்டாவக்ரர் சொல்லும் விஷயம் சற்று சிக்கலானது. 'அனுபவிராஜா' என்று சொன்னால் புரியும். 'விடு, தியாகம் செய்' என்றாலும் புரியும். அவரோ 'அனுபவிக்காதே, தியாகம் செய்யாதே' என்று முரண்படுவதுபோல் கூறுகிறார்.

என்னிடம் வரும் சிலர் காம உணர்வு பற்றி சந்தேகம் கேட்கிறார்கள். அனுபவிப்பதா? அடக்குவதா? அஷ்டாவக்ரர் சொல்வது குழப்பமாக உள்ளதே. சார்வாகர் சராசரி மக்களின் உணர்வைப் பிரதிபலிப்பதுபோல் சொல்கிறார்: 'எதற்கும் கவலைப்படாதே. ரிணம் க்ருஹீத்வா க்ருதம் பிபேத-கடன் வாங்கியாவது நெய் சாப்பிடு.* ஏனெனில் நீ மீண்டும் உலகிற்குத் திரும்பிவரப் போவதில்லை. கடன் பற்றியும் கவலைப்படாதே. அனுபவி. திருடியாவது அனுபவி. தன் மனைவியா, பிறன் மனைவியா என்றும் அலட்டிக் கொள்ளாதே. யார் யாருக்குச் சொந்தம்? செத்தால் அனைவரும் சாம்பல்தான். செத்தவன் திரும்பி வரமாட்டான். ஆகவே இருக்கும்வரை ஆட்டம்போடு. ஆத்மா என்பதெல்லாம் கிடையாது. குற்றமும் தண்டனையும் கிடையாது. பாவமும் புண்ணியமும் கிடையாது.'

பெரும்பான்மையான மக்களும் ஆழ்மனத்தில் இப்படித்தான் நினைக்கிறார்கள். வெளிக்காட்டிக் கொள்வதில்லை என்பது வேறு விஷயம். அவர்கள் வாயால் நல்லுபதேசங்கள் கூறுவார்கள். நம்பாதே. அவர்களது செய்கை எப்படி என்று கவனி. அவர்கள் எழுதியுள்ள புத்தகங்களை வைத்து அவர்களைச் சான்றோர் என முடிவுகாட்டாதே. அகத்தைக் காட்டும் அவர்களது முகத்தில் என்ன எழுதியிருக்கிறது என்று பார்.

**அகத்தில் உள்ளது என்ன என்று**
**புத்தகங்களில் ஏன் தேடுகிறாய்?**
**ஒவ்வொரு முகமும் இங்கே**
**திறந்து கிடக்கும் புத்தகம்தானே?**

ஒரு ஹிந்துவைச் சரியாக அடையாளம் காண வேத உபநிஷதங்களைப் புரட்டாதே. அவற்றுக்கும் அவனுக்கும் என்ன சம்பந்தம்? ஒரு ஹிந்துவைப் புரிந்துகொள்ள அவன் கண்ணைப் பார்;

---

* 'யாவஜ்ஜீவேது சுகம் ஜீவேது ரிணம் க்ருஹீத்வா க்ருதம் பிபேத' என்றொரு சுலோகம் உள்ளது. அதன் இரண்டாவது வரியில், உடல் பஸ்மமாகிப் போன பிறகு திரும்பி வருவது ஏது என்று கேட்கப்படுகிறது.

அவன் முகத்தைக் கவனி. சித்தாந்தங்கள் என்ன சொல்கின்றன என்று ஆராயாதே. அவற்றில் ஏமாற்றும் விஷயங்கள் நிறைய உண்டு. நாம் நமது யதார்த்த நிலையை மறைப்பதற்காக சித்தாந்தங்களைப் போர்த்திக் கொண்டுள்ளோம். ஒருவன் வேதத்தைப் போர்த்திக் கொண் டுள்ளான். இன்னொருவன் ராம நாமப் போர்வையில் மறைந்துள்ளான். போர்வையை அகற்றி அவன் கண்ணை நேராகப் பார்.

சராசரி மக்கள் மேலே சொன்ன சார்வாகரின் கருத்தை ஆதரிப்பவர்கள்தாம். அவரது பழைய பெயர் லோகாயதர். அருமை யான பெயர். இதன் பொருள், மக்களுக்குப் பிரியமான ஒன்று என்ப தாகும். பெரும்பான்மையானவர்கள் வாயால் ஆன்மிகம் பேசினாலும், ராம நாமத்தை ஜபித்தாலும், மோட்சம்-கடவுள்-மதம் பற்றி விவாதித் தாலும், உள்ளத்தின் ஆழத்தில். சார்வாகரின் கருத்தையே ஆதரிக் கின்றனர்.

'சார்வாகர்' என்பதும் நல்ல பெயர். சாரு, வாக்கு என்னும் இரு சொற்கள் இணைந்த பெயர். யாருடைய சொற்கள் இனிமையாக உள்ளனவோ அவரே சார்வாகர். அவரை ஆசார்ய பிருஹஸ்பதி என்றும் கூறுவர். சார்வாக தத்துவம் என்ற கொள்கைகளில் அவர் தமது அசாதாரணமான தைரியத்தை வெளிப்படுத்தியிருக்கிறார்.

இந்த நாட்டில் சிலருக்கு தைரியம் இருக்கத்தான் செய்கிறது. பிருஹஸ்பதி என்னும் சார்வாகரின் கொள்கைக்குத் தனி மதிப்புண்டு. பெரும்பான்மையோரின் கருத்தும் அவர் கருத்தை பிரதிபலிக்கிறது. வெளியில்தான் சொல்வதில்லை. மற்ற ஆசார்யர்களுக்கு சந்நிதிகள் உள்ளதுபோல் பிருகஸ்பதிக்கு கோயில் கிடையாது. சார்வாகரின் சாஸ்திர நூலையும் யார் வீட்டிலும் காண முடியாது. யாரும் அதைப் பாதுகாத்து வைக்கவில்லை. பதிலாக, பகவத்கீதை, பைபிள், குரான், வேதம், தம்மபதம் நூல்கள் காணக் கிடைக்கின்றன. ஆனால் இவை அட்டை மாத்திரமே. உள்ளே இருப்பது சார்வாகரே. அதாவது, வெளி உலகிற்காகப் புனித நூலை வீட்டில் வைத்திருந்த போதிலும் மனத்தின் உள்ளே இருப்பது சார்வாகரின் இன்பக் கண்ணோட்டம்தான். பெரும்பான்மையோர் போகவாதிகள்தாம், கடவுளின் இருப்பைப் பற்றி அவ்வப்பொழுது சந்தேகப்படுகிற நாத்திகர்கள்தாம். இதெல்லாம் இயற்கையானதும்கூட.

வெகு சிலர் தியாகி எனப்படுகின்றனர். அவர்களையும் புரிந்துகொள்ள முடிகிறது. அவர்கள் போகத்திற்கு எதிரான தர்க்கத்தை முன்வைக்கிறார்கள். 'வாழ்க்கையில் சாரம் எதுவுமில்லை. ஆகவே அதைத் துறக்கிறோம்' என்கிறார்கள். இந்தக் கண்ணோட்டமும் புரிகிறது. 'எதிலாவது சாரமில்லை என்றால் அதை விட்டு ஓடிப்போ. அதற்குப் பதிலாக வேறு தகுதியானதைத் தேடு' என்று அவர்கள் தமக்குள் கூறிக்கொள்வதுபோல் உள்ளது. அஷ்டாவக்ரர் இன்ப வேட்கையை விரும்பாதே. அனுபவிக்காதே என்று சொல்வது புரிகிறது. உடனே அவர் அதை தியாகம் செய்யாதே என்று சொல்வது தான் புதிராக உள்ளது.

என் விளக்கம் இதுதான்: விழிப்புப் பெறு. அனுபவிக்காதே. விட்டு ஓடாதே. அடக்காதே. நசுக்காதே. ஆனால் போகத்தில் உன்னைக் கரைத்துக் கொள்ளாதே. சாட்சியாகிவிடு. நடப்பதைப் பார். காம ஆசை உன்னைப் பிடித்துக் கொண்டால் பிடித்துக் கொள்ளட்டும். நீ என்ன செய்ய முடியும்? நீ உனக்குள்ளேயே தொலைவில் உட்கார்ந்தபடி ஆசை உன்னைப் பிடிப்பதை கிரஹணம்போல் பார். நீ கூப்பிட வில்லை. அதுவாக வந்தது. பிறகு ஏன் சங்கடப்படுகிறாய்? கோபமோ, பேராசையோ மூண்டாலும் அவற்றை நீ பார்க்கிறாய் என்பதில் மட்டும் கவனம் செலுத்து. 'எந்த உணர்ச்சி மூண்டாலும் பார்வையாளனாக மட்டும் இருப்பேன்' என்று முடிவுசெய்.

காலைப் பொழுதா? அதைப் பார். இரவு வந்துவிட்டதா? அதைப் பார். இளைஞனா நீ? உன் இளமையைப் பார். கிழவனா நீ? உன் முதுமையைப் பார். தட்பவெப்ப நிலையும் பருவங்களும் விட்டுவிட்டு மாறுவதுபோல் உன் மனமும் ஊசலாடுகிறது. அதையும் வேடிக்கை பார். பார்த்தல் மட்டும் போதும் என்று நீ நிறுத்திக் கொண் டால், பருவங்கள் மாறுவது நின்றுவிட்டதையும், காமம், பிரம்மசரியம், போகம், தியாகம் ஆகிய எதுவும் மிச்சம் இல்லாததையும் உணர்வாய். கடைசியில் நீ மட்டுமே வீட்டில் தனியாக அமர்ந்திருக்கிறாய். யாரும் மிஞ்சியிருக்கவில்லை. பரிசுத்தமான ஆத்மாவாக, சுத்த சைதன்யமாக அமர்ந்திருக்கிறாய். இந்த நிலையைத் தவிர மற்ற எல்லாம் உளறல் பேச்சு. பிடி, விடு, இதைச் செய், அதைச் செய், நான்தான் செய்பவன், நான்தான் அனுபவிப்பவன் என்றெல்லாம் முழங்குவது வெற்று ஆரவாரம்.

மேற்கண்ட சுலோகத்தில் (எண் 82) 'சிந்தனை செய்து' என்று மொழிபெயர்த்தது முழுமையானதன்று. இதில் 'மதி' என்னும் சொல் வருகிறது. இது அர்த்தமுள்ள சொல். கடவுள் யாரையும் அழிக்க விரும்பினால் முதலில் அவனது மதி கெட்டுப்போகச் செய்வார். மதியும் மனமும் வெவ்வேறு. நீ சிந்தித்துச் செயல்புரிந்தால் அது மனத்தின் நடவடிக்கையாகும். மனத்திற்கும் அப்பாற்பட்ட அறிவுநிலை மதியெனப்படும். அது சுத்த அறிவு. இதை புத்தர் 'ப்ரக்ஞா' என அழைத்தார்.

இப்படி மதியில் நிலைப்பவன், அந்நிலையை அடைந்தவன், ஆசைப்படுவதோ, அனுபவிக்க விரும்புவதோ, கைவிடுவதோ இல்லை. ஏனெனில் அங்கே மனத்திற்கு வேலையில்லை, இந்த நிலையை ஜென் துறவிகள் 'நோ-மைண்ட்' (no-mind) என்கிறார்கள்.

எனது மதி-உனது மதி என்றெல்லாம் கிடையாது. எல்லோருக்கும் வாய்த்திருப்பது ஒரே மதிதான். சிந்தனை விஷயத்தில் நானும் நீயும் வேறு. ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகச் சிந்திக்கிறார்கள். நம்முடைய தனித்தனியான சிந்தனை காணாமல் போனால் நமக்குள் எந்த வேறுபாடும் இருக்காது. அப்போது நமக்குக் கிடைப்பதுதான் மதியென்பது. அஷ்டாவக்ரர் சொல்படி, 'நான்' என்பது உள்ளவரை நாம் கட்டப்பட்டிருக்கிறோம். 'நான்' என்பது நம்முடைய சிந்தனைகளின் தொகுப்பு மாத்திரமே. இதனால்தான் மக்கள் தத்தம் சிந்தனையே உயர்ந்தது, உண்மையானது என்று கருதித் தமக்குள் சண்டை போடுகிறார்கள். சத்தியம் எது என்று கண்டறிவதில் அவர்கள் அக்கறை காட்டுவதில்லை. 'நான் சொல்வதே சத்தியம். நீ கூறுவது தப்பு' என்று ஒருவருக்கொருவர் விவாதம் செய்கிறார்கள். தான் எது சொன்னாலும் அது தப்பாக இருக்காது என்றே' ஒவ்வொரு வரும் நினைக்கின்றனர்.

நான்-நீ என்று பிரிந்தால் சிந்தனை. நான்-நீ என்பது மறைந்தால் மதி. எனது சிந்தனை, உனது சிந்தனை என்று தனித்தனியாக உண்டு. மனிதர்களுடன் சம்பந்தப்பட்டது சிந்தனை. கடவுளுடன் தொடர்பு கொண்டது மதி. மதி இருக்குமிடத்தில் 'நாம்' என்று தனியாக இருப்பதில்லை.

இதி மதி மத்வா ஹேலயா ம[illegible]ருஹாண மா வி முக்ச-விரும்பி எதையும் ஏற்றனுபவிக்கவோ, விரும்பி எதையும் துறக்கவோ தேவையில்லாத மதியை நாம் அடைவோமாக என்கிறது இந்த சுலோகம்.

விருப்பம் இருக்கக்கூடாது என்பதுதான் முக்கியம். எது எப்படியோ அது அப்படியே நடைபெறட்டும். ஏதாவது சமயம் துன்பம் வருகிறதா? சரி, வரவிடு. விரும்பி துக்கத்தை விரட்டாதே. ஏதாவது சமயம் இன்பம் விளைகிறதா? இன்பத்தை வரவிடு. விரும்பி சுகத்தை விரட்டாதே. ஆசைப்பட்டு நாம் எதையும் விரட்ட வேண்டாம். அதற்குப் பதிலாக, 'கடவுளே, நடப்பதெல்லாம் உன் விருப்பப்படியே நிகழ்கின்றன. உன் விருப்பப்படியே நாங்கள் இருப்போம். எல்லையற்ற பரம்பொருளின் விருப்பமே எனது விருப்பமாகும். உன் விருப்பத்திலிருந்து என்னைத் தனியாகப் பிரித்துக் கொள்ளமாட்டேன். எனது என்று தனியாக ஒரு லட்சியம் எனக்கில்லை இனி. கடவுள் எனக்காக எந்த லட்சியத்தை நிச்சயித்துள்ளாரோ அதுவே எனது லட்சியமும் ஆகும்,' என வேண்டிக்கொள்.

இத்தகைய மதி அல்லது ப்ரக்ஞை அமைந்துவிட்டால் துன்பமோ, இன்பமோ, கட்டப்படுதலோ, முக்தி பெறுதலோ எதுவும் கிடையாது. எல்லா இரட்டைகளும் எதிரெதிரானவையும் ஒழிகின்றன. எல்லா மோதல்களும் முற்றுப்பெறுகின்றன. மிஞ்சுவது கடவுள் ஒன்றே. அதுவே பாடுகிறது. அதுவே வாழ்கிறது. அதுவே ஆடுகிறது. அதுவே எதிரொலிக்கிறது. நீ அந்த எல்லாமாகிய சக்தியின் அங்கமாகிறாய். அதனுடன் மலர்ந்து, அதனுடன் மகிழ்கிறாய். உனது எல்லாப் போராட்டமும் முடிவுபெற்றது. நீ அந்த சர்வசக்தியில் லயித்துப் போகிறாய்; அதன் இசையின் அங்கமாகிறாய்.

இப்படி லயித்துப் போனவனைத்தான் நான் சந்நியாசி என்பேன். 'நல்லதோ, கெட்டதோ என்ன நடந்தாலும் இனி எனக்குக் கவலையில்லை. எது எப்படி வேண்டுமானாலும் நடக்கட்டும். எனக்கு எந்த எதிர்பார்ப்பும் இல்லை. மேற்கொண்டு நடைபெற உள்ளதையும் ஏற்கிறேன். நரகமோ, சுவர்க்கமோ எது வேண்டுமானாலும் கிடைக்கட்டும்'—இப்படிப்பட்ட முழுமையான ஒப்புதலே துறவறம் என்பதாகும். இந்த விஷயத்தை தியானம் செய்வதுபோல் யோசித்தால் உனக்குள் மதி பிறக்கும்.

நீயே உனக்கு பரிசோதனைக் களம். நீயே உனக்கு பரீட்சை. நீயே உனக்குத் தேர்வு நடத்த வேண்டும். நீயே ஜனகராகவும் அஷ்டாவக்ரராகவும் ஆக வேண்டும். அவர்களிடையே நடந்த உரையாடல் உனக்குள்ளும் நடைபெற வேண்டும்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் தமது வீட்டின் முன்புறத்தில் புல்வெளியில் சாய்வு நாற்காலியில் பாதி படுத்தபடி செய்தித்தாள் படிப்பதில் ஆழ்ந்திருந்தார். அவரது காலடியில் அல்சேஷியன் நாய் உட்கார்ந்து வாலாட்டியபடி இருந்தது. பக்கத்து வீட்டுக்கார நண்பர் முல்லாவைச் சந்திக்க வந்தார். நாயைப் பார்த்துப் பயந்து தொலைவிலேயே நின்றுவிட்டார். முல்லாவின் கவனத்தைக் கவர அங்கிருந்தபடியே குரலெழுப்பினார். “ஐயா, நான் உள்ளே வந்தா உங்க நாய் கடிக்குமா?” என்று கேட்டார்.

முல்லா அவரை ஆசுவாசப்படுத்தினார். “தைரியமாக உள்ளே வாங்க நண்பரே. பயப்பட வேண்டிய தேவையில்லை.”

நண்பர் சில அடிகள் முன்னெடுத்து வைத்ததும் நாய் எழுந்து நின்று உறுமத் தொடங்கியது. நண்பர் நடுக்கத்தை மறைத்துக் கொண்டு முல்லாவிடம் மீண்டும் கேட்டார், “உங்களுக்கு நல்லா தெரியும்தானே. இந்த நாய் கடிக்காதுன்னுதானே சொல்றீங்க. ஏன்னா, எனக்கு ஏற்கெனவே நாய்கள்கிட்ட கடிபட்ட பயங்கர அனுபவம் இருக்கு.”

முல்லா அப்பாவியாகச் சொன்னார், “எனக்கு சரியா தெரியாதுங்க. புது ஆளைப் பார்த்தா இந்த நாய் கடிக்குமான்னு தெரியாதுங்க. இப்பதான் கொஞ்ச நேரம் முன்னால இந்த நாயை வாங்கிட்டு வந்தேன். நீங்கதான் இந்த நாய் முன்னால இங்க வர்ற புது ஆளு. இந்த நாய் என்ன செய்யும்னு இனிமேதான் பார்க்கணும்!”

வாழ்க்கையில் மற்றவர்களுக்கு பரீட்சை வைத்துப் பார்க்காதே. மற்றவர்களினால் கிடைக்கும் முடிவுகள் உனக்குச் சொந்தமாக முடியாது. இன்னொருவரின் அனுபவம் உனக்கும் பொருந்திவரும் என்பது நிச்சயமில்லை. ஒருவன் தன்னையே தேர்வுக் களமாக்கிக் கொண்டால், தன்னையே பரிசோதனைக் களமாக்கிக் கொண்டால் வாழ்க்கையின் ஆழத்திலுள்ள அடிப்படையான ரகசியம் அவனுக்கு வெளிப்படும்.

சிந்தனையின் மூலமாக அல்ல, சுய பரிசோதனை மூலம், தியானத்தின் மூலம் மதி கிடைக்கிறது. சுவர்க்கம் ஆகாயத்திற்கு மேலேயும், நரகம் பாதாளத்தின் கீழேயிருப்பதாகவும் நீ எப்பொழுதும் கேள்விப்பட்டு வந்துள்ளாய். அந்த தவறான கருத்தை உதறித்தள்ளு. சுவர்க்கமும் நரகமும் உனக்குள்ளேதான் இருக்கின்றன. நீ குறிப்பிட்ட விதமாக உருவாவது சுவர்க்கம். இன்னொரு விதமாக நீ உருவாவது நரகம். 'நான்' என்னும் உணர்வு நிரம்பி வழிந்தால் நரகம். 'நான்' என்னும் உணர்விலிருந்து விடுபட்டால் சுவர்க்கம்.

மோட்ச லோகம் என ஒன்றுள்ளது என்றும், அங்கு மோட்சம் பெற்றவர்கள் வசிக்கிறார்கள் என்றும் நினைப்பதைக் கைவிடு. மனத்தில் ஆசைகள் தேங்கியிருக்கும் வரையிலான நிலை உலகம் என்பதாகும். மனத்தில் ஆசை எழாவிடில், எதையும் கைவிடும் ஆசையும் இல்லையேல், தியாக ஆசைகூட இல்லையேல், அந்த ஆசைகளற்ற நிலை மோட்சம் என்பதாகும்.

சுவர்க்கம்-நரகத்தை, உலகம்-மோட்சத்தை வெளியே தேடாதே. இவை உனது ஆளுமையின் வெளிப்பாடு. ஆரோக்கியமாக இருத்தல் மோட்சம்; நோய்வாய்ப்படுதல் நரகம். உதறி வெளியே தள்ள ஒன்றும் இல்லை. விட்டுவிட்டுத் தப்பித்து ஓட எதுவும் இல்லை. இமய மலைக்குச் சென்று உட்கார்ந்தாலும் நீ நீயாகத்தான் நீடிப்பாய். கடைத்தெருவில் உன் கடையில் உட்கார்ந்திருந்தாலும் உன் சுபாவம் மாறாது. இதனால்தான் நான் என்னுடைய சந்நியாசிகளிடம், 'எதையாவது தியாகம் செய்யுங்கள். ஆன்மிக முன்னேற்றத்திற்காக எங்காவது செல்லுங்கள்' என்று சொன்னதில்லை. நான் அவர்களிடம் சொல்வதெல்லாம் 'நீங்கள் எப்பொழுதும் விழிப்பு நிலையில் இருங்கள். நடப்பது நடைபெறட்டும். உங்களுக்குக் குடும்ப வாழ்க்கைதான் கிட்டியதா? சரி, அப்படியே இருந்துவிடட்டும். ஒருநாள் திடீரென்று துறவியாகி இமயமலைக்குப் போய் உட்கார்ந்து விட்டீர்களா? சரி, அப்படியே இருங்கள்.'

நடப்பதை நடைபெற விடுங்கள். விரும்பியே வேறொன்றுக்கு ஏங்காதீர்கள். அப்படி விரும்பினால் அதில் 'நான்' என்ற உணர்வு தலைதூக்கும். உனக்கென்று தனிப்பட்ட விருப்பம் வைத்திருக்காதே. சர்வ சக்தியின் விருப்பத்திற்கு இசைந்து இயங்கு. கங்கை பிரவாகிக்கும்

திசையிலேயே நீயும் படகோட்டு. துடுப்புப் போடாதே. கங்கையின் இஷ்டத்துக்குப் படகு செல்லட்டும். பாய்மரத்தை விரித்துவை. காற்று தள்ளிவிடும் திசையில் படகு முன்னேறட்டும்.

இத்தகைய சமர்ப்பண உணர்வையே நான் சந்நியாசம் என ஒப்புக்கொள்கிறேன். இந்த சமர்ப்பணத்தில் நீ மிஞ்சுவதில்லை. கடவுள் மட்டுமே மிஞ்சியிருப்பார். ஒருநாள் மனத்தின் இடத்தை மதி பிடிக்கும். மேகங்கள் விலகும். திறந்த வானம் வெளிப்படும். நீ வாய் மலர்ந்து சிரிப்பாய். அப்பொழுது நீ அஷ்டாவக்ரரின் உபதேசத்தைப் புரிந்து கொள்வாய். 'விடுவதற்கு எதுவுமில்லை. பிடித்து வைத்துக் கொள்ள எதுவுமில்லை. காண்பதெல்லாம் கனவு. காண்பவன் மட்டுமே சத்தியம்' என்பதே அந்த உபதேசம்.

**ஹரி ஓம்தத்ஸத்!**

## முதல் கேள்வி

**இந்திய ஆன்மிக வழக்கத்தில் ஆத்மஞானியை பரிபூர்ணமாக சுதந்திரமானவன் என்று கூறுகிறோம். அந்த பரம சுதந்திர நிலையில் இவ்வளவு சிறப்பான கட்டுப்பாட்டையும், ஆழ்ந்த பொறுப்புணர்வையும் எப்படிப் பின்பற்ற முடிகிறது?**

**இ**த்தகைய கேள்வி இயற்கையானது. பொதுவாக, மனிதன் மிகவும் முயன்றும் தனது வாழ்க்கையில் கட்டுப்பாட்டைக் கொண்டுவர முடிவதில்லை. தொடர்ந்த பயிற்சிக்குப் பிறகும் எதற்கும் பொறுப் பேற்பது என்பது ஆனந்தமாகத் தோன்றுவதில்லை. பொறுப்புணர்வின் ஆழத்தில் வலி போன்ற சிரமமும் உள்ளது. கடமை என்று நாம் செய்ய வேண்டியுள்ளது நம்மைக் கட்டிப்போடுவதுபோல் தோன்றுகிறது. கட்டுப்பாடு இருந்தால் எதிர்ப்பும் இருக்கும். எதிர்ப்பு இருந்தால் அதிலிருந்து விடுபட வேண்டுமென்ற துடிப்பும் இருக்கும்.

கடமையோ, பொறுப்போ அது மேலேயிருந்து நம் மீது திணிக்கப்படுவதாகவே தோன்றுகிறது. சமூகம், பண்பாட்டு சூழ்நிலை, குடும்பம், தற்காப்பு உணர்வு ஆகியவை நம்மை பலவந்தமாகக் கடமைகளில் கட்டிப் போடுகின்றன. மீறமுடியாத நிலை அது. கட்டாயப்படுத்தப்படும் சூழ்நிலையில் மகிழ்ச்சிக்கும் உற்சாகத்திற்கும் இடமில்லை. இப்படி நாம் அடிமையாக வாழ்வதால், நமக்கு சுதந்திரம் கிடைத்தால், நாம் எல்லாப் பொறுப்புகளையும் கைவிட்டு, எல்லாக் கடமைகளையும் தூக்கி எறிந்து, காட்டுத்தனமாக நடந்துகொள்ளும் நிலையைச் சென்றடைவோம்.

முழுமையாக சுதந்திரமான மனிதன் சமூகக் கட்டுப்பாடுகளின் இடையே எப்படி வாழ்வான் என்னும் கேள்வி எழுவது இயற்கையே.

சந்நியாசி இப்படி சுதந்திரமானவர் தான். அவரை அடக்கியாள்பவர் இல்லை. அவரைக் கட்டிப்போடுகின்ற விதிமுறைகளும் இல்லை. சமூகம், சம்பிரதாயம் ஆகியவை அவரைப் பாதிப்பதில்லை. அவரால் எப்படிக் கட்டுப்பாடுகளின் நடுவில் வாழமுடிகிறது? சுருக்கமாக, சுதந்திரமாக உள்ளவனால் எப்படிக் கட்டுப்பாட்டையும் ஒத்துக்கொள்ள முடியும்?

சுதந்திரமும் கட்டுப்படுதலும் ஒரே சமயம் ஒன்றாக இருக்க முடியாதென நமக்குத் தோன்றுகிறது. கட்டுப்பாட்டைத் துறந்ததும் நாம் சுதந்திரமாகிறோம். சந்நியாசி கட்டுப்பாடுகளைக் கடந்தவராயினும், சுதந்திர புருஷர் ஆயினும், ஓர் ஒழுங்குமுறையைப் பின்பற்றி வாழ்கிறார். பொறுப்பேற்கிறார். அந்தப் பொறுப்பு அவரைச் சுமையாக அழுத்துவதில்லை. அவரது உள்ளொளி அவரை வழிதவற விடுவதில்லை. அந்த உள்ளொளி அவருக்கு எல்லை அமைத்துத் தருகிறது. சந்நியாசி எல்லாவிதக் கட்டுப்பாடுகளுக்கும் அப்பாற்பட்டவராயினும் அவரது ஆத்ம உணர்வு அவருடைய நடவடிக்கைகளை நெறிப்படுத்துகிறது.

**மு**ல்லா நஸ்ரூத்தீன் தன் நாயிடம் பேசினார். "இப்படியே வாழ்ந்து உன் வாழ்வை வீணடிக்காதே. போய் கல்லூரியில் சேர்ந்து கொள். படிப்பறிவில்லாமல் இனி எதுவும் நடக்காது. படித்தால் நல்ல வாழ்க்கை அமையும். பெரிய பதவி கிடைக்கும்," என்றார்.

அவர் சொல்வது சரியென்று நாய்க்குத் தோன்றியது. தற்போதைய காவலாளி பதவியைவிட வேறு பெரிய பதவிக்குப் போக அதற்கும் ஆசையிருந்தது. அது ஒரு கல்லூரியில் நான்கு ஆண்டுகள் படித்துவிட்டு வந்து முல்லாவைச் சந்தித்தது. முல்லா அதன் கல்லூரிப் படிப்பு பற்றி விசாரித்தார். நாய் விளக்கியது.

'முதலில் வரலாற்றுப் பாடம். எனக்கு அதில் ஆர்வம் எழவில்லை. மனிதர்களின் வரலாற்றில் நாய்களுக்கு ஆர்வம் எப்படித் தோன்றமுடியும்? அதில் நாய்களைப் பற்றி எந்தக் குறிப்பும் இல்லை. உங்கள் அலெக்சாந்தர், ஹிட்லரைப்போல், நாய்களிலும் சாதனை வீரர்கள் உண்டு. ஆனால் எங்கள் வரலாறு எழுதப்படவில்லை.

'பூகோளப் பாடத்தில் எனக்குச் சிறிதளவு ஆர்வம் உண்டானது. இந்தப் பாடத்திலும் நாங்கள் பல இடங்களைத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியமில்லை, தரையோடு இணைந்த உயரமான தபால்பெட்டிகள், விளக்குக் கம்பங்கள், மைல் கற்கள் எங்கே உள்ளன என்று எங்களுக்குத் தெரிந்தால் போதும். சிறுநீர் கழிக்க வசதியான பூகோள அறிவுதான் எங்களுக்குத் தேவைப்படுகிறது.'

முல்லாவுக்குத் திகைப்பு உண்டானது. "சரி, கணிதம் கற்றுக் கொண்டாயா? வாழ்க்கைக்கு கணிதம் இன்றியமையாதது ஆயிற்றே." என்று கேட்டார்.

நாய் அலட்சியமாகப் பதிலளித்தது. 'கணிதம் படிப்பதால் நாய் சாதிக்கு என்ன லாபம்? அதைப் படிப்பதில் அர்த்தம் இல்லை. நாங்கள் என்ன சொத்தா சேகரிக்கப்போகிறோம்? சேமித்து வைத்து இடை யிடையே எண்ணிப் பார்க்கவா போகிறோம். நாங்கள் அந்தந்த நிமிடத்தில் அப்படியே வாழ்பவர்கள். நாளைய தினம் பற்றி எங்களுக்குக் கவலையில்லை. நேற்று என்பது கடந்துபோய் விட்டது. நாளை என்பது வரவில்லை. பிறகு கணக்குப் போடுவதற்கு என்ன உள்ளது? நாய்களுக்கிடையில் கொடுக்கல் - வாங்கல் கிடையாது. பதிவேடுகளில் கணக்கு எழுதவேண்டிய அவசியமும் இல்லை.'

முல்லா வருத்தமடைந்தார். 'நான்கு ஆண்டுகளை வீணடித்து விட்டாயே' என்று குற்றம் சாட்டினார். நாய் மறுத்துச் சொன்னது. 'அப்படியில்லை. எனக்கு மொழிகளில் ஆர்வம். ஆகவே புதிய மொழி ஒன்றைக் கற்றுக் கொண்டேன். அதில் சிறப்பாகத் தேர்ச்சி பெற்றுள் ளேன்' என்று தெரிவித்தது.

முல்லாவுக்கு திருப்தி 'உருப்படியாக ஏதோ ஒன்றாவது நன்றாகப் படித்து முடித்திருக்கிறாய். சந்தோஷம்தான். அயல்மொழி கற்றுக்கொண்டதால் உனக்கு வெளிநாட்டு இலாகாவில் வேலை கிடைக்கும். அதிர்ஷ்டமிருந்தால் நீ தூதுவராக நியமிக்கப்படலாம். கடவுளின் அருளிருந்தால் நீ வெளிநாட்டு இலாகாவின் அமைச்சராகக் கூட ஆகலாம். எனக்கு தாய்மொழி மட்டுமே புரியும். எனினும் என் சந்தோஷத்திற்காக நீ கற்றுக்கொண்ட அயல்நாட்டு மொழியில் கொஞ்சம் பேசிக்காட்டு' என்று கேட்டுக்கொண்டார்.

நாய் கண்களை மூடிக்கொண்டது. யோகியைப்போல் தனக்குப் பழக்கமான நாய் ஆசனம் போட்டது. மிகுந்த முயற்சிசெய்து, மிகவும் கஷ்டப்பட்டு, குரல் கொடுத்தது 'மியாவூன்! மியாவூன்!' இதுவா அயல்நாட்டு மொழி என்று முல்லா ஏமாற்றமடைந்தார். ஆனால் நாய் இனத்தைப் பொறுத்தவரையில் அது அயல்நாட்டு மொழிதான்.

ஒவ்வொருவரின் உள்ளத்தின் ஆழத்தில் தனி மொழி உண்டு. ஒவ்வொருவரின் புரிந்துகொள்ளும் ஆற்றலும் வெவ்வேறு. நமக்குப் புரியாத விஷயங்களும் உண்டு. முழு சுதந்திரமான, கட்டுப்பாடற்ற நிலையிலும் நாம் சாந்தமாகவும், ஒழுங்குமுறையுடனும், படைப்பாற்றலுடனும் இருக்கலாம். என்பதை நம்மால் யோசித்துப்பார்க்க முடிவதில்லை. ஏனெனில் நாம் கடமைகளை அன்பின்றிச் செய்கிறோம். அன்பு உயிரை நிரப்பி இருக்கும்போது கடமைகள் எளிதாகவும் சுவையாகவும் அமைந்துவிடுவதை நாம் அறிந்திருக்கவில்லை.

ஒரு துறவி இமயமலைமீது ஏறிக்கொண்டிருந்தார். தோளில் துணி மூட்டை, ஒரு கையில் கமண்டலம் - தண்டம். இன்னொரு கையில் ஊன்றுகோல். இவ்வளவுதான் அவரது சுமை. நண்பகல். செங்குத்தான ஏற்றம். துறவி வியர்வையில் நனைந்திருந்தார். சற்று முன்னால் ஒரு சிறுமியும் மலை ஏறுவதைப் பார்த்தார். பத்து-பன்னிரண்டு வயதுதான் இருக்கும். அவள் தோளில் தம்பியைத் தூக்கிவைத்து ஏறிக்கொண்டிருந்தாள். ஆறு - ஏழு வயதுச் சிறுவன். நல்ல பருமன், அவள் உடலிலும் வியர்வை வெள்ளம்.

துறவி பரிதாபப்பட்டார். ''மகளே, பெரிய சுமையைத் தூக்கி வைத்துக்கொண்டு போகிறாயே கஷ்டமாக இல்லையா? என் மூட்டையே எனக்கு பாரமாக இருக்கிறதே,'' என்றார்.

சிறமி திடுக்கிட்டுத் திரும்பினாள். துறவியைக் கண்டாள். சிறு துணி மூட்டையையும் கவனித்தாள். புன்முறுவலுடன் சொன்னாள், ''சாமி, உங்களுக்கு அந்த மூட்டை பாரமாக இருக்கலாம். எனக்கு அப்படியில்லை. ஏன்னா, இவன் என்னோட தம்பி.''

ஒரு தராசில் துறவியின் மூட்டையையும் சிறுமியின் தம்பியையும் நிறுத்துப் பார்த்தால் சிறுவனின் எடையே அதிகமாக இருக்கும். மேலும் அவளோ சிறுமி. துறவியோ நடுத்தர வயது

உடலைப் பெற்றிருப்பார். ஆனால் இரும்புத் தராசு காட்டும் எடையும், இதயத் தராசு காட்டும் எடையும் வெவ்வேறாக இருக்கும். தம்பி ஒரு சுமையாகவா தெரிவான்? அவனைத் தோளில் சுமந்து செல்வது ஓர் இன்பம். பாரமே தெரியாது.

ஒருவனுக்கு ஆத்ம உணர்வு தோன்றிவிட்டால், தன் சொரூபத்தை அறிந்துவிட்டால், உலகம் முழுவதும் அவனுக்குத் தனது குடும்பமாகத் தெரியும் எல்லோருடனும் ஓர் உறவு ஏற்படும். அந்த நிலை உனக்கு ஏற்பட்டால் நீ இந்த விசாலமான பிரபஞ்சத்திலிருந்து தனிப்பட்டவன் அல்லன் என்பதைத் தெரிந்துகொள்வாய். இவ்வுலகம் உனது விரிவாக்கம்தான் அல்லது நீ இவ்வுலகத்தின் விரிவாக்கம்தான் என்பது புரியவரும். எப்படியும் நீயும் உலகமும் வெவ்வேறு இல்லை. இந்த ஒருங்கிணைவு உணர்வு அல்லது ஏகாத்ம உணர்வு உனக்குள் பரவிவிட்டால் பிறகு நீ மற்றவர்களுக்கு எப்படித் துன்பம் தர முடியும்? பிறரை எப்படி இம்சிக்க முடியும்? எப்படி பலாத்காரம் செய்ய முடியும்? யார் மீதும் எந்த அளவிலும் எப்படி அடக்குமுறையைப் பிரயோகிக்கக்கூடும்? பிறரை இன்னலுக்குள்ளாக்குவது என்பது; தானே தன் காலை வெட்டிக்கொள்வதற்கு, தன் கையால் தன் கண்களைக் குருடாக்கிக் கொள்வதற்கு, தன் மீதே வன்முறையை பிரயோகிப்பதற்கு சமமாகிவிடும்.

ஆத்மஞானம் உதயமாகிவிட்டால் நான் நீ என்னும் பேதம் மறைந்துவிடும் அனைத்தும் ஒன்றே என்று தெரிந்துவிடும். உனக்குள்ள பொறுப்பை நீ உணர்வாய். அது கடமைபோல் பாரமாக இருக்காது. அந்த சுதந்திர சூழ்நிலையில் வற்புறுத்தலால் நீ எதுவும் செய்யவேண்டியிராது. எல்லாம் உன் மூலமாகவே நிகழும். ஆனால் பளு தெரியாது.

துறவி மூட்டையை இழுத்துக்கொண்டு செல்வதுபோல் சிரமப்பட்டார். இதை எங்கேயாவது சிறிது நேரம் இறக்கிவைக்கச் சுமைதாங்கி தென்படுகிறதா என்று பார்த்தபடி சென்றார். செங்குத்தான ஏற்றமாயிற்றே என்று சிறிய மூட்டையைக் கொண்டுவந்திருக்கலாம் என்று தோன்றியது. இம்மாதிரியே யோசித்தபடி அவர் மேற்கொண்டு நடந்தார். இந்த அடிப்படையிலேயே அவர் அச்சிறுமி மீது இரக்கப் பட்டார்.

சிறுமியின் கண்ணோட்டம் வேறு விதமாக இருந்தது. துறவி யோசித்ததுபோல் அவள் யோசிக்கவில்லை. இருவரின் உள்ளமும் பேசிய மொழிகள் வெவ்வேறு. அவள் சொன்னாள், "சாமி, இவனையா சுமை என்கிறீர்கள். அச்சொல்லைத் திரும்பப் பெற்றுக்கொள்ளுங்கள். இவன் என் தம்பியாயிற்றே. இவனா எனக்கு பாரம்?"

அவள் பேச்சு ஓர் உறவை; உள்ளுறவை வெளிப்படுத்துகிறது. உறவு உள்ள இடத்தில் சுமைக்கு இடமேது? கடவுளுடன் உள்ளுறவு ஏற்படுத்திக் கொள்பவன் முழுமையாக சுதந்திரம் பெற்றுவிடுகிறான். அதேசமயம் அந்த சர்வசக்தியுடன் சேர்ந்துகொள்கிறான். ஒன்றி லிருந்து விடுதலை இன்னொன்றுடன் சேர்க்கைக்கு உதவுகிறது. சட்டம் ஆணையிடுகிறது இப்படிச் செய். நீதிநெறிமுறைகள் அறிவுறுத்து கின்றன இப்படிச் செய். சட்டத்தின்படி செல்லாவிடில் நீதிமன்றம், சிறை. சாஸ்திர அறிவுரையைப் பின்பற்றாவிடில் - நரகம். மனிதனுக்கு அச்சம் மேலிடுகிறது. விரும்பி அல்ல, பயத்தின் காரணமாக மனிதன் சமூக, ஆன்மிகக் கட்டுப்பாடுகளுக்குள் வாழ்க்கையை அமைத்துக் கொள்கிறான்.

ஒருவன் தன்னை இந்த விசால உலகத்தின் ஓரங்கம் என நினைத்தால், மரங்களெல்லாம் தனது நீட்டிப்பு என்றும் மரங்களின் பசுமை நானே என்றும் நினைத்தால், நீ மரத்தின் கிளையை வெட்டும் போது அவன் கண்ணில் நீர் துளிர்க்கும். அதுகண்டு உனக்குத் தயக்கம் ஏற்படும். உன்னையே வெட்டுவது போன்று வலிக்கும். மகாவீரர் போலவே நீயும் நடக்கும்போதும் எச்சரிக்கையாக இருப்பாய்.

மகாவீரர் இரவில் தூங்குகையில் புரண்டு படுக்கமாட்டார். புரளும் சமயம் ஏதாவது புழு-பூச்சி நசுங்கிவிடும் என்று அஞ்சுவார். ஆகவே ஒருக்களித்தே தூங்குவார். அவ்வாறு படுக்கும்படி யாரும் அவருக்கு உபதேசிக்கவில்லை. புரண்டு படுப்பது பாவம், ஒருக்களித்தே படு என்று எந்த சாஸ்திரத்திலும் எழுதப்படவில்லை. மகாவீரருக்கு முன்னால் அந்த குரு பரம்பரையில் 23 தீர்த்தங்கரர்கள் தோன்றியுள்ளனர். அவர்கள் யாரும் உறக்கத்தில் புரள்வதைத் தடுத்ததில்லை. அதை பாவமாக அவர்கள் நினைத்ததும் இல்லை. நீ தூங்குகிறாய். ஆகவே புரள்வதற்கு உனக்கு சுதந்திரம் உண்டல்லவா? மகாவீரருக்கோ தான் புரள்வதால் ஒரு பூச்சிக்குக்கூட வலி உண்டாகக்

கூடாது என்று அச்சம். மேலும், அவர் இருட்டிய பிறகு நடக்கமாட்டார். காலின் கீழ் பூச்சி நசுங்கிவிடக் கூடாதே. இருட்டிய பிறகு சாப்பிடுவ தில்லை. உணவில் பூச்சி விழுந்து செத்துவிடக் கூடாதே.

ஜைனர்கள் (சமண மதத்தினர்) இருட்டியபின் (விளக்கிருந் தாலும்) சாப்பிடமாட்டார்கள். ஆனால் அவர்களின் கண்ணோட்டம் வேறு. உணவில் கொசு உள்பட பூச்சி ஏதும் விழுந்து வாய்க்குள் போய்விட்டால் அது ஜீவஹிம்சை (உயிர்க்கொலை) ஆகிவிடும், நரகத்தில் தள்ளப்படுவோம் என அவர்கள் பயப்படுகின்றனர். அதாவது, தங்களை மையமாக வைத்துக் கவலைப்படுகின்றனர். மகாவீரர் தன்னைப் பற்றிக் கவலைப்படவில்லை. நரகத்தின் நினைவு அவருக்கில்லை. பூச்சி செத்துவிடப்போகிறதே என்றுதான் அவருக்குக் கவலை. ஏனெனில் அவர் பூச்சியுடன் ஆத்ம சம்பந்தத்தை உணர்கிறார். அந்த ஆத்ம உறவு கடவுளுடனான ஆத்ம சம்பந்தத்தின் ஓர் அங்கம்தான்.

ஜைனத் துறவிகள் கையில் ஒருவகை சாமரம் வைத்திருப் பார்கள். உட்காருமிடத்தில் சாமரத்தை விசிறி, பூச்சியில்லாமல் பார்த்துக் கொள்வார்கள். அப்போதுதான் உட்காரும்போது பூச்சி எதுவும் நசுங்காது. ஆனால் இதை அவர்கள் உணர்ந்து கருணையுடன் செய்கிறார்களா என்று கூற முடியாது. ஏனெனில் அவர்கள் படித்த, கேள்விப்பட்ட, புரிந்துகொண்ட சம்பிரதாய அறிவுரைகளை இயந்திரம்போல் பின்பற்றவும் வாய்ப்புண்டு. உயிரினங்களுடன் ஏகாத்ம (ஒரே ஆத்மா) உணர்வுக்குப் பதிலாக சடங்கு அந்த இடத்தை நிரப்பிவிடும். ஆனால் ஏகாத்ம உணர்விருந்தால் முகத்தில் களை இருக்கும். மகாவீரரின் திருமுகத்தில் விசேஷப் பொலிவு இருந்தது. மிகுந்த கட்டுப்பாடு என்பதும் சுதந்திரத்தின் ஓர் அங்கம்தான். அத்தகைய சுதந்திரத்தில் மகிழ்ச்சி பிரதிபலிக்கும்.

அடிமைபோன்ற வாழ்க்கை முறையில் கட்டுப்பாடு சிறப்பானதாக, மகிழ்ச்சியானதாக இருக்காது. தாய் தன் மகனிடம் 'நீ என்னை நேசிக்க வேண்டும். ஏனென்றால் நான் உன் அம்மா' என்கிறார். 'ஏனென்றால்,' 'ஆகையால்' போன்ற சொற்கள் தர்க்கத்துடனும் கணிதத்துடனும் தான் சம்பந்தப்பட்டவை; அன்பை வெளிக்காட்டுபவை அல்ல.

பையன் யோசிக்கிறான் 'அம்மா அல்லவா? நேசிக்க வேண்டும்.' அன்பை 'வேண்டும்' என்ற சொல்லால் கட்டாயப் படுத்துவது அன்பை வேரோடு வெட்ட ஆரம்பிப்பதற்கு சமம். அன்பு இயற்கையாகத் தோன்றக்கூடிய வாய்ப்பு இல்லாமல் போய்விடுகிறது. 'செய்ய வேண்டும்' என்னும் நிலையில் அன்பு விடைபெற்றுக் கொண்டுவிடும்.

அன்பு இயற்கையாகத்தானே வெளிப்பட வேண்டும்? அன்பு இருப்பதாக நடிக்கலாமா? நடிப்பதானால் சிறுவன் என்ன செய்வான்? அம்மா அருகில் வந்தால் புன்முறுவல் காட்டுவான். ஆனால் அது உளப்பூர்வமான புன்னகையாக இருக்காது. அன்பாகப் பழகுவான். அது பொய்யன்பாக இருக்கும். சிறுவயதின் அப்பாவித் தன்மை நீங்கி ஏமாற்றும் கலை பயிலுவான். வாழ்க்கை முழுதும் இப்படிப் பிறரிடம் நடித்து அவர்களை ஏமாறவைக்கும் பழக்கம் படிந்துவிடும்.

போலியான சிரிப்பும், உண்மையான புன்முறுவலும் வித்தியாச மானவை. நிஜமான புன்முறுவல் உள்ளத்திலிருந்து புறப்படும். முகத்தில் பரவும். ஒவ்வொரு ரோமக்காலிலும் பிரதிபலிக்கும்.

பொய்ச் சிரிப்பு உதட்டில் தோன்றி அப்படியே இருக்கும். பொய்ச் சிரிப்பை நாடகத்தில் பார்க்கலாம்; அரசியலில் பார்க்கலாம். இதனால்தான் அரசியல்வாதிகள் எப்போதும் கைகுவித்துச் சிரித்தபடி காணப்படுகின்றனர்.

அரசியல்வாதி ஒருவரை எனக்குத் தெரியும். அவர் தூங்கும்போதும் கைகூப்பியபடி புன்முறுவலுடன் தெரிவாராம். கனவிலும் அவருக்கு வாக்காளர்களே தெரிவார்களாம். அவரது வாழ்க்கை ஆரோக்கியமானதன்று. ஒருவகையான வெறியால் நிரம்பிய வாழ்க்கை அது. ஆனால் அவர் சிரித்தபடி உள்ளார். பொய்யான, போலியான சிரிப்பு.

நீ சிலரிடம் அன்பு காட்டுகிறாய். ஏனென்றால் அவர் உன் தாய், தங்கை, தம்பி என்று காரணம் சொல்கிறாய். 'ஏனென்றால்' என்பது ஓர் உறவின் அடிப்படையாக அமைந்தால் நீ அன்பு என்னும் தத்துவத்தைப் புரிந்துகொள்ளவில்லை. உன் அன்பு முழுமையான தன்று.

நாம் எல்லோரும் வேஷம் போடாமலேயே நடித்துக் கொண்டிருக்கிறோம். அதற்கேற்றபடி ஆரம்பத்திலிருந்து பயிற்சி பெறுகிறோம். ஆகவே உலகில் நிஜ அன்பு குறைவாகவும் வேஷம் போடுவது அதிகமாகவும் உள்ளது. சத்திய நடத்தை குறைவாகவும், நடிப்பு அதிகமாகவும் உள்ளது. இந்த சூழ்நிலையில் உலகில் தோன்று வது கடவுளுக்கே விருப்பமில்லை போல் தோன்றுகிறது. மாயை அந்த அளவிற்குப் பரவியுள்ளது. வேடதாரிகளின் எண்ணிக்கை பெருகிவிட்டது.

உன் அடிமனத்திலிருந்து எழும் தூண்டுதலுக்கு ஏற்ப வாழ்க்கை நடத்து. இந்த முயற்சியில் தொடக்கத்தில் தடங்கல் ஏற்படும். எப்படியெனில், நீ மனதார சிரிக்க விரும்பினாலும் சிரிக்க முடியாமல் போகலாம்; அழ விரும்பிய சமயம் அதற்குத் தடைவிழலாம். இந்தத் தடைகளை வெல்வதைத்தான் நான் தவம் என்கிறேன். நீ முயற்சியைக் கைவிடாதிருந்தால் காலப்போக்கில் உன் உள்ளத்தில் அபூர்வமான ஆனந்தம் ததும்பி நிற்கும். வேடம் போடும் குணம் அகலும். பிறகு நீ வாஸ்தவமாகவே சிரிக்க விரும்பும்போதுதான் சிரிப்பாய். அது போலிச் சிரிப்பாக இருக்காது. சிறிது - சிறிதாக உனது வாழ்க்கை போலியான கட்டுப்பாடுகளிலிருந்து விடுபட்டு உன் இயற்கையான குணத்திற்கு ஏற்றபடி உருவாகத் தொடங்கும்.

நான் ப்லேஸ் பாஸ்கலின்* சுயசரிதை படித்தேன். மாபெரும் கணித அறிஞர், அறிவியல் அறிஞர். அவருடைய நண்பர் ஒருவர் சூதாடி. அவரது வாழ்க்கையைச் சூதாட்டமே முழுமையாக ஆக்கிரமித் திருந்தது. சூதாட்டத்தில் சிக்கலான இடம் வரும்போதெல்லாம் அவர் பாஸ்கலிடம் 'நீ பெரிய கணித மேதையாயிற்றே. இந்தச் சிக்கலைத் தீர்க்க நீ எனக்கு உதவு' என்று கேட்பார். அவர் கூறுவதைக் கேட்டு-கேட்டு, அறிவியல் கண்ணோட்டம் காரணமாக முதலில் மதப்பற்று இல்லாமல் போன பாஸ்கல் தீவிர கிறிஸ்தவரானார். சுயமாகச் சிந்தனையில் ஈடுபட்டு அவர் கடவுள் உண்டு - இல்லை, ஆத்திகம் - நாத்திகம், தொழுதல் - தொழாமை குறித்துப் புதிய கருத்துகளை முன்வைத்தார்.

---

* Blaise Pascal (1623-1662) French mathematician, physicist and religious philosopher.

ஒரு சூதாடியின் நச்சரிப்பு பாஸ்கலை தீவிர கிறிஸ்தவராக்கியது என்பது வியப்பான விஷயம் 'சூதாடியின் உள்ளத்து அமைப்பை புரிந்துகொண்டதால் மதவாதியின் உள்ளத்தின் அமைப்பும் அதேபோல் உள்ளதை அறிந்துகொண்டேன்' என்கிறார் பாஸ்கல். சூதாடி விளையாட்டில் ஒரு ரூபாய் பந்தயம் கட்டுகிறான். வென்றால் 25 ரூபாய் கிடைக்கும். தோற்றால் ஒரு ரூபாய்தான் நஷ்டம். இது அவனது மனத்தின் போக்கு. தோல்வியால் பேரிழப்பு இல்லை. வென்றால் எத்தனையோ மடங்கு லாபம். இந்த இரண்டு நிலைகளையும் சூதாடி ஒப்பிட்டுப்பார்க்கிறான்.

பாஸ்கல் கடவுள் இருத்தல் - இல்லாமையை சூதாடியின் மனநிலையில் வைத்துப்பார்க்கிறார். கடவுள் உண்டு என்கிறார் ஆத்திகர். அவர் இறந்த பிறகு கடவுள் கிடையாது என்று தெரியவந்தால் அவர் எதை இழந்தார்? வாழும் போது பூஜை, பிரார்த்தனை, சத்சங்கம், புனித நூல் வாசிப்பு இவற்றில் சிறிது காலம் செலவாயிற்று. பெரிய அளவில் இழப்பு ஒன்றும் இல்லையே. ஆனால் கடவுள் உண்டெனில் ஆத்திகன் சுவர்க்கத்தில் வசிப்பான்; தெய்வீக ஆனந்தம் அனுபவிப்பான்.

கடவுள் கிடையாது என்கிறார் நாத்திகர். அதுதான் உண்மை யென்றால் மேற்கொண்டு ஒரு பிரச்சினையுமில்லை. ஆனால் கடவுள் இருந்தால் என்ன செய்வது? அவரைப் பழித்ததற்காக, நாத்திக பிரசாரம் செய்ததற்காக, நரகம் அல்லவா வாய்த்துவிடும்.

ஆகவே பாஸ்கல் ஆலோசனை தருகிறார். கணக்கியல்படி, தருக்க இயல்படி, கடவுள் உண்டென்று ஏற்றுக்கொள். இதனால் உனக்கு எவ்வகையிலும் நஷ்டம் கிடையாது. இலாபத்திற்கு வாய்ப்பு உண்டு. கடவுள் உண்டென நம்பாவிடில், அது உண்மையாக இருக்கும் பட்சத்தில், நீ எதையும் இழக்கமாட்டாய். ஆனால் கடவுள் இருப்பது உண்மையானால் உனக்கு மாபெரும் நஷ்டம் விளையும்.

இந்த வாதம் கணித இயலின் தேற்றம்போல் ஒலிக்கிறது. இந்த வாதத்தில் கடவுள் மீது அன்பு - பக்தி - என்பது சுட்டப்படவில்லை. இது வெற்றுத்தர்க்கம். இந்த அடிப்படையில் ஒருவன் கடவுள் உண்டென்றால், அவன் ஆழ்மனத்தில் நம்புவதாகக் கூற முடியாது. அவன் சூதாட்டத்தை நம்புகிறான்; கணக்கை நம்புகிறான்; கடவுளை

நம்பவில்லை. அன்பிற்கும் சிரத்தைக்கும் இங்கே இடமில்லை. கடவுள் விஷயம் இங்கே வியாபாரமாகிறது; லாப - நஷ்டக் கணக்கில் பார்க்கப்படுகிறது.

இரண்டே மாற்றுகள்தாம்—கடவுள் உண்டு அல்லது கடவுள் இல்லை. 'கடவுள் என்று ஒருவர் இருந்தால்' என்ற பேச்சுக்கே இடமில்லை. உன் அனுபவப்படி கடவுள் உண்டு அல்லது உன் அனுபவப்படி கடவுள் இல்லை. உன் அனுபவத்தில் கடவுள் உண்டெனில், அதனால் லாபமோ - நஷ்டமோ, எது விளைந்தாலும் அவர் உண்டுதான். உன் அனுபவத்தில் கடவுள் இல்லையெனில், அவ்வாறு நினைப்பதால் லாபமோ - நஷ்டமோ எது விளைந்தாலும் அவர் இல்லைதான். இந்த இரு நிலைகள் தவிர, 'கடவுள் இருந்தால்' என்னும் ஐயநிலைக்கு இடமேது? ஆனால் நம் வாழ்க்கை அனுமானங்களால், ஊகங்களால் நிரம்பியுள்ளது.

பாஸ்கல் என்ன சொல்கிறார்? கடவுள் இல்லையெனில் ஏதோ கொஞ்ச காலம்தான், பிரார்த்தனையில் செலவழித்த சிறிது காலம்தான் வீணானது என்கிறார். அப்படி முன்கூட்டியே நினைப்பவனால் ஈடுபாட்டுடன் பிரார்த்தனை செய்ய முடியுமா? உண்மையான பிரார்த்தனை இங்கே எப்படி எழும்? நேரக் கணக்குடன் அல்லது தர்க்க அடிப்படையுடன் பிரார்த்தனைக்கு என்ன சம்பந்தம்? பிரார்த்தனை என்பது மாபெரும் உணர்வு. கடவுளைத் தவிர வேறு எதுவும் கிடையாது அல்லது முக்கியமில்லை என்னும் உணர்வு பிரார்த்தனையை உண்மையாக்குகிறது. கடவுள் உண்டெனக் கருதுவதால் தன்னிடமுள்ள எல்லாவற்றையும் இழக்க நேரிடினும் பக்தன் பின்வாங்க மாட்டான். 'கடவுளை நம்புவதை விடு, உனக்கு எல்லாம் கிடைக்கும்' என்று ஆசைகாட்டினாலும் பக்தன் 'மன்னியுங்கள், எனக்குக் கடவுள்போதும், வேறேதும் வேண்டாம்' என்பான்.

பிரார்த்தனை என்பது ஒரு சிறப்பான மனநிலையாகும். எத்தனை நேரம், எத்தனை முறை என்றெல்லாம் அதற்குக் கணக்குக் கிடையாது. அன்பு என்பதும் உண்மையான மனநிலை. எந்த அளவிற்கு, எத்தனை பேரிடம் என்றெல்லாம் அதற்குக் கணக்கு இல்லை. உன் எல்லா உணர்வுகளும் இப்படி மெய்யானதாக அமைய வேண்டும். போலித்தனமே கூடாது. அப்போது நீ புதுவகையான ஒரு

சுதந்திரத்தை அனுபவிப்பாய். அந்த சுதந்திர நிலையில் உன்னை அழுத்தாத அபூர்வமான சுட்டுப்பாடும் இறங்கிவரும். சுதந்திர நிலையுடன் பொறுப்புணர்வும் சேர்ந்துவரும். அந்த நிலையில் அடங்காப்பிடாரித்தனம் தலைதூக்காது. அந்த பொறுப்புணர்வு இயந்திரம்போல் கடமையைச் செய்யக் கட்டாயப்படுத்தும் வகையானதாக இருக்காது. அது அன்பின் காரணமாகத் தோன்றும் பொறுப்புணர்வாக இருக்கும். அப்போது நீ நிற்பாய், உட்காருவாய், நடப்பாய், எதுவும் செய்வாய் அவற்றின் பின்னால் உள்ளொளி இயங்கும். வெறும் கை-கால் அசைப்பதுபோல் அது இருக்காது.

உள்ளொளி ஜொலித்துக்கொண்டிருக்குமாயின் நமது நடவடிக்கை ஒவ்வொன்றிலும் அதன் பிரகாசம் பிரதிபலிக்கும். உள்ளொளி அணைந்துபோயிருந்தால் நம்முடைய செயல்கள் ஒவ்வொன்றிலும் இருள் படர்ந்திருக்கும். அறியாமை இருட்டில் செய்யப்படுபவை தரமானவையாக, முழுமை பெற்றவையாக இராது. ஞான விழிப்புள்ள மனிதனால் பாவமே செய்ய முடியாது. அவனுடைய செயல்களில் தூய்மை துலங்கும்.

இருட்டறையிலிருந்து வெளியேறும் மனிதன் சுவர்களைத் தடவியபடி கதவு எங்கே என்று தேடுகிறான். அறையில் வெளிச்சமிருந்தால் அவன் சுவரைத் தடவுவதில்லை; கதவு எங்கே என்று யாரிடமும் கேட்பதில்லை. அவன் தானாகவே கதவைப் பார்த்து அதன் வழியாக வெளியேறிவிடுகிறான். வெளிச்சத்திலுள்ள மனிதன் கதவு எங்கே உள்ளது என்று யோசிப்பது கூட இல்லை. அந்தக் கேள்வியே எழுவதில்லை. வெளிச்சத்தில் கதவு இருக்குமிடம் தெரிவதால் எழுந்து அதை நோக்கிச் சென்றால் போதும்.

உள்ளொளி ஜொலிக்கும் நிலைமையில் உள்ளவனே பரிபூரணமாக சுதந்திரமான மனிதன். அத்தகையவன் சந்நியாசி எனப்படும் தகுதிபெற்றவன் அவன் வகைப்படுத்த முடியாத தனி வகையினன். அஷ்டாவக்ரர் அந்த முழுமையான துறவியைத்தான் குறிப்பிடுகிறார்.

பரம சந்நியாசி போகியுமில்லை, தியாகியுமில்லை. அவரது வாழ்க்கையில் போகமும் இல்லை, தியாகமும் இல்லை. அங்கே நிலவுவது சாட்சி மனப்பான்மை மட்டுமே. சாட்சி மனோபாவம் அமைந்துவிட்டால், நீ எங்கே வேண்டுமானாலும் இரு; எப்படி

வேண்டுமானாலும் இரு; எப்படி உள்ளாயோ அப்படியே இரு. சாட்சி மனப்பான்மை இருந்தால் எல்லாம் தானாகச் சரியாகிவிடும். தியானம் நீடிக்கும். அந்நிலையில் அழுத்தம் தராத கட்டுப்பாட்டு உணர்வு தோன்றும். அது இதமானதாக இருக்கும். பிரசாதம் போல் தானாகக் கிடைக்கும். உன் மீது எதுவும் சிறிதளவும் சுமத்தப்படமாட்டாது. நீ விசேஷ முயற்சி எடுத்து எதுவும் செய்யவேண்டியிராது. கட்டாயக் கடமை என்று உன்மீது நிர்ப்பந்தம் இருக்காது. 'எது நடக்குமோ அதுவே நடைபெறுகிறது. எது நடைபெறுகிறதோ அதுவே சுபமானது' என்றும் உணர்வு மனத்தில் மேலோங்கும்.

'நற்செயல் புரிபவர்கள் மகாத்மாக்கள்' என்று சொல்வது வழக்கமாக உள்ளது. இது குறித்து என் அபிப்பிராயம் என்னவெனில், இவ்வாறு சொன்னால், வண்டியை முன்னாலும் காளைகளைப் பின்னாலும் வைப்பதற்கு சமம். 'மகாத்மாக்களால் நற்செயல்கள் நடைபெறுகின்றன,' என்று சொன்னால், அப்போது காளைகளை வண்டிக்கு முன்னால் பூட்டுவதற்கு சமம். நற்செயல்களால் ஒருவர் புனிதராகிறார் என்பதைவிட புனிதராக இருப்பதால் ஒருவர் நற்செயல் புரிகிறார் என்பதே சாலப் பொருத்தமாக இருக்கும். மேற்புறமாக நடவடிக்கைகளைச் சரிப்படுத்திக்கொள்வதால் உள்ளொளி தோன்றி விடாது. உள்ளொளி முதலில் தோன்றவேண்டும். அப்போது வெளி நடவடிக்கைகள் ஒளிமயமாக இருக்கும்.

மகாவீரர், புத்தர், இயேசுநாதர் ஆகியோர் வாழ்க்கையை நடத்திய விதத்திற்கும் அவரவர்களின் சீடர்கள் வாழ்க்கை நடத்திய விதத்திற்கும் இடையே உள்ள வேறுபாடு விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையே உள்ள வேறுபாட்டிற்கு சமம். மேலோட்டமாகப் பார்த்தால் குருவைப்போலவே சீடர்களும் நடந்துகொள்கிறார்கள். சில விஷயங்களில் குருவையும் விஞ்சியவர்களாக இருக்கிறார்கள். போலிப் பொருள் அசலான பொருளைவிட அதிகத்தரம் வாய்ந்ததாகத் தெரிவது உண்டு. ஏனெனில் அசலில் இயற்கைத் தன்மை இருக்கும். பின்பற்றுபவனிடம் இயந்திரத் தன்மை மிகுந்திருக்கும். நிஜமானவன் சாதாரணமாக இருப்பான். நடிப்பவன் ஒத்திகை பார்த்து, நன்கு பயிற்சி பெற்று வருகிறான். சுபாவப்படி வாழ்பவன் ஒத்திகையோ, பயிற்சியோ மேற்கொள்ளுவதில்லை. உள்ளுணர்வின் தூண்டுதலுக்குத் தகுந்தபடி அவன் வாழ்கிறான்.

உனது சுபாவம் எப்படி இட்டுச் செல்லுமோ அவ்வாறே செல். சுபாவம் தூண்டுவதுபோலவே செய். உள்ளத்தில் என்ன உதிக்கிறதோ அதிலிருந்து பிறழாதே. இதுவே துறவறமாகும். இதை நிறைவேற்றுவது மிகவும் கடினம். இப்படி வாழப்போவதாக நீ அறிவித்தால் உன்னைச் சுற்றிலுமுள்ள உன்னோடு சம்பந்தப்பட்டவர்களுக்கு சங்கடமாக இருக்கும். நீ சுதந்திரமாக வாழ விரும்புவது அவர்களுக்கு சம்மதமில்லை. உனது ஆத்மாவைப் பற்றி அவர்களுக்கு அக்கறை இல்லை. நீ எந்த அளவிற்கு அவர்களுக்குப் பயன்படுவாய் என்றுதான் கணக்குப் போடுகிறார்கள். அதாவது, உன்னை மனிதனாகக் கருதாமல் இயந்திரம்போல் நடத்துகிறார்கள். இயந்திரத்தின் உபயோகம் மிக அதிகம். அது வேலைகள் செய்யுமே தவிர, கோரிக்கைகள் எழுப்பாது; விடுதலை கேட்காது; வேலை நிறுத்தம் செய்யாது; பிரச்சினைகளைக் கிளப்பாது; எதிர்வாதம் புரியாது. கட்டளைப்படி இயங்கும். குமிழை (பட்டனைத்) தட்டிவிட்டால் போதும், சமூகமும் மனிதர்கள் இப்படித் தான் வாய்மூடிக் கட்டளைப்படி நடந்து கொள்ள வேண்டுமென எதிர்பார்க்கிறது.

ஞான விழிப்புப் பெற்ற மனிதனுக்கு பட்டன் கிடையாது. பட்டனைத் தட்டுவது போல் நீ விரல் சொடுக்கி அவனைக் கட்டுப் படுத்த முடியாது. அவன் தனக்கு எஜமானனாக இருப்பவன். நீ அவனுடைய எஜமான் ஆக முடியாது. நீ அவனைத் திட்டினாலும் அவன் அதைக் கேட்டபடியே நிற்பான். நீ அவனுக்குக் கோபமூட்ட அவனிடம் கோபம் என்னும் பட்டன் கிடையாது. அவன் சிரித்துவிட்டுப் போய்விடுவான். அல்லது அவன் சொல்வான்: "என் உள்ளத்தில் கோபம் மூள்வதற்கு வாய்ப்பில்லை. நான் உனக்கு அடிமையில்லை. நீ விரும்பும்போதெல்லாம் என்னைத் திட்டி உன் வசப்படுத்த முடியாது. எனக்கு எஜமானன் நான்தான். உனக்கு வேறு வேலை இல்லையென்றால் திட்டிக்கொண்டே இரு. நான் அதை ஏற்கவில்லை. திட்ட உனக்கு சுதந்திரம் உள்ளதெனில் ஏற்காமலிருக்க எனக்கு சுதந்திரமுண்டு. நீ திட்டினாய் - நன்றி! நீ எனக்காக இவ்வளவு நேரத்தை வீணாக்கி கிருபை செய்திருக்கிறாய். சரி, நான் என் வீட்டிற்குப் போகவேண்டும். நீ உன் வீட்டிற்குப் போகும் வழியைப் பார்."

எவன் தனக்கு எஜமானனோ அவனே சுதந்திரமானவனும்கூட எஜமானன் என்பவன் யார்? தன்னை அறிந்தவனே தனக்கு

எஜமானனாக விளங்க முடியும். தன்னை உணராதவனுக்கு இந்த வாய்ப்பில்லை. தன் நிஜ சொரூபத்தை ஒருவன் அறிந்துகொண்டால் அவனது வாழ்க்கையே மாறிவிடுகிறது. ஒரு புதுவிதமான கட்டுப்பாட்டிற்குள் அவனது வாழ்க்கை வருகிறது. அதனால் அவனது வாழ்க்கை பாதிக்கப்படுவதில்லை. மாறாக, புது மலர்ச்சி பெறுகிறது.

நீ கடமை, கட்டுப்பாடு ஆகியவற்றை மறந்து அன்பின் அடிப்படையில் வாழ்க்கை நடத்த சற்று முயன்று பார். கடமை வலைகள் பின்னியிருப்பதைப் பொருட்படுத்தாதே. நீ மனைவியிடம் அன்பாக இருப்பதாகக் கூறுகிறாய். காரணம் கேட்டால் 'அவள் என் மனைவி' என்கிறாய். கணவன் - மனைவி உறவு பல பிறவிகளுக்கும் தொடரும் என சாஸ்திரங்கள் கூறுகின்றன. இதனால்தானே மனைவியை நீ நேசித்தாய். சாஸ்திரங்கள் உன் வாழ்வைப் பாழாக்கி விட்டன. நீ நிஜமாக அவளை நேசிக்கவில்லை. மனைவி என்பவளை நேசிக்க வேண்டும் என்னும் விதிமுறைக்காக நீ அப்படி நடந்து கொள்கிறாய். அன்பு பெருக்கெடுத்து ஓடவில்லை; மழைபோல் பொழியவில்லை; அன்பு ஆவேசத்தில் நீ நடனமாடவில்லை; பாட்டுப் பாடவில்லை. புரோகிதர் கூறியபடி மணமேடையில் ஏழுமுறை அவளுடன் நீ அக்னியை வலம் வந்தாய். சோதிடர்கள் பொருத்தம் பார்த்து நீ கணவன், அவள் மனைவி என்று ஆமோதித்தார்கள். உன் அப்பா-அம்மா நல்ல குடும்பமா என்று பார்த்துப் பெண்ணை முடிவுசெய்தனர். மணந்துகொள்வது தவிர வேறு வழியில்லை. திருமணத்தால் அவள் உன் மனைவியாகிவிட்டதால் அவளை நேசிப்பதைத் தவிர வேறு வழியில்லை. நீ கடனுக்காக நேசிப்பதை அவள் உணர்ந்துவிடுவாள்.

சமூகக் கட்டுப்பாடுகளுக்கு அடங்கிச் செயற்கையாக வாழ்வது பாராட்டப்படுகிறது. ஆகவே தன் சுபாவப்படி வாழ்வது புரட்சியான செயலாகத் தோன்றுகிறது. ஆகவே உண்மையான மதவாதி புரட்சியாளனாக இருப்பான். அவனது வாழ்க்கையைத் தவவாழ்க்கை எனலாம். தவம் என்றால் வழக்கமாக மேற்கொள்ளப்படுகிற வெயிலில் நிற்பது, உடலில் சாம்பலைப் பூசிக்கொள்வது, ஆணிப்படுக்கைமேல் படுத்துக்கொள்வது முதலிய செய்கைகள் அல்ல. இவை புறச்சடங்குகள் மட்டுமே. இவை தவத்துடன் சம்பந்தப்படவில்லை. நீ குறிப்பிட்ட தினங்களில் அல்லது நீண்ட காலம் உண்ணாநோன்பைக் கடைப்

பிடித்தால் அதுவும் தவமன்று. இவையெல்லாம் உன் மனமே உருவாக்கிய விசித்திர நம்பிக்கைகளாகும்.

உன் உள்ளத்தின் ஆழத்திலிருந்து வெளியுலகை நோக்கி நீ பயணப்படுவதே தவம் என்பதாகும். அதன் விளைவு எதுவாக இருப் பினும், அம்முயற்சி சிரமமாக இருப்பினும், நீ கவலைப்படமாட்டாய். இந்நிலையில் நீ வெளிப்புற உலகிலிருந்து மேல்நோக்கிப் பயணப்பட மாட்டாய். அதனால் எத்துணை நன்மை விளையுமாயினும் அதைப் பொருட்படுத்தமாட்டாய். நீ உள்மனத்திலிருப்பதையே வெளியே கொண்டுவருவாய். அந்த உள்மனச்சரக்கின் அடிப்படையில் உன் வெளியுலக வாழ்க்கையை நிர்மாணிப்பாய்.

பொதுவாக, மதகுருக்கள் அறிவுரை கூறுகையில் 'வெளியே இருப்பது எதுவோ அதை உள்முகப்படுத்த வேண்டும், பிரம்மாண்டம் உனக்குள் வந்துவிட வேண்டும்' என்பார்கள். என் கருத்துப்படி, 'உனக்குள் என்ன வீற்றிருக்கிறதோ அதுவே வெளியே வந்து காணப்பட வேண்டும்.' இந்த இரண்டு கண்ணோட்டங்களும் ஒரே அர்த்தமுடையவை என்பதைக் கவனி.

தர்மகுரு, 'உனக்கு வெளியில் உள்ளது எதுவோ அதுவே உள்ளேயும் அமைய வேண்டும்' என்கிறார். நீ வெளியில் புன்முறுவல் காட்டினால் உன் உள்ளத்திலும் புன்முறுவல் பூக்க வேண்டும் என்று இதற்கு அர்த்தமாகிறது. இது சங்கடமான விஷயம். நான் சொல்வது இதற்கு எதிரிடையானது. உன் உள்ளத்தில் என்ன இருக்கிறதோ அதுதான் உதட்டிலும் வெளிப்பட வேண்டும். உள்ளத்தில் புன்முறுவல் மலர்ந்தது எனில் எல்லாக் கவலைகளையும் விடு; நேரம் காலம் பார்க்காதே. அப்புன்முறுவலை வெளிப்படுத்து. சிரி.

**எ**ன் சிறுவயதில் எனக்கு ஆசிரியராக இருந்த ஒருவர் காலமாகி விட்டார். அவரை எனக்கு மிகவும் பிடிக்கும். அருமையான மனிதர். பருமனான உடல்வாகு கொண்டவர். மிகவும் அப்பாவியான மனிதர். மாணவர்கள் அவரைச் சீண்டுவார்கள்; மிகவும் கேலிசெய்வார்கள் போதாக்குறைக்கு பெரியதொரு தலைப்பாகை கட்டிக்கொண்டு வருவார். பருத்த உடல், கனத்த முண்டாசு, கையில் பிரம்பு. முகத்தில் குழந்தைத்தனம் தெரியும். அவர் பெயரை மக்கள் மறந்து விட்டனர்.

'போலேநாத்' (அப்பாவிநாத்) என்றே பட்டப்பெயர் வைத்து அவரைக் குறிப்பிட்டனர். இதைக் கேட்டு அவர் எரிச்சலடைவார். அவர் வகுப்பறைக்குள் நுழையும் முன்பே மாணவர்கள் கரும்பலகையில் 'போலேநாத்ஜி, வருக, வருக' எனப் பெரிய எழுத்துகளில் எழுதிவைத்திருப்பார்கள். ஆசிரியர் வகுப்பறையில் நுழைந்து கரும்பலகையைப் பார்த்ததும் சூடாகிவிடுவார். அவரது கோபத்தையும், சங்கடத்தையும், அவர் மேஜை மீது பிரம்பால் ஓங்கியடிப்பதையும் பார்த்து மாணவர்களுக்குக் கொண்டாட்டமாக இருக்கும்.

சில ஆண்டுகள் சென்றன. அவர் இறந்துவிட்டார். இளைஞனான நான் அவர் வீட்டிற்குச் சென்றேன். பலத்த கூட்டம். சிற்றூர் என்பதால் ஒருவரை ஒருவர் அறிந்திருந்தார்கள். ஊரில் எல்லோருக்குமே அவரைப் பிடிக்கும். பருத்த தொந்தியுடன் படுத்த நிலையிலிருந்த அவரைப் பார்த்து எனக்குச் சிரிப்பு வந்தது. அது நாகரிகமில்லாத செயலாகும் என்பதால் என்னைத் தடுத்துக்கொண்டேன். சில நிமிடங்கள்தான் அடக்கிக்கொள்ள முடிந்தது. ஏனெனில் உடலை எடுக்கும் சமயம் வந்துவிட்டது. அவர் மனைவி அவரது உடல்மேல் விழுந்து 'என்னை விட்டு போகிறீர்களே போலேநாத்ஜி!' என்று கதறினார். மாணவர்கள்தான் அவரைச் சீண்ட 'போலேநாத்' என்று கூறிவந்தோம். அவர் மனைவியும் அதே பெயரைக் கூறுகிறாரே என்று நான் சத்தம்போட்டுச் சிரித்துவிட்டேன். என் பெற்றோர் உடனே என்னை வீட்டுக்கு இழுத்துவந்துவிட்டனர். நான் பலத்த திட்டுவாங்கினேன். 'இனி மேல் இம்மாதிரி நிகழ்ச்சிகளுக்கு நீ போகவேகூடாது', என்று என்னை எச்சரித்தனர்.

நான் சிந்தித்தேன். வெளிப்படையாகச் சொன்னேன்: "சிரிப்பதற்கு இதைவிடப் பொருத்தமான தருணம் வேறு எப்போது கிடைக்கும்? ஆசிரியர் உயிருடன் இருந்த காலம் முழுவதும் மக்கள் அவரை 'போலேநாத்'" என்று கூப்பிட்டு எரிச்சலூட்டினார்கள். அவர் வீட்டிலிருந்து பள்ளிக்கூடம் செல்லும் வழியில் ஆங்காங்கே மாணவர்கள் பின்னாலிருந்து 'போலேநாத்ஜி, நமஸ்தே' என்பார்கள். அவர் அவர்களைப் பிடிப்பதற்காக இங்குமங்குமாக உடல் குலுங்க ஓடுவார். சத்தமாகத் திட்டுவார். இத்தனை வேடிக்கை போதாததுபோல் அவர் மனைவியும் அவர் உடல்மீது விழுந்து 'ஐயோ, போலேநாத்ஜி' என்று கதறினாளே, உள்ளே இருந்ததுதான் வெளியே வந்துவிட்டது."

என் பெற்றோர் இதைக் கேட்டு மறுபடியும் என்னைக் கண்டித்தார்கள். ஆனால் நான் செய்தது தவறென்று ஒப்புக்கொள்ள நான் தயாராக இல்லை. 'பிறப்பு சிரித்து மகிழ்வதற்கான தருணம் என்பதுபோல் இறப்பையும் மகிழ்ச்சியான தருணமாகக் கருத வேண்டும்' என்று வாதிட்டேன். என் குடும்பத்தினர் என்னிடம் "உன் 'ஃபிலாஸபி'யை உன்னிடமே வைத்துக்கொள். இனி யார் இறந்தாலும் நீ துக்கம் விசாரிக்கவோ, உடலைப் பார்க்கவோ போகக்கூடாது" என்று அழுத்தமாகத் தெரிவித்தனர்.

மனிதன் திடமாக ஒரு சபதமெடுக்க வேண்டும். 'என் உள்மனத்தில் என்ன உணர்வு உள்ளதோ அதை அமுக்க, நசுக்க மாட்டேன். என் உள்ளத்தில் இருப்பது வெளியே தோன்றுவதை நான் தடுக்கமாட்டேன். வெளிப்படுத்தாவிட்டாலும் அந்த உணர்வு உள்ளத்தில் நீடிக்கத்தான் செய்கிறது. அதை வெளிப்படுத்தாவிடில் சிறிது - சிறிதாக ஆத்மாவுடன் எனக்குள்ள சம்பந்தம் அறுந்து போய்விடும். எனக்கு ஒரு காரணத்தால் அழுகை வருவதாக வைத்துக்கொள்வோம். "பெண்கள்தானே அழுவார்கள். ஓர் ஆண்பிள்ளை அழுவது அசிங்கம் இல்லையா" என்று சூழ்நிலை கண்டித்தாலும் நான் தயங்கமாட்டேன்'

அழவேண்டிய நேரம் வந்தால், உன் உள்ளம் அழுகையால் நிரம்பியிருந்தால் தயங்காதே, தடுக்காதே, கண்ணீரை வெளியே பாயவிடு. உலகம் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். காதில் போட்டுக்கொள்ளாதே. இதேபோல் வாய் விட்டுச் சிரிக்க வேண்டு மெனத் தோன்றும்போது அந்த நீரூற்று பீறிடுவதைத் தடுக்காதே. உலகம் தடுத்தால் பொருட்படுத்தாதே. இவ்வாறு உள்ளும் வெளியும் ஒன்றாக இருக்க முயலுவதையே நான் தவம் என்கிறேன்.

இப்படி வாழ்வதில் நிறையத் தொல்லைகள் வரும். வெளியில் நின்றோ, பட்டினி கிடந்தோ செய்யப்படும் தவத்தைவிட உள்ளபடி வாழ்வது சிரமமானது. இந்த சிரமத்தோடு ஒப்பிடுகையில் தவம் மேற்கொள்வதைக் குழந்தைகளின் விளையாட்டு எனலாம். ஆனால் உள்ளத்தில் உள்ளபடி வெளிவாழ்க்கை நடத்தும்போது அப்பாதையில் ஒவ்வோர் அங்குலத்திலும் பிரச்சினைகள் எழும். ஏனெனில் வழியெல்லாம் சமூகம் கட்டுப்பாடுகளை ஏற்படுத்தியுள்ளது. நடத்தை விதிகள், பண்பாட்டு எல்லைகள் வரையறுக்கப்பட்டுள்ளன. இவை

உன்னை ஆக்கிரமித்து போலியான மனிதனாக உருவாக்குகின்றன. ஆம், நீ மகாபொய்யன்! உன் உள்ளத்தில் தேடிப்பார்த்தால் சிறிதளவும் உண்மை இருக்காது. ஏனெனில், உனது உள்வாழ்க்கையும் வெளிவாழ்க்கையும் வெவ்வேறு விதமாக அமைந்துவிட்டன.

ஒரு மாத காலம் நீ உன்னை பரிசோதித்துப் பார். நீ எத்தனை தடவை பொய் சொல்கிறாய் என்பதைக் கணக்குப்போடு. வழியில் ஒருவரைப் பார்த்தால், "ஐயா, வணக்கம். நீண்ட காலத்திற்குப் பிறகு இன்றுதான் உங்கள் தரிசனம் கிடைத்தது. என் கண்களின் ஏக்கம் தணிந்தது" என்று கூறுகிறாய். ஆனால் உன் மனத்திற்குள், 'காலை வேளையில் இந்த துஷ்டன் கண்ணில் பட்டுவிட்டானே. இன்று முழுநாளும் கெட்டுத்தான் போகப்போகிறது. துரதிருஷ்டவசமாக நான் இந்த நேரம் இந்தப் பாதை வழியாக வரநேரிட்டது' என்று நொந்துகொள்வாய். "உங்களைச் சந்தித்ததில் மிகவும் மகிழ்ச்சி" என்று வெளியில் கூறுவாய். மனத்தில் 'இந்த ஆளிடமிருந்து எப்படித் தப்பிப்பது' என்று யோசிப்பாய். நீ புன்சிரிப்புச் சிரிக்கிறாய். அது உதட்டுடன் மட்டும் சம்பந்தப்பட்டதா அல்லது அது உள்ளத்திலிருந்து ஊறுகிறதா? சில சமயம் நீ கண்ணீர் விடுகிறாய். அது கண்களிலிருந்து புறப்படுகிறதா அல்லது உயிரின் ஆழத்திலிருந்து மேலே வருகிறதா?

ஒரு மாதம் இப்படி நீ உன் செயல்களை மதிப்பிட்டால் உன் வாழ்க்கை தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் போலியானது என்று தெரிந்துவிடும். நீ கடவுளைத் தேடுவதாகச் சொல்கிறாய். அதில் வெற்றிபெற உன் வாழ்க்கை நூற்றுக்கு நூறு உண்மையானதாக இருக்க வேண்டும். இது மிகவும் கடினமான விஷயம்.

சமூகம் பொய்ம்மையின் அடிப்படையில் இயங்குகிறது. ஃப்ரெடரிக் நீத்ஷே* கூறுகிறார்; 'பொய்யின் உதவியின்றி வாழ முடியாதபடி மனிதன் படைக்கப்பட்டுள்ளான். அவனுடைய எல்லாச் செயல்களும் பொய்யின் உதவியுடன்தான் நடைபெறுகின்றன. பொய்யிலிருந்து மனிதனை மறந்துகூட பிரித்துவிடக் கூடாது. பிறகு அவன் வாழ்வதே சிரமமாகிவிடும். இயந்திரத்திற்கு மசகெண்ணெய் போடுவதுபோல் வாழ்க்கையில் பொய் உதவுகிறது. மசகெண்ணெய் போடாவிடில் இயந்திரம் இயங்காது. கரடுமுரடான ஒலிகள் எழுப்பும்.

* Friedrich Nietzsche (1844-1900) German-Swiss philosopher and writer.

எண்ணெயின் பசைத்தன்மை இயந்திரம் இயங்க உதவுவது போல், பொய்யானது மனிதர்களிடையே உரசலைக் குறைத்து உறவைப் பராமரிக்கிறது.'

நீ வெளியிலிருந்து வீடு திரும்புகையில் மனைவிக்கு ஐஸ்கிரீம் வாங்கி வந்தாய்; பூ வாங்கிவந்து சூட்டினாய் - இல்லை, நீ பொய் வாங்கி வந்தாய்! உன் இதயத்தில் அன்பு இருந்தால் ஐஸ்கிரீமோ, பூவோ தேவைப்படாது. அன்பு இல்லாததால் உங்கள் இருவரின் உறவில் ஒரு பள்ளம் விழுந்துள்ளது. ஆகவே உன் மனத்திலுள்ள குற்ற உணர்வைப் போக்கிக்கொள்ள நீ மனைவிக்கு இனிப்பு வாங்கிவருகிறாய். இடைவெளிப் பள்ளம் பெரிதாகத் தொடங்கினால் நகையோ, புடைவையோ கொண்டுவந்து தருகிறாய். பள்ளம் எவ்வளவோ பெரிதோ அதற்கேற்ப உன் பரிசுப்பொருளும் விலை உயர்ந்ததாக இருக்கிறது. நீ எவ்வளவுதான் கொண்டுவந்தாலும் அன்பால் நிரப்ப வேண்டியதை அவற்றைக்கொண்டு நிரப்ப முடியாது. மனைவிக்காக நீ எவ்வளவோ செய்வதாக நினைக்கலாம். உன் மனைவியோ உனக்கு அன்பு காட்டத் தெரியவில்லையே என்று நினைத்துக் கொண்டிருக்கலாம்.

நீத்ஷே கூறுவதுபோல் மனித வாழ்க்கை பொய்களால் நிரம்பியுள்ளது. இந்த சூழ்நிலையில் உனக்கு என்றும் கடவுளின் தரிசனம் கிடைக்காது. சமூக வாழ்க்கையைப் பொய் எளிதாக்குவது உண்மையே. அதே சமயம் ஆன்மிக வாழ்க்கையில் பொய் தடைக்கல்லாக அமைகிறது.

இதற்காக நான் உன்னை சமூகத்தைக் கைவிடுமாறு சொல்லவில்லை. பொய்களைக் கைவிடத்தான் சொல்கிறேன். பொய்கள் காரணமாக நீ உயிரோட்டமுள்ள வாழ்க்கையை நடத்த முடியவில்லை. அசலான வாழ்க்கையை இழந்துவிட்டாய். சமூகத்தில் நீடித்து இரு. ஆனால் சமூகத்தின் சாயம் உன்னைப் பாதிக்க அனுமதிக்காதே. சம்பிரதாயங்களைப் புறக்கணி. அவை மேற்பூச்சானவை. பொய் கலக்காத, போலி இல்லாத வாழ்க்கை நடத்து. உனக்குள் கடவுள் மெள்ள-மெள்ள இறங்குவதை உணருவாய். உன் ஆளுமையில் சத்தியத்தின் அளவு அதிகமாவதற்கு ஏற்ப நீ எங்கும் பரவியுள்ள பரம்பொருளைக் காண்பதில் வெற்றிபெறுவாய்.

சமூகத்தில் நம்முடன் ஒத்துழைப்பவர்கள்தாம் கடவுளைத் தேடுவதில் நமக்கு இடையூறாக உள்ளனர். இது பெரிய ஆச்சரியம் தான். எனினும் நீ உள்மனப்படி வாழ்ந்தால் கடவுளின் அருள் உனக்குள் இறங்கிவரும். அப்போது நீ முழுமையாக சுதந்திர புருஷனாகிவிட்டதை உணர்வாய். உன் வாழ்வில் உனக்கொரு பொறுப்பு இருப்பதும் புரியவரும். பிறகு உன் சமூகக் கடமைகளை நிறைவேற்றுவாய். ஆனால் வெளி நிர்பந்தத்தால் நீ பாதிக்கப்படாமல் செயல்புரிவாய் உனக்குள்ளே ஒருவகையான இனிமை கசியும். உன்னைத் தவிர வெளியுலகம் என்று யாருமில்லை என்ற முடிவிற்கு வருவாய். அசல் வாழ்க்கை உள்ளத்தினுள்ளேதான் நிகழ்கிறது என்று அறிந்துகொள்வாய்.

ஆகவே ஜனகர் 'என்னையே நான் நமஸ்கரிக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது' என்று அறிவிக்கிறார். 'படைப்பில் நான் ஒருவன் மட்டுமேதான் உள்ளேன். எல்லாப் பொருள்களும் எனக்குள்ளும் நான் எல்லாவற்றிலுமாக இருக்கிறேன் என்று உணரும்போது ஒருவகையான கட்டுப்பாட்டின்கீழ் நாம் வருகிறோம். அது பிறரால் சுமத்தப்பட்ட அடிமைத்தனம் போலிராது. அது கெளரவமான சுயக்கட்டுப்பாடாக இருக்கும். அந்தக் கட்டுப்பாட்டு உணர்வு உன் உள்ளேயிருந்து வரும். பிறரால் சுமத்தப்பட்டக் கட்டுப்பாட்டால் நீ அடிமைபோல் வாழ்வாய்; அடிமைபோல் சாவாய். சுயமான கட்டுப்பாட்டால் நீ கடவுளை நெருங்குவாய். தலைவனைப் போல் வாழ்வாய்; தலைவனைப்போல் இறப்பாய்.

### இரண்டாம் கேள்வி

**நீங்கள் ஒருமுறை வானப்ரஸ்தம் என்பது (பிரம்மசரியம், குடும்ப வாழ்க்கைக்கு அடுத்த நிலை) முடிவெடுக்காத நிலை என வரையறுத் தீர்கள். அதில் மனிதன் காட்டை நோக்கி இரண்டு காலடி எடுத்துவைக்கிறான். பிறகு இரண்டு காலடி பின்னோக்கி வைத்துக் கடைத் தெரு வாழ்க்கைக்குத் திரும்பி விடுகிறான் என்றீர்கள். தேர்ந்தெடுக்காமை என்பது அஷ்டாவக்ர மகாகீதையின் செய்தி என்றால் மனிதன் என்ன செய்வது? கடைத் தெருவையா அல்லது கானகத்தையா அல்லது இரண்டும்**

**வேண்டாமா? முடிவெடுக்காத நிலைக்கும் தேர்ந்தெடுக்காத நிலைக்கும் இடையே என்ன வேறுபாடு?'**

அஷ்டாவக்ர மகாகீதையின் செய்திப்படி தேர்ந்தெடுத்தல் என்றாலே அது உலகத்தோடு தொடர்புடையதாகிவிடுகிறது. நீ துறவறத்தைத் தேர்ந்தெடுத்தாலும் அது எதிர்மறை முறையில் உலகுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. நீயாகத் தேர்ந்தெடுத்தால் அது கடவுளின் தேர்ந்தெடுப்பு அன்று. சுயமாக ஒன்று நிகழ்ந்தால்தான் அது கடவுளின் தேர்ந்தெடுப்பு ஆகும். நீயாக நிகழ்த்துவது நீ போட்ட திட்டத்தின் காரணமாக நடக்கிறது. அது உன் அகங்காரத்தின் விஸ்தரிப்பு ஆகும்.

மகாகீதை சொல்கிறது: நீ தேர்ந்தெடுக்காதே; சாட்சியாக மட்டும் இரு. நடப்பதை நடைபெறவிடு. சுயமான தூண்டுதல் காரணமாக நீ கடைத்தெருவிற்கோ, காட்டுக்கோ எங்கே வேண்டுமானாலும் செல்.

வித்தியாசத்தைக் கவனி. இயற்கையான உள்தூண்டுதலினால் நீ காட்டுக்குப் போவதும், முடிவெடுத்து, முயற்சி செய்து, பயிற்சி மேற்கொண்டு காட்டுக்குப் போவதும் வெவ்வேறானவை.

என் நண்பர் ஒருவர் ஜைனமதத் துறவி. காட்டில் அவரது குடிசை. ஒரு முறை நான் அவ்வழியாக காரில் போனபோது அந்தக் குடிசை அருகே இறங்கினேன். ஜன்னல் வழியாகப் பார்த்தேன். அவர் உடலில் ஆடையேதுமின்றி அறையில் உலாவிக்கொண்டிருந்தார். இதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. காட்டில்தான் மக்கள் நடமாட்டம் கிடையாதே. யாருக்காக ஆடை அணியவேண்டும்? மேலும் அவர் திகம்பர ஜைனர் பிரிவைச் சேர்ந்தவர். அப்பிரிவில் நிர்வாணமாக இருப்பதற்கு மரியாதை தரப்படுகிறது. நான் கதவைத் தட்டியதும் அவர் இடுப்பில் துணியைச் சுற்றிக்கொண்டு வெளியே வந்தார்.

நான் கேட்டேன், "சில நிமிடம் முன் நான் ஜன்னல் வழியாக பார்த்தபோது நீங்கள் ஆடையின்றி இருந்தீர்கள். இப்போது ஏன் இடுப்பில் துணி உடுத்தி வருகிறீர்கள்?"

"நான் ஒரு பயிற்சி மேற்கொண்டு வருகிறேன்," என்றார் அவர். "அதென்ன பயிற்சி?" என்று நான் கேட்டேன். "ஆடை அணியாமல் இருக்கப் பழகி வருகிறேன்," என்று அவர் காரணம் கூறினார்.

திகம்பர ஜைனப் பிரிவினரின் வாழ்க்கையில் ஐந்து கட்டங்கள். முதல் கட்டம் பிரம்மசரியம். கடைசிக் கட்டம் 'முனி' ஆகும். அப்போது அவர் ஆடையையும் துறந்துவிடுகிறார். இரண்டு கோவணம் வைத்திருப்பார். அடுத்த கட்டமாக அவற்றில் ஒன்றைத் துறப்பார். கடைசியில் மிஞ்சியதையும் துறந்து முழுமையாக ஆடையற்றவராகிறார்.

நான் கேட்டேன், "வர்தமான மகாவீரரின் வாழ்க்கையில் அவர் ஆடைகளைத் துறக்கும் பயிற்சி செய்ததாக ஏதேனும் குறிப்புள்ளதா?" துறவி இல்லையென்றார். நான் விடவில்லை. "நீங்கள் ஜைனமத சாஸ்திரங்கள் படித்த அறிஞர். அவற்றில் எங்காவது மகாவீரர் ஆடையின்றி இருந்தது குறித்து ஏதேனும் சொல்லப்பட்டுள்ளதா?" என்று தொடர்ந்தேன். அவர் திகைத்தார். சாஸ்திரப்படி பின்வரும் வர்ணனை உள்ளது.

மகாவீரர் தம்மிடமிருந்த எல்லாவற்றையும் பிறருக்கு அளித்து விட்டு, ஒரு போர்வையால் மட்டும் உடலை மூடி, வீட்டைத் துறந்து வெளியேறினார். வழியில் ஒரு பிச்சைக்காரன் அவரைச் சந்தித்தான். "எல்லாவற்றையும் தானமாகக் கொடுத்துவிட்டீர்களா? கால் ஊனம் காரணமாக நான் வந்துசேர தாமதமாகிவிட்டது," என்றான்.

மகாவீரர் போர்வையில் பாதியைக் கிழித்து அவனுக்குத் தந்தார். மீதிப் பாதியே உடலை மறைக்கப் போதும் என நினைத்தார். மேற்கொண்டு அவர் காட்டு வழியே செல்கையில் ஒரு முள்செடியில் அவரது பாதிப்போர்வை சிக்கிக்கொண்டது. முயன்று அதை எடுத்தால் செடிக்கு வலிக்கும், செடி சேதப்படும் என்று அவர் அஞ்சினார். அவர் செடியிடம், "சரி, மற்றவர்களைப்போல் நீயும் பெற்றுக்கொள். இந்த பாதி போர்வையை நீயே வைத்துக்கொள், " என்று கூறிவிட்டு ஆடை யின்றித் தொடர்ந்து நடந்தார்! அவர் இயல்பாகவே ஆடையைத் துறந்தாரே தவிர, அதற்காக அவர் தனியாகப் பயிற்சி செய்யவில்லை என்பது தெளிவு.

நான் இதைக் குறிப்பிட்டுத் துறவியிடம் சொன்னேன், "சந்நியாசம் என்பது சட்டென்று முழுமையாக நிகழ்வது. நீங்கள் பயிற்சி செய்துதான் முழுமையை - ஆடையற்ற நிலையை - அடைந்தால் அது சந்நியாசமாகாது. உங்கள் திட்டமென்ன? முதலில் மூடிய

அறையில் ஆடையின்றி இருப்பது; அடுத்து, ஆடையின்றித் தோட்டத்தில் உலாவுவது; பிறகு கொஞ்சம் – கொஞ்சமாக கிராமத்தில் ஆடையின்றி நடப்பது – இப்படி ஒவ்வொரு கட்டமாக, மெதுவாக ஆடையற்ற நிலையை அடைந்தால் அது போலித் தன்மை கொண்டிருக்கும். உங்களுக்கு அந்த நிலையை அடைய விருப்பம் எனில் உடனே நிகழ்த்தலாம். நீங்கள் உடுத்தியிருக்கும் அரை வேஷ்டியை எனக்கு இப்போதே அன்பளிப்பாகக் கொடுத்துவிடுங்கள். பயிற்சி செய்யும் தமாஷை நிறுத்துங்கள்.''

''உடனே சிரமம், சிறிது அவகாசம் தேவை,'' என்று அவர் பின்வாங்கினார். நான் அவரது அரை வேஷ்டியைப் பிடித்து இழுக்க ஆரம்பித்தேன்! அவர் 'அரே, அரே, அரே' என்று கூச்சலிட்டார். நான் சொன்னேன், ''நான் உங்களைக் கேலிசெய்ய வரவில்லை. உங்களை சட்டென்று முழு சந்நியாசியாக ஆக்குவதே என் நோக்கம். எத்தனை காலம்தான் நீங்கள் பயிற்சியிலேயே தேங்கிக் கிடக்க விரும்புகிறீர்கள்? நான் ஊர் மக்களை அழைத்து வருகிறேன். அவர்கள் முன்னிலையில் உங்கள் அரை வேஷ்டியை நான் பெற்றுக்கொள்கிறேன். ஐந்தே நிமிடத்தில் நீங்கள் பூரணமான திகம்பர ஜைனத் துறவி ஆகி விடுவீர்கள்.

துறவி பதறினார், ''வேண்டாம், வேண்டாம், உடனே எதுவும் செய்ய முடியாது. யாரிடமும் எதுவும் சொல்ல வேண்டாம். முழுத்துறவி ஆவதற்கு நான் இன்னும் தகுதி பெறவில்லை.''

''என்ன இப்படிச் சொல்கிறீர்களே. இந்தக் காட்டில் எங்கும் பறவைகளும் விலங்குகளும் ஆடையின்றித்தானே திரிகின்றன. அவற்றிற்கு என்ன தகுதி உள்ளது? நீங்கள் ஏன் தகுதிபற்றி பேசுகிறீர்கள்? உடையைத் துறப்பது எத்துணை எளிதான காரியம்! அதற்கெனத் தனித்தகுதி என்ன வேண்டியுள்ளது? மனிதனுக்கு ஒன்றைக் கைவிட இஷ்டமில்லையெனில் சாமர்த்தியமாகத் தர்க்கம் செய்கிறான்'' என்று அவரை நான் கண்டித்தேன்.

இந்த சம்பவம் நடந்து 15 ஆண்டுகளாகிவிட்டன. இன்னும் அவரால் முழுமையாக ஆடையற்றவராக முடியவில்லை! இன்னும் இடுப்பில் துணி உள்ளது. அவரது பயிற்சியும் தொடர்கிறது.

'தேர்ந்தெடுக்காதே' என்று மகாகீதை எச்சரிக்கிறது. தேர்ந்தெடுத்தல் அகங்காரத்துடன் சம்பந்தமுள்ளது. 'நான் தேர்ந்தெடுக்கிறேன்' என நினைக்கும்போதே நீ 'கர்த்தா' ஆகிவிடுகிறாய். மகாகீதை சொல்வது நீ செய்பவனாக ஆகாதே; அனுபவிப்பவனாக ஆகாதே; எல்லாவற்றிற்கும் சாட்சியாக இருந்துவிடு.

நீ கடைத்தெருவில் வியாபாரம் செய்துவருகிறாய். அதுவே சரி எனத் தோன்றினால் அப்படியே நீடித்து இரு. ஒருவேளை காடு உன்னை 'வா- வா' என்று கூப்பிட்டால் காட்டை நோக்கி நட, ஓடு. கிருஷ்ணனின் புல்லாங்குழல் இசை கேட்டு கோபிகைகள் எல்லாவற்றையும் அப்படியே கைவிட்டு ஓடியதுபோல் நீயும் சட்டெனக் கிளம்பிவிடு. ஒருத்தி பால் காய்ச்சிக்கொண்டிருந்தாள்; ஒருத்தி விளக்கு ஏற்றிக்கொண்டிருந்தாள். புல்லாங்குழல் ஒலி கேட்டதும் அவர்கள் வேலைகளைப் பாதியிலேயே கைவிட்டு கிருஷ்ணனை நோக்கி ஓடினார்கள்.

நீயும் காடு கூப்பிட்டதும் மெய்ம்மறந்து ஓடு. ஏன் ஓடினாய் என்று உன்னால் பதில்கூற முடியாமல் போய்விடும். ஏன் அப்படி நிகழ்ந்தது என்று தர்க்கபூர்வமாக உன்னால் விளக்க முடியாது. 'அப்படி நிகழ்ந்ததை நான் பார்ப்பவனாக மட்டும் இருந்தேன். நான் நடந்துகொண்ட விதம் இயற்கையாகவே ஏற்பட்டது' என்று நீ கூறினால், அஷ்டாவக்ரரின் மதிப்பீட்டின்படி நீ உண்மையான துறவறத்தை அடைந்துவிட்டாய் எனலாம்.

இன்று கேட்ட கேள்வி - மனிதன் கடைத்தெருவைத் தேர்ந்தெடுப்பதா அல்லது காட்டையா? தேர்ந்தெடுப்பதில் ஈடுபட்டால் வழி தவறிவிடுவான். தேர்ந்தெடுப்பது உலகியலுடன் சம்பந்தப்பட்டது. காட்டில் வாழ்வதுகூட தேர்ந்தெடுத்தலின் காரணமாக அமைந்தால் அது நாட்டில் வாழ்வதற்கே சமம். தேர்ந்தெடுக்காமல் இயற்கையாக அமையும் கடைத்தெரு வாழ்க்கையை மட்டமாக நினைக்காமல் மேற்கொண்டால் அது துறவறத்திற்கு சமம்தான். சுருக்கமாக - தேர்ந்தெடுக்காமை சந்நியாசம்; தேர்ந்தெடுத்தல் சம்சாரம் (உலகம்). ஆகவே சந்நியாசத்தைத் தேர்ந்தெடுப்பது என்ற பேச்சிற்கு இடமில்லை. துறவறம் என்பது வலிய மேற்கொள்ளப்படுவதன்று. துறவறம் தானாக இறங்கிவரும் நிகழ்ச்சியாகும்.

என்னிடம் நிறையப் பேர் துறவற விருப்பத்துடன் வருகிறார்கள். அந்த சந்நியாசிகள் இருவகையினர். சிலர் விஷயத்தில் சந்நியாசம், சுலபமாக, தன்னிச்சையாக இறங்கிவருகிறது. மற்றவர்கள் சந்நி யாசத்தைத் தாங்களாக நிகழ்த்திக்கொள்கிறார்கள். ஆகவே அவர்கள் சட்டென்று முடிவெடுப்பதில்லை. 'யோசிக்கிறோம், யோசிக்கிறோம் நிச்சயம் சந்நியாசி ஆவோம். ஆனால் உடனே இல்லை. உலகில் நிறைவேற்ற வேண்டிய கடமைகள் பாக்கி உள்ளன' என்பார்கள்.

**மு**ல்லா நஸ்ரூத்தீன் பள்ளிவாசலில் தொழுகையில் ஈடுபட்டிருந்தார். மௌலவி உபதேச உரை நிகழ்த்திக்கொண்டிருந்தார். நாடகத் தன்மையுடன் சுவையாகப் பேசியபடி, "உங்களில் சுவர்க்கத்திற்குப் போக விரும்புகிறவர்கள் எழுந்து நில்லுங்கள்," என்று கேட்டுக்கொண்டார். எல்லோரும் எழுந்து நின்றனர். முல்லா மட்டும் மண்டியிட்டபடியே உட்கார்ந்திருந்தார். மதகுரு கேட்டார், "நான் சொன்னது காதில் விழவில்லையா, நஸ்ருத்தீன்? மறுபடியும் சொல்கிறேன் - சுவர்க்கம் செல்ல விரும்புவோர் எழுந்திருக்கவும்."

நஸ்ரூத்தீன் சொன்னார், "நீங்கள் சொன்னது நன்றாகக் காதில் விழுந்தது. ஆனால் என்னால் இப்பொழுதே போக இயலாது." மதகுரு காரணம் கேட்டார். நஸ்ரூத்தீன் பதலளித்தார்: "என் மனைவி பள்ளிவாசலிலிருந்து நேராக வீட்டுக்கு வந்துவிட வேண்டும் என்று கட்டளையிட்டிருக்கிறாள். அங்கும் இங்குமாக வேறெங்கும் போக்கூடாது என்று சொல்லியிருக்கிறாள். நீங்களோ எங்கோ தொலைவிலுள்ள சுவர்க்கத்திற்குப் போவது பற்றி பேசுகிறீர்கள். ஒரு காலத்தில் நான் அங்குபோக முடியும் என்றுதான் நம்புகிறேன். ஆனால் இப்போது இல்லை. மனைவியின் கட்டளைப்படி நான் இங்கிருந்து நேராக வீட்டிற்குத் திரும்ப வேண்டும் என்பது ஒரு காரணம். இன்னொரு காரணமும் உண்டு. இதோ எழுந்து நிற்கிறார்களே, இவர்களோடு சேர்ந்து நான் சுவர்க்கம் செல்ல விரும்பவில்லை. அதைவிட நான் நரகத்திற்கு செல்ல தயாராக உள்ளேன். இவர்களால் என் வாழ்க்கை ஏற்கெனவே நரகம் போலாகிவிட்டது."

என்னிடம் வந்து சிலர், "எங்களுக்கு சந்நியாசி ஆகவேண்டு மென்ற விருப்பம் உள்ளது. அது பற்றி யோசித்துவருகிறோம் ஆனால் சில பிரச்சினைகள் காரணமாக அது உடனடியாக சாத்தியமில்லை.

மனைவியிடம் கேட்க வேண்டும்; பிள்ளைகளிடம் கேட்க வேண்டும்; பெண்ணுக்கு கல்யாணம் முடிக்க வேண்டும்; கடையை மேற்கொண்டு நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும்..." என்று அடுக்கிக்கொண்டே செல்வார்கள்.

நான் வழக்கமாகச் சொல்லும் பதில் - "நான் உன்னை மகன் மகள்களைக் கைவிடச் சொல்லவில்லை. எதையுமே துறக்கச் சொல்லவில்லை. சந்நியாசம் குறித்து யோசித்தபின் மேற்கொள் என்றும் கூறவில்லை. யோசித்துத் துறவறம் பூண்டால் நீ சறுக்கி விழுந்ததாக அர்த்தமாகும். அது நீ எடுத்த முடிவாகும்; அகங்காரத்தின் விளைவாகும். சந்நியாச உணர்வு உள்ளேயிருந்து பொங்கிவரும் உணர்ச்சியாக இருக்க வேண்டும். அந்த மாற்றம் உன்னிடம் நிகழும்போது தடுக்காதே. சந்நியாச உணர்வு நிகழாவிடில் கவலை வேண்டாம். வலுக்கட்டாயமாக அதை உன் மீது திணித்துக் கொள்ளாதே."

சிலரை நான் சந்திக்கையில், "துறவறம் ஏற்பது குறித்து ஏதும் முடிவு செய்திருக்கிறீர்களா?" என்று நான் கேட்பதுண்டு. அதற்கு அவர்கள், "நாங்கள் அதற்குத் தகுதியுடையவர்கள் என நினைத்தால் நீங்கள் தீட்சை கொடுங்கள். நாங்களாக எப்படி சந்நியாசம் எடுத்துக் கொள்வது? நீங்கள் அளித்தால் ஏற்கிறோம்," என்பார்கள். இத்தகைய வர்கள் துறவு என்பதற்குச் சரியான பொருள் அறிந்தவர்களாகிறார்கள். நடைபெறுவதை நடக்கவிடு. தடை போடாதே. விருப்பம் - விருப்பமின்மை என்று பிரிக்காதே.

மூலக்கேள்வி 'கடைத் தெருவா, காடா?' என்பதுதானே. இப்படிப் பிரித்துத் தேர்ந்தெடுத்தால் நீ மாட்டிக்கொள்வாய். தேர்ந் தெடுத்துக் காட்டுக்குப் போனாலும் உன் மனம் நாட்டிலேயே இருக்கும். இது துறவறமில்லை. தேர்வுசெய்யவில்லையாயின் நாட்டி லிருந்தாலும் நீ காட்டுவாசித் துறவிதான்.

**இ**ப்ராஹிம் என்ற அரசர் துறவியாகிவிட்டார். திடீரென அரண்மனையைவிட்டுக் கிளம்பிவிட்டார். வாயிற்காவலர்கள் தடுத்தார்கள். அரசர் அவர்களை மீறியபடி, "உங்களை இங்கே நிறுத்தி யிருப்பது மற்றவர்கள் உள்ளே செல்வதை, உள்ளேயிருந்து வருவதைத்

தடுத்து விசாரிக்கத்தான். என்னைத் தடுப்பதற்காக உங்களை நியமிக்கவில்லை. நான் போக வழிவிடுங்கள்," என்றார்.

காவலர் கைகூப்பி, பணிவுடன், "மாமன்னர் அவர்களே! தாங்கள் இப்படிச் செய்கிறீர்களே. தாங்கள் சந்நியாசியாக வெளியேறு கிறீர்கள் என்று எங்களுக்குத் தகவல் கிடைத்தது. ஆகவேதான் தடுத்தோம். தாங்கள் ஏன் அரண்மனையைக் கைவிட்டுச் செல்ல வேண்டும்?" என்று கேட்டனர்.

இப்ராஹிம் சொன்னார், "அரண்மனையைக் கைவிடுகிறேனா? தப்பாகச் சொல்கிறீர்கள். அப்படிக் கைவிடக் கூடிய அளவிற்கு இங்கே என்ன உயர்ந்த பொருள் உள்ளது? இங்கே கைவிடவும் ஒன்றுமில்லை; தடுத்து நிறுத்துவதற்கும் ஒன்றுமில்லை, ஆகவே கிளம்பிவிட்டேன்"

இப்ராஹிம் அரண்மனையைவிட்டு வெளியேறி ஊருக்கு வெளியே வசிக்கலானார். பாதை இரண்டாகப் பிரியும் ஓரிடத்தில் அவரது குடிசை. அங்கிருந்து ஒரு கிளைப்பாதை ஊரை நோக்கியும், இன்னொரு கிளைப்பாதை மயானம் நோக்கியும் அமைந்திருந்தன.

அந்த வழியாகப் புதிதாக வருபவர்கள் அவரிடம்தான் இரண்டு பாதைகளில் ஊருக்குச் செல்லும் வழி பற்றி விசாரிப்பார்கள். ஏனெனில் அவர் முகம் சாந்தமாகத் தெரிந்தது. அதேசமயம் அரச குடும்பத்தவர் என்பதால் களையாகத் தெரிந்தார். அவரை நம்பலாம் என்றும், அவர் தப்பான வழியைக் காட்டமாட்டார் என்றும் வழிப்போக்கர்கள் நம்பினார்கள்.

அவர்கள் அவரிடம், "சாமி இந்த இரண்டு பாதைகளில் ஊருக்குப் போகும் வழி எதுங்க?" என்று விசாரிப்பார்கள். இப்ராஹிம் ஊருக்குச் செல்லும் பாதையைக் காண்பித்து "அதில் போக வேண்டாம். சிக்கல்களில் மாட்டிக்கொள்வீர்கள்," என்று எச்சரிப்பார். பிறகு மயானப் பாதையைக் காண்பித்து, "நேராக இதில் செல்லுங்கள். ஊர் வரும்," என்பார். பாவம், அவர்கள் நாலு மைல் அவ்வழியே நடந்தால் சுடுகாட்டை அடைவார்கள்! பிறகு திரும்பி அவரிடம் வந்து, "உமக்கு புத்திபிசகிவிட்டதா? எங்களைச் சுடுகாட்டுக்கு அனுப்பிவிட்டீர்களே," என்று கோபிப்பார்கள்.

இப்ராஹிம் அமைதியாக விளக்குவார்; "நீங்கள் ஊர் எங்கே உள்ளது என்றுதானே கேட்டீர்கள். நான் மயானத்திற்குப் போகும் வழி

சொன்னேன். ஊர் என்பது மக்கள் இருக்குமிடம். இந்த அடிப்படையில் தான் உங்களுக்கு மயானப் பாதையைக் காட்டினேன். அங்கே உள்ளவர்கள் நிரந்தரமாக அங்கேயே இருப்பவர்களாக ஆகிவிட்டனர். அவர்கள் அழிந்தது இல்லை. ஊர் என்று நீங்கள் கூறுவது உண்மையில் மயானம் ஆகும். ஏனெனில் அங்கே உள்ளவர்கள் எல்லோரும் சாகின்றவர்கள். ஒவ்வொரு நாளும் அங்கே சிலராவது இறப்பதைப் பார்க்கிறோம். இறப்பவர்கள் வரிசையாக அவரவர் களுக்குள்ள வரிசை என்றபடி ஊரைவிட்டு நீங்குகிறார்கள். அங்கே வாழ்பவர்கள் கிடையாது; அழிபவர்கள் மட்டுமே உண்டு. ஆகவே நீங்கள் 'மயானம் எத்திசையில் உள்ளது?' என்று கேட்டிருந்தால் நான் ஊருக்கு இட்டுச்செல்லும் பாதையைக் காட்டியிருப்பேன். ஊர் என்பது வழியில் சிறிது காலம் தங்கும் கூடாரம்போல. மனிதன் கடைசியாகப் போய்ச் சேர்ந்து ஒரேயடியாகத் தங்கிவிடும் இடம் மயானம்தான். ஆகவே அதைத்தான் நான் உண்மையில் ஊர் என்று கருதுகிறேன்."

மகாகீதை சொல்கிறது 'தேர்ந்தெடுக்காதே. நடப்பது நடக்கட்டும். நீ பார்வையாளனாக மட்டும் இருந்துவிடு.'

இது மிகவும் கடினமான விஷயம். அதே சமயம் இது மிக எளிதானதுமாகும். எளிது - ஏனெனில் நீ செய்ய வேண்டியது எதுவுமில்லை. செய்வதற்கு ஏதாவது இருந்தால் செய்துவிடலாம். ஏதும் செய்யாமல் பார்த்தபடி இரு என்றால் அது கடினம்தானே.

கேள்வியின் கடைசிப் பகுதி - முடிவெடுக்காத நிலைக்கும் தேர்ந்தெடுக்காத நிலைக்கும் இடையே என்ன வேறுபாடு உள்ளது?

வித்தியாசம் நிறைய உள்ளது. இவை ஒன்றுக்கொன்று எதிரானவை. உன் மனத்தில் இரண்டு விருப்பங்கள் உள்ளதை முடிவெடுக்காத நிலை காட்டுகிறது. ஒரு மனிதன் 'நான் இன்னும் முடிவெடுக்கவில்லை' என்று சொன்னால் தப்பான அர்த்தம் எடுத்து விடாதே. அவன் உண்மையில் சொல்ல விரும்புவது இரண்டு விருப்பங்கள் உள்ளன. இரண்டும் சாத்தியமே. எதை நிறைவேற்றிக் கொள்வது என்று குழப்பமாக இருக்கிறது. காட்டுக்குப் போவதா- கடையில் உட்கார்ந்திருப்பதா? திருமணம் செய்துகொள்வதா - பிரம்மசாரியாகவே நீடிப்பதா? சில சமயம் சாத்தியமாகக் கூடிய பல விருப்பங்கள் மனத்தில் இருக்கலாம். அவை சமமான மதிப்புடைய

வையாகவும் இருக்கலாம். ஆகவே முடிவெடுக்க முடியாத நிலை எழுகிறது.

முடிவெடுக்க முடியாமல் திணறும்போது குழப்பம் உண்டாகிறது. தேர்ந்தெடுக்காமை நிலை இதையும் தேர்ந்தெடுக்கவில்லை - அதையும் தேர்ந்தெடுக்கவில்லை என்னும் சூழ்நிலையைக் குறிக்கிறது. சுருக்கமாக, எதையும் தேர்ந்தெடுக்கப் போவதில்லை என்னும் நிலை.

நீ திருமணம் செய்துகொள்ள விரும்புகிறாய். இரண்டு பெண்கள் தகைகின்றனர். ஒருத்தி பணக்காரி, ஆனால் அவள் அழகாக இல்லை. இன்னொருவள் அழகி, ஆனால் ஏழை. உன் மனம் ஊசலாடுகிறது. யாரை மணப்பது—பணமுள்ள அழகற்றவளையா, அல்லது அழகுள்ள பணமற்றவளையா?

மனத்தில் ஒரு குரல் ஒலிக்கிறது – 'பணத்தை வைத்துக்கொண்டு என்ன செய்வாய்? அதைச் சாப்பிட முடியுமா, குடிக்க முடியுமா? வாழ்க்கை முழுவதும் அழகற்றவளையல்லவா பார்த்துக்கொண்டிருக்க, பொறுத்துக்கொள்ள நேரிடும். அழகுக்கு முன்னால் பணம் துச்சம்.'

உடனே எதிர்க் குரல் கேட்கிறது 'அழகை வைத்துக்கொண்டு என்ன செய்வாய்? சில நாளிலேயே பழகிப்போய்விடும். பணம் உபயோகமானது. வாழ்க்கை முழுவதும் பணம் பயன்படும். இன்று அழகியென மணந்து கொண்டபின் அவளுக்கு அம்மை வார்த்தால், காலப்போக்கில் அவள் கிழவியானால் அவளை சகிக்க முடியுமா? நீ பணவசதி குறைந்தவன். அழகுக்காக ஒருவளைக் கல்யாணம் செய்துகொண்டால் உனது வறுமையும் நீங்காது; அவளது அழகும் நீடிக்காது. இது தற்கொலைக்கு சமமான முயற்சி.'

மனிதனுக்குப் பணத் தட்டுப்பாடு இருந்தால் அவன் வாழ்வில் அன்புக்கும் அழகுக்கும் மதிப்பில்லை. வயிற்றில் பசி இருக்கும்போது வாயால் 'பஜன்' பாட முடியாது. மனமோ பணம், அழகு இரண்டும் உள்ள பெண் மனைவியாகக் கிடைக்க வேண்டுமென ஏங்குகிறது. ஒருவருக்கு ஒரு லட்டுதான் தரப்படும் சூழ்நிலையில் நீ உன் இரண்டு கையிலும் லட்டு பெற முடியாது. யாருக்குமே இரண்டு மாற்றுகளில் இரண்டும் கிடைப்பதில்லை. எந்த சூழ்நிலையிலும் ஏதாவது ஒரு குறை இருக்கத்தான் செய்யும்.

மேலும் அழகியை மட்டும் ஏற்றுக்கொள்வதாக இருந்தாலும், யாரும் முழு அழகு பெற்றவளில்லை. கண்- காது- மூக்கு - கூந்தல் என்று சில அம்சங்கள் எடுப்பாகவும், சில அம்சங்கள் சாதாரணமாகவும் அமையப்பெற்றிருக்கும். குரல் இனிமை, நடத்தை இனிமை, சரியான உடற்கட்டு போன்றவையும் ஒரே பெண்ணிடம் இருக்காது. மனத்தில் ஆசைகள் ஏராளம்; கனவுகள் மிக அதிகம். ஒன்றிரண்டுதான் பலிக்கும். இரண்டு கையிலும் லட்டு கிடைப்பது கஷ்டம். அதற்குமேல் கிடைப்பது சாத்தியமே இல்லாத விஷயம்.

இந்து மதக் கடவுளர் நிறையக் கைகளுடன் காட்சி தருகின்றனர். சிலருக்கு ஆயிரம் கைகள்கூட உண்டு. கடவுள்களின் கைகளில் ஆயுதம், இனிப்பு, பூ, இப்படி ஏதாவது இருக்கும். மனிதனுக்கு இரண்டே கைகள். உலகமோ விசாலமானது. நீயும் ஏராளமான கைகள் பெற்றால்தான் நிறையப் பொருள் பெறலாம். அதற்கு ஒரேவழி நீயும் கடவுளாகிவிடுவதுதான்!

ஒரு விதத்தில் பார்த்தால், இன்றைய சூழ்நிலையில் கடவுளுக்கு ஏற்கெனவே உள்ள கைகள் போதாது. இக்காலத்தில் புதிய ஆயுதங் களும், வேறு பலவிதப் புதுப்பொருள்களும் கண்டுபிடிக்கப்பட்டுள் ளன. அவ்வப்பொழுது கைகளின் எண்ணிக்கையை அதிகரித்துக் கொண்டே போனாலும் போதாது. அவ்வளவு வேகமாகப் புதிய கண்டுபிடிப்புகள் நிகழ்கின்றன.

உன் மனத்தில் போட்டியிடும் மாற்றுகள் நிறைய இருக்கும் நிலையில் எந்த ஒன்றை ஏற்பது என்று தத்தளிக்கும் சூழ்நிலையே முடிவுசெய்ய முடியாத மனநிலையாகும். தேர்ந்தெடுக்காத நிலையில் நீ எது குறித்தும் முடிவிற்கு வருவதில்லை. முடிவெடுக்க விரும்புவது மில்லை. நீ என்ன சொல்வாய் 'சரி, இதையும் பார்க்கலாம். அதையும் பார்க்கலாம். எனக்கு எதன் மீதும் விசேஷமான ஈர்ப்பு இல்லை. சாட்சியாகப் பார்த்தபடி இருப்பேன்.'

தேர்ந்தெடுக்காமை ஆத்ம ஞானத்தில் உயர்ந்த நிலையாகும். முடிவு செய்யாமை மனத்தின் சாதாரண நிலையாகும். இரண்டும் ஒன்றென பிரமை கொள்ளாதே. எது வேண்டும் என்று தெரியாமல் குழம்பும் நிலையை அல்லது இன்னும் முடிவுசெய்யவில்லை என்ற நிலையைத் தேர்ந்தெடுக்காமை என்னும் நிலையாக நீ நினைத்துக்

கொள்ளக் கூடாது. முடிவு செய்ய இயலாமையும் முடிவு செய்ய விரும்பாமையும் வேறு - வேறு விஷயங்கள். முடிவு செய்ய இயலாமை தோல்வியைக் காட்டுகிறது. முடிவுசெய்ய விரும்பாமை, முடிவுசெய்வதைக் கைவிடல், ஒருவகையான முக்திநிலையாகும். இதை ஜனகர் ஞானநிலை என்கிறார்.

### மூன்றாம் கேள்வி

**ஜனகர் அஷ்டாவக்ரரின் எதிரில் தயக்கமின்றி ஞானம் குறித்துப் பேசுகிறார். ஞானம் பெற்று விட்டால் குருவின் முன்னிலையில் தயக்கம் நீங்கிவிடுமா?**

தயக்கம், பணிவு, கூச்சம் ஆகியவை சில சூழ்நிலைகளில் அகங்காரத்தின் அடையாளங்கள்தாம். அவற்றை அகங்காரத்தின் நிழலுருவம் எனலாம்.

நீ எதையாவது வெளிப்படையாகச் சொல்ல ஏன் தயங்குகிறாய்? அவ்வாறு பேசுவது மரியாதைக் குறைவாக எடுத்துக்கொள்ளப்படுமா; பொருத்தமற்றதாக இருக்குமா; கேட்பவர் என்ன நினைப்பாரோ என்றெல்லாம் நினைத்துத் தானே நீ தயங்குகிறாய்?

குரு-சீடன் உறவு நெருக்கமானது, நுணுக்கமானது. குரு என்ன நினைப்பாரோ என்று எண்ணினால் அந்த உறவில் விரிசல் ஏற்படும். குருவின் எதிரே கூச்சம் ஏன்? நடந்ததை அவரிடம் வெளிப்படை யாகச் சொல்லிவிடு. நடந்தது நல்லதா, கெட்டதா என்று தயங்காதே. கெட்ட கனவானாலும் சொல்லிவிடு. இருட்டா, வெளிச்சமா? தெரியப் படுத்திவிடு.

நீ ஜனகரிடம் என்ன எதிர்பார்த்தாய்? ‘எனக்கு ஒன்றும் ஏற்பட வில்லை. எனக்கு எப்படி ஞானம் ஏற்படும்?’ என்று சொல்வாரென நினைத்தாயா? ஞானம் ஏற்பட்ட பிறகும்கூட சங்கோஜம் காரணமாக, மரியாதை காரணமாக மறைப்பார் என எதிர்பார்த்தாயா? போலி நாகரிகம் அவரிடம் கிடையாது.

**ஒ**ரு கர்ப்பிணி வயிற்றில் இரு சிசுக்கள் இருந்தது தெரியவந்தது. ஒரு வருஷம் ஆகியும் பிரசவம் ஆகவில்லை! டாக்டர்களுக்கும்

புரியவில்லை மேலும் சில ஆண்டுகள் கழிந்தன. பிறகு டாக்டர்கள் துணிச்சலாக ஆபரேஷன் செய்தனர். அக்குழந்தைகள் பேசும் அளவிற்கு வளர்ந்திருந்தன! ஆகவே டாக்டர் அவர்களிடம், "ஏன் வெளியே வர இவ்வளவு தாமதித்தீர்கள்?" என்று கேட்டார். ஒரு குழந்தை சொன்னது, "ஐயா, வேறென்ன வழி? நான் இவனை முதலில் வெளியேறு என்றால், இவன் என்னை முதலில் புறப்படு என்றான். யார் முதலில் கிளம்பினாலும் மரியாதை இல்லையே என்று தயங்கினோம்."

இதை லக்னௌ நகர பாணி (லக்னௌ கல்ச்சர், தஹ்ஜீப்) என்பார்கள். தேவைக்கதிகமாகவும், போலியாகவும் கூட அந்நகர மக்கள் மரியாதை காட்டுபவர்கள் என்று சொல்வதுண்டு. லக்னோ ரயில் நிலையத்தில்கூட முண்டிக்கொண்டு நெட்டித்தள்ளி ஏறாமல், அவ்வூர் மக்கள் ரயில் புறப்படும் நிலையிலும் ஒருவரையொருவர் பார்த்து, 'நீங்கள் முதலில் ஏறுங்கள். உங்களை முந்திக்கொண்டு நான் எப்படி ஏறுவேன்?' என்று ஒருவருக்கொருவர் மரியாதை காட்டுவார்களாம்.

சங்கோஜம், கூச்சம், சம்பிரதாயமான நடத்தை ஆகியவை குரு-சீடன் உறவில் அர்த்தமிழக்கின்றன. அந்த உறவோடு ஒப்பிடுகையில் இவை அற்பமான விஷயங்கள். இவை அன்பை மறைக்கும் வேலையே செய்கின்றன. இவை இல்லாத ஒன்றைக் கூறும் வெளிப்பாடுகள். உன் அன்பு முழுமையானதென்றால் நீ எதையும் மறைக்கமாட்டாய். எல்லாவற்றையும் வெளியே கொட்டிவிடுவாய்.

இரண்டு பேரிடையே நட்பு ஏற்பட்டுவிட்டால் சம்பிரதாயமான மரியாதை நீங்கிவிடுகிறது. உரிமையுடன் ஒருவரை ஒருவர் திட்டும் அளவிற்குப் போனால்தான் நட்பில் நெருக்கம் என மக்கள் நம்புகிறார்கள். ஒருவிதத்தில் இது உண்மைதான். திட்டும் அளவிற்குப் போகாதவரையிலும் நட்பில் ஆழம் இருக்க முடியாது. சம்பிரதாயமான, நாகரிகம் கருதும் நட்பானால் 'எழுந்தருளுங்கள் - நல்வரவு - வீற்றிருங்கள்' என்று கூறும் விதத்தில் பட்டும் படாமலும் நடைபெறும். நட்பு வலுவடைந்தால் இத்தகைய உபசார மொழிகளும் விடைபெற்றுவிடும். பேச்சேகூட தேவைப்படாது. உள்ளங்களே பேசிக் கொள்ளும். குரு-சீடன் இடையேயும் சம்பிரதாய நடவடிக்கைகள் இருக்காது. ஜனகர் வெளிப்படையாகத் தன் அனுபவங்களைப் பேசுகிறார் எனில் அவர் குருவிடம் அந்த அளவிற்கு

நெருக்கமானவர் என்றுதான் பொருளே தவிர, அவர் மரியாதை தெரியாதவர் என்று நினைக்கக்கூடாது.

ஒரு ஜென் துறவி இரவு நேரத்தில் ஒரு புத்தர் கோயிலில் தங்க இடம் கேட்டார். பூஜாரி அனுமதித்தார். நள்ளிரவில் மிகவும் குளிராக இருந்தது. துறவி புத்தருடைய சிலையை எடுத்தார். அது மரத்தாலானது. விளக்கில் காண்பித்து அதை எரிய வைத்தார். அந்த சூட்டில் அவர் குளிர்காய்ந்தார்! நெருப்பு வாசனையை உணர்ந்து தூக்கம் கலைந்த பூஜாரி இக்காட்சியைக் கண்டு பதறினார். "ஏய், உனக்கென்ன பைத்தியமா? துறவி என்று நம்பியல்லவா உனக்கு இங்கே இடமளித்தேன். நீ புத்தர் உருவத்தை எரித்து பாவ காரியம் அல்லவா செய்துவிட்டாய், " என்றார்.

துறவி ஒரு குச்சியை எடுத்து, சிலை எரிந்ததால் குவிந்த சாம்பலைக் கிளறலானார். "இப்பொழுது என்ன தேடுகிறாய்?" என்று பூஜாரி கேட்டார். "புத்தருடைய எலும்புகளைத் தேடுகிறேன்." என்று பதில் வந்தது. பூஜாரி சிரித்துவிட்டார். "நீ நிச்சயமாகப் பைத்தியக் காரன்தான். மரச்சிலையில் எலும்பு எப்படி இருக்க முடியும்?" என்று கேட்டார்.

துறவி சொன்னார், "எலும்பு இல்லாமல் உடல் இருக்க முடியாது. உடல் இல்லாமல் உருவம் இருக்க முடியாது. பிறகு புத்தர் என்று குறிப்பாக எப்படிச் சொல்கிறீர்கள்? அதோ இன்னும் இரண்டு மர உருவங்கள் தெரிகின்றன. அவற்றை எடுத்துவாருங்கள். இன்னும் இரவு மிஞ்சியுள்ளது. நீங்களும் குளிரால் நடுங்குகிறீர்கள். இருவரும் குளிர் காயலாம்." இதைக் கேட்டு பூஜாரியின் கோபம் அதிகரித்தது. அவர் துறவியை உடனே கோயிலைவிட்டு வெளியேற்றிவிட்டார்.

காலை ஆனதும் பூஜாரி வீட்டுக்குத் திரும்பும் வழியில் துறவி தென்பட்டார். சாலை ஓரத்தில் ஒரு மைல்கல்லின் முன்னால் துறவி கைகூப்பி உட்கார்ந்திருந்தார். மைல் கல்லின் மேல் பூக்கள் வைக்கப்பட்டிருந்தன. முதலில் புத்தரை எரித்த இவர் இப்போது மைல் கல்லைக் கும்பிட்டுக்கொண்டிருக்கிறார். அவர் துறவியை உலுக்கி, "என்ன ஆளுய்யா நீ! இது என்ன கோமாளித்தனம், மைல்கல்லை வணங்குகிறாயே," என்று விசாரித்தார்.

துறவி சொன்னார் "கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன். அவரது அருளால்தான் அவரது உருவத்தை எரிக்கும் அளவு எனக்குத் துணிச்சல் மேலிட்டது. கடவுளின் சிலை என்று தனியாக ஏதுமில்லை. நாம் உருவகித்தால் எதையும் எதிலும் காணலாம். இந்த ஆவாஹனச் செயல் (உருவேற்றுதல்) மூலம் எதிலும் புத்தரைக் காணலாம். அவர் எங்கும் பிரசன்னமாகியுள்ளார். ஆனால் நாம் எல்லா இடங்களையும் பார்க்கும் சாமர்த்தியம் பெற்றிருக்கவில்லை. குறிப்பிட்ட ஒரு திசையில்தான் நம்மால் தியானம் செய்ய இயலும். வழியிலேயே இந்த மைல்கல் உள்ளது. சாலை ஓரத்தில் பூச்செடிகளும் இருக்கின்றன. ஆகவே காலை பூஜையை முடித்துக்கொண்டுவிடலாமென நினைத் தேன். இரவும் கடவுள்தான் உதவியாக இருந்தார். அவர் மூலமாக்த்தான் குளிரைப் போக்கிக்கொள்ள முடிந்தது. அவர் உடலையும் காப்பாற்றுகிறார். ஆத்மாவையும் காப்பாற்றுகிறார். ஆகவே இப்போது பூஜை மூலம் நான் அவருக்கு நன்றி செலுத்துகிறேன்."

குரு-சீடன் உறவு விசேஷமானது, அபூர்வமானது. தான் பெற்ற சத்தியத்தை சீடன் குருவின் முன் முழுமையாக வெளிப்படுத்துகிறான். இதனால் அவன் அவரிடம் பணிவு காட்டவில்லை, திமிருடன் இருக் கிறான் என்று நினைக்கக்கூடாது. அவனது நடத்தை இச்சமயம் அவர்களிடையே உள்ள கண்ணியமான சம்பந்தத்தைப் புலப்படுத்து கிறது. உண்மையில் சீடன் வெளிப்படையாகப் பேசுவதன் மூலம் தன் நன்றியைத்தான் வெளிப்படுத்துகிறான்.

ஜனகர் தான் ஞானம் பெற்றுவிட்டதாகக் கூறியதைக் கேட்டு அஷ்டாவக்ரர் கோபப்பட்டிருப்பார் என நினைக்காதே. ஜனகர் கூச்சப் பட்டிருந்தால் ஏதோ குறைபாடு உள்ளது என்று அர்த்தமாகியிருக்கும். 'நான்' என்னும் உணர்வு இருக்கும்வரை கூச்சமும் நீடிக்கும். குருவின் முன்னால் தான் பெற்ற ஞானம் குறித்துத் தயங்காமல் பேசினால் 'நான்' என்னும் உணர்வு முழுமையாக நீங்கிவிட்டதாக அர்த்தம். 'நான்' போனால் முக்தி வரும் என்று அஷ்டாவக்ரர் கூறியிருக்கிறார். 'நான்' இருந்தால் கூச்சம், தயக்கம் முதலிய கட்டுப்பாடுகள் இருக்கும்.

ஜனகரைப் பொறுத்தவரையிலும் 'நான்' உணர்வு நீங்கிவிட்டது. ஆனால் நன்றி உணர்வு குறையவில்லை. அது மேலும் அதிகரித்து விட்டது. இந்த குருதேவர் மூலமாகத்தானே, இவர் காட்டிய வழியில்

சென்றதால்தானே, இவர் தூண்டிய நெருப்புப்பொறியால்தானே ஜனகரிடம் ஞானத்தீ மூண்டு அவரது அறியாமை சாம்பலானது. ஜனகரது வாழ்வில் மகாமுக்தி ஏற்பட்டு சமாதி நிலையும் வாய்க்கப்பெற்றது இந்த குருவின் கருணையால்தானே, இந்த குருவின் பிரசாதம்தானே? அவர் எதிரில் எதற்காக அர்த்தமற்ற கூச்சம்?

குரு-சிஷ்யரிடையே ஆழமான சம்பந்தம் ஏற்பட்டுவிட்டால், சிஷ்யர்-குரு என்னும் வேறுபாடு மறைந்து இருவரும் ஒருவரா கின்றனர். அங்கே மாபெரும் சங்கமம் ஏற்பட்டுவிடுகிறது.

**நான்காம் கேள்வி:**

**நீங்கள் பேசவேண்டும் என்பது என் ஆசை**
**நான் பேசவேண்டும் என்பது தங்கள் விருப்பம்**
**என் உதடுகள் நடுங்குகின்றன**
**பிரமித்த நிலையில் எப்படிப் பேசுவேன்?**

நான்கு நண்பர்கள் சேர்ந்து மௌனவிரதம் மேற்கொண்டார்கள். தெருப்பக்கம் போனால் பேச நேரிடும் என்பதால் ஒரு கோயிலுக்குச் சென்று அமர்ந்தார்கள். முதல் பயிற்சியாக ஒருநாள் முழுதும் வாய் திறந்து பேசக்கூடாது என்று திட்டம்.

ஒருமணி நேரம் அமைதியாகக் கழிந்தது. அதன்பின் ஒருவன், 'ஐயோ, நான் வீட்டைப் பூட்டினேனா என்பது ஞாபகமில்லையே' என்று உரக்கக் கூறினான். இரண்டாமவன் உடனே 'ஏ முட்டாளே! மௌன விரதத்தை மறந்து பேசிவிட்டாயே' என்று கண்டித்தான். மூன்றாமவன் அவனைப் பார்த்து 'உன் யோக்கியதை என்ன? அவனைக் கண்டிக்கிறாயே நீ மட்டும் இப்போது பேசவில்லையா?' என்று சுட்டிக்காட்டினான். நான்காமவன் கைகளை உயர்த்தி 'இறைவா! நான் ஒருவன்தான் தப்பினேன். என் மௌனவிரதம் கலையவில்லை' என்று சப்தமாகப் பெருமைப்பட்டான். அவர்களது 24-மணிநேர மௌனவிரதம் ஒருமணி நேரத்திலேயே முடிவடைந்துவிட்டது!

மனிதனால் பேசாமல் இருக்க முடிவதில்லை. மௌனம் கடைப்பிடித்தால் பெரிய காரியங்கள் செய்யலாம். மௌனம் நல்ல பலன்களைக் கொண்டுவரும்.

சப்தத்தினால் சத்தியம் கிடைக்காது. சூன்யம் அல்லது மௌனம் மூலமாகவே சத்தியத்தை நெருங்க உதவி கிடைக்கிறது. மௌனமாக இருக்க வேண்டுமென ஆர்வம் தோன்றினால் அப்படியே இருந்து விடு! 'நான் மௌனமாக இருக்கப்போகிறேன்' என்று உரக்கச் சொன்னால் கூட உன் மௌனவிரதம் சேதப்படும்.

ஆனால் கேள்வி கேட்ட உன்னிடம் நான் வாய் திறந்துதான் பேசவேண்டிய கட்டாயமுள்ளது. ஏனெனில் எனது சூன்ய பானஷயை என் மௌனத்தை - உன்னால் புரிந்துகொள்ள முடியாது. அந்த மௌன மொழியை நீ புரிந்துகொள்ள முடியுமானால் நான் பேசுவதற்கு எந்தத் தேவையும் இருக்காது. நான் இங்கே - சற்றுத் தொலைவில் நீ அங்கே என அமர்ந்தாலும் என் இதயம் உன் இதயத்துடன் பேசிக் கொள்ளும். இதற்குச் சொற்களின் தேவை இருக்காது.

நீ அந்த பேசா நிலையை, சூன்யத்தை, அடைவதற்காக உன்னைத் தயார்செய்து வருகிறேன். பேசாநிலைக்கு உன்னைத் தட்டிக்கொடுத்து இட்டுச்செல்ல தற்சமயம் வேறு வழி தெரியாமல் நான் பேச்சில் ஈடுபடுகிறேன். என் பேச்சைக் கேட்குமாறு உனக்கு அறிவுறுத்துகிறேன். கேட்பதில் நீ பயிற்சி பெற்றால் நீ சாந்தமாக உட்கார இயலும். காலப்போக்கில் நீ கேட்கும் கலையில் உன்னத மடைவாய். அப்போது நான் பேசுவதை நிறுத்திக்கொண்டு 'நீ கேட்பதைத் தொடர்ந்து செய்' என்பேன்!

முதல் கட்டம் - நான் பேசுகிறேன், நீயும் பேசுகிறாய். இரண்டாம் கட்டம்-நான் பேசுகிறேன். நீ பேசாமல் கேட்கிறாய். கடைசிக் கட்டம் - நான் பேசுவதை நிறுத்திவிடுகிறேன். ஆனாலும் நீ கேட்டவண்ணம் இருப்பாய்!

இதுவரை விட்டு - விட்டு, மினுக் - மினுக் என்று ஏற்பட்ட ஆன்மிக அனுபவம் தெளிவான வடிவம் எடுத்துக்கொள்ளும். சொற்களின் மூலம் கொஞ்சம் கொஞ்சமாக, துளித்துளியாகக் கிடைத்துவந்த அனுபவம் கடல்போல் பொங்கிவரும். உன்னை அடித்து இழுத்துச் செல்லும். விட்டு விட்டு இலேசாக இலைகளை அசைத்து மெல்ல வரும் காற்றுப்போல் இருந்த அனுபவம் பிறகு புயலாக வீசி உன்னை முழுமையாகப் பாதித்து வீழ்த்தும். கடலின் அலையில், புயலின் வேகத்தில் உன் தனித்தன்மை நீங்கி நீ காணாமல் போய்விடுவாய்.

குழந்தைகளுக்கான ஆரம்ப நிலை புத்தகங்களில் எழுத்து களின் உபயோகம் குறைவாக இருக்கும். படங்கள் ஏராளமாகக் காணப் படும். உதாரணமாக, மாம்பழம் பெரியதாக வரையப்பட்டிருக்கும். மாம்பழம் என்னும் சொல் தனியாக ரசம் நிறைந்ததாகச் சிறுவர்க்குத் தோன்றாது. ஆனால் மாம்பழத்தின் வண்ணப்படத்தைப் பார்த்ததும் அவர்கள் சப்புக்கொட்டுவார்கள். 'மாம்பழம்' என்று கத்துவார்கள். பிறகுதான் அந்த எழுத்துகளைப் படித்துக் கற்கிறார்கள்.

சிறுவர்கள் வளர-வளர, புத்தகங்களில் படங்கள் குறைந்து விடுகின்றன. கல்லூரிப் படிப்பு நிலையில் அதற்கான நூல்களில் படங்களே இருப்பதில்லை. எழுத்துகளும் சிறிய அச்சில் நெருக்கிக் கொண்டு இருக்கும். உலகியலான படிப்புகள் முடிந்து ஆன்மிகமான படிப்பு நிலையை ஒருவன் அடைந்தால், அவன் 'படிப்பதற்கென்று' எழுத்துகளே இல்லாத வெற்றுக் காகிதம்தான் தரப்படும்!

நானும் அவ்வாறே எழுத்துகளின் அளவையும், எண்ணிக் கையையும் குறைத்துக்கொண்டே வந்து என்றாவது ஒருநாள் உன்னிடம் எதுவும் எழுதப்படாத காகிதம் கொடுத்து உன்னை 'படி' என்பேன்! அப்படி உன்னை வெறுமையை - சூன்யத்தை - படிக்க வைப்பவனாக ஆக்குவதற்குத்தான் நான் உழைத்துவருகிறேன். என் முயற்சி வெற்றிபெற்றதும் நீ அதைப் படிப்பாய்! படித்துப் பாடுவாய், ஆடுவாய், அந்த வெற்றுக் காகிதத்தைக் கொடுத்ததற்காக எனக்கு நன்றி கூறுவாய்.

சொற்கள் வெறும் பாலம் போன்றவைதாம். அவை சூன்யத்தை அடைவதற்கான வழிகாட்டிகள் போன்றவை. உன் மனத்தில் மௌனத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்னும் ஆர்வம் எழுந்தால் முழுமையாக அமைதியாக இருந்துவிடு. 'மௌனமாக இருக்கப் போகிறேன்' என்ற அறிவிப்பைக்கூட செய்யாதே. அந்த அறிவிப் பினால் உன் மௌனம் முறிந்துபோகும்

## கடைசிக் கேள்வி

கேட்பவர் சுவாமி சதாசிவ பாரதி

**மகாகீதை பற்றிய உங்கள் சொற்பொழிவுகளால் என் ஐயங்கள் அனைத்தும் அகன்றன.**

**என்னைக் கட்டிப்போட நானே மேற்கொண்ட தடைகள் விலகின. தங்கள் கருணையால் நான் பொய்யான பாசவலைகளிலிருந்து தப்பித்துவிட்டேன். எனது கருத்து சரிதானே?**

சுவாமி சதாசிவ பாரதிக்கு ஆன்மிக அனுபவம் ஏதோ நேரிட்டிருக்கிறது. நிச்சயமாக நேரிட்டிருக்கிறது. ஆனால் இந்த சமயம்தான் மிகவும் எச்சரிக்கையாக இருக்கவேண்டியது அவசியம். 'எனக்கு ஏதோ நேர்ந்தது' என்று நீ திமிராக நடந்தால் அதை இழந்து விடுவாய். ஆன்மிகத்தின் மிக மெல்லிய கிரணம் இறங்கிவந்துள்ளது. அதை உள்ளங்கையால் இறுகப்பிடித்து மூடினால் அது செத்துவிடும். ஆன்மிக அனுபவம் மொட்டு வடிவில் எட்டிப் பார்க்கிறது. அதை மலர விடு; பூவாக மாற விடு. இல்லாவிடில் கங்கையை அடைந்தும் அதில் குளிக்க முடியாமல் திரும்பியது போலாகும்.

"சதாசிவம், உனக்கு நிச்சயமாக ஆன்மிக அனுபவம் ஏற்பட்டிருக்கிறது. இதை நான் அறிவிக்கக் காரணம் எனது ஆமோதிப்பால் உனது நம்பிக்கை வலுப்பெறும் என்பதுதான். ஆனால் இதற்காக உனக்குத் தலைக்கனம் ஏறக்கூடாது. உனக்கு ஆன்மிக அனுபவம் கிடைத்து விட்டதென்று அகங்காரம் கொள்ளாதே. ஆன்மிக அனுபவம் சிறிதளவு தான் இப்போது உனக்குக் கிடைத்திருக்கிறது. நீ பெறவேண்டிய அனுபவம் பெரிய அளவில் இன்னும் மிஞ்சியுள்ளது.

"உனது அதிர்ஷ்டத்தினால் ஒரு நல்லது நடந்திருக்கிறது. அதைக் கடவுளின் கருணையாகக் கருது. ஏனெனில் நீ முயற்சியெடுத்துப் பெறவில்லை இந்த அனுபவத்தை. இங்கே அமர்ந்து, அருளுரைகளைக் கேட்டு- கேட்டு உனக்கு சுயமாகவே அனுபவம் ஏற்பட்டது. இந்த நிலையில் உன் மனத்தில் அகங்காரத்தை நிரப்பிக் கொள்ளாதே. இந்த அனுபவம் கடவுளின் பிரசாதம் என்று மேலும் பணிவுகொள். அந்த அனுபவத்தை நீயாகப் பெறும் அளவிற்குத் தகுதிவாய்ந்தவன் இல்லை என்பதை நினைத்துப் பணிவாக இரு.

"இவ்வாறு அகங்காரம் கரைந்துபோக, குறைந்துபோக விடு. அப்போது மேலும் - மேலும் புதுப்புது அனுபவம் திரளும். நீ என்னும் பாத்திரம் (கொள்கலன்) சூன்யம் ஆக-ஆக, கடவுள் தன்னை அதில் நிரப்புவார். ஒரு கட்டத்தில் நீ முழுமையாக மகாசூன்யம் ஆகி

விடுவாய். அப்போது அந்த மகாசூன்யமான உனக்குள் ஸம்பூரணரான கடவுள் இறங்கிவருவார்."

விடியலின் முதல் கிரணம், புத்தம் புதிய கிரணம் இறங்கி வந்துள்ளது. சூரியன் உதிக்கும் நேரம். கிழக்கு அடிவானத்தில் செம்மை படர்ந்துள்ளது. அகங்காரத்தால் கண்களை மூடிக்கொண்டு இந்த எழிலை அனுபவிக்கும் வாய்ப்பை இழந்துவிடாதே.

இந்த முதல் கிரணத்தின் தரிசனம் பெறுவது மிகவும் கடினம். எச்சரிக்கையாக இல்லாவிடில் நீ அதைச் சட்டென்று இழந்துவிடுவாய். முதல் கிரணம் - ஞானத்தின் முதல் ஸ்பரிசம் - கிடைக்காதவர்களுக்கு இழப்பு இல்லை. இருப்பு இருந்தால்தானே இழப்பு. ஆனால் இந்த கிரணத்தால் ஸ்பரிசிக்கப் பெற்றவர்களுக்குப் பெருஞ்சொத்து கிடைக்கிறது. மடியில் கனமிருந்தால் மனத்தில் பயமுண்டு. இந்த அரிய அனுபவத்தை அகங்காரம் பாதிக்காமல் பார்த்துக்கொள்ளவும். கடவுளின் அருள் இப்போதுதான் உன் மீது படியத் தொடங்கியுள்ளது. இது ஸ்ரீகணேசாய நமஹ என்னும் ஆரம்பக் கட்டம். காலப் போக்கில் கடவுளின் அருள் மேன்மேலும் அதிகமாக உன்னை வந்தடையும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்

க்ருதாக்ருதே ச த்வந்த்வானி கதா ஷாந்தானி கஸ்ய வா|
ஏவம் க்ஞாத்வேஹே நிர்வேதாத்ப்ரவ த்யாகபரோஅவ்ரதீ|| (83)

கஸ்யாபி தாத தன்யஸ்ய லோக சேஷ்டாவலோகநாத்|
ஜீவிதேச்சா புபுக்ஷா ச புபுத்ஸோபஷம் கதா:|| (84)

அநித்யம் ஸர்வமேவேதம் தாபத்ரிதய தூஷிதம்|
அஸாரம் நிந்திதம் ஹேயமிதி நிஷ்சித்ய ஷாம்யதி|| (85)

காஅஸௌ காலோ வயா; கிம் வா யத்ர த்வந்த்வானி நோ
நருணாம்|
தான்யுபேக்ஷ்ய யதாப்ராப்தவர்தீ ஸித்திமவாப்நுயாத|| (86)

நானா மதம் மஹர்ஷீணாம் ஸாதுநாம் யோகிநாம் ததா|
த்ருஷ்டவ நிர்வேதமாபன்ன; கோ ந ஷாம்யதி மானவ:|| (87)

க்ருத்வா மூர்த்திபரிக்ஞானம் சைதன்யஸ்ய ந கிம் குரு:|
நிர்வேதஸமதாயுக்தயா யஸ்தாரயதி ஸன்ஸ்ருதே:|| (88)

பஷ்ய பூதவிகாராஸ்த்வம் பூதமாத்ரான் யதார்தத:|
தத்க்ஷணாத் பந்தநிர்முக்த; ஸ்வரூபஸ்தோ பவிஷ்யஸி|| (89)

வாஸனா ஏவ ஸன்ஸார இதி ஸர்வா விமுக்ச தா:|
தத்யாகோ வாஸனாத்யாகாத் ஸ்திதிரத்ய யதா ததா|| (90)

**செ**ய்த கர்மம்-செய்யாத கர்மம், சுகம் - துக்கம் என்று முரண்படும் இரட்டைகள் ஆகியவை யாரிடமெல்லாம் தென்பட்டாலும் அவை சாந்தமடைவதில்லை. இது உறுதி என்பதை அறிந்து இந்த உலகின்மீது உதாசீனமாகி (பற்று விடுத்து), நிலைமையைத் திருத்த விரதங்கள் மேற்கொள்ளாமல், தியாக உணர்வுடன் இரு **(சுலோகம் 83)** என்கிறார் அஷ்டாவக்ரர். இது விலை மதிக்க முடியாத அறிவுரையாகும்.

மனிதன் தான் செய்கின்ற செயலினால் மட்டும் கட்டுப்படுவ தில்லை. செய்யாத, ஆனால் செய்ய விரும்பிய கர்மத்தாலும் கட்டுப்படுகிறான். செய்தானா, செய்யவில்லையா என்பவற்றிற்கிடையே அதிக வேறுபாடு இல்லை. ஒன்றைச் செய்ய ஆசைப்பட்டாலே போதும். கட்டப்படும் நிலை தோன்றிவிடுகிறது. திருடினாலும் விளை வுண்டு; திருடாமல் திருட ஆசை மட்டும் பட்டாலும் விளைவுண்டு. திருடினால் சட்டப்படி குற்றம். திருட ஆசைப்பட்டால் பாவம்.

குற்றத்திற்கும் பாவத்திற்கும் இதுதான் வித்தியாசம். பாவம் தானே செய்யப்பட்டது, யாரும் உன்னைப் பிடிக்க முடியாது. எந்த நீதிமன்றமும் எந்தச் சட்டமும் உன்னைக் குற்றவாளியென தண்டிக்க முடியாது. நீ உன் வீட்டிலேயே இருந்துகொண்டு மனத்தளவில் நீ கொள்ளையடிக்கலாம்; வழிப்பறி செய்யலாம்; ஏன், கொலைகூட செய்யலாம். பலர் மனத்தளவில் இதையெல்லாம் செய்துகொண்டுதான் உள்ளனர்.

ஒரு மனிதனின் எண்ணங்களின் மீது சமூகத்திற்கு அதிகாரம் கிடையாது. எண்ணம் செயலாக மாறாதவரையிலும் சமூகம் அதைக் கவனிப்பதில்லை. இதற்காக நீ எண்ணுவதன் காரணமாக பாவம் தொற்றாது என்று தவறாக நினைக்காதே. பாவ எண்ணம் மனத்தில் தோன்றினாலே போதும். நீ கடவுளின் தர்பாரில் குற்றவாளியென்றே கருதப்படுவாய். பாவச் செயலை நினைத்ததுமே நீ பாவியாகிவிடு கிறாய். எண்ணம் செயலாக மாறவில்லை என்னும் வாதம் கடவுளிடம் எடுபடாது. பாவ எண்ணம் தோன்றியதும் மனம் கறைபட்டுவிடுகிறது.

கெடுதல் செய்தால் குற்றம்; செய்யாமல் யோசித்தாலும் அது பாவம். குற்றத்திற்கான தண்டனையிலிருந்து தப்பிக்க உபாயங்கள் உண்டு. சட்டம், போலீஸ், நீதிமன்றம் ஆகியவற்றிலிருந்து தப்பிக்கும் வழியைத் தேடிக்கொள்ளலாம். எத்தனைக்கெத்தனை புதிய சட்டங்கள் நடைமுறைக்கு வருகின்றனவோ அதே அளவிற்குச் சட்டங்கள் மூலம் தப்பிக்கவும் முடியும். இதெல்லாம் வக்கீல்களின் வாதத் திறமையைப் பொறுத்தது.

'வக்கீல்' (வகீல்) என்னும் சொல் சூஃபி சம்பிரதாயச் சொல். அதன் அர்த்தம் இப்போது சேதமடைந்துவிட்டது. வக்கீல் என்னும் சொல்லின் மூலமுதலான அர்த்தம் என்ன? கடவுளின் முன்னிலையில்

நீ நல்லவன் என்று உனக்காக சாட்சி கூறுபவர் (வக்காலத்து வாங்குபவர்) வக்கீல் என்று அழைக்கப்பட்டார். இறைத்தூதர்களின் வேலை நமக்காகக் கடவுளிடம் வாதாடுவதுதான். அவர்களை வக்கீல்கள் எனலாம். அச்சொல்லின் பொருள் இப்போது திரிந்துவிட்டது. நீ எப்படிப்பட்டவனாயினும், என்ன செய்திருந்தாலும் நீ நல்லவன்தான், உன் செய்கை நியாயம்தான் என்று வாதாடுவதே வக்கீலின் தொழிலாகிவிட்டது. இதனால் கெட்டவனையும் நல்லவனென்றும், அவனது கெடுதலான செயல் ஒருவகையில் சரிதான் என்றும் நியாயப்படுத்தி வாதாடும் நிலையும் வக்கீல்களுக்குத் தவிர்க்க முடியாததாகிவிட்டது. அது தொழில்தர்மமாகிவிட்டது.

சூஃபி சம்பிரதாயக் கண்ணோட்டத்தில் குருதான் உன் வக்கீல். அவர் கடவுளிடம், 'என் சாட்சியத்தைக் கேளுங்கள். இந்த மனிதன் நல்லவன் தான் என உறுதி கூறுகிறேன்' என்று தெரிவிப்பார். இயேசுநாதர் தன்னைப் பின்பற்றுவோரிடம், 'நீங்கள் பயப்படாதீர்கள். உங்கள் கடைசி நிமிடத்தில் நான் உங்கள் சாட்சியாக வருவேன். என் சாட்சியத்தில் நம்பிக்கை கொள்ளுங்கள்' என்று ஆறுதல் கூறினார்.

இன்றைய வக்கீல் என்ன சொல்கிறார்? 'பயப்படாதீங்க. நீங்க பெரிய தப்பு பண்ணிட்டீங்கதான். குற்றம் குற்றம்தான். ஆனா நான் எதுக்கு இருக்கேன்? நீங்க கவலைப்படாதீங்க. நீங்க தப்பிக்கிறதுக்கு சட்டத்தில வழியிருக்கு' என்பார். உண்மைதான். மனிதன் இயற்றும் ஒவ்வொரு சட்டத்திலும் அதிலிருந்து தப்பிக்கும் வழியும் மறைந்திருக் கிறது. மனிதன்தானே சட்டத்தை உருவாக்குகிறான்? அதில் ஓட்டையை ஏற்படுத்தி அல்லது கண்டுபிடித்து சட்டத்திலிருந்து தப்பிக்கும் வழியையும் அவன் தெரிந்து கொள்கிறான்.

சமூகத்தில் நீ குற்றம் இழைத்தாலும் தப்பிக்க முடியும். பெரிய குற்றவாளிகள் பெரும்பாலும் தப்பித்துவிடுகிறார்கள். சிறிய மீன்கள் தாம் அகப்பட்டுக்கொள்கின்றன. தங்களைக் காப்பாற்ற வக்கீல் இல்லாத நிலையில் சிறு குற்றம்தான் புரிந்தவர்களும் சிக்கிக்கொள்கின்றனர். பண வசதி உடையவர்கள் மாட்டிக்கொள்வதில்லை. அந்தப் பெரிய குற்றவாளிகள் அரசியல்வாதிகளாக ஆகிவிடுகிறார்கள். அரசியல் மூலம் சரித்திரத்தில் இடம் பெற்றுவிடுகிறார்கள். வசதியற்ற குற்றவாளிகள் சிறு அளவிலான குற்றமே புரிந்திருந்தாலும் வாழ்க்கை முழுதும் சிறையில் வாடுகின்றனர்.

மனத்தால் கெடுதல் புரிந்தால் உன்னை எந்த வக்கீலும் காப்பாற்ற முடியாது. கெடுதல் நினைத்ததும் நீ பாவியாகிவிடுகிறாய். சமூக வாழ்க்கையில் நீ குற்றம் செய்தால் வழக்கு முடிந்து ஒருவேளை நீ குற்றவாளிதான் என்று அறிவிக்கப் பல ஆண்டுகளாகின்றன. கெட்ட எண்ணம் மனத்தில் தோன்றி, பல பிறவிகளுக்குப் பிறகுதான் தீர்ப்பு என்றால் நீ தப்பிப்பதற்கு ஏதாவது வழி கண்டுபிடித்துவிடுவாய். ஆனால் இறைவனின் நீதிமன்றத்தில் நீ கெட்ட எண்ணம் உதித்த கணமே, குற்றவாளி ஆகிவிடுவாய்.

நீ ஒருவரைக் கோபிக்க வேண்டும் என்று நினைத்ததுமே கோபம் தோன்றிவிட்டது என்றுதான் பொருள். உள்ளுக்குள்ளேயே பொங்குகிறாய், எரிகிறாய், தகிக்கிறாய், கோபத்தை இன்னும் வெளிக் காட்டவில்லை என்பது வேறு விஷயம். உள்ளே கொப்புளங்கள் கிளம்பிவிட்டன; காயம் உண்டாகிவிட்டது. எண்ணிய அளவிலேயே உள்ளே இந்த மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. கோபத்தில் கோபத்தின் விளைவும் அடங்கியிருக்கிறது.

ஆகவே கடவுளை ஏமாற்றும் வாய்ப்பில்லை. அவர் செயலையும் விளைவையும் அருகருகேதான் வைத்திருக்கிறார். நெருப்பைத் தொட்டால் உடனே சுடுமல்லவா? அடுத்த பிறவியிலா சுடும்?

இந்தப் பிறவியில் செய்யும் பாவங்களுக்கு அடுத்த பிறவியில் தண்டனை கிடைக்கும் என்று மக்கள் சொல்வது வழக்கம். இது வேடிக்கையான விஷயம். இப்படி இடைவெளி இருப்பது வசதியாகி விடுகிறது. அடுத்த பிறவியில் நடக்கப்போவதை இப்போதே யார் பார்க்க முடியும்? நடுவிலே புண்ணியம் செய்து தப்பித்துவிடலாம் என்று நீ நினைப்பாய். 'பூஜை, பிரார்த்தனை, அர்ச்சனை செய்வோம், நமக்காக வேண்டிக்கொள்ள புரோகிதர்களை நியமிப்போம்; கோயில் கட்டுவோம்; தானம் செய்வோம்; சத்திரம் அமைப்போம். அடுத்த பிறவிக்குள் நிலைமையைச் சமாளித்துவிடலாம்' என நீ நினைப்பாய்.

கடனைத் திருப்பிக்கொடுப்பதை ஏதாவது செய்து தள்ளிப் போடுவதுபோல், பரிகாரங்கள் மூலம் பாவத்தைச் சமாளிக்கலாம் என்று புரோகிதர்கள் யோசனை கூறுவார்கள். செயல் - விளைவு விஷயத்தில் விஞ்ஞானமும் மதமும் ஒத்த கருத்துகள் கொண்டுள்ளன.

நெருப்பைத் தொட்டால் உடனே சுடும் இது அறிவியல். கோபித்தால் உடனே உள்ளே எரிவாய், கெட்டதை நினைத்த மாத்திரத்திலேயே அது நடந்து விட்டது எனலாம் - இது மதம், தர்மம்.

முதலில் எண்ணம் உதித்து மனிதன் பாவம் செய்கிறான். பாவ எண்ணத்தைச் செயலில் காட்டும்போது அது சட்டப்படி குற்றம் ஆகிறது. குற்றத்தின் விளைவிலிருந்து தப்பிக்க வழி உண்டு. பாவ எண்ணம் உதித்த உடனேயே பாவச் செயல் செய்யப்பட்டுவிட்டது போன்ற நிலை ஏற்படுகிறது. ஆகவே தப்பிக்க வழியில்லை.

அஷ்டாவக்ரரின் கருத்துப்படி, யார் விஷயத்திலும் செய்த - செய்ய நினைத்த கர்மங்கள், சுக- துக்கப் போராட்டங்கள் தணிந்தது கிடையாது ஆகவே இவற்றை சாந்தப்படுத்தும் முயற்சியில் நீ ஈடுபட்டால் அமைதியை இழப்பதுதான் மிஞ்சும்.

எந்த மனிதனுடைய சுக-துக்க விளைவுகளும் சாந்தமடைந்தது இல்லை. மாமனிதர்களும் விதிவிலக்கில்லை. மகாவீர பிரபு வயிற்றுப் போக்கால், புத்தர் உணவு விஷமானதால் காலமானார்கள். இயேசுநாதர் சிலுவையில் தொங்கினார். சாக்ரடீசுக்கு விஷபானம் தரப்பட்டது. ரமண மகரிஷியும் ராமகிருஷ்ணரும் புற்றுநோய்க்கு இரையானார்கள் இத்தகைய நிகழ்ச்சிகள் எதிர்காலத்திலும் நடைபெறும்.

செய்யாத காரியத்திற்கும் விளைவு உண்டு! அதிலிருந்து தப்பிக்க முடியாது. 'நான் எதுவும் செய்யாமல் அப்படியே உட்கார்ந்தபடி இருந்தால் ஒரு விளைவும் நேராது' என்று நீ சொல்வாய். துறவிகள் அவ்வாறுதான் சொல்கிறார்கள். ஆனால் உட்காருவதே ஒரு செயல்தானே அதனால் நசுங்கும் உயிரினங்கள் பல. மூச்சுவிடும்போது சாகும் உயிரிகள் பல. அதாவது, நீ கொலை செய்கிறாய்! ஜைனத் துறவியர்போல் வாயைத் துணியால் கட்டலாம். அதில் பட்டு இறக்கும் உயிரிகளும் பல. சந்திப்பவர்களுடன் பேசுவாய். அப்போது வாயிலிருந்து வெளியேறும் சூடான காற்றாலும் உயிரிகள் இறக்கும். சாப்பிட்டாலும், பருகினாலும் உயிர் இருக்கும்வரை செயல்களும் உண்டு. ஒவ்வொரு செயலாலும் நல்ல-கெட்ட விளைவுகள் உண்டு. துறவறம் பூண்டு காட்டுக்குப் போனாலும் அங்கும் செயல்கள் தொடரும்.

செயல் என்பது வாழ்க்கையின் தவிர்க்க முடியாத அங்கமாகும். வாழ்க்கை முடிவடையும் போதுதான் செயல்களும் முடிவுக்கு வரும். ஏதாவது செயலில் ஈடுபடும்போது சில எண்ணங்களும் சேர்ந்து நடைபோடும். துறவி தியானத்தில் உள்ளார். சிறிது நேரத்தில் பசிக்கிறது. உடலில் தோன்றும் துடிப்புடன் மனத்திலும் 'இப்போது எனக்குப் பசிக்கிறது' என்னும் எண்ணமும் தோன்றுமல்லவா? அதனால்தானே அவரும் பிட்சைக்குச் செல்கிறார். உடலுக்குப் பசித்தால், மனத்திலும் 'பசிக்கிறது' என்னும் எண்ணம் தோன்றுவது இயற்கை. துறவியின் பாதையில் எங்காவது நெருப்புத் தணல் கிடந்தால் அவர் விலகித்தான் செல்வார். அதன்மேல் கால்பட்டால் கொப்புளம் ஏற்படும் என்று அதேசமயம் அவரது மனமும் கூறும். துறவியை நோக்கிக் கல்லெறிந்தால் மின்னல் வேகத்தில் ஆபத்து எண்ணம் மனத்தில் தோன்றிக் கண்கள் தாமாகவே மூடிக்கொள்ளும்.

மனத்தில் எண்ணங்கள் எப்போதும் தோன்றிய வண்ணம் இருக்கும். எண்ணம் நமது வாழ்வின் அங்கமாகும். சுவாசம் இருக்கும்வரை சிந்தனையும் உண்டு. அப்படியானால் மனிதன் மனத்தில் சலனமின்றி இருக்க முடியாதா என்னும் கேள்வி எழுகிறது. அதற்கு உபாயம் உண்டு. ஆனால் வழக்கமாகக் கூறப்படும் உபாயங்களால் பலனில்லை. அதாவது, தப்பித்து ஓடுவதால், செயல் புரியாமல் இருப்பதால், எண்ணத்தை நசுக்க முயல்வதால் மனத்தில் அமைதியை நிலைநாட்ட முடியாது.

வாழ்க்கை என்பது எதிரெதிர் அம்சங்களின் போராட்டம். பகலில் விழிப்பு என்றால் இரவில் உறக்கம். உழைப்புக்குப் பின் ஓய்வு. சுகத்தின் பின்னால் துக்கம் வரும். பகலுக்குப்பின் இரவு. இரவுக்குப் பின் பகல். இப்படி மாறி மாறிப் பின்னப்படும் சங்கிலிபோல் நம் வாழ்க்கை அமைந்துவிட்டது. மூச்சை உள்ளே இழுத்தால் வெளியே விடவும்தான் செய்கிறோம். இல்லாவிடில் அடுத்த மூச்சு விடமுடியா தல்லவா?

வாழ்க்கையில் எல்லா இயக்கமும் இரட்டை அடிப்படையில் நிகழ்கிறது. கால்களை மாற்றி - மாற்றி வைத்து மனிதன் நடக்கிறான். பறவைகளும் இரட்டை இறக்கைகள் கொண்டுள்ளன. ஓர் இறக்கையை வெட்டினாலும் பறவை பறக்க இயலாமல் விழுந்துவிடும். மனிதனின் ஒரு காலை வெட்டு. நடப்பது இருக்கட்டும், நிற்கக்கூட முடியாமல்

அவன் விழுந்துவிடுவான். துவந்த யுத்தம் என்று சொல்வார்களே அதுபோல் இரட்டைகளின் மோதலினாலோ, ஒற்றுமையினாலோதான் வாழ்க்கை இயங்குகிறது. ஆகவே இவற்றை சாந்தப்படுத்த முயன்று சிக்கலில் மாட்டிக் கொள்ளாதே என அஷ்டாவக்ரர் உபதேசிக்கிறார்.

என்னைச் சந்திக்க வருபவர்களில் சிலர் 'மனத்தில் கோபம் பொங்குகிறது. அதை எப்படித் தணிப்பது?' என்று கேட்கின்றனர். என் பதில் - அந்த வம்பில் சிக்கிக் கொள்ளாதே. கோபத்தை யார், எப்பொழுது அடக்கியிருக்கிறார்கள்? நீ கோபத்தையும் வெளி நிகழ்ச்சியாக சாட்சி மனப்பான்மையுடன் பார்த்தபடி இரு. கோபம் தானாகத் தணியத் தொடங்கும்.'

மனத்தில் எண்ண அலைகள் தொடர்ந்து எழும். ஆனால் சாட்சி மனப்பான்மை காரணமாக அவற்றால் நீ நனைக்கப்படமாட்டாய். அவற்றை உன் அலைகள் என்று நினைக்கமாட்டாய். பசியெடுத்தால் உனக்குப் பசிப்பதாக நினைக்கமாட்டாய்; உடலுக்குப் பசிக்கிறது என்று கூறுவாய். காலில் முள் தைத்தால் உடம்பில் வலி ஏற்படுவதை நீ உணர்கிறாய் உடலில் வலியுடன் மனத்திலும் வலி பற்றி எண்ணம் எழும். மகாவீரர் மனத்திலும் வலி பற்றி எண்ணம் தோன்றும். ஆனால் ஒரு வேறுபாடு 'எனக்கு' வலிக்கிறது என்று நீ கூறுவாய். 'உடலுக்கு வலிக்கிறது' என்பார் மகாவீரர். மரணம் நெருங்கும்போது 'நான் இறக்கிறேன்' என்னும் எண்ணம் உன் மனத்தில் தோன்றும். ஆனால் மரண வேளையில் ரமணர் என்ன நினைத்தார்? 'இந்த உடலின் ஆயுள் பூர்த்தியாகிவிட்டது. மரணம் தவிர்க்க முடியாதது. ஏனெனில் அது மனிதன் பிறக்கும் போதே பிறப்பின் ஜோடியாகச் சேர்ந்து வந்துவிட்டது.'

செய்த - செய்யப்படாத கர்மமும், இரட்டைகளின் பாதிப்பும் என்றும் சாந்தமடையமாட்டா என்பதை நிச்சயமாக அறிவாயாக என்கிறார் அஷ்டாவக்ரர். 'நிச்சயமாக' என்பதன் பொருள், செவிவழி அறிவன்று, பிறரிடம் கடன் வாங்கிய அறிவன்று, சுயமாக வாழ்க்கையில் பெற்ற அனுபவம் என்று ஆகும்.

அப்போது வாழ்க்கையில் எதிரெதிரான சம்பவங்கள் நிகழ்வது நிற்காது; எண்ணங்கள் எழுவதற்கு முடிவு கிடையாது என்பது தெளிவாகும். கடலின் மேற்பரப்பில் அலைகள் எழுந்த வண்ணம்

இருக்கும். காற்று வீசும், சூரியன் உதிக்கும், மேகங்கள் திரளும், புயலடிக்கும். இவை எல்லாம் மேலோட்டமான நிகழ்ச்சிகள். நீ மேற்பரப்பிலேயே மேலோட்டமாக மிதந்துகொண்டிராதே, கீழே இறங்கு, ஆழத்தில் இறங்கு, உனது மையத்திற்கு வந்துசேரு.

நம் ஒவ்வொருவர் உள்ளத்தின் ஆழத்திலும் வெளி அலைகள் அணுக முடியாத ஓரிடம் உண்டு. அலைகளைத் தடுப்பதற்குப் பதிலாக அவை அடைய முடியாத அந்த இடத்தில் உன்னை நிலை நாட்டிக்கொள். நீ வீட்டிற்கு வெளியே உள்ளாய். முதலில் வெயில் இதமாக இருக்கிறது. சிறிது நேரத்தில் வெயில் அதிகரித்ததும் உடல் வியர்க்கிறது. அப்போது நீ என்ன செய்கிறாய்? நீ சூரியனை நோக்கித் தண்ணீரை வீசி வெப்பத்தைக் குறைக்கவா முடியும்? அதற்குப் பதிலாக நீ அமைதியாக வீட்டுக்குள் நுழைந்து நிழலில் இருப்பாய்.

எவனாவது தண்ணீர்க் குழாயை சூரியனை நோக்கித் திருப்பிவிட்டு சூட்டைக் குறைக்க முயன்றால் அவனைப் பைத்தியம் என்போம். 'சூரியனை யார் எப்போது சாந்தப்படுத்த முடிந்தது?' என்று அவனைக் கேட்பாய். இதைத்தான் அஷ்டாவக்ரர் வேறு சொற்களால் தெரியப்படுத்துகிறார். வெப்பம் தாங்க முடியாது போனால் பூமிக்குக் கீழே நிலவறைக்குள் செல். அங்கு சூரியகிரணம் நுழைய முடியாது. அதுபோல் நீ உன் உள்ளத்தினுள்ளே அமிழ்ந்துகொண்டே செல்.

ஒவ்வொருவன் உள்ளத்திலும் வெளி அலைகள் (பாதிப்புகள்) நுழைய முடியாத ஓரிடம் உண்டு. அதுதான் உனது மையம். அதுவே உனது நிஜசொரூபம். அந்த ஆழத்தில்தான் நீ என்பவன் உண்மையில் இருக்கிறான். இதை நீயேதான் உணர வேண்டும். நானோ, அஷ்டா வக்ரரோ, வேதங்களோ நீ உன் சுயத்தை உணரவைக்க முடியாது. நீ உன் அனுபவத்தால்தான் உன் மையத்தை அடைய வேண்டும்.

ஞானம் இலவசமாகக் கிடைப்பதில்லை; கடனாகவும் கிடைக்காது. வாழ்க்கையின் இனிமையான, கசப்பான அனுபவங்களின் மூலம் நாம் பக்குவமடைந்து ஞானம் பெறுகிறோம். வாழ்க்கையை வாழ்ந்து பார்த்தபின் ஞானம் திரள்கிறது. அந்த சமயம் ஏற்படும் வலி வேதனைகளை அனுபவித்து ஞானம் பெறுகிறோம்.

இந்த (83ஆம்) சுலோகத்தில் வரும் 'உதாஸீன' என்னும் சொல் சிறப்பானது. ஆசனம் எனில் இருக்கை, நாற்காலி. ஆசீன என்றால்

இருக்கையில் அமர்ந்த என்று பொருள். 'உதாசீன' என்பதன் பொருள் தனக்குள் அமர்தல், தன் ஆழத்தில் அமர்தல், வெளிப்பாதிப்பு அணுகமுடியாமல் இருத்தல் என்பதாகும்.

**ஹை**ரிகேல் என்ற ஐரோப்பியர் ஜப்பானுக்குச் சென்றார். வில்வித்தை மூலம் தியானம் பயில வழியுண்டு என்று அறிந்த அவர் ஒரு ஜென் குருவின் சீடரானார். மூன்று வருடம் பயின்றும் தேர்ச்சி பெற சிரமப்பட்டார். அவரது ஐரோப்பிய மூளை தொழில்நுட்பம் (டெக்னாலஜி) புரிந்துகொள்ள வல்லது. ஆனால் உள்ளே இறங்குதல் அவரால் புரிந்துகொள்ள முடியாத விஷயம். தியானமோ உள்ளிறங் கினால்தானே வாய்க்கும்.

ஜென்குரு வில்வித்தை கற்றுக்கொடுத்த விதம் விசித்திரமாக இருந்தது. அவர் சொன்னார் - 'நீ அம்புவிடு ஆனால் அதைச் செலுத்தியவன் நீ அல்லன்போல் செலுத்த வேண்டும்' ஹைரிகேல் ஏற்கெனவே வில்வித்தையில் தேர்ச்சி பெற்றவர். நூறு சதவிகிதம் குறி தவறாமல் அம்புவிடக்கூடியவர். ஆனால் அவர் அம்புவிடும் முறை ஜென்முறைப்படி அன்று என்றும், அதன் அடிப்படையில் தியானம் அமைந்திருக்கவில்லை என்றும் அவருடைய குரு அதிருப்தி தெரிவித்தார்.

"என் அம்புகள் குறிதவறாமல் இலக்கை அடையத்தானே செய்கின்றன. வேறென்ன எதிர்பார்க்கிறீர்கள்?" என்று ஹைரிகேல் கேட்டார்.

இது ஐரோப்பிய தர்க்க வாதம். அம்பு இலக்கைத் தொட்டு விட்டால் அது முழு வெற்றிதானே. விட்ட குறை - தொட்ட குறை எப்படி இருக்க முடியும்? என்பது ஐரோப்பியக் கண்ணோட்டம்.

அதற்கு ஜென்குரு, "நீ விடும் அம்பு இலக்கைத் தாக்குகிறதா என்பது முக்கியமில்லை. நீ சரியாக இருக்கிறாயா; சரியாமல் இருக்கிறாயா என்பதே முக்கியம்," என்று தெரிவித்தார்.

குரு கூறுவது மிகவும் கடினமான விஷயம். அவர் எதிர் பார்ப்பது அம்பு எய்பவன் நீ அல்லன்போல் அம்பு செலுத்து! நீ செய்பவனாக-கர்த்தாவாக - இராதே. நீ சாட்சி மட்டுமே. நீ அம்பு

செலுத்தாதே. பாமாத்மா அம்பு செலுத்தட்டும்; விசுவ சக்தி அம்பு செலுத்தட்டும்.

யோசித்துப் பார்த்த ஹைரிகேலுக்குக் குழப்பம்தான் மிஞ்சியது. அவர் மனத்தில் பல கேள்விகள் - அம்பு செலுத்துபவன் நானல்லன் என்றால் பிறகு நான் ஏன் நாணேற்ற வேண்டும்? நாணேற்றினால் அதைச் செய்பவன் நான் தானே. நாணை இழுப்பவன் நான்தானே. இலக்கை முடிவுசெய்பவனும் நான் தானே. என்னைத் தவிர வேறு யார் நான் செய்வதையெல்லாம் பார்க்கிறார்கள்?

மூன்று ஆண்டுகள் கழிந்தன. ஒருநாள் குரு அவரை அழைத்து "அப்பனே! காலம் இழுத்துக்கொண்டே போய்விட்டது. நான் சொன்னது உனக்குப் புரியவில்லை. நீ உன் நாட்டுக்குத் திரும்பி விடுவதுதான் நல்லது," என்று முடிவு கூறினார்.

அதற்கேற்ப ஒருநாள் ஹைரிகேல் குருவைச் சந்தித்து, அவரிடமிருந்து விடைபெற்று தன் நாட்டிற்குத் திரும்புவதாக இருந்தார். அவர் சந்திக்கச் சென்றபோது குரு பல சீடர்களுக்கு வில் வித்தை கற்பிப்பதில் ஆழ்ந்திருந்தார். கடந்த மூன்று வருடங்களிலும் அவர் குரு அம்பு விடுவதைப் பார்த்திருந்தபோதும் இப்போதுதான் அவர் இதுவரை பார்த்திராத ஒன்றைக் கண்டார். இதுவரை தான் எப்படி முழுமையாகக் கற்கப்போகிறோம் என்கிற படபடப்புக் காரணமாக அவரது கவனம் தன்னிலேயே மையம்கொண்டிருந்தது. இனி படிப்பு கிடையாது என்ற நிலையில் சூழ்நிலையைத் தெளிவாகக் காண முடிந்தது. என்ன இருந்தாலும் மூன்று வருஷம் குரு தன்னுடன் உழைத்துப் பயிற்சி தந்தவர். காத்திருந்து விடைபெறுவதற்காக ஹைரிகேல் ஒரு பெஞ்சில் உட்கார்ந்தார். குரு மற்ற சீடர்களுக்குப் பயிற்சி தந்து முடிக்கட்டும் என்று காத்திருந்தார். அவரைத் திருப்திப் படுத்த இயலாமைக்கு மன்னிப்புக் கேட்கவும் விரும்பினார்.

ஹைரிகேல் குருவைக் கவனித்தார். குரு வில்லை எடுக்கிறார். எடுப்பதே தெரியவில்லை. ஏனெனில் பரபரப்புத் தெரியவில்லை. அம்பை மாட்டுகிறார் ஆனால் அலட்சியமாக, மன இறுக்கம் இல்லாமல், கையைப் பின்னோக்கி இழுக்கிறார் சூன்ய உணர்வுடன் இந்த நடவடிக்கைகளை தான் விரும்பிச் செய்வதுபோல் இல்லாமல் வேறு யாராலோ செய்யத் தூண்டப்படுவதுபோல் நடந்து கொள்கிறார்.

நீ இந்த வித்தியாசத்தைக் கவனித்தாயா? நீ உன் காதலியைச் சந்திக்கச் செல்கிறாய். அப்போது உன் செயல்களில் அவசரமும் தீவிரமும் காணப்படும். வேறொருவர் தன் காதலிக்கு உன் மூலம் கடிதம் கொடுத்தனுப்புகிறார் என்று வைத்துக்கொள். நீ ஆர்வமின்றி அலட்சியமாக அதை வாங்கிக்கொள்வாய். நீ கர்த்தா இல்லை தூதன் மட்டுமே. நீ கடிதத்தைச் சேர்ப்பித்துவிடுவாய்தான். ஆனால் உன்னிடம் விரைவு, துடிப்பு, கிளர்ச்சி வெளிப்படாது.

தபால்காரர் வருகிறார். உனக்கு லாட்டரியில் லட்ச ரூபாய் பரிசு விழுந்துள்ளது. அதற்கான கடிதத்தை அற்பக் காகிதம்போல் உன்னிடம் தருகிறார். வழக்கம்போல் சைக்கிளில் வருகிறார். வழக்கம் போல் அழுது வடியும் முகம். அவருக்கென்ன வந்தது? எந்தக் கடிதத்தில் என்ன செய்தி இருந்தாலும் அவரது பணி தூதுவர்போல் அதைக் கொண்டுவந்து கொடுப்பதுதான்.

ஹைரிகேலின் மனத்தில் புதிய சிந்தனை, புதியதொரு முடிவு. பெஞ்சிலிருந்து எழுந்தார். அசந்துபோனார். தான் எழுந்ததாக அவருக்குத் தோன்றவில்லை. ஏதோ பொருள் எழுந்திருப்பதுபோல் தோன்றியது. அவர் குருவின் அருகில் சென்றார். அவரது கையி லிருந்து வில் - அம்பை வாங்கிக் கொண்டார். நாணில் அம்பை வைத்து, குறி பார்த்து, கையைப் பின்னுக்கு இழுத்து அம்பை விடுவித்தார். ஆனால் தான் அம்பு விடுகிறோம் என்ற உணர்வே அவருக்கு இல்லை. வேறு யாரோ அம்புவிடுவதைப் பார்ப்பது போன்ற மனநிலையில் அவர் இருந்தார். இதைக் கவனித்த குரு அவரைத் தழுவிக்கொண்டார். சாட்சி மனநிலைக்கான பயிற்சியில் ஹைரிகேல் தேர்ச்சி பெற்றுவிட்டாரென அறிவித்தார்.

ஹைரிகேல் மகிழ்ந்து குருவைத் தன்னுடன் சேர்ந்து விருந்துண்ண அழைத்தார். ஏழடுக்கு மாடி இல்லம் ஒன்றில் அமர்ந்து சாப்பிடத் தொடங்கினார்கள். ஜப்பான் நாடாகையால் திடீரென்று பூகம்பம் ஏற்பட்டது. கட்டடம் குலுங்கியது. எல்லோரும் வெளியே ஓடினார்கள். ஹைரிகேலும் உயிர்தப்ப ஓடினார். அச்சமயம் குரு எங்கே, என்னவானார் என்ற நினைவே ஹைரிகேலுக்கு இல்லை. மாடிப்படிகளில் மக்கள் இடித்துக்கொண்டு கீழே இறங்கினர்.

அவர்களிடையே குருவைக் காணாமல் ஹைரிகேல் மேலே ஏறிவந்து, உணவறையை அடைந்தார். குரு முன்பிருந்த அதே இடத்தில், அதே தோற்றத்தில் அமைதியாக உட்கார்ந்திருந்தார். கண்கள் மூடியிருந்தன. பூகம்பம் காரணமாகக் கதவருகில் சாவு, ஏழு அடுக்கு வீடு என்பதால் குலுங்கும்போது பேராபத்து. குருவோ ஒரு பிரச்சினையும் இல்லை என்பது போல் உட்கார்ந்திருக்கிறாரே! தப்பித்து ஓடவேண்டும் என்று கூட அவருக்கு உறைக்கவில்லையே!

ஹைரிகேலும் தப்பித்து ஓடுவதை மறந்துவிட்டார்! குருவின் எதிரில் அப்படியே மந்திரத்தால் கட்டுண்டவர்போல் நின்றார். வீடு எந்த நிமிடமும் இடிந்து விழலாம் என்னும் நிலை. ஹைரிகேல் குருவின் அருகில் சென்று அமர்ந்தார். அவர் விருந்தளிப்பவர்; குரு விருந்தாளி, விருந்தாளி வந்திருக்கும்போது விருந்தளிப்பவர் ஓடிப்போகலாமா? அது அநாகரிகம் அல்லவா? 'நானும் இங்கேயே உட்கார்ந்திருப்பேன். இவருக்கு என்ன நேருகிறதோ அதுவே எனக்கும் நேரட்டும்' என்று ஹைரிகேல் முடிவெடுத்தார். பூகம்பம் சில விநாடிகளே நீடித்தது. பூகம்பம் வந்து மக்கள் ஓடுவதற்கு முன்னால் தான் பேசுவதை நிறுத்திய இடத்திலிருந்து குரு தொடர்ந்தார்.

ஹைரிகல் குறுக்கிட்டார். "நாம் பூகம்பம் வரும் முன் என்ன பேசினோம் என்று நினைவில்லை. அது எப்படியோ போகட்டும். நான் தெரிந்துகொள்ள விழைவது வேறு விஷயம், பூகம்பம் ஏற்பட்டதும் நாங்கள் எல்லோரும் ஓடினோமே, நீங்கள் ஏன் ஓடவில்லை?"

குரு சொன்னார்: "நீ சரியாகப் பார்க்கவில்லை. நானும் தான் ஓடினேன். நீ வெளியே ஓடினாய். நான் உள்முகமாக ஓடினேன். நீ ஓடியது முட்டாள்தனம். நீ எங்கே ஓடினாயோ அங்கும் பூகம்பம் இருக்கத்தான் செய்தது. தெருவிலும் பூகம்ப அதிர்ச்சி இருந்தது. நான் ஓடிப்போன இடத்தில் பூகம்பத்திற்கு வாய்ப்பில்லை. இப்படி உள்ளே இறங்கும் மனநிலையே உதாசீனம் என்பது. அங்கே என் மையத்தில் அமர்ந்துகொண்டேன்."

பூகம்பம் நம்மை உடல்வரைதான் பாதிக்கும். அதிகபட்சமாக மனம்வரை அந்த பாதிப்பு செல்லக்கூடும். அதற்குமேல் பூகம்பம் செல்லுபடியாகாது. அது உன் ஆத்மாவைத் தொட முடியாது. அவை வெவ்வேறு விதமாகப் படைக்கப்பட்டவை. அவை ஒன்றையொன்று

சந்திக்க வாய்ப்பில்லை. பூகம்பம் கட்டாயம் உடலைப் பாதிக்கும். ஏனெனில் உடல் இதே மண்ணால் ஆனது. அதுவும் இந்த பூமியின் அங்கம்தான். பூகம்பம் அதிலிருந்து கிளம்பியதுதான். பூமி, உடல் ஆகிய இரண்டின் அலைவரிசைகளும் ஒன்றுதான். இரண்டும் ஒரே தாதுவால் (மூலப்பொருளால்) உருவானவை; ஒரே திரவத்தை உள்ளடக்கியவை. ஆகவே பூமி குலுங்கும்போது உன் உடல் நடுங்காமல் இருக்க முடியாது.

ஆகவே அஷ்டாவக்ரர் கேட்கிறார் 'ஏ முட்டாளே! யார் எப்பொழுது சாந்தமாக இருக்க முடிந்திருக்கிறது? யாராவது எப்பொழு தாவது சுகதுக்கங்களைக் கடந்திருக்கிறார்களா? ஓர் எல்லைவரை எல்லாமே தடுமாறியபடியே உள்ளன. பூகம்பம் நிகழும்போது உன் உடல் மட்டுமல்ல, மகாவீரர் இருந்தால் அவரது உடலும் நடுங்கத்தான் செய்யும். உடல் மண்ணால் ஆனது ஆதலால் மண்ணிற்குரிய குணாதிசயங்கள் அதனிடமும் காணப்படும். உடலுடன் சேர்ந்து மனமும் தடுமாறும் ஏனெனில் மனம் உடலின் அடிமை, சேவகன்.

உடல் தன்னைப் பாதுகாத்துக்கொள்ளக் கையாளும் உபாயமே, கவசமே மனம். உடம்பால் உணரத்தான் முடியும்; பேச வராது. பசித்தால் அதை வாய் மூலமாக வெளிப்படுத்துவது மனம்தான். தாகமெடுத்தால் அந்த உணர்வுக்கு ஒலிவடிவம் கொடுப்பது மனம்தான்.

நீ இரண்டு பிச்சைக்காரர்களின் கதை கேட்டிருப்பாய். ஒருவருக்குப் பார்வையில்லை. இன்னொருவர் கால் முடமானவர். இருவரிடையேயும் நட்பு ஏற்பட்டது. பார்வையற்றவரின் தோளில் முடவர் அமர்ந்து வழிகாட்ட அவர்கள் அதிகம் அலைந்து அதிகம் பிச்சைபெற முடிந்தது.

உடல் மூலம் ஓர் இயக்கம் அல்லது உடல் மீது ஒரு தாக்கம் நடைபெறுகிறது. அது மனத்தில் பதிவாகிவிடுகிறது. மனமும் உடலும் ஒன்றுடனொன்று இணைந்துள்ளன. அவை இரண்டையும் தனித் தனியானவையாகக் கருதக்கூடாது. மனோசரீரம் எனலாம், சம்பவம் ஒன்றுதான். அதன் ஒரு பகுதி வெளிப்புறமாகவும் இன்னொன்று உட்புறமாகவும் நிகழ்கிறது. நவீன மனத்தத்துவ இயலில் உடல், மனம் என்று இரண்டு சொற்களாகப் பயன்படுத்துவதில்லை. மனோசரீரம்—ஸைக்கோஸோமைடிக்—என்கிறார்கள்.

உடலில் நிகழ்வது அலைகளாக விரைந்து மனத்தைப் பாதிக்கிறது. உடலில் பாதிப்பு ஏற்பட்டதுமே இடைவெளியின்றி மின்னலாக அது மனத்தை அடைகிறது. சில சமயம் உடலில் ஒரு பாதிப்பு ஏற்படுவதற்குச் சற்று முன்பே கூட அது அதிசயமாக மனத்தைப் பாதித்துவிடுகிறது. ஒருவன் கத்தியை நீட்டிக்கொண்டு உன்னைக் கொல்ல வந்தால், கத்தி உன் உடலைத் தொடுவதற்கு முன்பே அந்த அபாயச் செய்தி உன் மனத்தை அடைந்துவிடுகிறது.

மனத்தின் சிறப்பு ஒரு சம்பவம் நிகழ்வதற்கு முன்னரே தகவல் தெரிவித்துவிடுவதுதான். 'அதோ அந்த மனிதன் கத்தி எடுத்து உன்னைக் கொல்லவருகிறான். எப்படியாவது தப்பித்துக்கொள்' என்று மனம் எச்சரிக்கிறது.

நீ தூங்கும்போது கத்தியுடன் ஒருவன் வருகிறான். அந்த சமயம் மனம் இயங்குவதில்லை. உடம்பு இருக்கத்தான் செய்கிறது. உறக்க நிலையில், கண்கள் மூடியநிலையில் உள்ளன. அதனால் தன்னை நெருங்கும் அபாயத்தைப் பார்க்க முடிவதில்லை.

நீ விழித்திருக்கும்போது மனமும் விழித்திருக்கும். அது விமானத்திலுள்ள ராடார் போன்றது. நூற்றுக் கணக்கான மைல்வரை ராடார் மூலம் பார்க்கலாம். குறைந்தபட்சம் 200 மைலுக்கு அப்பாலுள்ளதாவது தெரியும். ஆகாய விமானம் ஒலியைவிட வேக மாகச் செல்லக் கூடியது. அது சில நொடிகளிலேயே 200 மைலைக் கடந்துவிடும். ராடார் இல்லாவிடில் பேராபத்து ஏற்பட்டுவிடும். சட்டென எதிரே இன்னொரு விமானம் வந்தால் அதைப் பார்த்து நிலைமையைச் சமாளிக்க அவகாசமே இருக்காது. ராடார் மூலம் பல நூறு மைல்களுக்கு அப்பால் என்ன நிலைமை - மேகமூட்டமா, இடி-மின்னலா, மழையா - என்பது தெரிந்து விடுகிறது.

மனம் ஒரு ராடார். கத்தியெடுத்துக் கொல்ல வருபவன் யார் என்பதை அது பார்த்துவிடுகிறது. மரம் விழவுள்ளதைப் பார்த்தால் உடனே விலகிச் செல்லும்படி உடலுக்குக் கட்டளை அனுப்புகிறது. வழியில் முள்கிடப்பது தெரிந்தால் அது காலுக்கு எச்சரிக்கை அனுப்புகிறது. மனம் உடலின் சேவகனாகத் தொண்டு செய்கிறது. மனத்தை உடலின் விரிவாக்கம் என்று கூட சொல்லலாம். தானாக இயங்காத உடலுக்கு அது சக்தியூட்டி வேலைவாங்குகிறது.

ஆகவே உடல் நடுங்கினால் மனமும் அதிரும். சில சூழ்நிலைகளில் உடலில் பாதிப்பு இல்லாவிடினும் மனம் நடுங்குகிறது. ஒருவர் உன்னிடம் "பூகம்பம் வரப்போவதற்கான அறிகுறிகள் தெரிகின்றன." என்று சொன்னால், உடலில் சலனம் ஏற்படாவிடினும், மனம் நடுங்க ஆரம்பித்துவிடும். பீகிங் (சீனா) நகரமாயின் முன்கூட்டியே மக்களின் மனம் வீட்டிற்கு வெளியே நிவாரண முகாமில் தங்க ஏற்பாடுகளைச் சிந்திக்கத் தொடங்கிவிடும்.

யாரோ நெருப்புப் பிடித்துவிட்டதாகக் கத்தினால் சுற்றிலு முள்ளவர்கள் பதறி ஓடுவார்கள். அது உண்மைதானா என்று நேரில் சென்று சோதனை செய்யமாட்டார்கள். நெருப்பு என்னும் கத்தலை மனம்புரிந்துகொண்டதும் உடல் ஓட்டமெடுக்கிறது.

ஜென்குரு ஹைரிகேலிடம் சொன்னார். "நீ ஓட்டம் பிடித்தாய். அவ்வாறு ஓடியது வீண். ஏனெனில் நீ வெளியேயும் பூகம்பத்தை நோக்கித்தான் ஓடினாய். நானும் ஓடினேன். அது உன் கண்ணுக்குத் தெரியவில்லை. நான் உள்முகமாக ஓடினேன். நான் அக்கணமே என்னை உடலிலிருந்தும் மனத்திலிருந்தும் விடுவித்துக்கொண்டேன். ஏனெனில் இவை இரண்டும் பூகம்பத்தால் பாதிக்கப்படக்கூடியவை. இவற்றோடு தற்சமயம் நட்பு வைக்கக் கூடாது என்று தீர்மானத்தேன். நான் விலகியபின் பூகம்ப அச்சத்தால் உடல் நடுங்கியது, மனம் நடுங்கியது. நானோ எனக்குள் என் மையத்தில் அமர்ந்து இதை யெல்லாம் பார்த்தபடி இருந்தேன். பூகம்பத்தால் என் உடல் இறக்கும்; மனம் சிதையும்; ஆனால் நிஜமான நான் பாதிக்கப்படமாட்டேன்"

இதையே நம் நாட்டில் 'நைனம் சிந்தந்தி ஸஸ்த்ராணி நைனம் தஹதி பாவக:* என்கிறோம். ஆயுதங்கள் ஆன்மாவைச் சிதைக்க மாட்டா; தீ இதை எரிக்காது என்று இதற்குப் பொருள்.

அஷ்டாவக்ரர் உலகில் உதாசீனமாக வாழச் சொல்கிறார். உதாஸ் என்றொரு சொல் உள்ளது. அதன் பொருள் 'சோகம்' என்பதாகும். அதற்கும் உதாசீனம் என்பதற்கும் சம்பந்தமில்லை. வாழ்க்கையில் சோகமாக இருப்பவர்கள் உதாசீனர்கள் ஆகமுடியாது. வாழ்க்கையில் ஒருவர் சோகமாக இருந்தால் அவரது அறிவு இன்னும் முழுமையாக விழித்துக்கொள்ளாதது தான் காரணம். ஏனெனில் இங்கே

* ஸ்ரீமத் பகவத்கீதை 2:23

சோகப்படுவதற்கு எதுவுமில்லை; மகிழ்வதற்கும் எதுவுமில்லை; லாப நஷ்டமில்லை. லாப வாய்ப்பிருந்தால்தானே மகிழ்வாய்? நஷ்ட அபாயம் இருந்தால்தானே சோகப்படுவாய்? ஆனால் இங்கே கொள்வதுமில்லை, கொடுப்பதுமில்லை.

மொழியியல் அறிஞர்கள் 'உதாஸ்' (சோகம்) என்பதை உதாசீனம் என்பதுடன் பொருத்தக்கூடும். நான் மொழியியல் அறிஞன் இல்லை. நான் கூறுவது ஆத்ம இயல். 'உத' எனில் 'உள்ளே இருக்கும்' எனப் பொருள் கொள்கிறேன். ஆசீனம் எனில் ஆசனத்தில் (இருக்கையில்) அமர்தல் என்று ஏற்கெனவே பொருளுண்டு. உதாசீனம் என்றால் உள்ளே அமர்தல் எனப் பொருள்படுகிறது. தனக்குள்ளே பின்வாங்கி ஒருவன் உட்கார்ந்து கொண்டான். அங்கே சாட்சியாக மாறி வெளியுலக லீலைகளைக் கவனிக்கிறான். வெளிக்காட்சிகள் அனைத்தும் அவனுக்கு நாடகம்போல் தென்படுகின்றன.

வாழ்க்கையைச் சரியாகப் புரிந்துகொள்பவன் உதாசீனம் (விருப்பு, வெறுப்பு இல்லாதவன்) ஆகிறான். பிறகு அவன் 'நான் சாந்தமடைய வேண்டும்' என்று அவன் கூறுவதில்லை. ஏனெனில் அவன் அசாந்தமும் அடைவதில்லை. 'நான் வெறும் பார்வையாளன்' என்பான். மனத்துடன் நாம் ஏற்படுத்திக்கொள்ளும் தொடர்பு காரணமாகத்தான் நாம் அமைதி அமைதியின்மை ஆகிய நிலைகளை உணர்கிறோம். 'நான் மகிழ்ச்சியாக இருக்கவேண்டும்' என்றும் அவன் சொல்ல மாட்டான். ஏனெனில் சுகத்துடன் துக்கமும் கைகோத்துவரும் என்பது அவனுக்குத் தெரியும். சுகமடைய விரும்பினால் நாம் துக்கத்திற்கும் தயாராக இருக்க வேண்டும். சுகமும் துக்கமும் பறப்பதற்கு உதவும் இரட்டை இறக்கைகள் போல் பிரிக்க முடியாதவை. நீயோ சுகமாக மட்டுமே இருக்க விரும்புகிறாய். இது வீணான விருப்பம். இதில் நீ வெற்றிகாண முடியாது. நீ எத்துணை சுகமாக இருக்கிறாயோ அதே விகிதத்தில் அவதிப்படுவாய். ஆனால் ஞானம் பெற்றவன் 'நான் சுகமடையவோ, துக்கப்படவோ, சாந்தமாக இருக்கவோ, அமைதியிழக்கவோ இப்படி எதிரெதிரான இரட்டைகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கமாட்டேன்' என்பான்.

என்னிடம் வருவோரில் சிலர், "நாங்கள் தியானம் கற்க விரும்புகிறோம். ஏனெனில் நாங்கள் சாந்த மனநிலையை அடைய

விரும்புகிறோம்'' என்பார்கள். அவர்கள் 'தியானம்' என்பதன் பொருளை அறிந்திருக்கவில்லை. தியானம் என்பது உள்ளே நிகழ்கின்ற ஓர் அனுபவநிலை. அங்கே அமைதி-அமைதியின்மை ஆகிய இரண்டுமே கிடையாது. எங்கே அமைதியும் கிடையாதோ அங்குதான் அமைதி உள்ளது என்னும் விசித்திர நிலை. அமைதி இருந்தால் அமைதியின்மையும் சேர்ந்துவரும். இந்த இரண்டையும் கடந்தது தியான நிலை. அங்கு பேரமைதி நிலவுகிறது.

தியானம் செய்வது எளிதானதன்று. சிலர் தியானம் செய்வதாகச் சொல்லிவிட்டு, கண்களை மூடி அசையாமல் உட்கார்ந்திருப்பார்கள். திடீரெனக் குழந்தை வீறிட்டழும்; அல்லது இந்த சமயம் பார்த்து மனைவியின் கையிலிருந்த பீங்கான் கோப்பை கீழே விழுந்து உடையும்; அல்லது பக்கத்து போர்ஷன்காரர் ரேடியோவின் ஒலியைக் கூட்டுவார். உடனே அவர்களது தியானம் கலைந்துவிடும். கோபம் வெடிக்கும். தியானத்தைக் குலைத்தவர்களுக்கு சாபம் கொடுப்பார்கள்.

எளிதில் கலைவது தியானமன்று; இடையிடையே சலனப் படுவது தியானமன்று. பாத்திரம் விழுந்தால், ரேடியோ ஒலி கேட்டால், குழந்தை அழுதால் கவனம் சிதறி உணர்ச்சிவசமாவது தியானமன்று. அப்படியானால் நீ செய்தது என்ன? எப்படியோ சமாளித்துக்கொண்டு ஓரிடத்தில் அமர்ந்து கண்களை மூடிக்கொண்டாய், அவ்வளவுதான். அது சுயக் கட்டுப்பாட்டு முயற்சிமட்டுமேயாகும். அதில் ஆழமான அனுபவம் ஏதும் கிடையாது. நீ கரையில் இருந்துகொண்டு தலையை மட்டும் தண்ணீரில் நனைக்கும் முயற்சியாகும். அடுத்த விநாடியே தலையை உயர்த்திவிடுவாய்.

தியானம் என்பது அமைதி, அமைதியின்மை ஆகிய இரண் டுடனும் சம்பந்தப்படவில்லை. மனம் சாட்சி நிலையில் இருப்பதே தியானமாகும். நீ சாந்தம் மேலோங்குவதை உணர்வாய். ஆனால் அதனுடன் ஒட்டிக்கொள்ளமாட்டாய். நீ குழப்பம் மேலோங்குவதை உணர்வாய். ஆனால் கொந்தளிக்கமாட்டாய். இதெல்லாம் மனத்தின் விளையாட்டு என்பாய். கடல் அலைகள்போல் இவை பொங்குவதும் தணிவதுமாக இருக்கும். இவற்றோடு நமக்கு சம்பந்தமில்லை என்று தொலைவில் உட்கார்ந்து நீ மனம் காட்டும் வேடிக்கைகளைப் பற்றின்றிப் பார்ப்பாய்.

உதாசீனம் என்பதற்கு அஷ்டாவக்ரர் 'நிர்வேத' என்னும் சொல்லை உபயோகிக்கிறார். வேத என்றால் அலை. அது உணர்ச்சி அலையாகவோ, அறிவு அலையாகவோ இருக்கலாம். வேதனா (வேதனை) உணர்ச்சியையும், வேதம் என்பது ஞானத்தையும் குறிப்பிடுகிறது. நிர்வேத நிலையில் உணர்ச்சி அலைகளும் எழுவதில்லை, ஞான அலைகளும் எழுவதில்லை. ஞான அலைகள் மூளையிலும், உணர்ச்சி அலைகள் உள்ளத்திலும் எழுகின்றன. நீ இரண்டிற்கும் அப்பால் அமர்ந்துவிடு. அப்போது 'நான் ஏதோ அறிந்தவன்' என்று உனக்குத் தோன்றாது. 'நான் ஏதோ அனுபவிப்பவன்' என்றும் உனக்குத் தோன்றாது. அறிவு, உணர்வு இரண்டையும் கடந்து நீ சாட்சி மாத்திரமே என்ற நிலையில் தொலைவில் இருப்பாய். எந்த அலையுடனும் உனக்குத் தொடர்பிருக் காது. உன் உள்ளத்தில் வீசும் இந்த இரண்டு அலைகளிலும் நனையாமல் நீ மூன்றாவதான 'நிர்வேத' என்னும் நிலையை அடை. இதுவே உதாசீன நிலை என்பது.

உதாசீனமாக இருப்பதுடன், விரதங்களை மேற்கொள்ளாமல் தியாக உணர்வுடன் இரு என்று அஷ்டாவக்ரர் மேற்கொண்டு கூறுகிறார். விரதங்கள் வேண்டாம் என்று அவர் கூறுவது நமக்குத் திகைப்பூட்டுகிறது. மனிதன் பலவிதமான விரதங்களைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று சொல்வதுதானே வழக்கம். யாரையாவது புகழும்போது அவர் விரத சீலர் என்று கூறுவதுண்டு.

ஆனால் அஷ்டாவக்ரர் புரட்சிகரமாக அ+வ்ரதி என்று கூறுகிறார். விரதம் மேற்கொள்ளுவது நுணுக்கமான முறையில் தன்னையே ஏமாற்றிக்கொள்வதாகும். ஏனெனில் விரதம் என்பது அடிப்படையில் கட்டாயப்படுத்தப்படும் அல்லது திணிக்கப்படும் சடங்கு. விரதம் என்பதற்கு வற்புறுத்தித் தூண்டுதல் என்று பொருள். நாம் விரதமிருந்து பிடிவாதமாக ஒன்றை சாதித்துக்கொள்ள, பிறர் நமக்காக ஒன்றைக் கட்டாயமாகச் செய்ய வற்புறுத்துகிறோம். ஞானம் பெற்றவன் எதையும் வற்புறுத்துவதில்லை; குறிப்பாக எதற்கும் ஆசைப்படுவதில்லை. 'இது இப்படித்தான் இருக்க வேண்டும்' என்று அடம் பிடிப்பதில்லை. ஆகவே அவனுக்கு விரதங்கள் தேவைப்படுவதில்லை.

திருடன் ஒருவன் இனிமேல் திருடமாட்டேன் என்று கோயி லுக்குச் சென்று விரதம் மேற்கொள்கிறான் (அஸ்தேய விரதம்) மகாத்மா

ஒருவரின் காலில் விழுந்தும் 'நான் இனி திருடாமலிருக்கும்படி ஆசீர்வாதம் செய்யுங்கள்' என்றும் வேண்டிக்கொண்டான். மக்கள் முன்னிலையிலும் 'நான் இனி திருடமாட்டேன்' என்று அறிவித்தான். இவ்வாறு அவன் தன்னை அறியாமலேயே தனது திருடும் இயல்புக்கு எதிராக அகங்காரத்தை நிறுத்துகிறான். அகங்காரம் எல்லாவற்றையும் விட வலிமையானது. கோயிலில், மகாத்மாவின் திருவடிகளில், மக்கள் முன்னிலையில் 'இனி திருடமாட்டேன்' என்ற அறிவிப்பின் காரணமாக அவனது அகங்காரம் உறுதியாகிவிடுகிறது.

ஒருவன் விரதம் மேற்கொள்வது தெரிந்தால் மக்கள் அவனுக்கு மாலை அணிவிக்கிறார்கள். மாபெரும் விரதமாயின் அவனை ஊர்வலமாக அழைத்துச் செல்கிறார்கள். செய்தித்தாள்களில் புகைப்படம் வரும். தலைவர்கள் வாழ்த்திப் பேசுவார்கள். இதனால் விரதமிருப்பவனின் அகங்காரம் மேன்மேலும் வலிமை பெறுகிறது. அவனுக்கு அளிக்கப்படும் கௌரவத்தின் அளவிற்கு ஏற்ப அவனது அகங்காரமும் திரட்சியடைகிறது. அப்போது அவன் அகங்காரத்தைத் தனது வழக்கமான குணத்துடன் மோதவிடுகிறான். விரதம் இருப்பவனிடம் இவ்வளவுதான் சிறப்பு. அவன் ஞானியாகி விடுவதில்லை.

நீயே பார். திருட்டு குணத்திலிருந்து தப்பித்தவன் அகங்காரத்தில் அகப்பட்டுக்கொள்கிறான். இதை முக்தி (விடுதலை) என்று கூற முடியாது. கிணற்றில் வீழ்ந்தவன் வெளியேறி குளத்தில் விழுந்த கதையாகிவிடுகிறது. மனத்துக்குள்ளே அகங்காரத்துக்கும் திருடும் இயல்புக்கும் இடையே மோதல் நடக்கிறது.

திருடாமை விரதம் மேற்கொண்டவன் ஒருநாள் ஓரிடத்தில் சுலபமாகத் திருடக்கூடிய வகையில் லட்ச ரூபாய் நோட்டுக்கட்டு இருப்பதைப் பார்க்கிறான். அவனுக்கு தர்மசங்கடமான நிலை ஏற்படும். பணத்தை எடுத்துக் கொள்வதா அல்லது அகங்காரத்தை வைத்துக் கொள்வதா? ஒரு கை நீளும் பணத்தைக் கவர. இன்னொரு கை அக்கையைத் தடுக்கும். இதைத்தான் சமூகம் மனசாட்சி என்கிறது. மனசாட்சியின் மூலம் உன் அகங்காரம் வெளிப்படுகிறது. அதற்கேற்ப சிறுவயதிலிருந்தே உனக்கு மூளைச் சலவை செய்யப்படுகிறது. 'நீ யார் தெரியுமா? சாமான்யன் இல்லை. நீ உயர்ந்த குலத்தினன்; பாரம்பரியம் மிக்க குடும்பத்தில் பிறந்தவன்; நீ உயர்ந்த மதத்தைச் சேர்ந்தவன். இந்த கௌரவங்களை எல்லாம் எப்பொழுதும் நினைவில்கொள்.'

முல்லா நஸ்ருத்தீன் மரணப் படுக்கையிலிருந்தார். தான் செய்த பழிபாவங்களை ஒப்புக்கொண்டு பிரார்த்தனை செய்தார். 'இறைவா! நான் பலமுறை திருட்டுக் குற்றம் செய்திருக்கிறேன். இனி திருடக்கூடாது என்று ஒவ்வொரு முறையும் விரதமேற்றும் அதை மீறியிருக்கிறேன். நான் பக்கத்து வீட்டார்களின் கோழிகளைத்தான் திருடினேன் என்பது வேறு விஷயம். எத்தனையோ பெண்களைக் கள்ளப் பார்வை பார்த்து மனத்தளவில் விபசாரம் செய்திருக்கிறேன். எனக்கு உண்மை பேசவே வராது. வாயிலிருந்து பொய்தான் வெளிவரும். நான் ஒரு துஷ்டன். சிறிய விஷயங்களுக்கெல்லாம் பெரிதாகச் சண்டைபோடுவேன். அடி - உதை கொடுப்பேன். ஒருவரை யாவது கொலைசெய்து பார்க்க வேண்டும் என்னும் எண்ணம் என்னு டைய மனத்தில் எப்போதும் உண்டு. இப்படியெல்லாம் செய்துள்ள போதிலும் ஒரு சாதகமான அம்சம் என்னவென்றால் நான் என் மதத்தை தீவிரமாகப் பின்பற்றினேன். ஒருபோதும் வேற்று மதத்துக்குப் போக நான் நினைத்ததே இல்லை.' இப்படி தன்னை தீவிரமான மதநம்பிக்கை உடையவன் என்று கூறிக்கொள்வதும் அகங்காரம்தான்.

உனக்கு இயல்பாகவே திருடும் குணம் இருப்பதாக வைத்துக் கொள்வோம். இனி திருடமாட்டேன் என்ற வீம்பினால் அகங்காரமும் தோன்றிவிட்டது. இயல்புக்கும் செயற்கையாக ஏற்பட்ட அகங்காரத் திற்கும் இடையே உன் மனத்தில் மகாபாரதப் போர்போல போராட்டம் நிகழும்.

உனக்கு இயல்பாகவே காம உணர்வு அதிகமாக இருப்பதாக வைத்துக்கொள்வோம். நீ ஒரு மகாத்மாவின் சொற்பொழிவைக் கேட்கிறாய். அவர் தன் பேச்சில் காமம் மனிதனை நரகத்தில் தள்ளுமென பயமுறுத்துகிறார். விரிவான நரக வர்ணனை செய்கிறார். அங்கே அடுப்புகளில் நெருப்பு கொழுந்துவிட்டு எரியும். கொப்பரைகளில் எண்ணெய் கொதிக்கும். காமம் உள்ளவனை அதில் கடாசுவார்கள்; எண்ணெயில் வறுத்தெடுப்பார்கள். ஆனால் சாகவிட மாட்டார்கள். உன் உடலை விஷப்பூச்சிகள் சல்லடைக் கண்களாகத் துளைக்கும். ஆனால் சாக முடியாமல் தாங்கொணாத வேதனைக்கு உள்ளாவாய். மகாத்மாவின் வர்ணனையால் அரண்டுபோய், உணர்ச்சிக் கொந்தளிப்பால் உடனே எழுந்து, கூட்டத்திலேயே, 'நான் இனி பிரம்மசாரியாக வாழப்போகிறேன்' என்று அறிவித்துவிடுவாய்!

சொற்பொழிவு முடிந்து வீடு திரும்புகையில் உன் ஆவேசம் தணிந்திருக்கும்; பதற்றம் குறைந்திருக்கும். சாதாரண மனநிலைக்கு வந்தபிறகு 'இதென்ன இப்படி அறிவித்துவிட்டோமே. நாமே தூக்குக் கயிற்றைக் கழுத்தில் சுருக்கிக்கொண்டோமே; தெரியாத்தனமாக பிரம்மசரிய விரதத்தை அறிவித்துவிட்டோமே; மக்கள் கைதட்டி அந்த அறிவிப்பை வரவேற்றார்களே' என்றெல்லாம் நீ குழம்புவாய்.

மக்களின் கைதட்டலைப் பாராட்டு என்று நினைக்கத் தேவையில்லை. எவனாவது முட்டாள்தனமாக நடந்துகொண்டாலும் மக்கள் கைதட்டுவதுண்டு. மக்கள் கைதட்டினால் மகிழ்வதற்குப் பதிலாக எச்சரிக்கை உணர்வு கொள்ளவேண்டும்.

மகாத்மா பகவான்தாஸ் என்றோர் அற்புத சந்நியாசி இருந்தார். அவர் சில சமயம் எங்கள் ஊருக்கு வரும்போது எங்கள் வீட்டில் தங்குவார். அவருக்கு என்னைப் பிடிக்கும். அவரிடம் ஒரு விசித்திரத் தன்மை இருந்தது. அவர் பேசுகையில் யாராவது கைதட்டினால் அவருக்கு மிகவும் கோபம் வந்துவிடும். 'ஏன் கைதட்டினீர்கள்? நான் இதற்குமேல் பேசமாட்டேன்' என்று உட்கார்ந்துவிடுவார். நான் அவரது கோபத்திற்குக் காரணம் கேட்டேன். "பேசுபவர் ஏதாவது முட்டாள்தனமாகச் சொன்னால் மக்கள் அப்போது கைதட்டுகிறார்கள். நான் என் பேச்சில் ஏதோ தவறிழைத்திருப்பேன். இந்த முட்டாள் ஜனங்களுக்குச் சரியான விஷயம் சொன்னால் அவர்கள் புரிந்து கொள்வதில்லை. தப்பாகச் சொன்னால்தான் அவர்களின் மூளையில் ஏறுகிறது. உடனே அவர்கள் கைதட்டுகிறார்கள். அதை அடிப்படை யாக வைத்துக்கொண்டு நான் பேசியதில் தப்பு உள்ளதெனத் தெரிந்துகொள்கிறேன். பாராட்டை எதிர்மறை விமரிசனமாக எடுத்துக்கொள்கிறேன்," என்று அவர் விளக்கினார்.

அவர் சொன்னது சரிதான். மக்களுக்குப் பேச்சில் ஒரு விஷயம் பொருத்தமெனத் தெரிந்தால் அப்போது கைதட்டுகிறார்கள். நீ பிரம்மசரிய விரதம் மேற்கொள்ளப்போவதாக அறிவிக்கும்போது மக்கள் கைதட்டினால் அதற்கு என்ன அர்த்தம்? அவர்கள் கைதட்டலின் மூலம் 'எங்களுக்கும் பிரம்மசரியம் பிடித்திருக்கிறது. ஆனால் எங்களால் உடனடியாக அதை மேற்கொள்ள இயலவில்லை. நீ துணிச்சலான ஆள்தான்பா. நீ ஒரு வீரன். இன்பத்தைத் துறந்த

தியாகி. உனக்கு எங்கள் நல்வாழ்த்துகள்' என்று கூறி அவர்கள் நழுவிக் கொள்கிறார்கள்.

பிரம்மசரியம் என்பது எல்லா புலனாசைகளையும் அடக்கு வதைக் குறிக்கிறது. அதை நீ அறிவித்தபின் மக்கள் உன்னைத் தீவிரமாகக் கண்காணிப்பார்கள். நீ ஹோட்டலில் சாப்பிடுகிறாயா; சினிமா பார்க்கிறாயா; பொழுதுபோக்கு கிளப்புகளுக்குப் போகிறாயா; உன்னோடு சேர்ந்து செல்லும் பெண்மணி யார்-இப்படியெல்லாம் துப்பறிவார்கள்.

மக்கள் கை தட்டுவார்கள். பூமாலை அணிவிப்பார்கள். அந்தப் பூமாலையினுள் மறைந்திருக்கும் தூக்குக்கயிற்றை மறந்துவிடாதே. உன் கழுத்தைவெட்ட தயாராகிவிட்டதுபோல் மக்கள் உன்னைக் கண்காணிப்பார்கள். நீ எங்கே போகிறாய்; என்ன செய்கிறாய்; எப்படி எழுந்திருக்கிறாய்; எப்படி உட்காருகிறாய்; யார் யாருடன் பேசுகிறாய்; எவ்வளவு நேரம் தூங்குகிறாய்; அதிகாலையிலேயே விழிக்கிறாயா இல்லையா இவ்வாறெல்லாம் மக்கள் உன் நடவடிக்கைகளை ஆராய் வார்கள். முன்பு கைதட்டியதற்காக இப்பொழுது பழிவாங்குவார்கள்.

நீ கொல்லாமல் கொல்லப்படும் நிலையை அடைவாய். வெறும் சபதம் மூலம் காம ஆசை நீங்கிவிடாது. இது அவ்வளவு எளிது என்றால் உலக மக்கள் அனைவருமே காமத்தை ஜெயித்திருப்பார்கள். உன்னை ஒரு பக்கம் மனித இயல்பான காமம் பற்றி இழுக்கும். நீ மேற்கொண்ட பிரம்மசரிய சபதம் உன்னை இன்னொரு புறமாக இழுக்கும். மாவுரலின் இரு பகுதிகளுக்கும் இடையே அரைபடும் தானியம்போல், நீ காமம்-பிரம்மசரியம் ஆகிய இரண்டினிடையே மாட்டிக் கொண்டு நீ அரைக்கப்படுவாய். ஒன்றிலிருந்து இன்னொன் றிற்கு மாறி - மாறிச் சறுக்கி நீ உன்னிடம் எஞ்சியுள்ள ஆத்ம கௌரவத்தை இழப்பாய். மக்கள். உன்னை பாவி என்பதுடன் மோசக்காரன் என்றும் இகழ்வார்கள்.

எது சரி - எது தவறு என்று பிரித்துணரும் அறிவையே விரதம் எனக் கருது. வேறு தனிப்பட்ட விரதம் வேண்டாம். நீ இதைப் புரிந்து கொண்டாலே போதும். சமூகத்தின் ஆமோதிப்போ, மரியாதையோ தேவை இல்லை. உனக்கு பிரம்மசரியத்தில் ஈடுபாடு இருந்தால் அதுவே போதுமே. விரதம் தனியாக எதற்கு?

இரண்டோடு இரண்டைக் கூட்டினால் வரும் தொகை நான்கு என்று உனக்குத் தெரியும். இது சம்பந்தமாக சத்தியம் செய்ய வேண்டுமா என்ன? நீ கோயிலுக்குச் சென்றோ, சத்குருவிடமோ நான் எப்பொழுது கூட்டினாலும் 2+2=4 என்றே வரவேண்டும் என வேண்டிக்கொண்டால் உனக்கு மூளைக் கோளாறு என்று அர்த்தமாகும். 'அப்படியே ஆகுக!' என குரு உன்னை ஆசீர்வதித்தால் அவருக்கு உன்னைவிட மூளைக்கோளாறு அதிகம்! உன் மனத்தில் ஒரு சந்தேகம் ஒளிந்திருக்கிறது. 'என்னை அறியாமல் எப்பொழுதாவது 2+2=5 என்று சொல்லிவிடுவேன்' என அஞ்சுகிறாய். ஆகவே அப்படி ஆகாதிருக்க சத்தியம் செய்கிறாய்; கோயிலிலோ, குருவிடமோ நீ வேண்டிக் கொள்கிறாய். அதேபோல், காமத்தால் வழி தவறுவாய் என மிகையாக பயந்து பிரம்மசரியத்தை மேற்கொள்வதாக சபதம் செய்கிறாய்.

ஒன்றைச் சாதிக்கப் பேராசைப்படுபவன் விரதம் அறிவிக்கிறான். பக்குவமான அறிவு பெற்றவன் விரதம் மேற்கொள்வதில்லை. விரதம் மூலமாக ஒருவனது வாழ்க்கையில் புரட்சி ஏற்பட்டுவிடாது. விரதத்தால் புரட்சி உண்டாகுமானால் வலுக்கட்டாயமாக சுமத்தப்பட்ட ஒரு கொள்கை உன் ஆத்மாவை மாற்றிவிட முடியாது. விரதம் மேற்கொண்டு நீ போர்வீரனாகவோ, சந்நியாசியாகவோ மாற இயலாது. விரதத்தின் மூலம் நீ ஒரு விஷயத்தில் பயிற்சி பெறலாம்; பிடிவாத மான ஓர் எண்ணம் கொள்ளலாம்; குறிப்பிட்ட விதமாக வாழ்க்கை நடத்தலாம். ஆனால் இதனால் உன் வாழ்க்கையில் ஞானசூரியனின் உதயம் ஏற்பட்டுவிடாது.

விரதம் மேற்கொள்ளாமை என்பதன் அர்த்தமென்ன? உனக்குச் சரியெனப்படுவதைச் செய். அதை ஏன் அறிவிக்க வேண்டும்? இது சம்பந்தமாகப் பிறரது ஆமோதிப்பை ஏன் பெற வேண்டும்? உனக்கு ஒன்று சரியெனப் புரிந்துபோனால் அது தானாகவே உனது நடத்தையில் வெளிப்படத் தொடங்கிவிடும். சரியெனப் புரிந்தபோன ஒன்று நடத்தையாக மாறுகிறது. வேறு எவ்விதமாகவும் அது ஆகாது. பிறகு விரதம் எதற்குத் தேவை?

என்னிடம் வருபவர்களில் சிலர் பிரம்மசரிய விரதம் எடுத்துக் கொள்வதற்கு வழிகாட்டுமாறு என்னைக் கேட்கின்றனர். நான் அப்படிக் கேட்பவரிடம் 'உனக்கு பிரம்மசரியத்தில் நிஜமான ஆர்வம் இருந்தால்

ஏன் ஆலோசனை கேட்கிறாய்? நீ சுயமாக முன்னேறிச் செல்' என்று கண்டித்துச் சொல்வது வழக்கம்.

சிலர் என்னிடம் வந்து 'நாங்கள் தியானம் செய்ய விரும்பு கிறோம். அதற்குத் தேவையான மன உறுதி எங்களிடம் இல்லை. உங்கள் முன்னால் சத்தியம் செய்யவைத்து விரதம்போல் தியானம் செய்ய வழிகாட்டுங்கள்' என்கின்றனர். நான் சம்மதிப்பதில்லை. நான் அவர்களிடம் சொல்வது:

உனக்கு சுயமாக விருப்பம் தோன்றியிருந்தால் நான் சொல்லாமலே நீ தியானத்தில் ஈடுபடு. அதில் சுவை கண்டால் அதை சுயமாகவே தொடருவாய். பிறகு, ஒரு நாள் தியானம் செய்யாவிடிலும் எதையோ இழந்ததுபோல் உனக்குத் தோன்றும். மறுபடியும் தீவிரமாக தியானத்தைத் தொடருவாய். இவ்வாறு நீண்ட காலம் கழிந்தபின் நீ தியானத்தில் ஈடுபடும்போது உன்னிடம் ஒருவித ஒளி, ஒரு புனிதம், ஒரு தூய்மை துலங்கும். தியானம் காரணமாக நீ புத்துணர்ச்சியையும் இப்போதுதான் குளித்ததுபோன்ற தூய்மையையும் உணர்வாய். வாழ்க்கையின் சிக்கல்களின் நடுவேயிருந்தும் நீ அவற்றில் சிக்கிக் கொள்ளாதவனாக இருப்பாய். உபத்திரவங்கள், வேலைகள், தொழில் தேவைகள், அவசரம் என்றாலும் நீ ஆத்மாவுடன் தொடர்புகொண்டு அமைதியாக இருப்பாய். ஆத்மாவில் எங்கும் சாந்தம் பரவியுள்ளது. ஆத்ம அனுபவ நிலையில் அவசரமோ, வேலைப் பளுவோ, உபத்திரவமோ கிடையாது.

தொடர்ந்து தியானம் செய்துவரும்போது ஒரு நிலையில் நீ ஒருநாள் சாப்பிடாவிட்டாலும் குளிக்காவிட்டாலும் உனக்கு அது பெரிய இழப்பாகத் தோன்றாது. ஆனால் தியானம் செய்வது ஒருநாள் தவறினாலும் பேரிழப்பாகத் தோன்றும். உண்ணுதல் உடல் அளவி லான வேலை; தியானித்தல் ஆத்மாவின் வேலை. தியானம்தான் ஆத்மாவிற்கு உணவு. ஒருநாள் நேரம் போதாமையால், இப்போது சாப்பிடுவதா அல்லது தியானம் செய்வதா என்ற பிரச்சினை எழுந்தால் நீ தியானமே மேற்கொள்வாய். தியானத்தில் இவ்வளவு ஈடுபாடு சுயமான ஆர்வத்தினால் வருமேயொழிய விரதம் மூலம் அடைய முடியாது.

**நா**ன் அடிக்கடி ராஜஸ்தான் செல்வது உண்டு. பெரிய ரயில் நிலையங்களில் அடுத்த ரயிலுக்கு அதிக நேரம் காத்திருக்க நேரிடும். பொழுது போவதற்காக நான் பிளாட்ஃபாரத்தில் சுற்றித் திரிவேன். சிலர் ஜபம் செய்வார்கள்; சிலர் தியானம் செய்வார்கள். ஆனால் இடை யிடையே கண்களைத் திறந்து ரயில் வருகிறதா என்றும் பார்த்துக் கொள்வார்கள். ரயில் வர நிறைய நேரமுள்ளது என்பது தெரிந்தும் அவர்களால் கண்களைத் திறந்து, தலையை வளைத்து ரயில் வரும் திசையைப் பார்க்காமல் இருக்க முடிந்ததில்லை.

ஒருமுறை ரயிலில் சகபயணி ஒருவருடன் எனக்கு நட்பேற் பட்டது. அவரது பேச்சில் தெய்வ பக்தி மிகுதியாக வெளிப்பட்டது. ஒரு சந்திப்பில் இருவரும் இறங்கினோம். நாங்கள் மாறிச் செல்ல வேண்டிய ரயில் வர அதிக நேரம் இருந்தது. என் புதிய நண்பர் நேரத்தை வீணாக்கக்கூடாது என்று கூறி துண்டை விரித்து உட்கார்ந்தார். கண்களை மூடி ஜபம்-தியானம் செய்யத் தொடங்கினார்.

ஆனால் என்னால் அவரைப் பாராட்ட முடியவில்லை. ஏனெனில் சில நிமிடங்களுக்கு ஒருமுறை கண்களைத் திறந்து, கழுத்தை நீட்டி, ரயில் வருகிறதா என்று பார்த்தார். ஒருமுறை நான் பொறுமை இழந்து அவரது தலையைப் பிடித்து வேறு திசையில் திருப்பினேன்! அவர் கோபத்துடன், "ஏன் என் தலையைப் பிடித்து திசையை மாற்றினீர்கள்?" என்று கேட்டார்.

நான் சுட்டிக்காட்டினேன்; "யாராலும் ஒரேசமயம் கடவுளையும் ரயிலையும் நினைவில் வைத்துக்கொள்ள முடியாது. ரயிலைப் பற்றி கவலை என்றால் பிரார்த்தனை செய்வதை நிறுத்து. கடவுள் முக்கியம் என்றால் குறைந்தபட்சம் அரைமணி நேரமாவது ரயிலை மற. அதனால் அதிக பட்ச விளைவு ரயிலைத் தவறவிடுவாய். அவ்வளவு தானே? ரயில் போனாலும் நீ கடவுளைக் கையில் பிடித்துக் கொண் டிருப்பது பெரிய புண்ணியமாயிற்றே. ஒரு ரயில் போய்விட்டாலும் சிறிது நேரத்தில் அடுத்த ரயில் வந்துவிடும். கடவுள் விஷயம் அப்படியில்லையே."

**ஒ**ரு துறவி ஒரு விரிப்பின் மீது அமர்ந்து தியானத்தில் ஈடுபட்டிருந்தார். ஒரு யுவதி எங்கிருந்தோ வேகமாக ஓடிவந்தாள்.

அவரை இடித்துக்கொண்டு, விரிப்பின் மீது காலைப் பதித்து, அவரைக் கடந்து ஓடினாள். தியானம் கலைந்து துறவி கோபமாக எழுந்து நின்றார். அந்த யுவதி சில நிமிடங்களில் அதே வழியாகத் திரும்பினாள். துறவி அவளைத் தடுத்து, "உனக்குக் கண் இல்லையா? என் மேல் இடித்து, விரிப்பையும் அழுக்காக்கி ஓடினாயே. அப்படி என்ன அவசரம்? உன்னால் என் தியானமும் கலைந்துவிட்டதே, " என்று கோபித்துக்கொண்டார்.

யுவதி கைகூப்பிச் சொன்னாள், "சுவாமி, என்னை மன்னியுங்கள். நான் தங்களைக் கவனிக்கவில்லை. நான் என் காதலரைச் சந்திக்க விரைந்ததால் நீங்கள் வழியில் உட்கார்ந்திருப்பதைப் பார்க்கவில்லை. யாரும் தியானம் செய்கிறாரா என்றும் கவனிக்கவில்லை. பல ஆண்டுகளுக்குப் பிறகு என் காதலர் ஊர் திரும்புகிறார். அவரை எல்லையிலேயே சந்தித்து வரவேற்கவே அவசரமாகக் கிளம்பினேன்.

"ஒரு விஷயம் சொல்லட்டுமா? என் காதலரோ சாதாரண மானிடர். எல்லைக்கு உட்பட்ட ஆயுள் கொண்டவர். ஆனால் அவரைச் சந்திக்க ஓட்டமாக ஓடினேன் அந்தப் பரவசத்தில் வழியில் யார் என்ன செய்கிறார் என்பதைக் கவனிக்க முடியாத மெய்ம்மறந்து நிலையில் இருந்தேன். உங்கள் காதலரோ பரமாத்மா. ஆனால் நான் இடித்தது, இடையூறு செய்தது ஆகியவற்றை உணர்ந்தீர்கள். காதலில் லயித்து உங்களையே மறக்கவில்லை. எனவே உங்கள் பக்தியை விட என் சாதாரணக் காதல் உயர்ந்தது. என் காதல் உடல் சம்பந்தப்பட்டது தான்; சரீரக் காதல் தாழ்ந்ததுதான். ஆனாலும் என் மனத்தில் ஒன்றின்மீது லயிப்பாவது உள்ளதே. உங்களிடம் பரமாத்மா மீதும் மெய்ம்மறந்த மோகம் இருப்பதாகத் தெரியவில்லையே." மெய்ம் மறந்து அன்பு இருந்தால்தான் உண்மையான தியானம் வாய்க்கும் என்பதை அந்தத் துறவி ஒப்புக்கொண்டார்.

விரதங்களாலோ, நியமங்களாலோ, வெளியுலகக் கட்டுப்பாடு களாலோ ஆத்ம பரவச நிலையை அடைய முடியாது. அன்பு ஒன்றே அதற்குரிய சாதனம். இதுவே துறவு குறித்த எனது சூத்திரமும் ஆகும்.

இந்த 83ஆம் சுலோகத்தில் 'தியாகியாகு' என்றும் கூறப்படு கிறது. ஆனால் 'தியாகி ஆவேன்' என்று சபதம் செய்துவிட்டு அல்ல. தியாகி ஆகு. ஆனால் 'தியாகி ஆவேன்' என்று நீயே முடிவெடுத்தோ, பிறர் வற்புறுத்தலாலோ கூடாது. தியாகி ஆகு. ஆனால் இதனால்

பெயர், கௌரவம், மரியாதை கிடைக்கிறது என்பதற்காக அல்ல. தியாகி ஆகு. ஆனால் எதையாவது அடைய விரதம் பூணாமல், பேராசை யில்லாமல், எவ்வித வற்புறுத்தலுமின்றி தியாகி ஆகு. தியாகத்தால் ஞானம் விளையும். ஞானத்தால் உள்ளக் குப்பைகள் நீங்கிவிடும். இதற்காக சபதம் செய்யவேண்டியிராது. உள்ளத்தில் குப்பை குவிந்துள்ளதை உணர ஞான விழிப்பு ஏற்பட்டால் போதும்.

'உலக நடவடிக்கைகள், தோற்றம், அழிவு ஆகிய நிலைகளைப் பார்த்து எவனது உயிர் வாழும் விருப்பம், இன்ப நுகர்வு விருப்பம் கூடுதலான ஞானம் பெறும் விருப்பம் ஆகியவை தணிந்து அமைதியாகின்றனவோ அவன் பாக்கியசாலி' **(சுலோகம் 84)**

உலக நடவடிக்கைகளை எல்லோரும்தான் பார்க்கிறார்கள். ஆனால் சரியான கோணத்திலிருந்து பார்க்க வேண்டும். சாஸ்திரங் களில் ஞானம் தேடாதே. அவற்றில் விதிமுறைகள், விரதங்கள், கட்டுப் பாடுகள்தான் காணக் கிடைக்கும். வாழ்க்கையில் தேடு ஞானத்தை. அதற்கெனத் தனி விரதமில்லை. விரதம் என்பது பார்வையற்றவனு டைய ஊன்றுகோல் போன்றது. ஞானம் என்பது பார்வையுள்ளவனின் கண் எனலாம். கண் பார்வை உள்ளவனுக்குக் கைத்தடி தேவைப்படாது. முடமானவர்களுக்குத்தான் ஊன்றுகட்டைகள் அவசியம். ஆரோக்கியமானவன் தன் காலாலேயே நடப்பான். விரதம் பிறரிடமிருந்து கடனாகக் கிடைப்பது; ஞானம் தன்னிடமே பிறப்பது.

உலக நடவடிக்கைகளை சரியாகக் கவனித்து, முழுமையாக விழிப்புப் பெற்று, பார்வையைச் செலுத்து. யாரோ பிறக்கிறான்; யாரோ இறக்கிறான். இரண்டையும் கூட்டினால் பிறப்பவன் இறக்கிறான் என்பது தெரிகிறது. ஒருவன் வறுமை காரணமாக வருத்தமாக உள்ளவன். இன்னொருவன் செல்வந்தன். அவனிடம் எல்லாம் உள்ளது. ஆயினும் அவனும் சோகமாக இருக்கிறான். எப்படி சுகமாக இருப்பது என்று உலகில் யாருக்கும் தெரியாதுபோலுள்ளது. வென்றவனும் அழுகிறான், தோற்றவனும் அழுகிறான், குரூபமானவனும் அழுகிறான், அழகனும் அழுகிறான், நோயாளியும் அழுகிறான், ஆரோக்கியமானவனும் அழுகிறான். எங்கும் அழுகை ஓலமே கேட்கிறது.

இந்நிலையில் வாழும் விருப்பம், அனுபவிப்பதில் ஆனந்தம், ஞானம் தேடுவதில் ஈர்ப்பு ஆகியவை எப்படி நிறைவுபெற முடியும்? யாரோ பாக்கியசாலிக்குத்தான் அது சாத்தியப்படும்.

உலகில் வாழ்க்கை நடைபெறும் விதத்தைக் கவனித்துப் பார்த்தால் பிறகு வாழ்வதில் எப்படி விருப்பம் தோன்றும்? வாழ்க்கையில் அப்படி என்னதான் வைக்கப்பட்டிருக்கிறது? மக்கள் தங்களது இவ்வுலகை வாழ்க்கையைச் சரியான கோணத்தில் பார்ப்பதில்லை. அவர்கள் பரலோகத்திற்கு ஆசைப்படுகிறார்கள். இதற்காக விரதங்கள் ஏற்படுத்தப்படுகின்றன. இவ்வுலகைக் கவனமாகப் பார்த்தால் வாழும் ஆசை நீங்கிவிடும். இந்த நிலையில் அவனுக்கு எஞ்சியிருப்பது பரலோகம்தான்.

வித்தியாசத்தைப் புரிந்துகொள். இந்த வித்தியாசம் மிக நுணுக்கமானது. இந்த உலக வாழ்க்கை பிரயோஜனமில்லாதது என்பதைப் பார்த்து அறிபவன் வேறெந்த வாழ்க்கையையுமே விரும்பமாட்டான். பரலோகமும் அவனைக் கவராது. ஆனால் இந்த வாழ்க்கையைக் கவனித்தும் அதில் விரும்பி ஈடுபடுபவன் பிறகு மனம் கசந்து வேறு உலகில், அடுத்த பிறவியில் வேறுவகை வாழ்க்கைக்கு ஆசைப்படுவான்.

**இ**ளம் துறவி ஒருவர் ஏதோ ஓர் ஊரில் தெருவில் சென்று கொண்டிருந்தார். அவர் சிறுவயதிலேயே துறவியானவர். அவருடைய பெற்றோர்கள் இறந்துவிட்டிருந்தனர். வளர்ப்பதற்கு யாருமில்லை. வயோதிகரான ஒரு துறவி சிறுவனைத் தன்னுடன் இமயமலைக்கு அழைத்துச்சென்றார். சிறுவன் தீட்சை பெற்று அங்கேயே வளர்ந்தான். பெரியவர் காலமானதால் இளம் துறவி மலையிலிருந்து இறங்கி விட்டார். அவ்வாறு ஓர் ஊரில் ஒரு பாதையில் அவர் சென்றபோது மாப்பிள்ளை வீட்டார் ஊர்வலம் எதிரே வந்தது. பேண்டு வாத்தியம் முழங்க, ஏராளமானவர்கள் புடைசூழ, மாப்பிள்ளை குதிரைமேல் அமர்ந்தபடி தென்பட்டார். துறவி இதற்குமுன் இப்படி ஒரு காட்சியைக் கண்டதில்லை.

துறவி வேடிக்கை பார்த்தபடி இருந்த ஒருவனிடம் கேட்டார், "இது என்ன கூட்டம்?"

"மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம் (பாராத்)" என்று பதில் வந்தது. துறவி விடவில்லை. "பாராத் என்றால் என்ன?"

"தம்பி, உனக்கு இது கூட வா தெரியாது? குதிரைமேல் உள்ளவர் மாப்பிள்ளை. அவர் மணமகள் வீட்டுக்குப் போகிறார்."

"பிறகு என்ன நடக்கும்?" என்று துறவி அப்பாவியாகக் கேட்டார். இதுவரை பதில் கூறியவன் இளைஞனது அறியாமை கண்டு திகைத்தான். அவரைத் தனியாக அழைத்துச் சென்றான். திருமணம் பற்றி விளக்கியபின், "பிறகு திருமணம் நடக்கும். இருவரும் ஒருவரை ஒருவர் அனுபவிப்பார்கள். அடுத்து, அவர்களுக்குக் குழந்தைகள் பிறக்கும்," என்றான்.

ஊர்வலம் சென்றுவிட்டது. இரவாகிவிட்டதால் துறவி ஓரிடத்தில் ஒரு கிணற்றுடன் ஒட்டியிருந்த விசாலமான மேடையில் படுத்தார். கனவில் ஒரு மாப்பிள்ளை ஊர்வலம். அந்தத் துறவி குதிரைமேல் அமர்ந்திருக்கிறார்! பேண்டு வாத்தியங்கள் முழங்குகின்றன; ஊர்வலம் முன்னேறுகிறது; திருமணம் நிகழ்கிறது. மனைவியுடன் துறவி (மணமகள்) வீடு திரும்புகிறார். இருவரும் ஒரே கட்டிலில் படுக்கின்றனர். "எனக்கு வசதியாகப் படுத்துப் பழக்கம். கொஞ்சம் தள்ளிப் படுங்கள்" என்கிறாள் மனைவி. கணவன் சற்று விலகியதும் கீழே விழுகிறார். அதாவது, துறவி கிணற்றில் விழுந்து விட்டார்!

சப்தம் கேட்டு அக்கம்பக்கத்திலிருந்து சிலர் ஓடிவந்தனர். இருவர் கிணற்றிலிறங்கி, துறவி வெளியேற உதவினர். கிணற்றில் தண்ணீர் குறைவாக இருந்ததால் அவர் இறக்கவில்லை. செய்தி கேள்வியுற்று கூட்டம் கூடிவிட்டது. அவர்களைப் பார்த்துத் துறவி அட்டகாசமாகச் சிரித்தார்.

மக்கள் திகைத்தனர். "சாமி, ஏன் சிரிக்கறீங்க? கிணற்றில விழுந்ததால் உயிர் போகக்கூடிய ஆபத்திலேயிருந்து காப்பாத்தப் பட்டிருக்கீங்க. உங்களாலே எப்படி சிரிக்க முடியுது?" என்று கேட்டனர்.

துறவி விளக்கினார் "நிஜமாகவே வாய்விட்டுச் சிரிக்க வேண்டிய விஷயத்திற்குச் சிரிக்காம எப்படி இருக்க முடியும்? கனவில் வந்த பெண் கிணற்றில் தள்ளிவிடுகிறாள் என்றால், நிஜமான பெண் என்ன அக்கிரமம்தான் செய்யமாட்டாள் என்று நினைத்தேன். சிரிப்பை அடக்க முடியவில்லை," என்றார்.

மேலும் சொன்னார்: "நல்லவேளையாக தப்பித்தேன். இந்தக் கனவில் கிடைத்த அனுபவம் என்னை விழிக்கச்செய்துவிட்டது. என்னைப் பொறுத்தவரை குதிரை சவாரியும் மாப்பிள்ளை அழைப்பும் நிகழாது. இத்தனை காலமாக நான் நீர்நிலைகளின் அருகில்தான் தூங்கிவருகிறேன். கனவில் வந்த பொய்யான பெண் சிறிது தள்ளிப் படுக்குமாறு சொன்னதற்கே நான் கிணற்றில் விழுந்தால், வாழ்க்கையில் வரும் நிஜமான பெண்கள் எந்தப் பாடுபடுத்துவார்களோ?"

புத்தி விழிப்புடன் இருந்தால் கனவும் உன்னை எச்சரித்து வாழ்க்கைக்கு வழிகாட்டும். புத்தி விழிப்பு நிலையில் இல்லாவிடில், வாழ்க்கையே கனவுபோல வீணாகி மறைந்துவிடும்.

யாராவது அதிர்ஷ்டசாலிதான் வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை விழிப்புடன் கவனிக்கிறான். பெரும்பாலோர் வாழ்க்கையை சாஸ்திரங் களில் தேடுகிறார்கள்; வார்த்தைகளில் தேடுகிறார்கள். அதை நேரடியாக எளிதில் அறிந்து கொள்வதற்குப் பதிலாக, சித்தாந்தங்களிலும் விவாதங்களிலும் சிக்கிக்கொள்கிறார்கள்.

வாழ்க்கையைச் சரியாகக் கணிக்கும் பாக்கியசாலி வாழும் ஆசையை, நுகரும் ஆசையையும் மட்டுமல்லாது, அறியும் ஆசையையும் துறக்கிறான்.

இது திகைப்பூட்டும் செய்தி. ஒவ்வொருவனும் தனது அறிவைப் பெருக்கிக்கொள்ளவே, அறிஞனாகவே, உலகிலுள்ள எல்லாவற்றையும் அறிந்து கொள்ளவே ஆசைப்படுகிறான். இப்படி ஆசைப்படுவதே கூட அவனைக் கட்டிவிடுகிறது.

இவ்வாறு மூவகை மனிதர்கள். ஒரு வகையினர் வாழும் ஆசையால் நிரம்பியுள்ளனர். அதற்காகச் செல்வம் சேகரிக்கின்றனர்; உயர் பதவிகளை நாடுகின்றனர். இன்னொரு வகையினர் அனுபவித்தல் என்னும் ஆசையால் நிரம்பி மது, மங்கை, கேளிக்கைகள் என அலை கின்றனர். வேறொரு வகையினர் அதிக அறிவிற்கு ஆசைப்படுபவர் கள் அவர்கள் சாஸ்திரங்கள் பயிலுகிறார்கள்; தர்க்கம் செய்கிறார்கள்; சித்தாந்தம் பேசுகிறார்கள்; வாத விவாதங்களில் ஈடுபடுகிறார்கள்.

இம்மூவகையினரும் சாதாரணமான மனிதர்களே ஆவர்.

நான்காம் வகையினரான, விரல்விட்டு எண்ணக்கூடிய சிலரும் உண்டு. அவர்கள் அதிர்ஷ்டசாலிகள் அவர்களுக்கு எந்த ஆசையும் இல்லை. அனுபவிக்கவோ, கூடுதலாக அறியவோ, மேலோட்டமாக வாழவோ விரும்பாதவர்கள். 'எல்லாம் பார்த்தாகிவிட்டது. எதிலும் சாரமில்லை' என உணர்ந்தவர்கள் 'இவை எல்லாம் நிரந்தரமானவை அல்ல. மூவித தாபங்களால் (துன்பங்களால்) களங்கப்பட்டவை. அர்த்தமற்றவை. ஏசுதற்குரியவை. உதறித்தள்ள வேண்டியவை இவ்வாறெல்லாம் முடிவெடுத்து (மேற்கூறிய நான்காம் வகை) மனிதன் மன அமைதி பெறுகிறான்.' **(சுலோகம் 85)**

இங்கு காணப்படும் எல்லாம் தற்காலிகமானவை, சாரமற்றவை. இந்த அறிவை சாஸ்திரங்கள் படிப்பதால், அப்படிக் கடன் வாங்குவதால் பயன்விளையாது. பார்வையால், தன் கண்களின் அனுபவத்தால் உலகின் நிஜத்தைப் பார்க்க வேண்டும். ஆதிதைவிகம், ஆதிபௌதிகம், ஆத்யாத்மிகம் இவை தாப திரயங்கள் அல்லது மூவகைத் துன்பங்களாகும். அதாவது, உடல் உபாதை, மனக்கஷ்டம், ஆத்மாவின் சோகம் என்று பொருள்படும். உலகில் நமக்குக் கிடைப்பவை இந்த மூன்றுதான். கடைசியில் கையில் மிஞ்சுவது சாம்பல் மட்டுமே.

இங்கு நடப்பவை எல்லாம் வீண்செயல்கள்; நிந்திக்கத் தகுந்தவை; சாரமற்றவை என்பதை அறிந்துகொண்டால் உள்ளம் அமைதி பெறுகிறது.

மனிதன் எந்தக் காலத்தில்தான், எந்த சூழ்நிலையில்தான் தன் மனத்தில் போராட்டமோ, சுகம் - துக்கமோ இல்லாது வாழ்ந்திருக் கிறான்? அவற்றைப் புறக்கணித்து, கையிலுள்ள பொருள்களோடு, கிடைத்த சூழ்நிலையை ஏற்று திருப்தியுடன் விளங்குபவன் சித்தியை (சித்தர் நிலையை) அடைகிறான். **(சுலோகம் 86)**

சந்தோஷம் மட்டுமே உலகில் நிலவிய காலம் கிடையாது. புராணங்களில் வர்ணிக்கப்படும் சுகம் உண்மையில்லை. ஜைன சாஸ்திரப்படி முதலில் நிலவிய காலத்தில் சுகம் -சுகம் என்ற நிலைமை இருந்தது. அடுத்து, சுகம்- துக்கம் என்ற காலம் வந்தது. கடைசியாக வந்து நின்றுவிட்டது துக்கம் - துக்கம் என்னும் காலம். இந்துக்கள் இன்பம் மட்டுமே நாட்டில் நிலவிய காலம் ஒன்றிருந்ததாக

நம்புகின்றனர். அதற்கு ஸதயுகம் (சத்யயுகம்) என்று பெயரிட்டனர். அப்போதிருந்த ஆட்சியை ராமராஜ்ஜியம் என்று போற்றினர். இவை எல்லாம் கற்பனை மட்டுமே.

கற்பனை செய்யும் ஆற்றலின் அடிப்படையில் உலகில் இரு வகை மனிதர்கள் உள்ளனர். அவர்கள் இருவகைக் கோட்பாடுகளைப் பரவவிட்டனர். ஒரு வகையினர் சுவர்க்க வாழ்வு கடந்த காலத்தில் நடைபெற்றது என்கின்றனர். எல்லா மதங்களுமே கடந்த காலத்தில் எல்லாம் சரிவர நிகழ்ந்ததாகவே கூறுகின்றன. புதிய சிந்தனையாளர்கள் எதிர்காலத்தில் சுவர்க்க வாழ்க்கை அமையவுள்ளது என்று கூறி, அதற்காகப் பொதுவுடைமை (கம்யூனிசம்) முதலிய அரசியல் தத்துவங்களை முன்வைக்கிறார்கள்.

ஒன்றைப் புரிந்துகொள். சுவர்க்க வாழ்க்கை என்பது என்றுமே இருந்ததில்லை. தசரதர் ஆட்சியிலும் சரி, ராமன் வாழ்ந்த காலத்திலும் சமூகத்திலும் தனிமனித வாழ்க்கையிலும் முழுமையான சுகம் நிலவிய தில்லை. சீதை அபகரிக்கப்பட்டாள். ராமன் 14 ஆண்டுகள் காட்டில் அலைய நேர்ந்தது. நாட்டிலோ எத்தனையோ கலகங்கள். ராமர் சிற்றன்னையால் வஞ்சிக்கப்பட்டார். தந்தை தசரதர் பெண் (மனைவி) மீதான மிகையான மோகத்தில் ஆழ்ந்திருந்தார். மனைவியை திருப்திப்படுத்துவதற்காக மகனையே அல்லவா காட்டுக்கு விரட்டி விட்டார்!

சீதையை அசோகவனத்திலிருந்து விடுவித்ததும் ராமன் பேசிய விதம் கண்ணியமானதன்று. "உனக்காகத்தான் இந்தப் பெரும்போரை மேற்கொண்டேன் என நினைக்காதே. எங்கள் குலகௌரவத்தை நிலைநாட்டவே போரிட்டேன்," என்று வார்த்தைகளால் சுட்டார்.

அயோத்தி திரும்பியபின் ஓர் இரவு நகர்வலம் வரும்போது இராமன் காதில் ஒரு சலவைக்காரரின் பேச்சு விழுந்தது. அவர் மனைவி ஓர் இரவு எங்கோ வெளியில் தங்க நேர்ந்ததால் சலவைக்காரர் அவளைச் சினந்து கண்டிக்கிறார். "என்னை நீ ராமனைப் போன்றவன் என்றா நினைத்துவிட்டாய்? வருஷம் முழுவதும் ராவணன் வீட்டில் சீதை இருந்தபோதிலும் ராமன் அவளை ஏற்றுக்கொண்டார். நான் அவ்வளவு கேவலமில்லை," என்கிறார்.

அவ்வளவுதான், சீதையின் தூய்மையை அக்னி பிரவேச பரீட்சை மூலம் உலகறியச் செய்த பின்னரும் ராமன், சலவைக்காரரின் கேலியைப் பொறுக்க முடியாமல் சீதையைக் காட்டுக்கு அனுப்பிவிடுகிறார். இந்த சம்பவத்தின் பின்னணியில் ராமராஜ்ஜியம் இல்லை; வெறும் அரசியல் அணுகுமுறைதான் உள்ளது. சீதையின் கற்பை அறிந்திருந்ததால் இந்த நடவடிக்கைக்குப் பதிலாக, சீதையுடன் ராமனும் மறுமுறை காடேகியிருக்க வேண்டும். ஏனெனில் சலவைக்காரர் சீதையைக் குறை சொல்லவில்லை. ராமனைத்தான் ஏளனம் செய்கிறார்.

அவரது ஆட்சிக் காலத்திலும் ஏழைகள், வறியவர்கள், துன்பப்படுபவர்கள், சிரமப்படுபவர்கள் இருந்தனர். உபத்திரவங்கள், சதித் திட்டங்கள், பித்தலாட்டங்கள், அரசியல் சூழ்ச்சிகள் நிலவின. பிறகு புதிய புராணங்கள் இயற்றுவோர் வந்தனர் - மார்க்ஸ், எங்கெல்ஸ், லெனின், மாவோ. இவர்கள் 'பொற்காலம் எதிர்காலத்தில் உள்ளது' என்று அறிவித்து மக்களை வசப்படுத்தினர்.

ஒன்று நிச்சயம் 'சுவர்க்கம் இப்பொழுது, இங்கே இருக்கிறது' என்று யாரும் சொல்லத் துணியவில்லை. சொன்னாலும் நம்புவதற்கு ஆளில்லை. பார்க்குமிடமெல்லாம் துன்பம் பரவியுள்ளதைக் காண்கின்ற நிலையில் தற்காலம்தான் பொற்காலம் என்று யாரால் கூற முடியும்? ஆகவே பொற்காலத்தைக் கடந்த காலத்திலோ, எதிர்காலத்திலோதான் கற்பனை செய்ய முடியும். கடந்த காலம்பற்றிய கற்பனை பொய்யென வரலாற்று ஆதாரங்கள் மூலம் நிரூபிக்கலாம். ஆனால் எதிர்காலம் பொற்காலமாக இருக்கும் என்று கூறுவதைப் பொய் என இப்போதே சொல்லிவிட முடியாது. ஆகவே அரசியல் வாதிகள் பொதுவுடைமை முதலிய கோட்பாடுகளை அறிவித்து, 'மக்களே, தியாகம், செய்ய, புரட்சி செய்ய தயாராகுங்கள். உங்களுக்கு வளமான பொற்காலம் எதிர்காலத்தில் காத்திருக்கிறது' என்று உறுதிகூறுகிறார்கள்.

அஷ்டாவக்ரர் மறுக்கிறார். 'எந்தக் காலத்தில்தான், எந்த சூழ்நிலையில்தான் மனிதன் மனப் போராட்டம் இல்லாமல் இருந்திருக்கிறான்? சுகம் - துக்கத்தால் அவன் எப்பொழுதாவது பாதிக்கப்படாமல் இருந்ததுண்டா?'

ஆகவே பொற்காலத்தை எதிர்பார்த்துக் காத்திருக்காதே. சூழ்நிலை சாதகமாக மாறும் என நம்பியிருக்காதே. அகப்புரட்சி - ஆத்மாவில் புரட்சி-தோன்ற வேண்டும். எப்படி நிகழும் அந்தப் புரட்சி?

வெளியுலகப் போராட்டம், சுக-துக்கங்களை அலட்சியப்படுத்து விட்டு கையில் கிடைத்தவற்றுடன், தன் வசத்தில் உள்ளவற்றுடன், திருப்தியாக இருப்பவன் சித்தி பெறுகிறான். கிடைத்ததை வைத்து மனநிறைவுடன் வாழ்பவன் மோட்சம் பெறுகிறான். கையிலிருப்பது போதாது, மேன்மேலும் வேண்டுமெனத் துடிக்காதே. உனக்கு விதிக்கப் பட்டதை மீறிக் கூடுதலாகக் கிடைக்காது. எல்லோரது கதையும் இதுவேதான்.

அஷ்டாவக்ரர் சொல்கிறார்: எது எவ்வாறு உள்ளதோ, எது கைக்குக் கிடைத்துள்ளதோ, எது நிகழ்காலத்தில் உன் வசம் இருக்கிறதோ அதிலேயே திருப்தியுடன் விளங்குவதுதான் சரியான வாழ்க்கை முறை. திருப்தி உணர்வு மனத்தில் நிறைந்துவிட்டால் வாழ்க்கை ஓட்டப் பந்தயம்போல் இருக்காது. பேராசை பிசாசுபோல் விரட்டாது. இது வேண்டும் - அது வேண்டும் என்று ஏக்கம் எழாது.

'மாமுனிவர்கள், மகாத்மாக்கள், யோகிகள் எனப் பலர் வெவ்வேறு விதமான கருத்துகள், கோட்பாடுகளை நம் முன் வைத்துக் குழப்புகிறார்கள். இவற்றை அலட்சியம்செய்து புறந்தள்ளிவிடுபவன் சாந்த நிலையை அடைய முடிகிறது.' **(சுலோகம் 87)**

அஷ்டாவக்ரரின் இந்த சுலோகத்திலும் முக்கியமான விஷயம் உள்ளது. முனிவர்கள் வெவ்வேறு விதமான சம்பிரதாயங்களை ஏற்படுத்தியுள்ளனர். தத்துவ அறிஞர்கள் வெவ்வேறு கோட்பாடுகளை வெளியிட்டுள்ளனர். ஆனால் நீ இவற்றில் சிக்கிக்கொண்டால் கரையேற முடியாது. இங்குமங்குமாகத் தத்தளித்தபடி இருப்பாய். மகாத்மாக்களும் வெவ்வேறு கொள்கைகளைப் பரப்பியுள்ளனர். யோகிகள் காட்டும் பாதைகளும் பல. இப்படி சமூகத்தில் ஏராளமான கருத்துகள் நிரம்பியுள்ளன. கையிலுள்ளதோ ஒரேயொரு வாழ்க்கை. எதிரே தென்படும் பாதைகளோ ஏராளம்.

நீ யாருடைய உபதேசத்தைக் கேட்கிறாயோ அதுவே சரியெனத் தோன்றும். யாருடைய சித்தாந்தத்தைப் படிக்கிறாயோ அதுவே

சரியெனப்படும். உன்னைவிட பல மடங்கு ஆற்றல் உள்ள அவர்கள் அந்தக் கொள்கைகளை அறிமுகப்படுத்தியுள்ளனர். அவர்கள் முனிவர்கள். யோகிகள், தர்க்க அடிப்படையில் கருத்துகளை நிலை நாட்டியவர்கள். அவற்றால் நீ கவரப்படுவது இயற்கைதான். ஆனால் ஒருவருடைய கருத்துகளைக் கேட்ட பிறகு, இன்னொருவரின் கருத்துகளைக் கேட்கும்போது அவையும் சரியென்றே உனக்குத் தோன்றும். இப்படி ஒவ்வொரு வகையான கருத்தும் சரியென்று நீ உன் நிலைப்பாட்டை மாற்றிக்கொண்டே போனால் கடைசியில் நீ எங்கே காலூன்றுவாய்? பாதையை மாற்றியபடி இருந்தால் நீ எங்கே முகாமிடுவாய்? திசையின்றிப் பிச்சைக்காரனாக அல்லவா அலைவாய்.

அஷ்டாவக்ரர் கூறுகிறார்: ஆகவே அறிவாளியாகப்பட்டவன் இந்தச் சித்தாந்த வம்புகளில் சிக்கிக்கொள்வதில்லை. எத்தனையோ சாஸ்திரங்கள். எத்தனையோ புனித நூல்கள். எது சரி? எது உண்மை? எது தவறு? எது போலி? அறிஞன் இந்த ஆராய்ச்சியிலெல்லாம் ஈடுபடுவதில்லை. இந்தச் சிக்கலில் மாட்டிக்கொண்டால் வெளியே வர முடியாது. அந்த முடிச்சுகளை அவிழ்க்க முடியாது. ஒரு முடிச்சு நெகிழ்ந்தால் இன்னொரு இடத்தில் முடிச்சு உண்டாகும். ஒரு கேள்விக்கு. ஒரு சந்தேகத்திற்கு விடைகண்டால் அதிலிருந்து புதிதாகப் பத்து சந்தேகங்கள் முளைக்கும். கேள்வி-பதிலென முடிவில்லாத சங்கிலித் தொடராக நீ உணருவாய்.

சித்தாந்தங்கள் ஒன்றிற்கொன்று முரண்படுவதால், இவற்றிட மிருந்து விலகித் தப்பினால்தான் உன் மனம் அமைதியான இருக்கும். உன்னை ஒரு குறிப்பிட்ட மதத்தவனாகவும் 'லேபிள்' ஒட்டிக் கொள்ளாதே. மதம் உனக்கு மன அமைதி தராது. மன அமைதி உனது லட்சியமானால் அதை சிந்தாந்தங்களில் தேடி அலையாமல் உனக்குள்ளேயே தேடு.

கோட்பாடுகளை ஸ்தாபித்த எல்லோருமே மாமுனிவர்கள், மகாபுருஷர்கள் என்பதுதான் பிரச்சினை. ஒருவர் மோசமானவராகவும், இன்னொருவர் நல்லவராயின், மோசமானவர் கூறுவதை அலட்சியப் படுத்திவிடலாம். ஆனால் கொள்கைகளை வகுத்த எல்லோருமே சான்றோர்கள். யாரை ஏற்பது, யாரை விடுவது? இயேசுநாதரையா, மகாவீரரையா? எல்லோருமே அற்புத மனிதர்கள், குணக்குன்றுகள்.

அவர்கள் பேசுவது மந்திரச் சொல்லாக நம்மை ஆகர்ஷிக்கிறது, மயக்குகிறது. ஆனால் எதிலும் அகப்பட்டுக்கொள்ளாதே!

சிந்தாந்தங்கள், தத்துவ இயல் ஆகியவை வலை போன்றவை. தத்துவம் எந்தக் கேள்விக்கும் நேரடியான, தெளிவான பதில் கொடுத்ததில்லை. தர்க்க இயலும் வாழ்க்கையிலேற்படும் சிக்கல்களைத் தீர்க்க வழிகாட்டியதில்லை. தர்க்க இயல் இரண்டு பதில்கள் தருவது வழக்கம். அவை 'இதுவும் சரி - அதுவும் சரி' என்பதுபோல் இருக்கும்.

**எ**னக்கு ஹரிசிங் கெளர் என்ற வழக்கறிஞரைத் தெரியும். அவர் மத்திய பிரதேசத்தில் ஸாகர் பல்கலைக்கழகத்தை நிறுவியவர். உலகப் புகழ் பெற்ற வக்கீல். சட்ட இயலில் பெரிய படிப்பாளி. வேலைப் பளு அதிகம். தில்லியிலும் லண்டனிலும் கிளை அலுவலகங்கள் வைத் திருந்தார். வாதத் திறமை, மற்றும் சட்ட இயலில் நுணுக்கமான அறிவு காரணமாக அவர் எந்தத் தரப்பில் வாதாடுகிறாரோ அத்தரப்பிற்கு வெற்றி நிச்சயம் என்ற நிலை இருந்தது.

சுதந்திரத்திற்கு முன்பு அவர் ஒருமுறை ஒரு மகாராஜாவின் சார்பில் இங்கிலாந்தின் ப்ரிவி கௌன்ஸிலில் (உச்ச நீதிமன்றத்தில்) வாதாடச் சென்றிருந்தார். மறுநாள் தன் வாதத்தை முன்வைக்க வேண்டிய நிலையில் அவர் அதற்கு முதல்நாள் ஒரு விருந்தில் கலந்துகொள்ள நேர்ந்தது. தாமதமாக வீடு திரும்பி, பிறகு தாமதமாகக் காலையில் எழுந்து. கோப்புகளைப் பார்க்க நேரம் கிடைக்காமல் நீதிமன்றத்துக்குச் சென்றுவிட்டார்.

நீதிமன்றத்தில் அவர் ஒரு மணி நேரம் மிகச் சிறப்பாக வாதங்களை முன்வைத்தார். ஆனால்... தமது கட்சிக்காரரான மகாராஜாவிற்கு எதிராக, எதிர்க்கட்சிக்காரருக்குச் சாதகமாக அந்த வாதங்கள் சூடாக அமைந்திருந்தன!

நீதிமன்றத்திற்கு வந்திருந்தவர்களுக்குத் திகைப்பேற்பட்டது. நீதிபதி சங்கடத்தால் நெளிந்தார். எதிர்க்கட்சி வக்கீலோ தன்னுடைய பாயின்டுகளை மகாராஜாவின் வக்கீல் சொல்கிறாரே என்ற வியப்பில்

மூழ்கிவிட்டார். மகாராஜாவிற்கு உடலிலிருந்து வியர்வை பெருகுகிறது. தனது தோல்வி நிச்சயம் என்று தெரிந்துவிட்டது.

இந்நிலையில் ஹரிசிங்கின் ஜூனியர் அவரை நெருங்கி, காதோடு காதாக அவர் எதிர்க்கட்சிக்குச் சாதகமாக வாதாடுகிறார் என்பதையும், நம் கட்சிக்காரரை நாமே தோற்கடிக்கிறோம் என்றும் எச்சரிக்கை செய்தார்.

ஹரிசிங் சுதாரித்துக்கொண்டார். நீதிபதியை நோக்கி, "மைலார்ட், நான் இதுவரை சொன்னவற்றைத்தான் எதிர்த்தரப்பு வக்கீல் சொல்லப்போகிறார் என்று எனக்குத் தெரியும். அவருக்கு சிரமம் தராமல் அவற்றை நானே எடுத்துச் சொல்லிவிட்டதால், அடுத்து என் கட்சிக்காரரின் சார்பான வாதங்களைத் தங்கள் சமூகத்தில் எடுத்துரைக்கிறேன்," என்று சாமர்த்தியமாக நிலைமையைச் சமாளித்தார். பிறகு தமது கட்சிக்காரரான மகாராஜாவின் சார்பில் வாதங்களை முன்வைத்தார். எதிர்த்தரப்பு வக்கீல் என்னென்ன சொல்லியிருப்பாரோ அவற்றை எல்லாம் ஹரிசிங்கே எடுத்துச்சொல்லி, தன்னுடைய மறுப்பு வாதங்களால் அவற்றையெல்லாம் தவிடுபொடியாக்கியதால், மகாராஜாவிற்கே வழக்கில் வெற்றி கிடைத்தது.

தர்க்க இயல் ஏமாற்றுவதை அடிப்படையாகக் கொண்டது. அதை எப்பக்கமும் வளைக்கலாம். அதை வைத்துக் கடவுள் உண்டென நிரூபிக்கலாம்; கடவுள் கிடையாதென்றும் நிரூபிக்கலாம்; ஆத்மா உண்டென்று நிரூபிக்கலாம். ஆத்மா கிடையாது என்றும் வாதிடலாம்.

அஷ்டாவக்ரர் கூறுகிறார்: அறிவாளி எனப்படுபவன் பிறரது தர்க்கத்தை நம்பமாட்டான். தான் தர்க்கம் செய்வதையும் கைவிடுவான். மகாத்மாக்கள், யோகிகள், மாமுனிவர்கள் வெவ்வேறு விதமான கருத்தைகளை வெளியிட்டுள்ளதால் எதுவும் முழுமையான சத்யமில்லை என்பது தெளிவாகிறது. சத்யம் என்பது எல்லா வேற்றுமையான கருத்துகளுக்கும் அப்பாற்பட்டது. தர்க்கம் ஒரே சமயத்தில் இரண்டு திசைகளைக் காட்டுவதால் அதில் சத்யம் இருக்க வாய்ப்பில்லை. பாதி - பாதி சத்யம் என்பது பொய்க்கு சமம். சத்யம் வாத விவாதங்களுக்கு அப்பாற்பட்டது.

இதையெல்லாம், பார்த்து, வேறுபடும் கருத்துகளை உதாசீனம் செய்யவே மனம் விழைகிறது. அவ்வாறு அவற்றைத் தவிர்க்க முடிந்தவன் சாந்தமான மனநிலையைப் பெறுகிறான்.

இப்படி விரக்தி, உள்ளச் சமத்தன்மை, தகுந்த உபாயம் மூலம் ஆத்மாவின் நிஜ சொரூபத்தை அறிந்து உலகின் பாதிப்பைக் கடப்பவரை குரு என்று சொல்லலாம் அல்லவா? **(சுலோகம் 88)**

இது ஒரு முக்கியமான சூத்திரம். அஷ்டாவக்ரர் கூறுவது - குரு உனக்குள்ளேயே மறைந்து வசிக்கிறார். நீ வைராக்கியம், உள்ளச் சமநிலை, உரிய உபாயம் மூலம் உன்னுடைய ஆத்மசொரூபத்தை அறிந்துகொண்டால், உனக்கு குரு கிடைத்துவிட்டார் எனலாம். இவ்வாறு அறிந்துகொள்ளும் அனுபவமே போதுமானது, இறுதியானது.

வெளியுலகில் உனக்கு ஒரு குரு இருக்கக் கூடும். ஜனகர் சுவீகரித்த குருதானே அஷ்டாவக்ரர். ஜனகர் அஷ்டாவக்ரரைத் தமது அரண்மனைக்கு அழைத்துவந்தார். அவரிடம் ஜனகர், "குருதேவ், ஞானம் என்றால் என்ன? மோட்சம் என்றால் என்ன? சச்சிதானந்த பரமாத்மா எனப்படுபவர் யார் என்பதையெல்லாம் விளக்கி யருளுங்கள்," என்று வேண்டிக்கொண்டார்.

குரு கடைசியாகச் சீடனிடம் சொல்ல வேண்டியது, 'நான் உனக்கு பாடமாக என்ன கற்பித்தேனோ அது உனக்குள் அனுபவமாக நிகழக்கூடும்.' குரு தன்னிடமிருந்தே சீடனுக்கு விடுதலை பெற்றுத் தருதல் அவர் கடைசியாகக் காட்டும் கருணைச் செயலாகும். இவ்வாறு தன்னிடமிருந்தே சீடன் விலகித் தனித்துவம் பெற அனுமதிக்காத குரு சத்குரு அல்லர். சீடனை சிக்கலில் மாட்டி, தன்னிடமிருந்து விலக முடியாதபடி சிக்கல் உண்டாக்குபவர் சத்குரு அல்லர். அவர் சீடனைச் சுரண்டுகிறார் என்றும், சீடன் எப்பொழுதும் தன் ஆதிக்கத்திலேயே இருக்க வேண்டும் என்று விரும்புவதாகவும் இதற்கு அர்த்தம்.

உண்மையான குரு சீடனின் பயிற்சிக் காலம் முடிந்ததும், அவனுக்கு ஞானம் ஏற்பட்டுவிட்டதாக நினைத்ததும், அவனை அழைத்துக் கூறுவார்: 'நீ இனி என் திசையில் திரும்பிப் பார்க்காதே, கண்களை மூடி இனிமேல் நீ உனக்குள் ஆழ்ந்து பார். இதுவரை நான்

உனக்கு முகம் பார்க்கும் கண்ணாடிபோல் அமைந்தேன். அதுவரை நான் உனக்குத் தேவைப்பட்டேன். அதுவரை நீயே உன்னைப் பார்க்கும் அளவு உன் கண் பார்வை தெளிவாக இல்லை. இனிமேல் நீ உன் கண்களாலேயே பார்த்துக்கொள்ளும் ஆற்றல் பெற்றுவிட்டாய். முதலில் நான் உனக்குச் சுட்டிக்காட்ட வேண்டியிருந்தது. இனி அதை நீயே பார்த்துக்கொள்ள முடியும். இதுவரை நீ ஆத்ம உணர்வின்றி இருந்ததால் நான் உனக்குத் தேவைப்பட்டேன். இனி நான் உனக்குத் தேவையில்லை'

உண்மையான குரு உள்ளே இருக்கிறார். அவரது அடையாளச் சின்னமாக வெளியே இருக்கும் குரு திகழ்கிறார். அவரது வழிகாட்டுதலைப் பெற்றுக்கொள். ஆனால் அவர் உன்னைக் கட்டிப்போடும் சங்கிலியாக இருக்கக்கூடாது; அடைத்துப்போடும் சிறையாக மாறக்கூடாது.

ஆகவே ஜரதுஸ்த்ரர்* சீடர்களுக்கான பயிற்சி கொடுத்து முடிந்தபின் அவர்களை விட்டுப் புறப்படுகிறார். அப்போது தனது கடைசி உபதேசமாக அவர் சொன்னது; 'ஜரஸ்துரரிடம் எச்சரிக்கையாக இருங்கள்!' பிறகு எங்கோ மலைகளுக்கிடையே சென்று மறைந்தார். அதாவது 'இனியும் என்னிடம் கட்டுண்டு இருக்கக்கூடாது. என் மீது பற்று – பாசம் கொண்டுவிடக்கூடாது. பிறகு உங்கள் ஆன்மிகப் பயிற்சி வீணாகிவிடும்' ஜாக்கிரதை! என்கிறார்.

கண்ணாடியில் உனது முகம் தெரிகிறது. அதற்காக உன் முகம் கண்ணாடியில் பதிந்திருப்பதாக நினைத்துவிடாதே. அவ்வாறு நினைப்பவன் பைத்தியக்காரன். கண்ணாடியை நீ போகுமிடமெல்லாம் கொண்டுசெல்ல வேண்டும் என்றும், இல்லாவிடில் உன் தலை வீட்டிலேயே விடப்பட்டுவிடும் என்றும் நினைத்தால் அது நகைப்பிற் குரியதாகும்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒரு பள்ளிவாசலின் சார்பாக தானம் வசூலிக்க ஒரு பணக்காரன் வீட்டிற்குச் சென்றார். அந்தச் செல்வந்தர் முல்லா வருவதை ஜன்னல் வழியாகப் பார்த்துவிட்டார். அவர் வரும் காரணத்தையும் ஊகித்துவிட்டார். அவர் தானதருமம் செய்ய

* **Zoroaster** (கி.மு. 628-521) இரானிய ஞானி பாரசி மதம் ஸ்தாபித்தவர். நெருப்பு வழிபாட்டை முக்கியமாக்கியவர்.

விரும்புபவரில்லை. அவர் தன் வேலையாளிடம் "முல்லா என்னைப் பற்றி விசாரித்தால் நான் எங்கோ வெளியே சென்றிருப்பதாகச் சொல்லி அனுப்பிவிடு" என்று கூறி வீட்டிக்குள் மறைந்துகொண்டார்.

வேலைக்காரன் முல்லாவிடம், "ஐயா, நீங்க வந்திருக்கிற நேரம் சரியில்லை. எசமான் வெளில போயிருக்காரு. எங்கே போயிருக்காரு, எப்போ வருவாருன்னு தெரியாது. நீங்க காத்திருக்க வேணாம்," என்றான்.

ஆனால் வீட்டுக்குள் நுழையும்போதே முல்லா செல்வந்தரின் தலை ஜன்னலுக்கு அப்பால் தெரிந்ததைப் பார்த்துவிட்டார். அவர் பதிலளித்தார்; "சரி, பரவாயில்லை. நான் பிறகு இன்னொருநாள் வருகிறேன். உன் எசமானன் வீடு திரும்பியதும் நான் சொன்னதாக அவரிடம் ஒரு செய்தி சொல். 'அவர் எங்கே வேண்டுமானாலும் வெளியில் போகட்டும். ஆனால் தலையை மட்டும் வீட்டிலேயே விட்டுவிட்டுப் போக வேண்டாம். அது ஆபத்தானது' என்று சொன்னால் போதும்."

குரு கண்ணாடி போன்றவர். நீ உன் முகத்தை அடையாளம் கண்டுகொள்ள உதவுகிறார். அதன்பின் உன் நிஜ முகத்தை நீ உனக்குள்தான் தேடவேண்டும். உனக்குள் வீற்றிருக்கும் குருவைச் சந்திக்க உன்னை தயார் செய்வதுதான் வெளியிலிருக்கும் குருவின் வேலை. உனக்குள் உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும் குருவை உன் மூலமாகவே எழுப்பச்செய்வதே வெளியிலிருக்கும் குருவின் வேலை. வெளியிலிருக்கும் குரு உனக்குள்ளே இருக்கும் குருவின் எதிரொலி மட்டுமே என்று சொல்லலாம்.

'நீ எப்பொழுதிலிருந்து உடல், புலன்கள் முதலியவற்றை, அவை உண்மையில் இருப்பதுபோல், உன்னிடமிருந்து தனித் தனியாகப் பிரித்துக் காண்கிறாயோ அக்கணமே நீ எல்லாக் கட்டுகளிலுமிருந்தும் விடுதலை பெறுகிறாய். மேலும் உன் நிஜமான சொரூபத்தில் நிலைநாட்டப்படுகிறாய்' **(சுலோகம் 89)**

எது எப்படி உள்ளதோ அதை அவ்வாறே நீ பார்க்க வேண்டும். உடனே உனக்கு உலக பந்தங்களிலிருந்து விடுதலை கிடைத்துவிடும். நீ உன் சுபாவத்தில், இயற்கையில், ஸ்திரமாகப் பதிந்துவிடுவாய்.

உள்ளத்தின் ஆழமான மையத்தைச் சென்றடைந்துவிடுவாய். அந்த இடத்தில் எந்த அலையும், எந்தச் சலனமும் இருக்காது.

நாம் உடலை என் உடல், நான் உடல் என்றும், மனத்தை என் மனம், நான் மனம் என்றும் பார்க்கிறோம். உண்மையில், அடிப்படையில் அவை அவ்வாறில்லை. நமத பார்வை குறைபாடு உடையது. நமது பார்வை மங்கலாக உள்ளது. நாம் பார்ப்பது ஒன்று. உண்மையில் இருப்பது வேறு ஒன்று. நாம் உடலை நம்மிடமிருந்து பிரித்துத் தனியான பொருளாகக் காணவேண்டும்.

அஷ்டாவக்ரர் கூறுகிறார் எது உண்மையில் எப்படியோ அப்படியே அதைப் பார்க்க வேண்டும். 'உடம்பு வேறு, மனம் வேறு, நான் இவை இரண்டையும் கடந்தவன்' என உணர வேண்டும் அவற்றைப் பிரித்துக் காண்பவன் அவற்றின் உண்மைத் தன்மையைத் தெரிந்துகொள்கிறான்.

நீ கவனித்திருப்பாயே. உனக்குக் கோபம் ஏற்பட்டுள்ளது எனில் அதை யாரோ உள்ளேயிருந்து கவனித்து உனக்குத் தெரிவிக்கிறார். உனக்குள்ளே இருந்துகொண்டு உன் நடவடிக்கைகளைக் கவனிக்கும் அந்த 'யாரோ'வுடன் பரிச்சயம் செய்து. கொள்ள முயலு. கோபம் வரும்போது உன் உடலில் விஷம்போல் பரவுகிறது. பழிவாங்கும் உணர்ச்சி மேலிடுகிறது. உனக்குள் இந்த மாற்றங்கள் ஏற்படுவதை உனக்குத் தெரிவிக்கிறானே அவன் யார்? உன்னை ஒருவன் அவமானப்படுத்துவதாக வைத்துக்கொள்வோம். 'நான் அவமானப். படுத்தப்பட்டேன்' என்பாய். அதை உனக்குள்ளே யார் கவனித்து அது அவமான உணர்ச்சியென்று உனக்குக் கூறுகிறார்?

நான் இதெல்லாம். பேசுவதை நீ கேட்கிறாய். உண்மையில் உனக்குள்ளே அல்லது உனக்குப் பின்னால் உன் சாட்சி நிற்கிறார். நீ பேச்சைக் கேட்கிறாய் என்பதை அவர் கவனிக்கிறார். மேற்கொண்டு, நீ காதால் மட்டும் கேட்கிறாய். கேட்பதை உள்வாங்கிக்கொள்ளவில்லை என்பதையும் கவனிக்கிறார் அந்த சாட்சி!

நீ ஏதோ ஒரு நூலில் ஒரு பக்கம் படிக்கிறாய். திடீரென ஓர் எண்ணம். 'படித்துக்கொண்டே போனோம், ஆனால் என்ன படித் தோம் என்று தெரியவில்லையே' என வியக்கிறாய். அவ்வாறு

உன்னைத் தட்டியெழுப்பியது யார்? யாரோ மேற்கொண்டு உள்ளே யிருந்து தூண்டுகிறார் 'இன்னொரு முறைபடி' என்று. இப்படி உனக்குள் ஆழத்திலிருந்து தூண்டுபவரே உன் வாஸ்தவமான சொரூபம்.

ஆசைப்படுதலே (பெருவிருப்பமே) உலகப் பற்றை ஏற்படுத்து கிறது. (உனக்கு விருப்பமான உலகை கிருஷ்டிக்கிறது.) ஆசையை தியாகம் செய்தல் நீ கற்பனை செய்த உலகத்தை விடுதலாகும். பிறகு நீ நிஜ உலகில் எங்கு வேண்டுமானாலும் இருந்துகொள். **(சுலோகம் 90)**

உலகத்தை விடச் சொல்லவில்லை. ஆசையைத்தான் கைவிட வேண்டும். அதன் மூலம் உருவாகின்ற கற்பனை உலகத்தை விட்டால் போதும். பற்றகன்று சாட்சிபோல் நீ உலகைப் பார்க்க முடியுமானால் நீ எங்கு வேண்டுமானாலும் வசிக்கலாம். கடைத்தெருவிலும் குடியிருக் கலாம். இதுவே உனக்கு அழகு. நீ சாட்சி மட்டுமே என்பதைத் தெரிந்துவைத்திருந்தால் போதும்.

ஆசைகளை விடுமாறு பலர் போதிக்கிறார்கள்; அவற்றைக் வகைப்படுத்துகிறார்கள். ஆனால் ஆசைகள் பல அல்ல. ஆசை என்பது ஒன்றுதான். அது ஓர் இயல்பு. 'ஏதோ ஒன்று நடக்க வேண்டும், ஒற்றைப் பெற வேண்டும்' என நினைப்பதுதான் ஆசை. பணம், பதவி, மோட்சம் என எதை விரும்பினாலும் ஆசை என்பது ஒன்றுதான். ஆசைப்படுதல் என்பது என்ன? 'நான் எப்படி உள்ளேனோ அந்த அளவுடன் திருப்தியில்லை. இன்னும் ஏதோ வேண்டும் அப்போது தான் மனத்துக்கு சமாதானமாக இருக்கும். என்னிடம் இல்லாத ஒன்று எனக்குத் தேவை,' இப்படியெல்லாம் சிந்திப்பதே ஆசைப்படுதல்.

'உலகத்தை தியாகம் செய், ஆசை நீங்கிவிடும்' எனக் கூறுவது வழக்கம். அவ்வாறு கருதுவது தவறு. நீ காட்டுக்கு ஓடிப்போனாலும் ஆசையும் நிழல்போல் உன்னைத் தொடர்ந்து வந்துவிடும். நீ கோயிலுக்குப் போய் அமர்ந்தாலும் அங்கும் ஆசை பின்தொடரும். நீ எங்கேயோ ஆசையும் அங்கேயே; ஆசை எங்கேயோ அங்கே ஓர் உலகமும் உருவாகிவிடும்.

ஆசையை தியாகம் செய்பவன் எல்லாவற்றிலிருந்தும் விடுதலை பெறுகிறான். ஆசை நீங்கிய பிறகும் அவன் உலகில்தான் வசிப்பான் ஆனால் அவனுக்கு உலகப் பற்று இருக்காது. எதையும் அப்படியே ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் அமைந்துவிடும். பிறகு உனக்கு எங்கே விருப்பமோ அங்கே வசித்துக்கொள்ளலாம். அல்லது நீ எங்கே இருக்கிறாயோ அதுவே சரியான இடமென்றும், அதுவே போதும் என்றும் உனக்குத் தோன்றும். மாளிகையில் இருக்கிறாயா, சரி. நீ காட்டில் இருக்கிறாயா, அதுவும் சரி என்னும் முடிவிற்கு வருவாய்.

ஒரு துறவி. நாட்டு மன்னரின் குரு. மன்னருக்குத் துறவி மீது அளவற்ற மரியாதை. ஒருநாள் அவரைச் சந்திக்க வந்த மன்னர். உபசார வார்த்தையாக, "சுவாமி, தாங்கள் வெயிலில் மரத்தின் கீழே அமர்ந்திருப்பது வருத்தம் தருகிறது. ஆகவே எனது அரண்மனைக்கு எழுந்தருளுங்கள்," என்று கேட்டுக்கொண்டார்.

அதற்கு மன்னர் குறிப்பிட்ட பதிலை எதிர்பார்த்தார். 'வேண்டாம், நானாவது அரண்மனைக்கு வருவதாவது. நான் உலகத்தையே துறந்தவன் ஆயிற்றே' என்று துறவி மறுப்பாரென மன்னர் நினைத்தார். அவ்வாறு துறவி கூறியிருந்தால் மன்னர் மகிழ்ந்திருப்பார். துறவிமீது அவருக்கிருந்த மரியாதை அதிகரித்திருக்கும். ஆனால் அந்தத் துறவி என்னை (ஓஷோவைப்) போன்றவராக இருப்பார்! சட்டென்று துறவி எழுந்து நின்று, "எனக்கும் குதிரை இருக்கிறதா? இதோ நான் புறப்படுகிறேன்!" என்றார். 'இவரா தியாகி?' என்று மன்னருக்கு சங்கடமாகிவிட்டது. ஆனால் அழைத்தாகிவிட்டது. இனி என்ன செய்வது? துறவிக்கும் குதிரை ஏற்பாடு செய்து அரண்மனைக்கு அழைத்துவந்தாகிவிட்டது.

ஆனால் மன்னரின் மகிழ்ச்சி விடைபெற்றுக் கொண்டுவிட்டது. தம்முடைய குரு மகாதியாகி என்று இத்தனை காலமாக அவர் பெருமைகொண்டிருந்தார். இப்பொழுது வசமாக மாட்டிக்கொண்டு விட்டார். அரண்மனையிலேயே அதிக அழகான, அதிகபட்ச வசதிகள் நிறைந்த அறையில் துறவி தங்க ஏற்பாடு செய்யப்பட்டது.

ஆறு மாதம் கழிந்தது. துறவி அரண்மனையில் வசதியாக வசித்தார். அவர் அங்கிருந்து கிளம்புவதாகத் தெரியவில்லை.

மன்னருக்கு சங்கடமாகி விட்டது. துறவி மாளிகை வாழ்க்கையில் ஆழ்ந்துவிட்டாரே என்று மன்னர் குழம்பினார்.

பிறகு ஒருநாள் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு துறவியிடம் சென்று, "சுவாமி, தங்களிடம் ஒரு கேள்வி கேட்க அனுமதிக்க வேண்டும்," என்றார்.

துறவி புன்முறுவலுடன் சொன்னார், "நீ உன் கேள்வியை இவ்வளவு தாமதமாகக் கேட்கிறாயே. நீ கேட்கப்போகும் கேள்வி அன்றைக்கே, நான் குதிரை கொண்டுவரச் சொன்னபோதே, உன் மனத்தில் உதித்துவிட்டதே."

"அப்படியானால் நான் என்ன கேட்கப்போகிறேன் என்பது தங்களுக்கு முன்கூட்டியே தெரியுமா, சுவாமி?"

"ஏன் தெரியாது? நான் குதிரை கேட்டதுமே உன் முகம் போன போக்கை அப்போதே நான் கவனித்துவிட்டேன். நான் என்னைக் குதிரையுடன் தொடர்புபடுத்திக்கொண்டதும் உன்னுடனான தொடர்பு நீங்கிவிட்டது. எனது தியாக வாழ்வைப் பற்றி உனக்கு சந்தேகம் உண்டாகிவிட்டது. ஆனால் அதை வெளிப்படுத்த ஆறுமாதம் ஏன் தயங்கினாய்? அதை மனத்தில் வைத்து இவ்வளவு காலமாக ஏன் புழுங்கினாய்? நீ சங்கடப்படுவது எனக்குத் தெரியும். சரி, உன் கேள்வி என்ன?"

மன்னன் சொன்னார்: "சுவாமி, எனக்கும் உங்களுக்கும் இடையே இப்போது என்ன வித்தியாசம் உள்ளது என்று கேட்க விரும்பினேன். என்னைப் போலவே நீங்களும் அரண்மனையில் வசிக்கிறீர்கள்; எல்லா வசதிகளையும் அனுபவிக்கிறீர்கள். உங்கள் தேவைகளை நிறைவேற்ற ஏவலாளர்கள் உள்ளனர். விருந்துச் சாப்பாட்டிற்குக் குறைவில்லை. முன்பு நமக்கிடையே பலத்த வித்தியாசம் இருந்தது. அப்போது நீங்கள் மரத்தின் கீழே, துறவியாக, மகாத்மாவாக, தியாகியாக இருந்தீர்கள். நானோ மாளிகையில் மன்னனாக, போகியாக இருந்தேன். இப்போதோ நாம் இருவருமே ஒரேமாதிரியான வாழ்க்கைதானே நடத்துகிறோம்."

"அப்படியா விஷயம்? நமக்குள்ளே என்ன வித்தியாசம் என்றா கேட்கிறாய்? என்னோடு ஊருக்கு வெளியே வா," என்றார் துறவி.

இருவரும் புறப்பட்டனர். 'இன்னும் எவ்வளவு தூரம் போக வேண்டும்?' என்று மன்னர் இடையிடையே கேட்டுப்பார்த்தார் துறவி பதில் சொல்லவில்லை.

சூரிய அஸ்தமனமாகிவிட்டது. இருள் படர்ந்தது. காட்டுப் பகுதி. துறவி வாய் திறந்தார்: "நான் ஊருக்குத் திரும்புவதாக இல்லை. மேற்கொண்டு காட்டுக்குள் போகவுள்ளேன். நீ என்னோடு வருகிறாயா அல்லது ஊர் திரும்ப விரும்புகிறாயா?"

மன்னர் திகைத்தார் "அதெப்படி சுவாமி உங்களோடு திடீரென்று வரமுடியும்? அரண்மனை வாழ்க்கை, அரசிகள், குழந்தைகள், ஆட்சிப்பொறுப்பு இப்படிப் பல கடமைகள் உள்ளன. நான் எப்படி உங்களுடன் வர முடியும்?"

"சரி, நான் எப்படியும் மேற்கொண்டு போகப்போகிறேன். நம்மிடையே உள்ள வித்தியாசத்தைப் புரிந்துகொண்டாய் அல்லவா?" துறவி வினவினார்.

மன்னர் அவருடைய கால்களைப் பிடித்துக்கொண்டார். "சுவாமி, தாங்கள் என்னைவிட்டுப் போகாதீர்கள். நான் பெரிய தப்பு செய்துவிட்டேன். " என்று மன்றாடினார்.

துறவி சிரித்தார். "நான் மறுபடியும் குதிரை சவாரிசெய்ய தயாராக உள்ளேன். ஆனால் நீ மறுபடியும் சங்கடத்தில் மாட்டிக்கொள்வாய். சரி, கொண்டுவா குதிரையை," என்றார்.

அஷ்டாவக்ரர் சுட்டிக்காட்டுவதும் இதுவே. சாட்சி மனப் பான்மை உள்ளவனுக்கு அரண்மனையும் ஆரண்யமும் சமம்தான். அவனால் எங்கு வேண்டுமானாலும் பந்தப்படாமல் வசிக்க முடியும்.

அஷ்டாவக்ரர் 'யதா ததா ஸ்திதி' என்பதை பௌத்தர்கள் 'ததாகத் ' என்கிறார்கள். இது புத்தருடைய பெயர்களுள் ஒன்று. இதன் பொருள் (காற்றைப் போல்) அப்படி வருபவன் - செல்பவன். காற்றுக்குக் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்றெல்லாம் திசை வேறுபாடு கிடையாது. பாலைவனம், பூங்கா என்றெல்லாம் அது பிரித்துப் பார்ப்பதில்லை. எப்படி வருகிறதோ அப்படியே போகிறது. எல்லாவற்றையும் அவை உள்ளபடியே ஏற்கிறது.

இந்த தத்துவத்தை மகாவாக்கியமாகக் கருது. இதைப் பற்றி நன்கு சிந்தனைசெய். இதைச் சிறிது சிறிதாக உன் ஆழ்மனத்திற்குள் கிரகித்துக்கொள். இது உனது மனக்கோயிலில் தீபமாக ஒளிவீசட்டும். நிறைய பிரசாதம் கிடைக்கும்; ஆசிர்வாதம் கிடைக்கும்; நீ அதிர்ஷ்டசாலியாவாய்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**அஷ்டாவக்ரர் கருத்துப்படி முனிவர்கள், மகாத் மாக்கள், யோகிகள் வெவ்வேறு கோட்பாடு களைச் சொல்வதால் ஆர்வமிழந்து அவற்றைப் புறந்தள்ளுபவன் குழப்பம் நீங்கி அமைதி பெறுகிறான். நாங்களும் அவ்வாறே உள்ளத் தமைதி பெற வேண்டும் என்பதற்காகவா முனி வர்கள், மகாத்மாக்கள், யோகிகள், அஷ்டா வக்ரர், புத்தர், பதஞ்சலி, சைதன்யர் ஆகிய எல்லோரின் பிரதிநிதியாக நீங்கள் வந்துள் ளீர்களா?**

அப்படித்தான் நிச்சயமாக இருக்கும். எதிலிருந்து விடுதலை பெற வேண்டுமோ அதை முதலில் நன்றாக அறிந்திருக்க வேண்டும். தர்க்கத்தின் கவர்ச்சியிலிருந்து விடுபட தர்க்க இயலை அறிந்திருக்க வேண்டும். அப்போதுதான் அதை வெல்ல, கடந்துசெல்ல முடியும். அறிவின் தாக்கத்தைக் கடக்கக் கூர்மையான அறிவு தேவை. பேரறிவாளன் அறிவுக்கு அஞ்சமாட்டான். அவனுக்கு அதன் எல்லைகள் தெரியும்; அதன் தந்திரங்கள் தெரியும். புத்தி விரிக்கும் மாயவலையில் அவன் சிக்கிக் கொள்ளமாட்டான்.

யார் எதைச் சொன்னாலும் நம்புபவன் அறிவின் கீழ்ப்படியி லேயே நிற்கிறான். அவன் ஒருவகையில் முட்டாள்தான். உறுதியான, அசைக்க முடியாத நம்பிக்கை (பற்றுறுதி) உள்ளத்தில் அமையப் பேரறிவு தேவை. புத்தியின் எல்லாப் படிகளையும் கடந்து மேலேறியவன் பற்றுறுதி பெறுகிறான்.

எடுத்த எடுப்பிலேயே ஒருவன் உண்மையான ஆத்திகன் ஆகமுடியாது. நாத்திகனாக சிறிது காலமாவது இல்லாமல் யாரும்

ஆத்திகன் ஆனதில்லை. அதை வெளியே சொல்வதில்லை என்பது வேறு விஷயம். எடுத்த எடுப்பிலேயே மேற்கொள்ளப்படும் ஆத்திகம் உறுதியாக இருக்காது. சூடேற்றாத களிமண் பானை போன்றது அந்த ஆத்திகம். போலி ஆத்திகம் கண்டு ஏமாறாதே. அந்தப் பானையில் தண்ணீர் நிரப்பி எடுத்துவர முடியாது. வீட்டை அடைவதற்குள் பானையும் இருக்காது; தண்ணீரும் இருக்காது. பானை உறுதியாவதற்கு அக்னி பிரவேசம் செய்யவேண்டும்.

இவ்வுலகின் தலைசிறந்த ஆத்திகர்கள் நாத்திக நெருப்பின் ஊடாகத்தான் பயணித்து முன்னேறியிருக்கிறார்கள். இது சரியான வழி என்றே தோன்றுகிறது 'இல்லை' என்று தைரியமாகச் சொல்லவராதவன் 'உண்டு' என்று சொன்னால் அதில் வலு இருக்காது. அதில் இயலாமைதான் அதிகம் பிரதிபலிப்பாகும்.

வலுவான பற்றுறுதி உள்ளவன் முடிசூடா மன்னனாகிறான். அவன் தன்னை எங்கும் பாவியிருப்பவனாக உணர்கிறான். பற்றுறுதி அவனுக்கு விசேஷ வலிமை தருகிறது. பற்றுறுதி பரிசாக அளிக்கும் பேராசில் சூரியன் ஒருபோதும் மறைவதில்லை. ஏனெனில் அங்கு இருட்டு என்பது கிடையாது. எல்லாம் ஒளிமயம்தான்.

நாத்திகத்தை ஆத்திகத்திற்கு ஏற்றிவிடும் தவிர்க்க முடியாத படிக்கட்டு அல்லது ஏணி எனலாம். இல்லையென மறுப்பதால் புதிதாகக் கற்பது சாத்தியப்படுகிறது. அப்போதுதான் நாம் சொல்லும் 'உண்டு' என்பது அர்த்தமுள்ளதாகிறது. எடுத்த எடுப்பிலேயே ஒருவன் எல்லாவற்றுக்கும் 'ஆமாம் சாமி' என்று சொல்லிவந்தால் அந்த 'ஆமாம்' என்பதற்கு என்ன மதிப்பு இருக்க முடியும்? சில சமயம் முதலில் 'இல்லை' என்று சொல்லத் தெரிந்தவனின் பிற்கால 'ஆமாம்' என்பது மதிப்புடையதாக, கவனிக்கத் தக்கதாக இருக்கும்.

உலகில் இரண்டு வகையான ஆத்திகர்கள் உள்ளனர். ஒருவகையினர் பயத்தின் காரணமாக ஆத்திகர்களாக உள்ளனர். அவர்களின் உள்ளத்தின் ஆழத்தில் நாத்திகம் குடிகொண்டிருக்கிறது. அவர்களது ஆத்திகம் மேலோட்டமானது. சாதாரணப் பூச்சு போன்றது. சற்றுச் சுரண்டினால் போதும். உள்ளேயிருக்கும் நாத்திகம் தென்படும்.

வாழ்க்கையில் எல்லாம் சரிவர நடக்கும்வரை பலர் ஆத்திகர் களாக இருப்பார்கள். ஏதாவது குழப்பம் ஏற்பட்டால் அவர்களது

குட்டுவெளிப்பட்டுவிடும். உதாரணமாக இளைஞனான மகன் இறந்துபோனால்; வியாபாரம் திவாலாகிவிட்டால்; நேர்மையாக உழைத்த பலன் ஓர் அயோக்யன் கைக்குப் போய்விட்டால், கடவுள் என்று ஒருவர் உள்ளாரா என்னும் சந்தேகம் ஏற்படும். அதாவது, சந்தேகம் உனக்குள்ளே இருந்துதான் வந்திருக்கிறது. சந்தர்ப்பம் கிடைத்ததும் வெளிப்பட்டுவிட்டது.

ஆத்திகர்கள் எனப்படுபவர்கள் கோவில்களில், அவரவர்க்குரிய வழிபாட்டுத் தலங்களில் பூஜைசெய்கிறார்கள். அவர்களது உள்ளத்தின் ஆழத்திலும் சந்தேகம் ஒளிந்திருக்கிறது. நாம் பூஜை முதலியன செய்வது சரிதானா என்று மனத்தில் கேள்வி எழுகிறது. ஆனால் பயம் காரணமாக வழிபாட்டைத் தொடர்கிறார்கள். கடவுள் உண்டா - இல்லையா, சுவர்க்கமும் நரகமும் உள்ளனவா என்பதும் தெரியாது. எதற்கு வம்பு என்று புத்திசாலியான மனிதன் கருதி ஆத்திகத்திலேயே தொடர்வான்.

ஓர் ஊரில் ஓர் இஸ்லாமியர் இறக்கும் தறுவாயில் இருந்தார். அக்கம் பக்கம் எழுதப்படிக்கத் தெரிந்தவர் யாருமில்லை. முல்லா நஸ்ருத்தீன் அதே ஊர்க்காரர். அவரை அழைத்து, "நீ திருக்குர்ரீான் சப்தமாக ஓது. அதைக் கேட்டுக்கொண்டே இறந்தால் நான் ஆண்டவரை அடைவேன்," என்று வேண்டினார்.

முல்லா சொன்னார், "அதெல்லாம் கஷ்டமான வேலை. நீ இறக்கும் தறுவாயில் உள்ளதால் நான் ஒரு சுலபமான பிரார்த்தனை ஓதுகிறேன். நீ அதைத் திருப்பிச் சொன்னால் போதும், " என்றார். மிகவும் பலவீனமாயிருந்த நோயாளி சரியென்று ஒப்புக்கொண்டார்.

முல்லா உரக்கச் சொன்னார், "ஆண்டவரே, சைத்தானே, உங்கள் இருவருக்கும் வணக்கமும் நன்றியும். நான் இறந்த பிறகும் நீங்கள் இருவருமே என்னைக் காப்பாற்றுங்கள்."

மூச்சடங்கிக் கொண்டிருந்த நோயாளிக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. மிகவும் சிரமப்பட்டுக் கேட்டார், "நஸ்ருத்தீன், இதுவா பிரார்த்தனை? உளறலாக இருக்கிறதே. இருக்கும் போதும், இறந்த பின்னும் ஆண்டவர் நம்மைக் காக்க வேண்டுமென வேண்டினால் நியாயம்தான். ஆனால் சைத்தானையும் ஏன் துணைக்கு அழைக்கிறீர்கள்?"

முல்லா அவரை அமைதிப்படுத்தி விளக்கம் சொன்னார்: "இறக்கவுள்ள இந்த நேரத்தில் வீண் வம்பு எதற்கு? ஏன் ஆபத்துக் குள்ளாக வேண்டும்? நம்முடைய உண்மையான எஜமானன் கடவுளா, சைத்தானா என்று தெரியவில்லை. இப்படி இரண்டு பேராகவா உள்ளனர் என்றும் தெரியவில்லை. இறப்புக்குப் பின்னே நீ சுவர்க்கத்திற்குப் போவாயா அல்லது நரகத்திற்கா என்பதும் தெரியாது. நாம் எங்கே போய்ச்சேர வேண்டும் என்று தீர்ப்புக் கூறுபவர் யார் என்று தெரியவில்லை. நமது எஜமானர் கடவுளாக இருந்து மரண சமயம் நீ சைத்தானை பிரார்த்தித்தால் உனக்கு நரகம் கிடைக்கும். கடவுள் கிடையாது. சைத்தான்தான் உண்டெனில் நீ கடவுளை மட்டும் வேண்டினால் சைத்தான் கோபமுற்று உன்னை நரகத்தில் தள்ளி விடுவான். நீ இருதரப்பினையும் சந்தோஷப்படுத்து. அரசியலில் அப்படித்தான் செய்கிறார்கள்."

கோயில்களுக்குச் சென்று ஏராளமானவர்கள் வழிபாடு செய்கிறார்கள். அவர்களில் பலர் இந்த அரசியல் தந்திரத்தையே கடைப்பிடிக்கிறார்கள். இந்த உலகத்தில் வளமாக வாழவும் ஏற்பாடு செய்துகொள்கிறார்கள்; மறு உலகத்திற்கும் முன்தயாரிப்பு செய்துவைத்துக் கொள்கிறார்கள். மறு உலகு இல்லாவிட்டால் நஷ்டமில்லை. ஆனால் மறு உலகிற்குப் போக நேரிடும் என்றால் முன்னெச்சரிக்கையாக இருப்பது நல்லதல்லவா?

தனி மனிதன் பலவீனனாக இருக்கிறான். அவனுக்கு இவ்வுலகில் ஓர் ஊன்றுகோல், ஆதரவு தேவை. இதற்கு வசதியாக அவன் ஆத்திகனாகக் கடவுளை ஒப்புக்கொள்கிறான். ஆனால் இது பக்தியில்லை; பற்றுறுதி இல்லை; சிரத்தை இல்லை. ஓர் உபயோகம் கருதிக் கடவுள் நம்பிக்கை ஏற்பட்டிருந்தால் அங்கே கடவுள் மீது உண்மையான பிடிமானம் இருக்காது.

உனக்குக் கடவுள்மேல் உள்ள பற்று ஆனந்தத்தின் அடிப்படையில் இருக்க வேண்டும். உன் இறையன்பு கொடுக்கல் - வாங்கலை ஆதாரமாகக் கொண்டிருக்கக் கூடாது. நீ வேண்டுவது யாசகமாக இருக்கக்கூடாது. கடவுளெதிரில் நீ பிச்சைக்காரனாக நில்லாதே. இது வேண்டும் - அது வேண்டும் என்று பட்டியல் தராதே.

உனக்கும் இறைவனுக்கும் இடையே பிரவாகமாகிப் பாசம் நேசம் பெருக்கெடுத்துப் பாயட்டும். உங்களிருவருக்கும் இடையே தேவ இசை ஒலிக்கட்டும். உனது வீணையுடன் அவரது வீணையும் மீட்டப்படட்டும். உனது வாய்ப்பாட்டுடன் அவரது சுருதி சேரட்டும். உனது உயிர்த் துடிப்பு அவரது இசையில் தாளக்கட்டுடன் நடனம்போல் கேட்கட்டும். எதுவும் வேண்டுமென்றோ, எதுவும் வேண்டாமென்றோ வரம் கேட்கும் நிலையைக் கடந்த பிறகே உண்மையான பக்திநிலை, பற்றுறுதி ஏற்படுகிறது. நாத்திக வாதத்தைக் கடந்த பின்னரே இந்நிலை வாய்க்கும்.

'இல்லை' என்று சொல்லக் கற்றுக்கொண்டுதான் ஆகவேண்டும். அப்போதுதான் 'உண்டு' என்பது சொல்ல வரும். அதனால்தான் நான் உங்களுக்கு எல்லா மத சம்பிரதாயங்களைப் பற்றியும் கூறுகிறேன். அப்போதுதான் நீங்கள் பரம்பரையான நம்பிக்கைகளைக் கடந்து செல்ல முடியும். நான் எல்லா மதங்களையும் பற்றிக் குறிப்பிட்டுப் பேசுவதன் மூலம் நான் எல்லா மதங்களையும் கடந்ததும், அவற்றைவிட உயர்ந்ததுமான உன்னத மதத்தை அறிமுகப்படுத்த விழைகிறேன். ஆகவேதான் இயேசுநாதர், மகாவீரர், பதஞ்சலி, மீராபாய் என்று பல இறையன்பர்களைப் பற்றி பேசுகிறேன். அப்பொழுதுதான் நீங்கள் கோட்பாடுகள் அநேகம் உள்ளன எனினும் சத்தியப்பொருள் ஒன்றேதான் என்பதை உணர்வீர்கள். ஒவ்வொரு கோட்பாட்டிலும் குறை இருப்பதால் நீங்கள் அவற்றிலிருந்து விடுதலை பெற வேண்டும்.

முதல் நடவடிக்கையாக நாத்திகவாதத்தை நாம் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். அதன்பின் ஏராளமான தத்துவங்கள் கொண்ட ஆத்திகத்தையும் அறிந்துகொள்ளுதல் அவசியம். இறுதியில் இந்த இரண்டிலிருந்துமே விடுபட்டு நீ பரிசுத்தமான நிலையை சென்றடைவாயாக. எந்தப் பற்றையும், எந்தக் கொள்கைளையும் தவிர்த்து, ஆமாம் அல்லது இல்லை என்ற நிலைகளையும் கடந்து செல். நீ போய்ச் சேருமிடத்தில், உருவம் எதுவும் பிரதிபலிப்பாகாத வெற்றுக் கண்ணாடிபோல், எந்த மாறுதலும் சலனமும் இருக்கக்கூடாது. அப்போதுதான் நீ வீட்டை அடைந்துவிட்டாய் என்று பொருள். இதை 'நிர்வேத' உணர்வு என்பர்.

இதற்கு ஓர் அர்த்தம் உணர்வு எழா நிலை. இன்னொரு பொருள் எண்ணங்கள் தோன்றாத நிலை. ஞானத்தின் மூல நூலை நாம் வேதம்

என்கிறோம். 'நிர்வேத' என்றால் வேதங்களின் தாக்கத்திலிருந்து விடுபடல் என்று பொருள்படுகிறது. இதை விரித்தால் எல்லாவகை ஞானம், கோட்பாடு, கொள்கை, கருத்துகள், நம்பிக்கைகள் ஆகிய வற்றிலிருந்தும் விடுபடுதல் என்று அர்த்தமாகும். ஒவ்வொரு மதத் திற்கும் அதன் புனித நூல் வேதம் போன்றது. ஆனால் எங்கெல்லாம் ஞானம் உள்ளதாக, எந்தச் சொற்களிலும் கொள்கைகளிலும் ஞானம் உள்ளதாக நீ நினைத்திருக்கிறாயோ அவை மொத்தத்திலிருந்தும் நீ விடுபட வேண்டும்.

நிர்வேத நிலையில் எண்ணங்கள், உணர்ச்சிகள், சாஸ்திரங்கள், மந்திரச்சொற்கள், தத்துவங்கள் என்று எதுவும் உன்னுள்ளிருந்து நீங்கி விடும். நீ சூனியம் போலிருப்பாய். பிறகு நீ இந்துவாக, முகம்மதியராக, கிறிஸ்தவராக, சமணராக, பௌத்தராக இருக்கமாட்டாய். இந்தப் பெயர்கள் எல்லாம் அந்தந்த மதத்தின் வேத நூல்களில் காணப் படுகிறது. உதாரணமாக, மகாவீரர் சொன்னதே வேதம் என்பவர் ஜைனராகிறார். புத்தர் கூறியதே வேதம் என்பவர் பௌத்தராகிறார்.

ஆனால் அஷ்டாவக்ரர் கூறுகிறார் - நீ உனக்குள்ளேயே வேதத்தை உணர்ந்தால் அது பரமஞானத்தின் நிலையாக அமையும். வெளியுலக வேதங்களின் தாக்கத்திலிருந்து முக்தி பெற்ற நிலையாக அது இருக்கும்.

ஒரு கோணத்தில், அது ஞானமே இல்லாதது போலிருக்கும். ஆனால் இது அஞ்ஞான (அறியாமை) நிலையும் அன்று. ஏனெனில் இப்போது புத்தி பக்குவமடைந்திருக்கிறது. நல்ல நினைவு உணர்வு இருக்கிறது. இதற்கு ஞானம் நிறைந்த அஞ்ஞானம் என்று பெயரிடலாம்.

மனிதன் பெற்றுள்ள அறிவை தர்தூலியன்* இரண்டு வகையாகப் பிரிக்கிறார்; 1) அறியாத அறிவு, 2) அறிந்த அறியாமை. இது அற்புதமான வகைப்படுத்துதலாக உள்ளது.

முதல் வகையில் நீ எதுவுமே அறிந்திருக்க மாட்டாய். ஆனாலும் உனக்கு எல்லாம் தெரிந்ததுபோலிருக்கும். சாஸ்திரங்கள்

* **Tertullian** (கி.பி. 155/166-220) கிறிஸ்தவ மத அறிஞர் ஆப்பிரிக்காவில் அம்மதத்தைப் பரப்பியவர். ஞானஸ்நானம் (பாப்டிசம்) பற்றிய முதல் நூல் எழுதியவர்.

உனக்கு மனப்பாடம் ஆகியிருக்கும். கிளிப்பிள்ளைபோல் அவற்றைத் திருப்பிச் சொல்லவும் உன்னால் முடியும். உன் மூளை தகவல்களால் நிரம்பிவழிகிறது. உனது ஞாபக சக்தி கூர்மையாக உள்ளது. உன்னிடம் மொழியறிவு உள்ளது. நீ இலக்கணம் அறிந்திருக்கிறாய். சொற்களுக்குப் பொருத்தமான அர்த்தம் உனக்குச் சொல்லத் தெரியும்.

ஆனாலும் நீ ஒன்றும் அறிந்திருக்கவில்லை! ஏனெனில் நீ அறிந்தவற்றில் நீ சுயமாக அறிந்தது எதுவும் கிடையாது. எல்லாம் கடன் வாங்கியது. பழைய சோறு. உன்னுடையது என்ற எதுவும் இல்லாத உன் அறிவை ஞானம் என்று எப்படிச் சொல்வது? உனது அறிவின் பின்னணியில் அறியாமைதான் ஒளிந்துள்ளது. சமூகத்தில் அறிஞர்கள் (பண்டிதர்கள்) எனப்படுவோர் இப்படித்தான் உள்ளனர். சொந்தமாக எதுவும் அறிந்திராமல் பிறர் சொன்னதையே திருப்பிச் சொல்கின்றனர். தான் திருப்பிச்சொல்வதையும் பொருளுணர்ந்து சொல்வதில்லை. இவர்களைப் பேசும் இயந்திரம் எனலாம்.

தர்தூலியனின் கருத்துப்படி இன்னொரு வகை அறிவு அறிந்த அறியாமை எனப்படுகிறது. இதுதான் நான் மேலே குறிப்பிட்ட நிர்வேதம் என்பது. தான் எதையும் அறிந்திருக்கவில்லை என்பதை அறிந்திருக்கும் அறிவு! இந்த அறிவு முழுமையான விழிப்பு நிலையாகும். அந்த ஞானவிளக்கு உள்ளத்தினுள்ளே தீவிரமாக ஒளிவீசியபடி இருக்கும். அதன் அருகில் வேதங்களின் நிழல் (தாக்கம்) இருக்காது. சம்பிரதாயங்களின் புகை படராது. அது ஆழ்மனத்தின் சுத்தமான ஒளிவிளக்காக இருக்கும். அந்த ஒளியில்தான் எல்லா வகையான அறிவையும் பெறமுடியும். ஆனால் அறிந்துகொண்டதன் திமிர் இருக்காது.

உபநிடதம் கூறுகிறது - 'நான் அறிந்துள்ளேன், எனக்குத் தெரியும்' என்று சொல்பவன் உண்மையில் அறிந்திருக்கமாட்டான்.

சாக்ரடீஸ் சொன்னார் - நான் சிறிது - சிறிதாக அறிவை வளர்த்துக்கொள்ளத் தொடங்கியபிறகுதான் நான் ஒன்றுமே அறிந்திருக்கவில்லை என்பது தெரியவந்தது.

லாவோத்சு கூறினார் - ஞானி அறிவிலி போலவே இருப்பான்.

இயேசுநாதர் சொன்னார் - குழந்தைகளைப்போல மாசற்றவர் களாக இருப்பவர்களே என் பரமபிதாவின் சாம்ராஜ்ஜியத்தில் பிரவேசிக்க முடியும்.

'குழந்தைகளைப் போல' என்று கூறியமை குறிப்பிடத் தக்கது. குழந்தைகளின் கல்வி ஆரம்ப நிலையில் உள்ளது. அவர்களிடம் சிந்திக்கும் ஆற்றலும் தோன்றியிருக்காது. அவர்களுக்கு வாழ்க்கை அனுபவமும் கிடையாது. ஆகவே அவர்களிடம் பண்டிதத் திமிர் இருக்காது. ஞானி பரிபூரண அறிவு பெற்றிருந்தும் தமக்கு அறிவு போதாது என்பதுபோலவே அடக்கமாக இருப்பார். உண்மையில் அவரிடமுள்ள ஞானம் அக்னிபோல் சுற்றுப்புறத்தில் ஒளியை பரப்புகிறது.

'நிர்வேதம்' எனப்படும் சூன்ய நிலை அபூர்வமானது. ஆகவே ஞானிகள் வேதங்களை சராசரி மனிதர்களுக்காக விட்டுவிட்டு அவற்றையும் கடந்துசெல்கிறார்கள். அஷ்டாவக்ரர், புத்தர், மகாவீரர் ஆகியோர் வேதங்களின் மேன்மையை ஒப்புக்கொண்ட போதிலும், அவற்றை ஆன்மிக அறிவு குறைவாகப் பெற்றவர்களுக்கே உபயோகமானவையாகக் கருதினார்கள். ஞானிகளின் பார்வையோ சொற்களைக் கடந்த சூன்யத்தில் பதிந்திருக்கிறது. முரண்பாடுகளற்ற சத்தியத்தை நோக்கி அவர்களது சிந்தனை சிறகடித்துப் பறக்கிறது.

நான் உனக்குப் பலவகையான சம்பிரதாய தத்துவங்களை அறிமுகப்படுத்தி வருகிறேன். அவற்றிலிருந்து நீ விடுதலை பெற வேண்டும் என்பதற்காகவே அவ்வாறு செய்கிறேன். அவற்றை அறிந்துகொண்டால் தான் நீ பின்னர் அவற்றைக் கடக்கவும் முடியும்.

நீ என் சொற்பொழிவை அமைதியாகக் கேட்பாயானால் அவற்றை அறிந்துகொண்டு விட்டுவிடவும் முடியும். ஆனால் நான் ஒருநாள் விளக்கும் கோட்பாட்டைப் பிடித்து வைத்துக் கொண்டா யானால் அது ஆபத்து. அந்தக் கோட்பாடு உனக்கு வேதமாகிவிடும். பிறகு நீ நிர்வேத நிலையை அடைய முடியாது. ஆனால் நான் உன்னைத் தேங்கவிடுவதில்லை. ஆகவே ஒவ்வொரு நாளும் வெவ்வேறு தலைப்பில் பேசி உன் கவனத்தின் திசையை மாற்றுகிறேன்.

சில நாள் நான் புத்தரை பற்றி பேசுகிறேன். சிறிது - சிறிதாக நீ பேச்சின் வசப்படுவதைக் காண்கிறேன். நீ உன்னை பௌத்த ஞானியாகக் கருதத் தொடங்குகிறாய். புத்தரின் உபதேசம் உனக்கு வேதமாகத் தோன்றுகிறது. சிரமப்படாமல், முயற்சி செய்யாமல் எல்லாம் தெரிந்துகொண்டதாக நீ நினைக்கிறாய். இலவசப் பொருள்போல் ஞானம் கிடைத்தால் யார்தான் ஞானியாகமாட்டார்கள்?

நீ புத்தர் பற்றிய பேச்சைக் கேட்டாய்; மகிழ்ந்தாய்; நெகிழ்ந்தாய்; நீ அறிந்ததை வெளியில் சொல்லத் துடித்தாய்; நாலா பக்கங்களிலும் அதைப் பரப்ப விழைந்தாய். எவனாவது உன் வலையில் சிக்கிக் கொண்டால் நீ கேட்ட கருத்துகளை அவன் மூளையில் திணிப்பாய். அந்த வாய்ப்பை நழுவவிடமாட்டாய். ஏதாவது சாக்குச் சொல்லி நீ பெற்ற அறிவை இன்னொருவன் கழுத்தில் தொங்கவிடுவாய். ஏதாவது காரணம் கிடைத்தால், யாராவது ஏதாவது கேட்டால் நீ கற்ற கொள்கைக்குச் சாதகமாக அவர்களை வளைப்பாய். இந்தச் சிற்றறிவு உனக்கு முக்தி தராது. அது உன் அகங்காரத்தை எடுப்பாகக் காட்டும் நகைபோல அமையும்.

நீ இவ்வாறு என் மூலம் கேள்விப்பட்ட புத்தரின் உபதேசத்தை வேதமாகக் கருதத் தொடங்குவதைப் பார்த்ததும், நான் விஷயத்தை மாற்ற வேண்டியதாகிறது. ஆகவே மகாவீரரைப் பற்றி பேச ஆரம்பிக்கிறேன். உடனே பௌத்தமே வேதம் என்று நீ நினைத்த பின்னணி கலைந்துபோகும். இப்படி நான் என் சொற்பொழிவில் ஒவ்வொரு சித்தாந்தம் குறித்தும் சொல்லிக் கொண்டே போவேன். இதனால் நீ அவற்றில் எதையும் பின்னணியாக அல்லது ஆதாரமாக அமைத்து, குறுகிய கண்ணோட்டம் பெறுவதிலிருந்து தப்பித்து விடுவாய். நீ செய்ய வேண்டியது - பல விதமான சிந்தாந்தங்களைக் கூறும்போது கவனமாகக் கேட்டுக்கொள். ஆனால் குறிப்பிட்ட ஒரு சித்தாந்தத்தைப் பிடித்துக்கொள்ளாதே. எல்லாவற்றையும் அறிந்து எதையும் பற்றிக்கொள்ளாத மனப்பக்குவம் உண்டாகிவிட்டால் 'நிர்வேத' நிலையை அடைந்துவிட்டாய் எனலாம்.

இந்த எல்லா வகையான சிந்தாந்தங்களையும் புரிந்துகொண்டு அவற்றைக் கடப்பது அவசியமாகும். எதைக் கடக்கவில்லையோ அதில் நீ சிக்கிக்கொள்ளும் அபாயமுள்ளது.

**இரண்டாம் கேள்வி**

**சீடனின் மனத்தில் தன் சத்குருவின் மீது அன்பும், தன்னிடம் ஏற்கெனவே உள்ள அகங் காரமும் ஒரே சமயத்தில் இருக்க முடியுமா?**

குருபக்தியும் சுயமான அகங்காரமும் சிறிது காலம் வரை ஒரே சமயத்தில் இருக்க முடியும். குருவின் அறிமுகம் கிடைத்த ஆரம்பகாலத்தில் அவரிடம் எதிர்பார்ப்பும் தனது அகங்காரமும் ஒன்றாக நீடிக்க முடியும். எடுத்த எடுப்பிலேயே அகங்காரம் நீங்கிவிடாது. அகங்காரம் காரணமாகவே குருவைத்தேடி சீடன் வந்திருக்கக்கூடும். எப்படியெனில் அவன் முதலில் செல்வம் தேடி அலைந்தான்; திருப்தி கிடைக்கவில்லை. உயர் பதவிகளைத் தேடிப் பெற்றான்; அவையும் திருப்தி தரவில்லை. இப்பொழுது அகங்காரம் ஞானத்தைத் தேடச் சொல்கிறது.

அஷ்டாவக்ரர் இவ்வாறு மூன்று தேடுதல்களைக் குறிப்பிடுகிறார். கடைசியான ஞானத் தேடல் உன்னைக் குருவிடம் கொண்டுவந்து விட்டுள்ளது. அவ்வாறு உன்னை குருவிடம் சேர்ப்பிக்கும் அகங்காரம் சட்டென்று முழுமையாக உன்னைவிட்டு விலகிவிடாது. அகங்காரம் உன்னை மிரட்டும், 'நான்தான் உன் முதல் குரு. நான்தான் உன்னை குருவிடம் சேர்ப்பித்தேன். ஆகவே என்னை முதலில் வணங்கு. நான் உன்னை சுலபமாக விட்டுச்செல்ல மாட்டேன். நீயும் சீக்கிரமாக என்னைவிட்டுப் போக விடமாட்டேன்.'

ஆகவே முதலில் அகங்காரமும் இருக்கும். குருவின் மேல் அன்பு வளர-வளர அகங்காரம் அதிக நாள் நீடிக்க முடியாது. ஏனெனில் குருபக்தியும் அகங்காரமும் ஒன்றுக்கொன்று முரணானவை. இவை ஒரேயிடத்தில் அருகருகே இருக்க வாய்ப்பில்லை. அகல் விளக்கு எரியத்தொடங்கிவிட்டது. பிரகாசம் பரவியது. பிறகு அது அதிகரித்தது. ஆரம்பத்தில் இருந்த இருட்டு குறைந்துகொண்டே வந்தது. ஒளிவேரூன்றியதும் இருட்டு முழுமையாக நீங்கிவிடும்.

இருட்டிற்கும் அகங்காரத்திற்கும் மதிப்புண்டு. அகங்கார இருட்டுத்தானே உன்னை குருவிடம் சேர்ப்பித்தது. இது சாத்துவீகமான அகங்காரம் எனப்படுகிறது. இது ஒருவகையில் புனிதமான இருட்டு, அறநெறி சார்ந்த இருட்டு

**பூ**னை ஒன்று காசிக்கு தீர்த்த யாத்திரையாகக் கிளம்பியது. முற்காலத்தில் காசி யாத்திரை செல்பவர்கள் வழி கஷ்டம் காரணமாக ஊர் திரும்புவது அபூர்வம். ஆகவே உறவினர்கள், நண்பர்களை அழைத்துக் கடைசி நமஸ்காரம் செய்துவிட்டுப் புறப்படுவார்கள். காசிக்குக் கிளம்பிய இந்தப் பூனையும் எல்லோரையும், குறிப்பாக எல்லா எலிகளையும், தன்னைச் சந்திக்க வருமாறு அழைத்தது. திரும்பி வருதல் நிச்சயமில்லை என்பதால் இதுவே கடைசிச் சந்திப்பாக இருக்கலாம் என்று தெரிவித்தது.

செய்தி கேட்டு எலிகள் கவலைப்பட்டன. அவை கலவரமும் பரபரப்பும் அடைந்தன. 'பூனையின் தீர்த்த யாத்திரைச் செய்தியை எந்த அளவிற்கு நம்புவது? இதன் அருகில் செல்வது ஆபத் தில்லையா? ஏற்கெனவே நூற்றுக் கணக்கான எலிகளை விழுங்கிய பூனையாயிற்றே இது! திடீரென்று இப்போது சாமியார்போல் பேசுகிறதே' என்றெல்லாம் எலிகள் குழப்பமடைந்தன.

எலிகளைச் சாப்பிட்ட பூனை போன்றதுதான் அகங்காரமும். ஆகவே அகங்காரத்தை நம்ப முடியாது. ஆனால் காசிக்குப் போகும் பூனைபோல் அகங்காரம் உன்னை குருவிடம் இட்டுச்செல்கிறது. மனிதன் வாழ்க்கையில் ஒரு கட்டத்தில் சலித்துக் களைத்துத்தான் போகிறான். ஒவ்வொரு பொருளும் அவனுக்குச் சலிப்பூட்டுகிறது. அகங்காரம் காரணமாக மனிதனுக்கு எதிலும் திருப்தி கிடைப்ப தில்லை. பிறவிதோறும் செல்வம் திரட்டிக் குவித்தாலும் மனநிறைவு கிடைப்பதில்லை. அகங்காரம் அடித் தட்டு இல்லாத (உடைந்த) வாளி போன்றது. அந்த வாளியில் எவ்வளவு நிரப்பினாலும் அது வெளியேறியபடியே இருக்கும்.

**மு**ல்லா நஸ்ருத்தீனிடம் ஓர் இளைஞன் வந்தான். "உங்களுக்கு ஞானத்தின் திறவுகோல் கிடைத்துவிட்டதெனக் கேள்வியுற்றேன். நீங்கள் தயவுசெய்து எனக்கு குருதேவராக இருந்து என்னைச் சீடனாக உங்கள் காலடியில் சேர்த்துக்கொள்ளுங்கள்," என வேண்டினான்.

முல்லா பதிலளித்தார், "ஆம், ஞானத்திற்கான சாவி எனக்குக் கிடைத்து விட்டது என்பது உண்மையே. ஆனால் அதைக் கற்றுக் கொள்வதற்கு அளவுகடந்த பொறுமை தேவை. முதலில் உன்னிட

முள்ள பொறுமையின் அளவை சோதித்துப் பார்ப்பேன். எந்த சூழ்நிலையிலும் நீ பதறாமல் பொறுமையாக இருந்தால் உன்னைச் சீடனாக ஏற்றுக்கொள்வேன்.''

இளைஞன் பெருமையாகச் சொன்னான், ''நான் மிகவும் பொறுமைசாலி. நீங்கள் என்னைச் சோதிக்கலாம்.''

''சரி, நான் இப்பொழுது தண்ணீர் இறைப்பதற்காகக் கிணற்றடிக்குச் செல்கிறேன். நீயும் என்னுடன் வா. அப்போது உன்னை பரீட்சித்துப் பார்க்கிறேன்,'' என்றார் முல்லா.

முல்லா வாளியை எடுத்துக்கொண்டார். அதில் அடிப்பாகம் இல்லாததைக் கண்டு இளைஞன் சற்றுத் திகைத்தான். முல்லா தன்னை சோதிக்கவுள்ளதால் இப்போது எதுவும் பிரச்சினையைக் கிளப்ப வேண்டாம் என்று மௌனமாக முல்லாவைப் பின்தொடர்ந்தான். அவர் கிறுக்குப் பிடித்தவர் போலும் என்று ஓர் எண்ணம் அவனுக்குத் தோன்றியது. அவன் கஷ்டப்பட்டு பொறுமை காத்தான்.

இருவரும் கிணற்றடியை அடைந்தனர். கயிற்றில் வாளியைக் கட்டி முல்லா அதைக் கிணற்றில் இறக்கினார். கயிற்றை அசைத்து வாளியில் தண்ணீர் நிரப்பிக்கொண்டார். தண்ணீர் மட்டத்தில் வாளி முழுமையாக நிரம்பியிருந்ததாகத் தெரிந்தது. முல்லா கயிற்றை மேலே இழுத்ததும் வாளியிலிருந்த தண்ணீர் வெளியேறி காலி வாளிதான் மேலே வந்தது. உடனே மறுபடியும் முல்லா வாளியைக் கிணற்றில் இறக்கினார்.

இளைஞன் அதிர்ச்சியடைந்தான். இதென்ன மடத்தனமான செயலாக உள்ளதே. இந்த முட்டாளா எனக்கு ஞானம் தரக்கூடியவர்? இவரிடமா ஞானத்தின் திறவுகோல் உள்ளது? இவரிடம் வந்து மாட்டிக்கொண்ட நான்தான் மடையன் என்று இளைஞன் தன்னையே நொந்துகொண்டான்.

அவன் முகம் போன போக்கை கவனித்த முல்லா, ''என்ன தம்பி விஷயம்? நீ கஷ்டப்பட்டுக் கோபத்தை அடக்கிக் கொள்வது போல் தெரிகிறதே,'' என்று அப்பாவிபோல் கேட்டார்.

இளைஞன் வெடித்துவிட்டான், ''பிறகென்ன, நான் என்னை முட்டாள் என நினைத்துக்கொண்டு உம்மிடம் அறிவு பெற வந்தேன்.

நீர் வடிகட்டின முட்டாளாக இருக்கிறீரே. நீரா எனக்கு பாடம் சொல்லித்தர முடியும்? நான் இப்போதே உங்களுக்கு ஒரு பாடம் கற்பிக்கிறேன். அதாவது, இப்படித் தண்ணீர் இறைத்தால் வாளி ஒருநாளும் நிரம்பாது."

முல்லா சிரித்தார். "மாட்டிக்கொண்டாயா? நீ குறுக்கிட்டுப் பேசிவிட்டாய். பொறுமை இழந்துவிட்டாய். உன் அகங்காரம் அந்த வாளி போன்றது. அதற்கு ஒருபோதும் திருப்தி கிடைக்காது. மரியாதையாக உடனே ஓடிப்போ. உன்னை நான் சீடனாக ஏற்க முடியாது. ஏனெனில் என் கட்டளையை நீ மீறிவிட்டாய். நீ இன்னும் சற்றுப் பொறுமையைக் கடைப்பிடித்திருக்கலாம். நான் உனக்கு ஒரு விஷயம் கற்பிக்க நினைத்திருந்தேன்."

ஆம், எத்தனையோ பிறவிகளாக நாம் அகங்காரம் கேட்பதை எல்லாம் நிரப்பிக்கொண்டே வருகிறோம். ஆனால் அடித்தட்டில்லாத வாளிபோல் அகங்காரம், எல்லாவற்றையும் வெளியே தள்ளிவிட்டது. அதை பணத்தால், பதவியால், அன்பால், தியாகத்தால், ஞானத்தால் என்று எதைக்கொண்டு நிரப்பினாலும் அகங்காரம் திருப்தி அடைவதில்லை. அகங்காரத்தின் இந்தத் தோல்விதான் உன்னை இறைவனின் இல்லத்தின் வாசற்படியில் கொண்டுவந்து நிறுத்துகிறது.

இதற்காகவே நீ குருவிடம் வருகிறாய். அஹங்காரத்துக்கு ஏதோ ஒரு நம்பிக்கை குரு உன்னை அறநெறியால், ஞானத்தால், தியானத்தால் நிரப்பி திருப்திப்படுத்துவார் என்று நம்புகிறாய். நிரப்புதல் காரியம் மட்டுமே குருவின் அருகிலும் நடைபெற்றால் நீ திருப்தி பெறமாட்டாய். ஆனால் குருவிடம் சமர்ப்பண உணர்வு உனக்குத் தோன்றினால் அகங்காரம் அதிக நாள் நீடிக்காது. குரு பக்தியும் அகங்காரமும் ஒரே மனத்தில் அதிகநாள் ஒன்றாக இருக்க முடியாது. இந்திக் கவிஞர்ரஹீம் ஒரு பாட்டில் கேட்கிறார்;

**முள்மரத்தின் அருகிலே வாழைமரம் நீடிக்குமா**
**கிளைகள் காற்றில் அசையும்போதெல்லாம்**
**வாழையின் உடல் கிழிந்துபடுமே**

முள்மரம் வேண்டுமென்றே வாழையைக் கிழித்துப்போட முயல்வதில்லை. காற்றில் அது சுயமாக ஆனந்தமாக அசைகிறது. ஆனால் அதன் அசைவு வாழையின் அழிவிற்குக் காரணமாகி விடுகிறது.

உன் மனத்தில் அகங்காரம் இருப்பது இயற்கையானது, சுபாவமானது. சத்குருவிடம் உனக்குத் தோன்றும் பக்தி இயற்கையாக அமைந்திராது. எனவே குருவிடம் அன்பு உதிப்பது அதிசயமான நிகழ்ச்சி. ஏனெனில் தன்னை நேசிப்பது அகங்காரம். பிறரை நேசிப்பதில் அகங்காரம் இருக்காது. பிறரை நேசிக்கும்போது அவரிடமுள்ள சிறப்பை ஒப்புக்கொள்வதாக அர்த்தம். சத்குருவை நேசிக்கும்போது அங்கு உன் அகங்காரம் தலைதூக்கி திருப்தி பெற வாய்ப்பில்லை. அவரிடம் உன்னை சமர்ப்பித்துவிட்டால், அவர் முன்னிலையில் பரவசமடைந்தால், துள்ளி ஆடினால், உன்னிடம் எஞ்சியுள்ள அகங்காரமும் அதிக நாள் நீடிக்காது. குருவின் ஞானக் கூர்மைபட்டு உன் அகங்கார வாழை கிழிந்துபோகும்.

நீ உன்னிடமுள்ள அகங்காரம் பற்றி எதுவும் சிந்திக்காதே. அதைப் பற்றி கவனம்கூட செலுத்தாதே; கவலைப்படாதே. நீ குருவிடம் ஆழமாக, முழுமையாக உன்னை சமர்ப்பித்துவிடு. உன் அகங்காரம் கொஞ்சம் - கொஞ்சமாக விடைபெற்றுச் சென்றுவிடும். அதற்கு விடைகொடுத்து அனுப்ப பிரயத்தனப்படாதே. ஏனெனில் அதன் மீது கவனம் திரும்பினாலே ஆபத்துதான். அதை அலட்சியம் செய்வதுதான் அதனிடமிருந்து தப்பிக்கும் வழி. உன் முழு சக்தியையும் உபயோகித்து குருவிடம் சமர்ப்பணம் ஆவதிலேயே கவனம் செலுத்து.

ஒருவன் மாடிப்படிகளில் ஏறும்போது கவனித்துப் பார். வலது காலை (புதிய) மேல் படியில் வைக்கும்போது இடது கால் (பழைய) கீழ்ப்படியில் உள்ளது. அடுத்து அவன் இடது காலை உயர்த்துகிறான். அகங்காரம் பழைய படி என்றால் உனது கால்களை சமர்ப்பண உணர்வாகச் சொல்லலாம். அவை புதிய படியைத் தேடுகின்றன. ஒரு கால் புதிய படியைத் தொடாதவரையிலும் பழைய படியிலிருந்து மற்றொரு காலை எடுக்க முடியாது; எடுக்கவும் கூடாது. எடுத்தால் தலை குப்புற விழுவாய். மேல்படியில் காலை ஊன்றிய பிறகு கீழ்ப்படியிலிருந்து காலை எடுத்தால் அபாயம் விளையாது. ஒரு காலை சமர்ப்பண உணர்வில் அழுந்த ஊன்றிவிட்டால் பிறகு அகங்காரமாகிய இரண்டாவது காலைத்தூக்குவதில் சிரமம் இருக்காது.

ஆனால் அவசரப்பட வேண்டிய அவசியமில்லை. நடைபெற உள்ளவற்றை அவற்றின் இயற்கையான வேகத்திலேயே

நடைபெறவிடு. இன்னும் உன்னிடம் அகங்காரம் மிஞ்சியுள்ளதா, சமர்ப்பண உணர்வை மேலும் தீவிரமாக்க வேண்டுமா என்றெல்லாம் ஆராய்ச்சி செய்யாதே.

ஓர் அறை இருட்டில் மூழ்கியிருப்பதைப் பார்க்கிறாய். எப்போதிலிருந்து அங்கே இருட்டாக இருக்கிறது என்று தெரியவில்லை. நூற்றுக் கணக்கான ஆண்டுகளாக அங்கே இருட்டு நிலவுவதாகக் கேள்விப்படுகிறாய். ஒரு சிறிய அகல்விளக்கை அங்கே ஏற்றினால் இருட்டு போய்விடுமா என்று நீ கேட்கமாட்டாய். இருட்டும் சரி, அகங்காரமும் சரி, எத்தனை நூற்றாண்டுகள் பழைமையாயினும், அவை திடவுருவில் இருப்பவை அல்ல. அறிவு விளக்கை, சமர்ப்பண விளக்கை, அன்பு விளக்கை ஏற்றினால் அகங்கார இருட்டு கரைந்து விடும்.

விளக்கை ஏற்றினால் இருட்டு நம்மிடம், 'இதென்ன அநியாயம் செய்கிறாயே. நான் ஆயிரம் ஆண்டுகளாக இந்த அறையில் ஆட்சி செய்துவருகிறேன். நீ இங்கே திடீரென்று வந்த விருந்தாளி. அறையின் சொந்தக்காரனாகிய என்னை விரட்டுகிறாயே. விளக்கு இப்போதுதானே ஏற்பட்டது. நான் எந்தக் காலத்தில் இருந்தோ இங்கே வசிக்கிறேன்' என்றெல்லாம் வாதம் புரியாது; புகார் செய்யாது; செய்யவும் முடியாது. இருட்டிற்கென்று தனிப்பட்ட பலம் இல்லை; இருத்தலும் இல்லை. விளக்கு ஏற்றாததால்தான் இருட்டு இருக்க முடிந்தது. வெளிச்சம் வந்ததும் இருட்டால் நீடிக்க முடிவதில்லை.

உன் உள்ளத்தில் அகங்கார உணர்வை மீறி சமர்ப்பண உணர்வு தோன்றினால் உன் தனித்தன்மை போய்விட்டதோ என்று அஞ்சாதே. பாறையின் இடுக்கில் துளிர்க்கும் இலைபோல், அடர்த்தியான இருட்டையும் நீக்கும் மண்விளக்குபோல், உன் உள்ளத்தில் சமர்ப்பண உணர்வு சிறிதளவு தோன்றினாலும் போதும். நீண்டகால அகங்காரமும் அதற்கு முன் தாக்குப் பிடிக்க முடியாது. சிறிய அளவிலான சமர்ப்பண அக்னியும் போதும். பல தலைமுறைகளாகத் திரண்டுவிட்ட மொத்த அகங்காரமும் எரிந்து சாம்பலாகிவிடும். குருவிடம் சமர்ப்பண உணர்வு வலிமை வாய்ந்தது. அதன் பலம் உனக்குத் தெரியாததால் அகங்காரம் குறித்துக் கவலைப்படுகிறாய். இந்தக் கவலையில் உன் சக்தியை வீணாக்காதே. எல்லாக் கவலைகளையும் உதறிவிட்டு முழு மனத்துடன்

சமர்ப்பண உணர்வில் உன் முழு சக்தியையும் உபயோகி. அந்த சக்தி உன் சமர்ப்பணத்தில் கலந்து பரவும். பிறகு அகங்காரத்திற்கு நிற்க நிழல் கிடைக்காது!

**மூன்றாம் கேள்வி**

> **என் வாழ்க்கை எதுவும் எழுதப்படாத வெற்றுக் காகிதமாக இருந்தது. அதில் நீங்கள் என்னவோ எழுத, என் வாழ்க்கையே மாறிவிட்டது. நான் பல பிறவிகளாக அன்பையும் ஆனந்தத்தையும் தேடி அலைந்திருக்கிறேன். அவை இரண்டும் இப்பிறவியில் நான் கேட்காமலேயே தங்களிட மிருந்து குரு பிரசாதமாகக் கிடைத்துள்ளன. நான் இதற்குத் தகுதியற்றவன். தங்களிட மிருந்து கிடைத்த இந்த ஆன்மிகச் செல்வத்தை நான் பிறருடன் பகிர்ந்துகொள்ள விழைகிறேன். எனக்கு ஆசிகூறி வழிகாட்டி அருளுங்கள்.**

முதல் விஷயம் - உனது வாழ்க்கை என்னும் வெற்றுக் காகிதத்தில் நான் எதுவும் எழுதவில்லை. உனது வாழ்க்கை வெற்றுக் காகிதமாக இல்லை. நீ அதை அவ்வாறு ஆக்கினாய். ஞானத்திற்குப் பதில், பிரமை காரணமாக, தகவல்களைச் சேகரித்தாய்.

நான் எதுவும் எழுதாத நிலையில், நீயாக ஏதோ எழுதிக் கொண்டதற்கு நான் பொறுப்பாகமாட்டேன். என் முயற்சியெல்லாம், என் வேலையெல்லாம், நீ உன் வாழ்க்கைக் காகிதத்தில் ஏற்கெனவே எழுதி வைத்திருப்பதை அழிப்பதுதான்! நீ ஞானம் என்ற பெயரில் திரட்டியதையெல்லாம் பிடுங்கிக்கொள்ள விரும்புகிறேன். உன்னை 'நிர்வேத' நிலையில் கொண்டுபோய்விட விரும்புகிறேன். அதுவே நிர்வாண நிலையும் ஆகும். அதுதான் உனக்கு விளைந்துள்ளது. ஆனால் பழக்கம் காரணமாக உன் பார்வையும் சிந்தனையும் தவறான விளக்கம் எடுத்துக்கொள்கின்றன.

இன்னொருவர் எதுவும் எழுதுவதால் யார் வாழ்க்கையும் மாறிவிடுவதில்லை. நான் எதுவும் எழுதினால் ஏற்கெனவே எழுதப்பட்டுள்ளதுடன் சேர்ந்து கொள்ளும், அவ்வளவுதான். அது ஓர்

அடிக்குறிப்பாக மட்டுமே இருக்கும். அதற்குக் கூடுதலான மதிப்பு இருக்காது. நீ ஏற்கெனவே உன் கடந்த காலம் முழுவதையும் உன் நினைவுப் பதிவேட்டில் எழுதிவைத்திருக்கிறாய். நான் எதுவும் எழுதினால் அதுவும் திரளான அந்த விஷயங்களுள் போய் மறைந்துவிடும். ஆகவே உன் வாழ்க்கையில் எழுத்து மூலமாக நான் எதையும் சேர்க்க முயலவுமில்லை.

ஆசிரியருக்கும் குருவுக்கும் இடையே இதுதான் வேறுபாடு. ஆசிரியர் உன் மனத்தில் எழுதுகிறார்; குரு அதை அழிக்கிறார்! ஆசிரியர் கற்பிக்கிறார்; குரு நீ கற்ற எல்லாவற்றிலிருந்தும் விடுவிக்கிறார்! ஆசிரியர் அதிகபட்சம் உன்னை ஞானம் பெறச் செய்கிறார். குரு அந்த ஞானநிலைக்கும் மேலேயுள்ள நிலைக்கு நீ எழும்பக் கற்றுத் தருகிறார். ஆகவே ஆசிரியர், குரு ஆகிய சொற்கள் வெவ்வேறு தளத்தில் இயங்குகின்றன.

ஆசிரியர் யார் - உனக்குக் கல்வி கற்பிப்பவர்; நடத்தை விதிகள் போதிப்பவர்; சுயக்கட்டுப்பாடு பழக்குபவர்; வாழும் முறையை அறிமுகப்படுத்துபவர்; உனக்கு ஏதாவது கொடுத்தபடி உன்னை நிரப்புபவர்; பல விஷயங்களை நீ அறிந்துவிட்டதாக உனக்கு பிரமை உண்டாக்குபவர்; உனக்குச் சான்றிதழ்களும் பட்டங்களும் வழங்குபவர்.

குரு யார் - உன்னிடமுள்ளதை வெளியேற்றி உன்னை வெறுமையாக்குபவர்! நீ கற்றதையெல்லாம் கற்காததுபோல் ஆக்க உனக்குக் கற்பிப்பவர்!

**ஜெ**ர்மனி நாட்டு தத்துவ அறிஞர் ஒருவர் ரமண மகரிஷியிடம் வந்தார். "சுவாமி நான் வெகுதொலைவிலிருந்து வந்துள்ளேன். இங்கு தங்கி தங்களிடம் ஏதேனும் கற்றுக்கொள்ள ஆசைப்படுகிறேன்," என்று அவர் வேண்டுகோள் விடுத்தார்.

"நீங்கள் வழி தவறி இங்கே வந்திருக்கிறீர்கள். இதுவரை கற்றதை மறக்கடிப்பதற்கான பயிற்சிதான் இங்கே தரப்படுகிறது. நீங்கள் ஏதேனும் கற்பதற்கு ஆசைப்பட்டால் வேறு இடம் தேடி செல்லுங்கள். கற்றதையெல்லாம் மறப்பதற்கு தயாரான மனநிலை தோன்றியதும் இங்கே வாருங்கள்," என்று கூறி ரமணர் அவரை அனுப்பிவிட்டார்.

இதுவரையிலான உனது வாழ்க்கை சிதிலமடைந்த கட்டடத்துக்கு சமம். அதில் வெளியிலிருந்து எதையாவது சேர்த்தாலும் மாற்றம் எதுவும் தெரியாது. இடிபாடுகள் அப்படியே நீடிக்கும். உன்னிடம் பழைமை திரண்டிருக்கிறது. அதனுடன் புதியது சேர்த்தால் அது காணாமல் போய்விடும். கடலில் ஒரு ஸ்பூன் சர்க்கரை தெளித்து முழுக்கடலும் இனிப்பாகிவிடும் என் நினைப்பதுபோல்தான் இதுவும். பிரச்சினை உனக்கு சர்க்கரை சாப்பிடக்கொடுத்து இனிமையாக்குவது பற்றி அல்ல; உனக்குள் மண்டியிருக்கும் விஷத்தை எப்படி வெளிக்கொணர்வது என்பதுதான் கேள்வி. நீ இதுவரை வாழ்ந்த விதம் தவறானதாகும். நீ நினைத்தது எல்லாம், செய்தது எல்லாம் தவறானவை. நீ வாழ்வின் ரகசியத்தை அறியவில்லை. வாழ்க்கையெனும் கொண்டாட்டத்தில் கலந்துகொள்ளவில்லை. நீ பிரச்சினைகள் என்ற அடர்ந்த காட்டில் சிக்கிக்கொண்டுவிட்டாய். நான் உனக்கு மற்றவர்களைப்போல் தத்துவங்கள் எதுவும் அளிக்கவில்லை. உனக்கு ஏற்கெனவே உள்ள பிடிப்புகளைத்தான் அகற்றுகிறேன். அவைதாம் உனக்கு பிரச்சினைகள் ஏற்படக் காரணம். உனக்குப் புதிதாக எதுவும் கிடைத்தாலும் நீ பழகிப்போன கண்ணோட்டத்தைக் கொண்டே அதைப் புரிந்துகொள்வாய்.

நீ உனது வாழ்க்கை மாறிப்போனதாகச் சொன்னாயே. ஏன் என்றால் நான் உன் வாழ்க்கைக் காகிதத்திலிருந்து சில பகுதிகளை நீக்கிவிட்டேன். இதனால் கொஞ்சம் காலியிடம் ஏற்பட்டுள்ளது. உன் வாழ்க்கையில் மண்டியிருந்த குப்பைகூளங்களைக் குறைத்தேன். அந்த வெற்றிடம் விசாலமாகி, உன் வாழ்க்கைக் காகிதம் முழுமையாகக் காலியாகிவிட்டால், அந்த வெற்றிடத்தில் பரமாத்மா வந்து இறங்குவார். பிறர் புகட்டிய பழைய விஷயங்களால் நீ நிரம்பிக் கிடக்கும்வரை பரமாத்மா உனக்குள் வந்திறங்க காலியிடம் கிடைக்காது.

மழை பெய்கிறது. மலை மீதும் பெய்கிறது. ஆனால் தண்ணீர் அங்கே நிற்பதில்லை. காரணம், மலைகள் பருப்பொருளால் நிரம்பியிருக்கின்றன. ஆனால் பள்ளத்தாக்கில் தண்ணீர் சேர்கிறது. இதனால் ஏரிகள் உருவாகின்றன. பள்ளத்தாக்கு காலியாக இருந்ததால், அங்கே வெற்றிடம் இருந்ததால், தண்ணீர் பாய்ந்து நிரம்ப முடிந்தது. ஆண்டவன் எல்லோர் மீதும் அருள்மழை பொழிகிறார். என் மீது எத்துணை அளவு பொழிகிறாரோ அதே அளவில்தான் உன் மீதும்

பொழிகிறார். ஆனால் நீ முன்பே நிரம்பியிருந்தால் அவரது அருள் உன் மீது பொழியாது. அருள் இறங்கித் தங்க இடமிருக்காது. நீ காலி பாத்திரமாக ஆனால்தான் உனக்குள் அருளை நிரப்பிக்கொள்ள முடியும்.

இந்த வாழ்க்கையில் ரகசிய விதிமுறை ஒன்று உள்ளது. நீ மலையைப் போல் முன்பே நிரம்பிக்கிடந்தால், உனது அகங்காரம் மலைச் சிகரம்போல் ஓங்கி நிற்கும். இந்நிலையில், கடவுளின் அருள் மழையாக இறங்கினாலும் அது உனக்குக் கிடைக்கப்பெறாதவனாக இருப்பாய். நீ பள்ளத்தாக்குபோல் ஆகிவிடு. அகங்காரமின்றி காலியாக இரு. பணிவுடன் விளங்கு. 'நான்' என்ற உணர்வை அழி. கடவுள் உன்னை நிரப்பிடுவார். இதையே அஷ்டாவக்ரர், 'நான்' உணர்வு இருக்கும் வரை சத்தியத்தின் தரிசனம் கிட்டாது என்றும், அந்த 'நான்' உணர்வு வெளியேறிவிட்டால் சத்தியம் அங்கே இறங்கிவரும் என்றும் தெரிவிக்கிறார்.

என் முயற்சியெல்லாம் உனக்கு ஓர் அற்புதக் கலையைக் கற்பிக்கவே மேற்கொள்ளப்படுகிறது. உன்னிடமுள்ள 'நான்' என்பது அழிந்து, 'நான்' என்பது இறந்து, நீ எப்படி வாழ்வது என்பதை இக்கலை அறிமுகப்படுத்துகிறது. ஆகவே நான் உனக்குக் கற்பிப்பதை ஒருவகையான மரணக்கலை எனலாம். இது ஒரு கதவு போன்றது. இதனைக் கடந்து சென்றால் பெருவாழ்வு பெறலாம். இந்த மாற்றம்தான் இப்போது உனக்குள் நிகழ்ந்துகொண்டிருக்கிறது.

நீ பல பிறவிகளில் தேடிய அன்பும் ஆனந்தமும் இப்போது யாசிக்காமலேயே குரு பிரசாதமாக உனக்குக் கிடைத்துவிட்டது என்று கூறினாய். அதுவே சரி. குரு பிரசாதம் யாசிக்காமல் சுயமாகத்தான் கிடைக்கும். கேட்டுக் கிடைப்பது பைசா பெறாது. கோரிக்கை வைத்துப் பெறும் எதற்கும் மதிப்புக் கிடையாது.

நீ இவ்வுலகில் பிச்சைக்காரரைப்போல் யாசித்தபடி இருந்தால் அதுதான் ஆசைப்படுதல் என்பது. இது வேண்டும் – அது வேண்டும் என அலைவதுதான் ஆசைப்படல் எனப்படுகிறது. நீ எத்துணை அதிகமாக ஆசைப்படுகிறாயோ அதே விகிதத்தில் உனது பிச்சைக்கார மனப்பான்மையும் வளர்கிறது. அனைத்து ஆசைகளும் நிறைவேற முடியாதாகையால் உன் வாழ்க்கை சோகமயமாகி விட்டதாக உனக்குத் தோன்றுகிறது.

சுவாமி ராம் என்றொரு துறவி. அவர் ஒரு சம்பவம் கூறுகிறார். எங்கோ அவர் சென்றபோது வழியில் ஒரு வீட்டின் அருகே நின்றார். வீட்டு முற்றம் தெளிவாகத் தெரிந்தது. காலை நேரம். திறந்த முற்றத்தில் சூரிய ஒளி எங்கும் பரவியிருந்தது. முற்றத்தில் ஒரு குழந்தை விளையாடுவதைத் துறவி பார்த்தார்.

குழந்தை வெயிலில் தெரிந்த தன் நிழலைப் பிடிக்க முயன்றது. நிழலை நோக்கித் தாவியது. நிழலும் தாவி, குழந்தையின் கைக்கு அகப்படவில்லை. சுவாமி ராம் இந்த வேடிக்கையைக் கண்டு சத்தமாகச் சிரித்தார். குழந்தை அவர் பக்கம் திரும்பிப்பார்த்தது. அவர் அன்புடன் குழந்தையை நெருங்கினார். "நிழலைப் பிடிக்க வழி சொல்லட்டுமா?" என்று கேட்டார். குழந்தை அழுதபடியே சரி என்று தலையாட்டியது.

சுவாமி ராம் குழந்தையின் கையை உயர்த்தி நெற்றியில் பதியவைத்தார். நிழலும் அவ்வாறே செய்தது. அது குழந்தைக்குத் தன் கையால் நிழலைப் பிடித்துவிட்டது போலிருந்தது. உடனே அது மகிழ்ந்து சிரித்தது.

இதைக் கவனித்த குழந்தையின் தாயார் மகிழ்ந்தாள். அவள் துறவியிடம், "சாமர்த்தியமாகக் குழந்தையை திருப்திப்படுத்தி விட்டீர்களே. உங்களுக்குக் குழந்தை வளர்ப்பில் முன்பே அனுபவம் இருந்திருக்கிறது போல் உள்ளதே," என்று பாராட்டினாள்.

துறவி விளக்கினார், "துறவியாகிய எனக்கு எப்படிக் குழந்தைகள் சுபாவம் தெரியும்? ஆனால் இந்தக் குழந்தை என்ன செய்ததோ அதைத் தான் நான் பல பிறவிகளாகச் செய்துவருகிறேன். பிறகுதான் எனக்கு வழி புலப்பட்டது. அது என்ன தெரியுமா? நீ எதை யாவது ஓடி-ஓடி பிடிக்க முயன்றால் அது உன் கைக்கு அகப்படாது. நீ கைகளைக் கட்டியபடி உட்கார்ந்துவிடு. கையை விரித்து நீட்டாதே. யாசிக்கவே செய்யாதே. துரத்தி ஓடாதே. பிடுங்காதே. இந்நிலையில் உனக்கு எல்லாம் கிடைத்துவிடும்.

"நான் விட்டு வெளியேறியது ஒரு வீட்டை மட்டுமே. பதிலுக்கு உலகமே எனக்குச் சொந்தமாகியது. ஒரு குடிசையை, ஒரு முற்றத்தைத் துறந்து வெளியேறினேன். அதன்பின் ஆகாயம் முழுதுமே எனக்கு முற்றமாகிவிட்டது. சந்திரனும் நட்சத்திரங்களும் அந்த எனது

முற்றத்தில் உலவுகின்றன. சூரியன் எனது முற்றத்திலிருந்து தான் புறப்படுகிறது.''

உன் வாழ்க்கையில் முக்கியமானதாக நிகழ்பவை நீ யாசிக்காமல்தான் நடைபெறுகின்றன. நடைபெறாதவைக்கெல்லாம் காரணம் அவற்றை நீ யாசிப்பதுதான். உன் யாசக மனப்பான்மைதான் தடையாக உள்ளது. எதையும் வேண்டுமென வற்புறுத்தாதே. எதன் மீதும் விருப்பம் கொள்ளாதே. நடப்பது தானாக நடைபெறத்தான் போகிறது. நீ மட்டும் தான் கடவுளைத் தேடிக்கொண்டிருப்பதாக நினைக்கிறாய். அவரும் உன்னைத்தான் தேடிவருகிறார் 'நான்' என்ற திமிர் இல்லாத உன்னை. நீ மட்டுமே அவரைத் தேடுவதாயின் அவர் கிடைப்பது சிரமமே. அவர் ஒளிந்துகொண்டால் கண்டு பிடிக்க முடியாது. அவர் இருக்குமிடம் தெரியாதபோது தேடுதல் எங்ஙனம்? அவரும் உன்னைத் தேடுகிறார். கண்ணுக்குப் புலப்படாத அவரது திருக்கை உன் அருகில் வருகிறது. நீ அந்த சமயம் அங்கிருப்ப தில்லை. நீ வேறு எதையோ தேடிக்கொண்டு போய்விட்டாய்.

**இ**ரு நண்பர்கள். ஒரு நாள் சந்தித்தார்கள். முந்திய இரவு அவரவர் கண்ட கனவைச் சொன்னார்கள். 'அ' சொன்னான்: "என் கனவில் நம் ஊரில் நடைபெறும் கண்காட்சி தோன்றியது. நான் அதைக் கண்டு களிக்கச் செல்கிறேன். அந்த அனுபவம் மிகுந்த ஆனந்தம் தருவதாக இருந்தது. நீயும் என்னுடன் இல்லையே என்று வருத்தமாக இருந்தது.''

'ஆ' சொன்னான் - "நான் உன்னுடன் எப்படி வந்திருக்க முடியும்? அதே நேரம் அதைவிட ஆனந்தமான கனவில் இருந்தேன். பௌர்ணமி நிலவொளி. ஆற்றில் படகோட்டுகிறேன். அருகில் யார் தெரியுமா? அந்த பிரபல நடிகை...!''

'அ' கேட்டான் - "என்னை கூப்பிட்டிருக்கக்கூடாதா? நானும் வந்திருப்பேனே. எனக்கும் அந்த நடிகையைப் பிடிக்கும்.''

'ஆ' திருப்பிக் கேட்டான் - "உன்னை எப்படிக் கூப்பிடுவது? நீதான் கனவில் கண்காட்சிக்குப் போய்விட்டாயே!''

கடவுள் உன்னைத் தேடி வருகிறார். ஆனால் நீ வேறெங்கோ இருக்கிறாய். நீ வீட்டில் அல்லது ஓரிடத்தில் நிலையாக இருந்தால்

தான் யாரும் உன்னைச் சந்திக்க முடியும். நீ யதார்த்த உலகில் வசிக்காமல் கனவில் ஆழ்ந்திருக்கிறாய். பொருட்காட்சிக்குப் போயுள்ளாய். ஆற்றில் படகு சவாரி செய்துகொண்டிருக்கிறாய். புனேயில் வசிக்கும் நீ தில்லியில் இருப்பதாகக் கற்பனை செய்கிறாய். அலுவலகத்தில் பியூனாக ஸ்டூலில் உட்கார்ந்திருக்கும் நீ ராஷ்டிரபதி யாகி விட்டதுபோல் கற்பனை செய்கிறாய். கடவுள் உன் அடிமை யில்லை. நீ கற்பனையில் வசிக்கும், மாயையில் வசிக்கும், ஒவ்வோர் இடமாகத் தேடி வரமாட்டார். உன் நிஜமான இல்லம், நிஜ சொரூபம் ஸ்தாபிக்கப்பட்ட இடத்திற்குத்தான் வந்து சந்திப்பார்.

நீ யோசிப்பதைப்போல்தான் நீ ஆகின்றாய். உன் உடல் வேண்டுமானால் இங்கே இருக்கும். மனம் பலவற்றை யாசித்தபடி எங்கெங்கோ அலைந்தால் உன் உடல் சடலத்துக்கு சமம். உடலும் மனமும் ஒருங்கிணைந்த நிலையில்தான் கடவுள் உன்னிடம் வரமுடியும். நீ எதுவும் வேண்டாம் என்று எதையும் யாசிக்காத நிலையை அடைந்ததும் ஒரு புரட்சியே நிகழும். அப்போது மனமாகிய நீ உடலாகிய உன் இல்லத்தில் இருப்பாய். எதுவும் தேவையென்ற நிலை இல்லாதபோது வீட்டிற்கு வெளியே செல்ல வேண்டிய அவசியமும் எழுவதில்லை. இது வேண்டும் - அது வேண்டும் என்னும் உன் ஆசைதான் உன்னைத் தொலைதூர இடங்களுக்கு, சந்திர னுக்கு, சுவர்க்கத்திற்கு வழி தேடிப்போகத் தூண்டுகிறது. நிகழ்காலத்தில் வாழவிடாமல் எதிர்காலக் கற்பனைகளில் மூழ்கச்செய்கிறது.

தேவை காரணமாக, யாசிப்பதன் காரணமாகத்தான் 'காலம்' என்ற அம்சம் பிறக்கிறது. நான் இங்கே சொல்வது கடிகார அடிப்படையிலான காலம் இல்லை. அது காட்டும் நேரம் வேறு. ஆனால் உன் உள்ளத்திலுள்ளே தோன்றும் காலம் நீ யாசிப்பதன் காரணமாக உருவாகிறது. யாசிப்பதற்கும் கிடைப்பதற்கும் நடுவில் இடைவெளியைத் தவிர்க்க முடியாது என்பதால் யாசித்தால் எதிர்காலம் என்னும் காலவகை ஏற்படுகிறது. கேட்பது அடுத்த நிமிடமே கிடைத்தாலும் அது எதிர்காலம்தான். உனக்கு எதுவும் தேவையில்லை எனில் நாளைய தினம் பற்றி யோசிக்க வேண்டியதில்லை. எதிர்காலம் குறித்த கவலையில்லை. கையில் 'இன்று' என்பது மட்டுமே இருக்கும். அதையும் சுருக்கி 'இப்பொழுது' அல்லது 'இக்கணம்' மட்டுமே

உள்ளதாகச் சொல்வது அதிகம் பொருந்தும். இந்த நிமிடம்தான் உண்மையானது, நிச்சயமானது, கைவசத்தில் உள்ளது.

இத்தகைய நிலையில்தான் நீ வேண்டிக்கொள்ளாமலே கடவுள் உனக்குக் கிடைத்துவிடுவார். ஏனெனில் எதையும் நீ வேண்டாதபோது காலம் என்னும் அம்சம் அழிந்துபோகிறது. இதனால் காலம் சம்பந்தப் பட்ட கனவுகளும் தோன்றுவதில்லை. நீ எதுவும் கேட்காததால், காலத்தின் வசப்படுவதில்லை என்பதால், நீ உன்னிடத்திலேயே மையப்பட்டிருக்கிறாய். அந்த இடத்தில்தான் கடவுள் உன்னை எதிர்பார்த்துத் தேடிவருகிறார். நீ உன் மையத்திலிருந்து வேறெங்கோ இருந்தால் கடவுள் உன்னை நெருங்கமாட்டார்.

ஆகவே அஷ்டாவக்ரர் அறிவுறுத்துகிறார்: எது எப்படி உள்ளதோ அதை அவ்வாறே அறிந்துகொள். எது உனக்குக் கிடைக்கிறதோ அது கிடைப்பதில் திருப்திகொள். அப்போது நீ உன் ஆத்மமையத்திலேயே இருப்பாய். சுகத்தைத் தேடி அலைவதும் இல்லை துன்பத்திலிருந்து தப்பிக்க உபாயம் தேடுவதுமில்லை. சுகமோ, துக்கமோ எது கிடைக்கிறதோ அப்படியே அமையட்டும். நீ உன் வாழ்க்கைக்கு சாட்சி மாத்திரமே என்பதை உணர். அவ்வாறு உணர்ந்ததும், சுவர்க்கப் பேரரசு உனக்கு சம்பவிக்கும். நீ அதை தேடிப் போகவேண்டியிருக்காது.

குரு ஓர் அறையின் வாயில் போன்றவர் மட்டும்தான். குருவை வணங்கும் போது திறந்த வாயிலை வணங்குகிறாய். குரு ஒரு நபர் அல்லர். குருவை ஒரு நபராக மறந்தும்கூட கருதாதே. அவ்வாறு நினைத்தால் அவர் தடுப்புச் சுவர்போல் ஆகிவிடுவார்.

குரு என்பவர் வாழ்க்கையில் நிகழும் அபூர்வமான சம்பவம். நீ அவரைப் பணிந்து நோக்கினால் அவரை ஊடுருவி அதற்கப்பாலும் நீ பார்க்க முடியும். குரு என்பவர் நபரில்லை என்பதால்தான் அவர் குருவாக உள்ளார்! அவர் 'இல்லை' என்பதில்தான் முழு ரகசியமும் அடங்கியுள்ளது. குருவை நீ உற்றுக் கவனித்தால் அவர் படிகம்போல் தெரிவார். சாதாரணக் கண்ணாடியில் இருபுறமும் பொருள்கள் தெரிகின்றன. நடுவில் கண்ணாடி இருப்பதுகூடத் தெரியாத அளவிற்கு சுத்தமான கண்ணாடி போன்றவர் குரு. அவர் கெட்டியான உள்பொருளற்றவர்.

குருவை உற்றுக் கவனிப்பது என்பதன் பொருள் - உன்னிடம் சமர்ப்பண உணர்வு, பேரன்பு, லயிப்பு, திடநம்பிக்கை இருக்க வேண்டும் என்பதாகும். இதுவே குருவை தியானம் செய்வது என்பதுமாகும். குருவை தியானம் செய்வது என்பதன் பொருள் என்ன? குருவின் பெயரை ஜெபிப்பதா தியானம்? குருவின் புகைப்படம் அல்லது ஓவியத்தைப் பார்த்தபடியே இருப்பதா தியானம்? இல்லை, இல்லை. குரு தியானம் என்பது குருவைப் பார்த்தல்தான். ஆனால் அவர் 'இல்லை' என்பதைத் தான் பார்த்தல் வேண்டும்! அவர் என்ற இடத்தில் சூனியம் திரண்டு நிற்பதைப் பார் இல்லாமை என்பது உனக்குத் தென்படுவதைப் பார்! அப்படிப் பார்த்தபடியே இருக்கையில் திடீரெனக் கடவுளின் தோற்றம் உனக்குத் தெரியத்தொடங்கும். அந்தத் தோற்றம் கிடைக்கும் நிலை வரைக்கும் வழி காட்டும் திறந்த வாசல் போன்றவர் குரு.

இயேசுநாதர் அறிவிக்கிறார் - நானே வாசல், நானே வழி. அவர் சொன்னது சரியே. தம்முடைய சீடர்களை நோக்கித்தான் அவர்களுக்கு குருவான அவர் அவ்வாறு சொல்கிறார்.

யாரை தரிசித்ததும் அவர்தான் உன் குரு என்று தோன்று கிறதோ, குரு என்று யாரை உனக்குப் பிடித்திருக்கிறதோ, அவரைக் குறித்து தியானம் செய். இந்த தியானத்தை நாம் 'சத்சங்கம்' என்றழைக் கிறோம். இதன் பொருள் - குருவின் அருகில் அமர்ந்திருத்தல்; அமைதியாக அவரைப் பார்த்தவண்ணம் இருத்தல்; அப்போது மனத்தை சாந்தமாக வைத்திருத்தல்; சிந்தனைகளின்றி மனம் சூனியமாக இருத்தல்; மனத்தை வெற்றிடமாக ஆக்கி, அங்கே குரு பிரசன்னமாவது கண்டு ஆனந்தமடை; அந்தச் சுவையை அனுபவி. சிறிது - சிறிதாக குருவின் இனிமை உனக்குள் இறங்கிப் பரவும். அதன் மூலம் குரு உன் இதயத்தில் வந்தமர்வார்.

**மு**கம்மதியத் துறவி ஒருவர். பெயர் பாய்ஜீத். அவர் சிலருடன் சேர்ந்து ஒரு சுடுகாடு வழியாகச் சென்றுகொண்டிருந்தார். அப்போது திடீரென அவரது உள்ளத்தின் ஆழத்திலிருந்து யாரோ 'நில்' என்று கட்டளையிட்டதுபோல் கேட்டது. துறவி தன்னுடன் வந்தவர்களை விலகி மேற்கொண்டு போகச் சொன்னார். அவர்கள் அவரிடம், "இது மயானபிரதேசம். இது தங்குவதற்குத் தோதான இடமில்லை. இரவில்

பயங்கரமாக இந்த இடம் தோன்றும். பேய் - பிசாசுகள் ஆட்டம் போடும்,'' என்று எச்சரித்தனர்.

துறவியோ, ''என்னை இங்கே நின்றுவிடச் சொல்லி அடிமனத் திலிருந்து எழுந்த குரலை நம்புகிறேன். நீங்களெல்லாம் போய் விடுங்கள்,'' என்று உறுதியாகக் கூறி அனுப்பிவிட்டார்.

துறவியும் முதலில் மயானத்தில் நின்று நிதானிக்க விரும்ப வில்லை தான். மயானத்தில் யார்தான் தாமதிப்பார்கள்? மற்றவர்கள் சென்றதும் உள்ளத்திலிருந்து கேட்ட ஒரு குரல், ''மாலையில் சூரியன் மறைவதற்குள் நீ முடிந்த அளவிற்கு மண்டையோடுகளைத் திரட்டு,'' என்று கட்டளையிட்டது. இது என்ன விபரீதக் கட்டளையாக இருக்கிறதே என்று துறவி சற்று அஞ்சினார். உள்ளேயிருந்து பேசுவது பிசாசோ என்று துறவி நினைத்தார். பிறகு, 'அப்படி இருக்காது. இது ஆண்டவன் கட்டளை' என்று நம்பிக்கை பெற்றார்.

துறவி சில மண்டையோடுகளைச் சேகரித்ததும் மறுபடியும் உள்ளேயிருந்து கேட்ட குரல், ''ஒவ்வொரு மண்டையோட்டையும் உற்றுக் கவனி,'' என்று ஆணையிட்டது. குழப்பமடைந்த துறவி, ''ஒவ்வொரு மண்டையோட்டையும் ஆராய்ந்து பார்ப்பதில் என்ன விசேஷம் இருக்கிறது? எல்லாம் ஒரேமாதிரியாகத்தானே தெரிகின்றன,'' என்று சத்தமாகச் சொன்னார்.

''அப்படியில்லை,'' என்ற குரல் தொடர்ந்தது. ''எந்த இரு மண்டையோடுகளும் ஒரேமாதிரி இருக்க முடியாது. ஏனெனில் ஒரே மாதிரியான இரண்டு மனிதர்கள் கிடையாது. மறுபடியும் ஆராய்ந்து பார்,'' என்று தூண்டியது.

ஒவ்வொரு மண்டையோட்டையும் துறவி கவனித்து ஒப்பிட்டுப் பார்த்தார். அவருக்கு வியப்பு மேலிட்டது. சில மண்டையோடுகளில் காதுகளின் நடுவில் சுவர்போல் தடையிருந்தது. ஒரு காதின் வழியாக எதுவும் இன்னொரு காதைச் சென்றடைய முடியாது என்பது தெரிந்தது.

சில மண்டையோடுகளின் காதுகளினிடையே சுரங்கம்போல் வழி தெரிந்தது. ஒரு காதில் எதையாவது இட்டால் அது மறுகாதுவரை சென்றடையும் என்பது தெரிந்தது.

வேறு சில மண்டையோடுகளில் காதுகளிடையே சுரங்கப்பாதை இருந்ததுடன், அவற்றின் நடுப்பகுதியில் இன்னொரு சுரங்கம்போல் தென்பட்டது. அது தொண்டையில் இறங்கி இதயம் வரை காணப் பட்டது. துறவி இந்த விசித்திரம் கண்டு திகைத்துப்போனார். அவர் உரக்கச் சொன்னார்: "நான் இதுவரையிலும் எல்லா மண்டை யோடுகளும் ஒரே மாதிரியானவை என்றல்லவா நினைத்திருந்தேன். இவை இப்படி வித்தியாசப்படுகின்றனவே. கடவுளே! இதற்கு என்ன அர்த்தம்?"

பதிலுக்கு மனத்தின் ஆழத்திலிருந்து ஒலி எழும்பியது.

முதல் வகையினர் தம்மிடம் சொல்லப்படுவதைக் கேட்பவர்கள் போல் தங்களைக் காண்பித்துக்கொண்டவர்கள். உண்மையில் இவர்கள் எதையும் காதில் போட்டுக்கொள்ளவில்லை.

இரண்டாம் வகையினர் தம்மிடம் சொல்லப்பட்டதை நிஜமாகவே கேட்டுக்கொண்டனர். ஆனால் மனத்தில் தேக்கிவைக்கவில்லை. ஒரு காதால் கேட்டதைப் புரிந்துகொண்ட போதிலும் மறுகாதால் அத வெளியேற விட்டனர்.

மூன்றாம் வகை மண்டையோட்டுக்காரர்கள் தங்களிடம் சொல்லப்பட்டதைக் கேட்டுக்கொண்டதுடன் நிறுத்திக்கொள்ளாமல் அது இதயம் வரை சென்றடையச் செய்தனர். இவர்கள் சத்சங்க வாய்ப்புப் பெற்றவர்களாக இருப்பர். இவர்களுக்கு சமூகத்தில் மரியாதை கிடைத்திருக்கும்.

சத்சங்கம் என்பதற்கு குருவின் அருகில் இருத்தல் என்று பொருள். குரு உபதேசிக்கையில் அவருடைய சொற்களைக் கேளுங்கள். அவர் பேசாவிடில் அவரது மௌனத்தை கிரகியுங்கள்; அதைப் புரிந்துகொள்ளுங்கள். அவர் ஏதேனும் பணிகொடுத்தால் நிறைவேற்றுங்கள். அவர் வேலை ஏதும் தராவிடில் அவரைத் தொந்தரவு செய்யாதீர்கள். குருவின் அருகில் இருப்பதாலான நெருக் கத்தை உங்களுக்குள் இறங்கிவர விடுங்கள். குருவின் அலையுடன் உங்கள் அலையும் சேர்ந்துகொள்ளட்டும். குருவின் மனநிலைக்குப் பொருந்தும்படியான முறையில் நீங்களும் இயங்குங்கள். அவருடன் சேர்ந்து ஆன்மிக வானத்தில் பறக்கப் பயிலுங்கள்.

சிறய பறவைகளை அவற்றின் பெற்றோராகிய பெரிய பறவைகள் தம்முடன் சேர்ந்து பறக்கச்செய்கின்றன. அவற்றின் இறக்கைகள் இன்னும் வலுப்பெறவில்லை. பெற்றோரும் சேர்ந்து பறப்பதால் சிறிய பறவைகள் தைரியமாக இருக்கின்றன. ஒவ்வொரு நாளும் அவை பறக்கும் தொலைவு அதிகரிக்கிறது. சில நாள்கள் கழித்து ஆகாயம் முழுவதும் அவற்றுக்குச் சொந்தமாகிவிடுகிறது. அவை தனியாக, தைரியமாகப் பறக்கத் தொடங்குகின்றன.

இப்படித்தான் பரமாத்மாவின் அனுபவமும் கிடைக்கிறது. குருவுடன் சேர்ந்து பறந்து கொஞ்சம் – கொஞ்சமாக உன் இறக்கைகள் வலுப்பெறட்டும். நாளாக – நாளாக உனது தைரியம் வளரும். தன்னம் பிக்கை பிறக்கும். ஒரு கட்டத்தில் உனக்கு குரு வெளிப்புறமாகத் தேவைப்படமாட்டார். அவர் உன் உள்ளத்தில் விழித்து விட்டார். வெளிப்புற குரு உட்புற குருவை விழிக்கவைப்பதற்கான தூண்டுதலாக மட்டுமே செயல்படுகிறார்.

நீ பல பிறவிகளாகத் தேடிய அன்பும் ஆனந்தமும் குரு பிரசாதமாக இப்போது நீ வேண்டாமலேயே கிடைத்துவிட்டது என்று தெரிவித்தாய்.

ஆம். நீ வேண்டாமல், யாசிக்காமல் இருந்தால்தான் அந்த பிரசாதம் கிடைக்கும். நீ நம்பிக்கையுடன் குருவின் சத்சங்கத்தில் நீடித்தால், நீ முயலாமலேயே குருவின் அருள் உன் மீது பொழியும். குரு ஆன்மிக லட்சியத்தை அடைந்தவர். அவரது முன்னிலையில் அந்த ஆன்மிக பிரவாகத்தில் நீயும் மிதந்து செல்ல முடியும். ஒருவரோடு சேர்ந்துகொண்டு நீயும் வானில் பறந்தால், புவிஈர்ப்பு விசை உன்னை அதிகம் பாதிக்காது. பெற்றோர் பறவைகளுக்கு வானம் வசப்பட்டதால் சிறிய பறவையும் அவற்றைத் தொடர்வதுபோல், நீயும் ஏற்கெனவே ஆன்மிகப் பக்குவம் பெற்ற குருவுடன் சேர்ந்துகொள்ள வேண்டும்.

குரு அருள் எனக்குக் கிடைக்கும் அளவிற்கு நான் பாத்திரமானவன் அல்லன் என்று நீ சொன்னாய். கடவுளின் பிரவேசம் நிகழும்போது நாம் அதற்குத் தகுதியற்றவர் இல்லை என்று நினைக்கத்தான் தோன்றும். கடவுளை உணருதல் என்பது எதனினும் சிறந்த அனுபவமாதலால் யாருமே அதைப் பெறும் முழுத் தகுதியுடன்

இருக்க வாய்ப்பில்லை. யாராவது 'நான் தகுதி உள்ளவன்தான்' என்று சொன்னால் அவனுக்கு இறையனுபவம் ஏற்படவில்லை அல்லது அது பற்றி முழுமையாக அவன் அறிந்திருக்கவில்லை என்று பொருள். தகுதியில்லாதவனுக்கு இறையனுபவம் கிடைக்காது. தகுதியுள்ள வனுக்கு அந்த அனுபவம் கிடைக்கும். ஆனால் 'நான் துளியும் தகுதியற்றவன்' என்று பணிவுடன் அறிவிக்கும்போதுதான் கிடைக்கும்! இது வேடிக்கையாக இல்லையா?

தகுதியற்றவன் இறை அனுபவம் பெறக்கூடிய தயார் நிலையில் இல்லை. அவன் உடைந்த பாத்திரம் போன்றவன். அல்லது தலைகீழாக வைக்கப்பட்ட பாத்திரம் என்றும் கூறலாம். அதனுள் அல்லது அதன்மேல் எதை எவ்வளவு ஊற்றினாலும் நிற்காது. வழிந்து வெளியேறிவிடும். அல்லது அவனை மூடிபோட்ட பாத்திரம் எனலாம். இறையனுபவம் நுழைய முடியாதபடி தடுக்கப்படுகிறது.

தகுதியுள்ளவனை நற்பாத்திரம் எனலாம். அதில் துளை இருக்காது. அது தலைகீழாக இராது. மூடிபோட்டிருக்காது. இதுவே சீடனின் இலக்கணம். ஆனால் நற்பாத்திரமானவன் ஆவதற்கு ஒரு நிபந்தனை உள்ளது. அவன் தன்னை 'நான் முழுமையாகத் தகுதி யற்றவன்' என்று கருத வேண்டும். 'நானோ அற்பமான பாத்திரம். இறையனுபவமாகிய உச்சக்கட்ட சம்பவம் எனக்குள் எப்படி நிகழ முடியும்? நம்பமுடியவில்லையே' என்று அவன் திகைக்க வேண்டும். ஆம். அந்த அனுபவம் வாய்த்த பிறகும் நம்ப முடிவதில்லை.

சூஃபி சம்பிரதாயத் துறவிகளின் கருத்துப்படி உலகையும் பரமாத்மாவையும் இணைக்கும் பாலம் உள்ளது - ஞானப் பாலம். பாலத்தின் ஓர் எல்லையில் நாம் நிற்கும்போது அது அடுத்த கரையைத் தொடுகிறது என்று உடனடியாக நம்ப முடிவதில்லை. ஏனெனில் மறுகரை கண்ணுக்குத் தெரிவதில்லை. பாலம் முழுமையாக இல்லாமல் நடுவில் திரிசங்குபோல் தொங்குகிறதோ என்ற சந்தேகம் எழுகிறது.

பிறகு நாம் சமாளித்துக் கொண்டு பாலத்தைக் கடக்கிறோம். இப்போது நாம் முதலில் இருந்த கரை புலப்படவில்லை. அப்படி ஒரு கரை இருந்ததா என்று புதிய சந்தேகம் கிளம்புகிறது. மாபெரும் அனுபவம். இப்பக்கத்திலிருந்தும் புரியவில்லை; அப்பக்கத்திலிருந்தும்

புரியவில்லை. புரிந்துகொள்ளும் ஆற்றலையும் தெய்விக அனுபவம் கடந்து நிற்கும். பாத்திரம் சிறியது. அருள், மழையாகப் பொழிகிறது. பாத்திரத்திற்குக் கொள்ளளவு எல்லை உண்டு. அருள் எல்லையற்றது. விவரிக்க முடியாதது, விளக்க இயலாதது.

'நான் தகுதியற்றவன்' என்று பணிவதுதான் தகுதியுள்ளவனின் முக்கியமான இலக்கணம் ஆகும். 'இறையனுபவம் பெற நான் உரிமையுள்ளவன்' என ஒருவன் வாதிட்டால் கடவுள் அவனுக்கு அகப்படமாட்டார். ஒருவன் 'நான் எவ்வளவு தவம், உபவாசம், விரதம், சடங்குகள் மேற்கொண்டுள்ளேன் தெரியுமா? எவ்வளவு கட்டுப்பாடாக இருந்து தியானம், வழிபாடு செய்திருக்கிறேன். எனக்கு இறை அனுபவம் கிடைத்தாக வேண்டும். அப்போதுதான் என் கணக்கு நேர்செய்யப்படும். இல்லாவிடில் எனக்கு அநீதி இழைத்த மாதிரி ஆகிவிடும்' என்று முழங்கலாம். ஆனால் அற்பத்தனமான இக்கோரிக்கை நிராகரிக்கப்பட்டுவிடும்.

நீ கடவுளின் படம் அல்லது சிலையின் முன் எத்தனை முறை தலை வணங்கினாய் என்று கணக்குப் போடுவதால் பயனில்லை. இதற்கும் கடவுள் தரிசனத்திற்கும் சம்பந்தமில்லை. இது உடற்பயிற்சி மட்டுமே போன்றது. இதனால் உடலுக்குத்தான் நன்மை. நீ யோகாசனம் செய்திருக்கிறாய் எனில் அதுவும் சரிதான். அதன் மூலம் உன் ஆயுள் காலம் நீட்டிக்கும். நீ பிரார்த்தனையில் கலந்துகொண்டாய்; அது இசையொலியை ஆதாரமாகக் கொண்டது. அந்த இன்னொலியால் சிறிது நேரம் ஆனந்தமடைந்திருப்பாய். ஆனால் இதனாலெல்லாம் உனக்கு இறையனுபவம் கிடைத்தாக வேண்டுமென நீ வாதிட முடியாது. ஆன்மிக உலகில் வற்புறுத்தாதவனுக்குத்தான் எதுவும் கிடைக்கும்.

ஆகவே நீ உரிமை கொண்டாடுபவனாக இருக்காதே. 'எனக்கு இறைஅனுபவம் கிடைத்தாக வேண்டும்' என்று மறந்தும் சொல்லாதே 'என்னால் முடிந்த நடவடிக்கைகளை செய்து முடித்துவிட்டேன்' என்னும் உணர்வு உனது ஆன்மிக முன்னேற்றத்திற்குத் தடையாகிவிடும். நீ மாற்றி யோசிக்க வேண்டும். 'என் கையில் என்ன இருக்கிறது? என் முயற்சியால் மட்டும் என்ன ஆகிவிடப்போகிறது? ஏதோ செய்கிறேன். ஏனெனில் எதுவும் செய்யாமல் இருக்க முடியவில்லை. என் உள்ளங்கைகள் சிறியவை. கிடைக்க வேண்டிய

அருட்பிரசாதமோ பிரம்மாண்டமானது. அது எப்படி உள்ளங்கையில் அடங்கும்?' என்று உனக்குள் கேள்வியெழுப்ப வேண்டும்.

ஒரு கவிஞர் இமயமலைக்குச் சுற்றுப்பயணமாகச் சென்றார். மலைகளிலிருந்து வழுக்கிப் பெருகும் பனிக்கட்டிகளைக் கண்டார் அப்போது அவை எழுப்பிய இனிமையான முணுமுணுப்பு ஒலியை மிகவும் ரசித்தார். அவர் ஊர் திரும்புகையில் தன் காதலிக்குப் பரிசாகக் கொடுக்க ஒரு போத்தலில் பனிக்கட்டித் துண்டுகளை நிரப்பி எடுத்துவந்தார். அவர் வீடு திரும்பிய போது அது தண்ணீராக மாறியிருந்தது. அதை ஒரு பாத்திரத்தில் சரித்தபோது எந்த ஒலியும் கிளம்பவில்லை. மலையில் இருந்தபோது தான் கேட்ட பனிக்கட்டி உரசல் ஒலி எங்கே போனது என்று அவருக்குப் புரியவில்லை.

நீயும் ஒரு சோதனை செய்துபார்க்கலாம். கடற்கரைக்குச் செல். உயர எழும்பும் அலைகளைப் பார். அவை பாறைகளில் மோதுகின்றன. பெருத்த ஓசை எழுகிறது. அலைகள் கூத்தாடுகின்றன. ஒரு பாட்டிலில் கடல் தண்ணீரை அடைத்துக் கொண்டு போ. வீட்டை அடைந்த பின் தண்ணீரைத் தரையில் கொட்டிப்பார். அலைகளின் புயல் முழக்கம், கடலின் பரந்த தோற்றம், ஊழிக்கூத்துபோன்ற காட்சி எதுவும் தரையில் கொட்டிய தண்ணீரில் பிரதிபலிப்பாகவில்லை.

நமது வாழ்க்கையெனும் குடுவை அளவில் மிகவும் சிறியது. கடவுள் என்னும் மாகடல் உலகக் கடல்கள் அனைத்தையும்விட பெரியது. நமது அறிவு குறுகியது. அதில் எல்லையற்ற சௌந்தர்யத்தை, எல்லையற்ற சத்தியத்தை, எல்லையற்ற பெருவாழ்வை நிரப்ப முடியாது. ஆகவே உனக்கு இறை அனுபவம் கிடைத்தாக வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்காதே.

சீடனுடைய இலக்கணம், தான் இறை அனுபவத்தைப் பெற இன்னும் முழுமையான அளவில் பொருத்தமானவன் அல்லன் என அறிந்திருப்பதுதான். இதை உணர்ந்ததும், ஒப்புக்கொண்டதும், நீ இறை அனுபவம் பெறுவதற்குத் தகுதி பெற்றுவிடுவாய்! எந்த அளவிற்கு நீ பாத்திரமானவன் அல்லன் என்று சொல்கிறாயோ அதே விகிதத்தில் உன் தகுதி வளர்ந்துவரும். என்றைக்கு நீ முழுக்க - முழுக்க பார்த்திரனல்லன் என்கிறாயோ அக்கணத்தில் இறையனுபவம்

மின்னலெனக் கிடைக்கும். அக்கணத்தில் உனக்குள் தெய்விகம் முழுமையாக இறங்கிவரும். 'நான்' என்பது உள்ளபோது எல்லாம் தடைப்படும். 'நான்' என்பது இல்லாத நிலையில் எல்லாம் கிடைக்கும். 'எனக்குத் தகுதியுண்டு' என்றால் உனக்குக் கிடைக்காது 'எனக்குத் தகுதியில்லை' என்று ஒப்புக் கொண்டால் உனக்குக் கிடைக்கும்! இறை அனுபவம் கிடைப்பது - கிடைக்காமல் போவது இந்த விசித்திரத்தின் அடிப்படையில்தான்.

'எனக்குக் கிடைத்த ஆன்மிகச் செல்வத்தைப் பிறருக்கும் வினியோகிக்க விரும்புகிறேன். ஆசி கூறி வழிகாட்டுங்கள்' என்று கேட்டுக்கொண்டாய். 'விரும்புகிறேன்' என்று கூறாதே. வலிந்து வினியோகிக்க விரும்பினால் குழப்பம்தான் மிஞ்சும். நீ பெற்ற அனுபவம் தானாகப் பரவி பகிர்ந்து கொள்ளப்படும். நீ காத்திருந்து பார். நீ முழுமையாக நிரம்பியதும் உன் அனுபவம் தளும்பி வழியும். அதற்குமுன் அவசரப்படாதே. நீயாகப் பிரித்துத் தரும் முயற்சியில் ஈடுபட்டால், நீ அதைச் செய்வதாக எண்ணம் தோன்றி, அகங்காரம் மீண்டும் தலைதூக்கும். இந்நிலையில் நீ பெற்ற ஞானம் சாதாரணத் தகவலாக, செய்தியாக மாறிவிடும். நீ எதிர்பாராமலே இறையனுபவம் கிடைத்ததைப்போல், நீ கேட்டுக்கொள்ளாமலேயே வினியோகம் தொடங்கிவிடும்.

ஒரு திறந்த பாத்திரம் இருக்கிறது. மழைத் தண்ணீர் கொஞ்சம் - கொஞ்சமாக அதில் இறங்குகிறது. அது நிரம்பியபின் என்ன நடக்கிறது? பாத்திரத்தின் விளிம்பைக் கடந்து தண்ணீர் வெளியே கசிகிறது. இப்படித்தான் ஏரி நிரம்பி, தண்ணீர் வெளியேறுகிறது; ஆறு நிரம்பி வெள்ளம் உண்டாகிறது.

உன்னால் சமாளிக்க முடியாத அளவிற்கு இறை அனுபவம் கிடைத்தபின் அது தளும்பி தானாகவே பரவும். அது நிகழ்வதை எதிர்பார்த்திரு. நான் வேறு ஆலோசனை எதுவும் தர விரும்பவில்லை. நான் ஏதாவது சொல்லி, நீ ஏதாவது செய்தால் எல்லாம் கெட்டுப் போய்விடும். எதுவும் தானாக நிகழட்டும். நீயாகப் பகிர்ந்து தரவும் வேண்டாம். அது தானாக நிகழ்வதைத் தடுக்கவும் வேண்டாம்.

இருவகை மனிதர்கள் உள்ளனர். சிலர் தங்கள் வாழ்க்கையில் சிறிதளவு ஒளிவீசினாலும் அதை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளத்

துடிக்கின்றனர். இது இயற்கைதான். நமக்கு நல்லது ஒன்று நடந்தால் நமக்கு பிரியமானவர்களுக்கும் அது கிடைக்கட்டும் என நாம் விரும்புகிறோம். இது மனித சுபாவம்தான். கணவன் தனக்குக் கிடைத்ததை மனைவியிடமும், மனைவி தான் பெற்றதைக் கணவனிடமும் தெரிவிக்க விரும்புகிறார்கள். ஒருவனுக்குக் கிடைத்தால் தன் நண்பர்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகிறான். 'நீங்கள் இப்படி அலைகிறீர்களே. நம்பவில்லையா? அந்த அனுபவம் கிடைக்கும். எனக்குக் கிடைத்திருக்கிறது. நான் அதன் சுவையை உணர்ந்துள்ளேன். இதை நான் ஊகமாகக் கூறவில்லை; அனுபவித்தே கூறுகிறேன்' என்றெல்லாம் அவன் தன் நண்பர்களிடம் சென்று விளக்க விரும்புகிறான்.

நீயும் அந்த தவற்றைச் செய்யாதே. நீ பெற்ற அனுபவத்தைப் பிறருக்குச் சொல்ல முயன்றால், நீ அந்த அனுபவத்தால் முழுமையாக நிரம்பவில்லை என்றுதான் பொருளாகும். குடல் நிரம்பாதவரையிலும் ஓசை எழுப்பியபடியே இருக்கும். நிரம்பியதும் நிசப்தமாகி விடும். மிகையான தண்ணீர் தானாக வெளியேறும். நீ அறிவிக்க வேண்டியதில்லை.

கணவனுக்கு தியான அனுபவம் கிடைத்தது எனில் அவன் தன் மனைவிக்கும் கொடுக்க விரும்புவது இயற்கையே. வேறு பல அன்பளிப்புகளையும் அவன் தந்திருக்கிறான். தியான அனுபவத்துடன் ஒப்பிடுகையில் அவன் கொடுத்த உடை - நகை சாதாரணமானவை தானே. அவளும் அதை ஏற்றாள்தான். ஏனெனில் அவை கண்ணுக்குத் தெரிந்த அன்பளிப்புகள். தியான அனுபவமோ உனக்கு மட்டுமேதான் விளைந்தது. அதைப் பிறருக்கு எடுத்துக் காண்பிக்க முடியாதல்லவா? மனைவி சீறுவாள். "உங்களுக்கு மூளை குழம்பிவிட்டதா என்ன? சுயநினைவோடுதான் பேசுகிறீர்களா? எந்தச் சாமியார் விரித்த வலையில் சிக்கிவிட்டீர்கள்?" என்றெல்லாம் கேட்பாள்.

மனைவியர் மிகவும் யதார்த்தவாதிகள். பூமியில் வேரூன்றி நிற்பவர்கள். கணவன் அல்லது ஆண்கள் சற்று ஆகாயத்தில் எழும்பலாம். பெண்ணின் வேர் பூமியில்தான் பதிந்துள்ளது. அவள் நடைமுறை வாழ்க்கையை மறப்பதில்லை. மனைவி சொல்வாள், "ஏன் இப்படி முட்டாள்தனம் செய்கிறீர்கள்? குழந்தைகளைப் பற்றி அக்கறை

வேண்டாமா? தியானத்தால் என்ன நன்மை? நம் கையில் போதுமான அளவு பணம் இல்லையே. அதைச் சம்பாதிப்பதை முதலில் செய்யுங்கள். நீங்கள் வயதானவர் இல்லையே. அதற்குள்ளேயே தியானம் எதற்கு? ஏன் தேவையில்லாத சிக்கல் எல்லாம்?'' நீ விளக்கம் தர முயன்றால் நிலைமை மேலும் மோசமாகும். மனைவிக்கு நீ அவள் கட்டுப்பாட்டிலிருந்து நழுவுவதுபோல் தோன்றும்.

உனக்கு ஒன்று கிடைத்து, உனக்கென்றே அது கிடைத்து, அதில் அவளும் பங்குதாரர் ஆகமுடியாத நிலையை மனைவியால் பொறுத்துக்கொள்ள முடியாது. அவள் விவாதத்தைத் துவக்கும்போது உனக்கு நிஜத்தில் ஒன்றும் கிடைக்கவில்லை. என்றும், நீ பிரமைவசப் பட்டுள்ளதாகவும் நிரூபிக்க அவள் முயலுவாள். 'எங்கே கிடைத்தது? எப்படிக் கிடைத்தது! உங்களுக்கு யாராவது வசியம் போட்டு விட்டார்களா?' என்றெல்லாம் கேட்டு உன்னைத் துளைத்துவிடுவாள்.

அவள் மீண்டும் உன்னை குடும்பம் என்னும் மையத்திற்கு இழுக்க முயலுவாள். மனம் அமைதியாக இருப்பதற்காக நீ தியானம் மேற்கொண்டால் மனைவிக்கு அதில் ஆட்சேபணை இருக்காது. கணவன் முன்பைவிட சாந்தமானவனாக, சிறு - சிறு விஷயங்களுக் கெல்லாம் எரிச்சலடையாதவனாக மாறினால், கோபத்தைக் கைவிட்டால், நல்லதுதானே என்று மனைவி நினைப்பாள். நீ ஆத்மா - பரமாத்மா என்றெல்லாம் முயலுவதைத்தான் அவள் ஆதரிக்க மாட்டாள். பண்பாளனாக இருந்தால் அவளுக்குப் போதும். உனக்கு இறை அனுபவம் கிடைத்ததாகக் கூறினால், பரவசத்தில் பாடி அசைந்தால் மனைவி அளவுக்கு மீறிப் பித்துப்பிடித்துவிட்டது என்றே நினைப்பாள், பயப்படுவாள்.

ஓர் இளம்பெண் ஒருவனைக் காதலித்தாள். இருவரும் கிறிஸ்தவர்களே. ஆனால் யுவதி கத்தோலிக்கப் பிரிவையும், இளைஞன் ப்ரோடெஸ்டென்ட் பிரிவையும் சேர்ந்தவன். பெண்ணின் அம்மா அவர்கள் மணந்துகொள்ள ஒப்புக்கொள்ளவில்லை. இந்த இரு பிரிவினரிடையே வேறுபாடுகள் நிறைய உண்டு என்று கூறி மறுத்தாள்.

பெண்ணோ அந்த இளைஞன் மீது அளவற்ற காதல் கொண்டிருந்தாள். ஆகவே தாயார் ஒரு வழி சொன்னாள்: "அவனுக்கு

உன் மீது நிஜமான, ஆழமான காதல் இருந்தால் அவனை நமது கத்தோலிக்கப் பிரிவுக்கு மாறிவரச் சொல்லு. அதற்கு வசதியாக நீ அவனுக்கு நமது பிரிவின் சிறப்புகளைத் தொடர்ந்து விளக்கிக் கொண்டேயிரு. அவன் கத்தோலிக்க சர்ச்சுக்கு மாறி வந்துவிட்டால் உனக்கு அவனையே திருமணம் செய்து வைக்கிறேன்.''

யுவதி தன் முயற்சிகளைத் தொடங்கினாள். அவ்வப்பொழுது அவள் தன் தாயிடம், "நல்ல முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறது. அவருக்குக் கத்தொலிக்க வழக்கங்கள் பிடித்திருப்பதாகச் சொன்னார்,'' என்று தெரிவித்தாள்.

ஒருநாள் அவள் குதூகலமாக ஓடிவந்து, "அம்மா, இன்று அவர் என்னுடன் நம் சர்ச்சுக்கு வந்தாரம்மா. நம் வழக்கப்படியே வழிபட் டாரம்மா,'' என்றாள்.

இன்னொரு நாள் அவள் மகிழ்ச்சியுடன் வந்து, "அம்மா, அவர் கத்தோலிக்கக் கண்ணோட்டத்தை ஏற்றுக்கொண்டாரம்மா. மாறுவதற்கான சடங்குதான் பாக்கி,'' என்று தெரிவித்தாள்.

ஆனால் பிறகு சில மாதங்களாகியும் இளைஞன் திருமணப் பேச்சை எடுக்கவில்லை. தாயாரால் தூண்டப்பட்டு யுவதி அவனிடம் முடிவு கேட்டாள். அவன் சொன்ன முடிவைக் கேட்டு அழுதபடியே அவள் ஓடிவந்து அம்மாவின் மடியில் விழுந்தாள். அம்மா பதறி, "என்ன நடந்தது? அவன் கத்தோலிக்கர் ஆவதற்கு மறுக்கிறானா?'' என்று விசாரித்தாள்.

"இல்லையம்மா. நிலைமை எல்லை மீறிவிட்டது. அவருக்கு கத்தோலிக்கக் கொள்கைகள் தீவிரமாக பிடித்துவிட்டது. ஆகவே அவர் கத்தோலிக்க பாதிரியாராக முடிவு செய்துவிட்டாரம்மா. அதாவது, திருமணம் கிடையாது. பிரம்மசாரி சாமியாராக இருக்க விரும்புகிறார்,'' என்று மகள் விசும்பினாள். (கத்தோலிக்கப் பிரிவில்தான் திருமணமே செய்துகொள்ளாமல் துறவறம் மேற்கொள்ள முடியும்.)

சிலர் விஷயத்தில் மனைவியே கணவனை தியானம் பயில அனுப்புவது உண்டு. ஆனால் துறவியாவதற்காக அவனை அனுப்புவதில்லை. அது மிகையான நடவடிக்கை. மனைவி சண்டைக் கோழியாக இருந்தால் கணவன் தியானம் பயில அவளை

அனுப்பக்கூடும். மனைவியின் பிடுங்கல் அவனுக்குத் தாங்க முடியாமல் போயிருக்கும். அவள் தியானம் பயின்றால் வீட்டில் கலகம் குறையும், அமைதி நிலவும் என அவன் எதிர்பார்க்கலாம். எனினும் அவளுக்கு பக்தி அதிகமாகி அவள் பெண்துறவி (சந்நியாசினி) ஆவதை அவன் விரும்பமாட்டான். மீராபாய்போல் பக்தி ஆவேசத்தில் தன் மனைவி ஆடிப் பாடுவதை அவன் சகிக்கமாட்டான். மீராபாயின் கணவருக்கு மட்டுமல்ல, உறவினர்களுக்கும் அவளது நடவடிக்கை பிடிக்கவில்லை. ஆகவேதான் அவளைக் கொல்ல கோப்பையில் விஷபானம் அனுப்பினார்கள்.

உன் அனுபவத்தை வெளியிடுவதில் நீ அவசரம் காட்டாதே. உனக்குள்ளே தெய்வ அனுபவம் திரளும்போது சமாளித்துக்கொள்; அதை மறைத்துக்கொள். அந்த விலை மதிக்கமுடியாத அனுபவம் கிடைக்கப்பெற்ற கபீர்தாசர், 'வைரம் ஒன்று கிடைத்தது, வைத்துக் கொண்டேன் முடிச்சுப்போட்டு' என்கிறார். நீயும் அதுபோல் உன் அனுபவத்தை மூடி மறை. யாருக்கும் தெரிய வேண்டாம். இங்கே திருடர்கள், மோசடிக்காரர்கள், தடைபோடுபவர்கள், பொறாமை பிடித்தவர்கள் நிறைய உள்ளனர். இந்த வகைகளில் சேராதவர்களோ உனக்கு தியானம் கிட்டியது என்பதை நம்பமாட்டார்கள். தங்களுக்குக் கிடைக்கவில்லையே என்று அவர்களது அகங்காரம் குமுறுகிறது. அவர்களுக்கு முன்னால் உனக்கு இறையனுபவம் எப்படிக் கிடைக்க முடியும் என்று சந்தேகப்படுவார்கள். காரணம், அவர்கள் இதுவரை உன்னைத் தங்களைவிட தாழ்வாகவே நினைத்துவந்திருக்கிறார்கள். உனக்கு ஆன்மிகச் செல்வம் கிடைத்ததாக நீ அறிவித்தாலும் அதை அவர்கள் ஒப்புக்கொள்ள மறுப்பார்கள்.

**ச**மன்லால் என்பவர் அதோ அமர்ந்திருக்கிறார். நேற்று அவர் என்னுடன் பேசுகையில் மிகுந்த எதிர்ப்புக்கிடையே தான் வந்திருப்பதாகத் தெரிவித்தார். இரண்டு மூன்று மாதங்களாக அவர் இங்கே வர முயற்சி செய்திருக்கிறார். ஆனால் மனைவி - மகன்கள் - மகள்கள் தடுத்தனர். பக்கத்து வீட்டுக்காரர்களும் ஏன் சாமியாரைப் பார்க்கப் போகவேண்டும் என்று கேட்டனர். ஒருமுறை அவர் மகனும் இங்கு நடப்பதைப் பார்க்க அவருடன் சேர்ந்துவந்தான். பிறகு அவன் கோபமாக அவரிடம், "காவி அணிந்து உங்கள் தோற்றத்தையே

கெடுத்துக்கொள்கிறீர்களே. இனி வீட்டிலேயே இருக்க வேண்டும். வெளியில் எங்கும் போகக்கூடாது,'' என்றான்.

ஆனால் சமன்லால் ஆன்மிகச் சுவையைத் தெரிந்துகொண்டார். அவருக்கு தியானம் கூடிவருகிறது. அவருக்குள் தெய்விக அனுபவம் திரண்டுவருகிறது. அதை நான் காண்கிறேன். ஆனால் மற்றவர்கள் அவருக்கு முட்டுக்கட்டை போடுவதில் ஆர்வமாக இருக்கிறார்கள். யாருமே தங்களுக்கு வேண்டிய ஒருவர் சராசரி வாழ்க்கையின் எல்லையைக் கடப்பதை விரும்புவதில்லை.

சமன்லாலின் மனைவி அவரிடம், “வெளியே போக வேண்டிய அவசியம்தான் என்ன? வீட்டுக்குள்ளேயே தியானம் செய்யலாமே'' என்று தடுக்கிறாள். ஆனால் அவருக்கு தியான அனுபவம் எங்கு கிடைக்கிறதோ, அங்கே போகத்தானே அவர் அடிக்கடி ஆசைப் படுவார். இங்கு வந்தால் தியானத்தில் கூடுதலாக ஆழ்ந்திருக்கலாம், கூடுதலாக ரசிக்கலாம், தியானச் சுவையைக் கூடுதலாக உணரலாம் என்று அவருக்குத் தோன்றுகிறது. இங்கேயிருந்து திரும்பிச் செல்கை யில் புத்துணர்ச்சியும், சக்தியும், இயக்கமும் எடுத்துச் செல்வதாக அவர் உணர்கிறார். இங்கே வந்துசெல்லாவிடில் அவருக்கு வாழ்க்கை பாறைகளால் அமைந்ததுபோல் மென்மையும் கனிவும் இழந்து தெரிகிறது.

நீ உன் அனுபவத்தை வெளியில் சொல்லாதே. அனுபவத்தை மௌனமாக, பாதுகாப்பாக உன்னிடமே வைத்துக்கொள். நிரம்பி வழியும் நேரம் வரும்போது அச்செயல் தானாகவே நடைபெறும். அப்போது யாரும் அதற்குத் தடைபோட முடியாது. வெள்ளப் பெருக்கைக் கைகளால் தடுக்க முடியாது அல்லவா?

இப்பொழுது கிடைத்துவரும் அனுபவத்தைச் சேகரித்துவை. பொறுத்திரு. உரிய நேரம் வந்ததும் உன்னிடமிருந்து மற்றவர்களை நோக்கி அது பெருக்கெடுக்கும். அப்பொழுது அது தானே ஒரு வழியை அமைத்துக்கொள்ளும். நீ அதை இயக்கவோ, அதற்கு வழி காட்டவோ தேவை எழாது. பழம் பழுத்ததும் தானே விழுவதுபோல், மேகம் நிரம்பியதும் தானே பொழிவதுபோல், அனுபவம் நிரம்பியதும் அது சுயமாகவே பிரதிபலிப்பாகும்.

ஆகவே நான் வழிகாட்டுவதில் ஈடுபடுவதில்லை. நீ ஒரு நிகழ்ச்சி நடப்பதை அதன் வசமே விட்டுவிடு. நீ நிரம்பிக்கொண்டே செல். அவ்வாறு நீ நிரம்புவதை மறைத்துவைத்திரு. அதைப் பிரித்தளிக்க நீயாக முயற்சி எடுக்காதே. எடுத்துக் கொடுக்கும் ஆசை எழும். ஆனால் அதன் வசப்படாதே. அனுபவம் முழுமையாக நிரம்பி வழியத் தொடங்கும்போது இன்னொரு ஆபத்து தோன்றும். அதைத் தடுக்க வேண்டுமென நீ எண்ணலாம். ஆனால் அவ்வாறு தடுக்காதே. சுயமாகவே எழும்பிப் பிரிவது அப்படியே நடைபெறட்டும். வைரக் கல்லுக்குக் கூடுதல் பாதுகாப்பிற்காக மேன்மேலும் துணியில் முடிச்சுப் போட்டுக் கட்டுவதுபோல் தியான அனுபவம் பெருக்கெடுப்பதை மறிக்க வேண்டாம்.

நீ கடவுளின் விருப்பப்படியே வாழ்க்கை நடைபெறவிடு. கடவுளை தியானித்துச் சொல் - 'இறைவா! உன் விருப்பம் எதுவோ அதுவே எனதும் ஆகும். என்னைக் குறித்த உன் விருப்பமே நிறைவேறுவதாக! நான் ஒளிந்து என்னை மறைத்து வாழ வேண்டுமெனில் அவ்வாறே செய்வேன். என்னைப் பற்றி யாருக்கும் எச்செய்தியும் தெரியக்கூடாதென நீ நினைத்தால் நான் அதற்கேற்ப வாழ்வேன். உன்னை - இறை அனுபவத்தை - உள்ளத்திற்குள்ளேயே பொத்திப் பாதுகாத்து அப்படியே விடைபெற்றுப் போய்விட வேண்டுமெனில் அதற்கு நான் சித்தமாக உள்ளேன். நான் அனுபவ மிகுதியால் பாட வேண்டும், ஆடவேண்டும், கூரையின் மேலேறிக் கூக்குரலிட்டு அதன் மூலம் அறியாமையில் உறங்குபவர்களை எழுப்ப வேண்டுமென்றால் அவ்வாறே செய்ய நான் சம்மதிக்கிறேன்.'

ஆனால் நீயாக உன் தரப்பிலிருந்து எதுவும் செய்யாதே. நீயாக மேற்கொள்வதில் தவறு ஏற்பட்டுப்போகிறது. நீ இடையில் நிற்காமல் விலகிப்போ. உன் அனுபவம் சுயமாக வெளிப்பட வழிவிடு.

**நான்காவது கேள்வி:**

> **சில சமயம் தாங்கள் தனி மனிதன் முக்கியமில்லை, கடவுள்தான் எல்லாம் என்றும், அவரது விருப்பமின்றி ஓர் இலையும் அசையாது என்றும் கூறுகிறீர்கள். வேறு சில சமயம் மனிதன் முழு சுதந்திரமுடையவன்**

**என்றும், கடவுளுக்கு அங்கே இடமில்லை என்றும் கூறுகிறீர்கள். வெவ்வேறு துருவம் போன்ற இக்கருத்துகள் எங்களைக் குழப்பு கின்றன. சத்தியம் என்பது ஒன்றேதானே இருக்க முடியும்.**

ஆம், ஒரு சத்தியம்தான் இருக்க முடியும். ஆனால் அதற்கு இரண்டு முகப்புகள் இருக்க சாத்தியமுள்ளது. அதை இக்கரையி லிருந்து தெரியும் ஒரு தோற்றம், மறுகரையிலிருந்து தெரியும் ஒரு தோற்றம் என வகைப்படுத்தலாம். மயக்க நிலையில் கிடைத்த தோற்றம், விழிப்பு நிலையில் கிடைத்த தோற்றம் என்றும்கூட இருவகைப்படுத்தலாம்.

சத்தியம் ஒன்றுதான் எனினும் அதற்கு இருவகை விளக்கங்கள் உண்டு. நான் உன்னிடம் சொல்வது சத்தியத்தின் ஒரு விளககம். அது இன்னும் உனது சத்தியமாகவில்லை. எனது சத்தியத்தை நீ உனது சத்தியமாக நினைத்தால் பிரமைவசப்படுவாய். எனது சத்தியம் உனது சத்தியம் ஆகாது. இருவகை சத்தியத்தையும் நான் உனக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். நான் முதலில் உன்னிடம் உன் சத்தியத்தைக் கூறுகிறேன். ஏனெனில் நீ அங்கிருந்துதான் பயணத்தைத் தொடங்க வேண்டும். அதன்பின் நான் எனது சத்தியத்தைக் கூறுகிறேன். அங்கே நீ பயண இறுதியில் போய்ச்சேர வேண்டும்.

"நீங்கள் தனி நபர் முக்கியமில்லை, கடவுள்தான் எல்லாம்; அவரது விருப்பமின்றி ஓர் இலையும் அசையாது," என்கிறீர்களே என்று நீ சொன்னாய்.

நான் உனக்காகத்தான் அவ்வாறு சொன்னேன். உனது மனநிலையில், உனது கண்ணோட்டத்தில், நீ இருக்கும் இடத்தில் நின்று பார்த்து அப்படிச் சொன்னேன். நீ அகங்காரத்தைக் கைவிட வேண்டும் என்பதற்காக, அவர் அனுப்பும் காற்றில் அவரது ஓர் இலையாக அசைந்தாடு என்பதற்காகச் சொன்னேன்.

காற்று வீசவில்லையெனில் மரம் அப்படியே நிற்கிறது. ஓர் இலையும் அசைவதில்லை. ஏன் ஆசையவில்லை என இலைகள் புகார் கூறுவதில்லை. காற்று வீசினால் அசைவோம் என அவை மௌனமாகக் காத்திருக்கின்றன. யோகிகள் தியானம் செய்வதுபோல்

அவை சலனமின்றி இருக்கின்றன. காற்று வீசினால் அவை பக்தர்களைப்போல ஆடத் தொடங்கிவிடும்.

உன் தரப்பிலிருந்து பேசும்போது, கடவுளின் விருப்பமின்றி இலை அசையாது என்கிறேன். ஏனெனில் ஒவ்வோர் இலையிலும் இருப்பது அவர்தானே. ஆகவே உன் விருப்பம் என்று தனியாக ஒன்று இருப்பதைக் கைவிடு. கடவுளின் விருப்பத்திற்கே வளைந்து கொடு. நீ உன் தனிமனிதத் தன்மையைக் கரைத்துவிடு; சமூகத்தில் விழித்தெழு. அற்பமான தனி மனிதத் தன்மையைக் கைவிடு; விசாலப் பெருவெளியை நோக்கிச் செல். போராடாதே, சரணடை.

'இன்னொரு சமயம், மனிதன் பூரண சுதந்திரம் உடையவன். கடவுளுக்கு அவனிடம் வேலை இல்லை' என்று நான் சொன்னதாக நீ நினைவூட்டினாய்.

நீ என் கருத்துகளை ஏற்றுக்கொண்டு அகங்காரத்தை நீக்கிவிட்டாய் எனில் நீயே கடவுளின் ஓர் அம்சமாக மாறிவிட்டாய். கடவுளுக்கு இனி உன்னிடம் வேலை இல்லை. இவ்வாறு நீ பூரண சுதந்திரனாகி விடுகிறாய். மேற்கொண்டு உன் விருப்பப்படியே உலகனைத்தும் அசையும், இயங்கும். நீயும் கடவுளும் வெவ்வேறு என்று நினைக்கும் போதுதான் முரண்பாடு தோன்றும்.

ஒரு சமயம் சத்தியத்தின் ஒரு முகப்பை நான் கூறுகிறேன். அதாவது, 'உன் இஷ்டப்படி எதுவும் நடைபெறாது. எல்லாம் கடவுள் இஷ்டம். அவரது விருப்பமின்றி ஓர் இலையும் அசையாது.' இன்னொரு சமயம் சத்தியத்தின் இன்னொரு முகப்பைக் கூறுகிறேன். அதாவது 'நீயே எஜமானன், தலைவன், நீயே எல்லாமும். சந்திரனையும் நட்சத்திரங்களையும் இயக்குபவன் நீயே.'

**சு**வாமி ராம் என்னும் துறவியுடன் ஒருவர் நிகழ்த்திய சுவையான உரையாடல் பின்வருமாறு:

"சுவாமிஜி, இந்த உலகத்தைப் படைத்தவர் யார்?"

"நான்தான், அன்பரே!"

"கிரகங்களையும் நட்சத்திரங்களையும் இயக்குபவர் யார்?"

“அவரும் நான்தான்!”

“சுவாமிஜி, மன்னியுங்கள், நீங்கள் சொல்வது சற்று உளறல்போல் தோன்றுகிறது. நீங்கள் இல்லாதபோது யார் இயக்கினார்கள்?”

“நான் இல்லாத காலம் என்பது ஒருபோதும் கிடையாது”

“ஒருநாள் நீங்கள் இறந்தபோனபின் என்ன நடக்கும்?”

“நான் ஒருபோதும் இறந்திருக்கவில்லை. நான் இறக்க முடியும் என்பதற்கும் வாய்ப்பில்லை”

இந்த இருவரும் ஒரே மொழியில்தான் உரையாடினர். ஆனால் ஆளுக்கு ஒரு மொழியில் பேசியதுபோன்ற உணர்வு ஏற்படுகிறது. பேசினவர் சுவாமி ராமின் உருவம், உயரம், உடம்பு, ஆளை மட்டும் பார்த்தார். சுவாமி ராம் பேசிய விதத்தில் அவர் தன்னை ஒரு தனி நபராக, உருவமாக, உடலாக நினைக்கவில்லை என்பது தெளிவாகிறது.

கடைசியில் துறவி ராம் சொன்னார், “அன்பரே! நான் சொன்னதை நீங்கள் புரிந்துகொள்ளவில்லை. நான் ராம் என்பவரைப் பற்றி பேசவில்லை. ராம்தான் சந்திரன் - நட்சத்திரங்களை இயக்குவதாகவும் சொல்லவில்லை. ராம் உலகைப் படைத்தார் என்றும் கூறுவில்லை. நான் படைத்தேன்; நான் இதையெல்லாம் செய்தேன். நான் ராமைக் கடந்தவன்; நான் ராமுக்கு அப்பாற்பட்டவன்.”

‘நானே சத்தியம்’ என்று ஒருவன் அறிவித்தால் அதைப் புரிந்துகொள்வது கஷ்டம். இது ‘நான் கடவுள்’ என்று அறிவிப்பதற்கு சமமாகிறது. கடவுளின் விருப்பமின்றி இலையும் அசையாது என்பது நமது புரிதலுக்கு உட்பட்டது. ‘நான் பரிபூரணன்’ என்னும் வாக்குமூலம் நமது புரிதலுக்கு அப்பாற்பட்டது.

முதல் அறிவிப்பு முழுமையாக ஏற்கப்பட்டால் இரண்டாவதும் நிகழ்ந்து விடுகிறது. நீ உன்னை முழுமையாக இழக்கும்போது கடவுள்தான் மிஞ்சுகிறார். அவர்தான் ‘நானே சத்தியம்’ என்னும் உன் அறிவிப்பின் மூலமாக வெளிப்படுகிறார். ‘அஹம் ப்ரம்மாஸ்மி’ (நான் பிரம்மம்) என்று உபநிஷதம் கூறுவதும். இதுவே, உபநிஷத சாரமும் இதுவே.

இந்த இருவகை அறிவிப்புகளும் பரஸ்பரம் முரணானவை அல்ல. கேட்கும்போது அவ்வாறு தோன்றலாம். ஓர் அறிவிப்பு அகங்காரத்தைக் கைவிடுவதாக உன் சார்பிலிருந்து எழுகிறது. இன்னொன்று அகங்காரம் மிஞ்சியிராத இடத்திலிருந்து எழுகிறது. அந்த இடத்தில் கடவுள் மிஞ்சியிருக்கிறார். 'இவ்வாறு சொல்வதற்குக் கூட யார் இருக்கிறார்? யாரிடம் இதைச் சொல்வது? யார் சார்பாகச் சொல்வது?'

ஆகவே மகாவீரர் அறிவித்தார் - 'அப்பா ஸோ பரமப்பா' அதாவது, ஆத்மாதான் பரமாத்மா ஆகிறது. அதைத் தவிர பரமாத்மா என்று தனியாக உள்ளது எதுவுமில்லை. இது கடவுளுக்கு விரோதமான கருத்து என்று அவர் காலத்து இந்து மதத்தினர் தவறாக நினைத்து விட்டனர். மகாவீரர் சொன்னது உபநிஷத சாரம்தான்.

புத்தர் அறிவித்தார் - பரமாத்மாவும் கிடையாது, ஆத்மாவும் கிடையாது. ஏனெனில் அப்போது இவை இரண்டு போல் முரண்பட்டு தெரிகின்றன. எது உள்ளதோ அதைப் பற்றி நான் ஒன்றும் சொல்வதற் கில்லை. எது கிடையாதோ அதைப் பற்றி மட்டுமே கருத்துக் கூறுவதுடன் நிறுத்திக்கொள்கிறேன். ஆத்மா - பரமாத்மா இரண்டையும் (இரட்டையாகப் பார்ப்பதை) விடுங்கள். அப்பொழுது உங்களுக்கு உண்மை புரிந்துபோகும்.

இதனால்தான் இந்துக்கள் புத்தரை நாத்திகராகக் கருதினர். ஆனால் உண்மையில் அவரது அறிவிப்பு ஆத்திகத்தின் சிகரம் போன்றதாகும். இதைவிட உயர்ந்த வேறு அறிவிப்பு இருக்க முடியாது.

மகான்களுடைய பிரச்சினை என்னவெனில் அவர்கள் இரண்டு விதமான அறிவிப்பு செய்ய வேண்டியுள்ளது. ஓர் அறிவிப்பு உன் தரப்பிலிருந்து செய்ய வேண்டும். ஏனெனில் அங்கிருந்துதான் உன் ஆன்மிகப் பயணம் தொடங்குகிறது. இது சாதகருக்கான அறிவிப்பு. சாதகரான நீ ஓர் இடத்தைச் சென்றடைய வேண்டுமல்லவா. அடுத்து இரண்டாவதான அறிவிப்பு உள்ளது. அது சித்தி (குறிக்கோள்) அடைந்தவர்களுக்கானது.

இந்த அஷ்டாவக்ர கீதை சித்தி நிலையின் உச்சகட்ட அறிவிப் பாகும். இதில் பயிற்சி (சாதனா) இடம் பெறவில்லை. சாதகருக்கு

எதுவும் அறிவுரை கூறப்படவில்லை. இது சித்தருடைய அறிவிப்பு; சித்தி அடைந்ததன் அறிவிப்பு. ஆகவே நான் இதை மகாகீதை என்று அழைக்கிறேன்.

கிருஷ்ணருடைய கீதையில் அர்ஜுனன் கவனிக்கப்படுகிறான். அவன் நிறைய விஷயங்கள் கூறுகிறான். சிறிது – சிறிதாக புத்தி புகட்டப்பட்டு அவன் ஆன்மிகப் பயணத்தை மேற்கொள்ள தயார் செய்யப்படுகிறான். அர்ஜுனன் எப்படியாவது (ஆன்மிகப் ) படகில் ஏறிவிடட்டும், மறுகரையை நோக்கிப் புறப்படட்டும் என்பதற்காக கிருஷ்ண கீதை கடும் முயற்சி எடுக்கிறது. அந்த மறுகரை என்ன என்பது சாடைமாடையாகக் குறிப்பிடப்படுகிறது. 'கடமைகள் அனைத்தையும் என்னிடம் அர்ப்பணித்துவிட்டு என் ஒருவனையே சரணடைவாயாக'* என்று கிருஷ்ணன் கூறுவது பயணத்தின் முடிவிலான அக்கரையைக் குறித்துதான்.

நுணுக்கமாக ஆராய்ந்தால் 'கிருஷ்ணனுடைய திருவடிகளைப் பற்றுக' என்று அர்த்தமில்லை! கிருஷ்ணன் என்ற சொல்லே அங்கில்லையே. 'என்னில் சரணடை' என்கிறார். 'நான் + இல்' தானே என்னில்? ஆகவே நீ உன்னில் லயித்துவிடு என்று பொருள். ஆத்ம உணர்வில் லயித்துவிடு, உனக்குள் கரைந்துவிடு.

ஒரு வேடிக்கையான விஷயம். உன் பெயர் ராமன், விஷ்ணு, ரஹீம், ரஹ்மான் என்று எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் ஒவ்வொருவரும்-எல்லோரும்-தன்னைக் குறிப்பிட 'நான்' என்றே சொல்வார்கள். எனவே 'நான்' என்பது எல்லோருக்குள்ளும் உறைந்திருக்கும் உலகளாவிய சத்தியமாகும். இதுவே பிரம்மம், நீ என்னும் ஆத்மா, பொறுப்புகளில் பற்றுக் கொள்ளாமல் பிரம்மத்தில் லயிப்பதாக.

அஷ்டாவக்ரர் போதிக்க, ஜனகர் கேட்கின்ற, மகாகீதையில் சாதகரை (பயிலுபவரை) பற்றி எதுவும் கூறப்படவில்லை. சித்தி பெற்றவர்களைப் பற்றிதான் இது கூறுகிறது. மறுகரையைப் பற்றி பேசுகிறது. கீதை என்பது கீதம் என்பதிலிருந்து தோன்றியது. ஆகவே

---

* ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ' (பகவத்கீதை 16 : 66)

அஷ்டாவக்ர கீதை மறுகரையை அடைந்துவிட்ட சித்தபுருஷரின் கீதமாகும்; அவர் ஆன்மிக பரவசத்தில் பாடுகின்ற பாடலாகும்.

இந்த நிலையை அடைந்துவிட்ட ஜனகர், "என்ன ஆச்சரியம்! நான் என்னையே வணங்க வேண்டும் போலல்லவா தோன்றுகிறது!" என்றார்.

இது புரட்சியான அறிவிப்பாக உள்ளது. 'நான் என்னையே நமஸ்கரிப்பேன்; என்னையே நான் வழிபடுவேன்; எனக்கே அர்ச்சனை செய்துகொள்வேன்; எனக்கே படையலை சமர்ப்பிப்பேன்'-இது ஆன்மிகத்தின் மறுகரையை அடைந்தவரின் அறிவிப்பாகும்.

கேள்வி எழுப்பிய நீ சாதகன் என்ற நிலையில், அர்ஜுனனின் நிலையில், உள்ளாய். இதை நான் மறக்கவில்லை. மறந்தால் என் மூலம் உனக்கு ஆன்மிக லாபம் கிடைக்காது. ஆகவே அஷ்டாவக்ர கீதையால் அதிகலாபம் ஏற்பட வாய்ப்பில்லாது போய்விட்டது. அது சித்தி பெற்றவரின், பூரணத்துவம் அடைந்தவரின் படைப்பாகும். இதை இன்னொரு சித்த புருஷர்தான் புரிந்துகொள்வார். இதில் சாதகன் மேற்கொள்ள வேண்டிய பயணத்திற்கான நடவடிக்கைகள் கூறப்பட வில்லை. இந்த கீதை பயணத்தைப் பற்றி கூறாமல் சேரிடத்துடன் தொடர்பு கொண்டுள்ளது. பயணத்திற்கான சாதனங்கள் பற்றியும் கூறவில்லை.

கிருஷ்ணனின் 'பகவத் கீதை' அதிகம் பேரைச் சென்றடைந் துள்ளது. காரணம், அதில் சாதகருக்கான, ஆன்மிகப் பயணிக்குத் தேவையான விஷயங்கள் கூறப்படுகின்றன. நீ கிருஷ்ண கீதையைப் பின்பற்றிச் சென்றால் அஷ்டாவக்ர மகாகீதை என்னும் கட்டத்தை அடைவாய்.

நான் உன்மீது கவனம் வைத்திருக்கிறேன். நீ எந்தக் கட்டத்தில் நிற்கிறாய் என்பதைக் கவனிக்கிறேன். சில சமயம் உன் தரப்பையும் கவனித்தாக வேண்டும்; என் சார்பாகவும் நான் பேச வேண்டும் இந்த இரு நிலைகளும் ஒன்றுக்கொன்று முரண்படுவதாக நீ நினைக்கலாம். ஆனால் அந்த முரண்பாடு உண்மையன்று; வெறும் தோற்றம் மட்டுமே ஆகும்.

**கடைசிக் கேள்வி:**

> **நான் காவி உடை அணிந்திருப்பதையும், கழுத்தில் ஜெபமணிகள் கோத்த மாலை அணிந்துள்ளதையும் பார்த்து மக்கள் கேள்வி மேல் கேள்வியாகக் கேட்கிறார்கள். என் குரு யார்; அவரது தகுதி என்ன: சீடர்களை ஏற்படுத்திக்கொள்ள அவருக்கு யார் உரிமை தந்தது என்றெல்லாம் விசாரிக்கிறார்கள். கேள்விகளுக்குப் பதில் சொல்வது சரியா அல்லது மௌனமாக இருந்துவிடலாமா?**

இதற்கெல்லாம் விதிமுறையை உருவாக்க முடியாது. பதில் சொல்வது அல்லது மௌனம் காப்பது சூழ்நிலையைப் பொறுத்தது. மேற்கண்ட கேள்விகளை ஒருவன் உன்னைச் சீண்டுவதற்காகக் கேட்டால், மௌனமாக இருந்துவிடு. அறிந்துகொள்ளும் ஆவலுடன் கேட்டால் ஓரளவு பதில் சொல். முக்திக்கு வழி கருதி ஒருவன் கேட்பதானால், உனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் சொல்லிவிடு.

ஆகவே 'நீ பதில் சொல்லு' என்றோ, 'வாயை மூடிக்கொண்டு இரு' என்றோ அறிவுறுத்த என்னால் முடியவில்லை. என் ஆலோசனை என்னவெனில், கேட்பவனின் கண்களை உற்றுப் பார் என்பதுதான். கண்களில் விஷமம் அல்லது கேலி தெரிந்தால் எந்த பதிலும் கூறாதே. இத்தகையவனுக்குப் பதில் சொன்னால் சிரங்கைச் சொறிபவன்போல மேன்மேலும் சீண்டுவான்.

கேட்பவன் நிஜமான ஆர்வம் கொண்டிருக்கலாம். சாதகர் நிலையில் இருந்துகொண்டு ஆன்மிக வழி தேடுபவனாக இருக்கலாம். அவனுக்கு நீ ஓரளவு வழிகாட்டலாம்.

கேட்பவன் முக்தியில் விருப்பம் கொண்டவனாயிருந்து, மேலோட்டமான ஆர்வம் கொண்டிராமல், உயிரைப் பணயம் வைத்து முக்திக்கு வழியைத் தேடுபவனாக இருப்பின் அவனுக்கு உன் இதயத்தைத் திறந்து காட்டு. உனக்கு தெரிந்தது அனைத்தையும் அவனிடம் வெளிப்படுத்து.

பிடிவாதமாக முடிவு எதுவும் எடுக்க வேண்டியதில்லை. ஏனெனில் தினமும் சூழ்நிலையில் மாற்றம் ஏற்படுகிறது. ஒரே கொள்கை என வைத்துக்கொண்டால் மாறுபடும் சூழ்நிலையுடன் ஒத்துவராது.

**ஜென்** துறவிகள் கூறிய ஒரு கதை உள்ளது. ஒரு கிராமத்தில் இரண்டு ஆசிரமங்கள் இருந்தன. அவற்றிற்கிடையே நீண்ட காலமாகத் தகராறு. அவற்றை நடத்திய குருமார்கள் ஒருவருடன் ஒருவர் பேசுவதில்லை. அவர்களுக்கு ஆளுக்கொரு சீடன். சிறு வயது. குருக்கள் தத்தம் சீடனுக்கு மூளைச் சலவை செய்ய முயன்றனர்: 'நீங்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளாதீர்கள். வழியில் சந்தித்தால் விலகிச் சென்றுவிடுங்கள். எங்களிடையே நீண்ட காலமாக விரோதம் இருக்கிறது. ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகப் பகைமை நீடிக்கிறது. ஒருவரது கோயில் ஒருவருக்கு சுவர்க்கமாகவும் மற்றவருக்கு நரகமாகவும் உள்ளது.'

ஆனால் சிறுவயதினரைப் பெரிய பேச்சுப் பேசித் தடுக்க முடியுமா? தடுத்ததால் அந்தச் சிறுவர்கள் பரஸ்பரம் பழகவே ஆசைப்பட்டனர். முதல் ஆசிரமப் பையன் ஒருநாள் கடைத்தெருவில் இரண்டாம் ஆசிரமப்பையன் வருவதைப் பார்த்தான். அவனிடம், "நீ எங்கே போகிறாய்?" என்று கேட்டான். ஆசிரமத்தில் ஞானிகளின் பிரசங்கங்களின் தாக்கத்திற்கு உள்ளாகியிருந்த அச்சிறுவன், "காற்று என்னை எங்கே கொண்டு செல்லுமோ அங்கே போகிறேன்," என்றான்.

முதல் சிறுவன் வீடு திரும்பி தன் குருவிடம், "இரண்டாம் ஆசிரமப் பையனை வழியில் பார்த்தேன். அவனிடம் பேசித் தவறிழைத்து விட்டேன். நீங்கள் தடுத்தும் அவனிடம் பேசியதற்கு என்னை மன்னியுங்கள். நான் அவனிடம், 'நீ எங்கே போகிறாய்?' என்று சாதாரணமாகத்தான் கேட்டேன். அந்த ஆசிரமத்தில் ஏதோ கோளாறு. என் சாதாரணக் கேள்விக்கு அவன் ஞானிபோல், 'நான் காற்றுடன் சேர்ந்து போகிறேன்' என்றான்."

குரு சமாதானப்படுத்தினார், "அந்த ஆசிரமத்தின் போக்கு சரியில்லை என்று முன்பே உன்னிடம் கூறியிருந்தேன். நீ ஒரு காரியம் செய். அடுத்த முறை அவனைப் பார்த்தால், 'காற்று இட்டுச் செல்லும்

திசையிலே போவதாகச் சொல்லும் நீ காற்றடிக்காவிட்டால் என்ன செய்வாய்?' என்று கேள்.''

அவ்வாறே அடுத்த சந்திப்பில் கேட்டபோது இரண்டாம் ஆசிரமத்துச் சிறுவன், ''காற்று வீசாவிடில் நான் கால்கள் என்னை இட்டுச் செல்லும் திசையில் செல்வேன்,'' என்றான். முதல் சிறுவன் குழப்பமடைந்து குருவிடம் திரும்பினான். ''அந்த ஆசிரமத்து ஆட்கள் நேர்மையில்லாதவர்கள். ஆகவேதான் முதல் சந்திப்பில் 'காற்று இட்டுச் செல்லும் திசையில் போகிறேன்,' என்றவன் இப்போது கால் இட்டுச் செல்லும் திசையில் போவதாகக் கூறுகிறான்,'' என்று புகார் செய்தான்.

குரு அவனை அமைதிப்படுத்தினார். ''அந்த ஆசிரமத்து ஆட்களின் பேச்சை நம்ப முடியாது என்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். அவர்களோடு வாதம்செய்ய நம்மால் இயலாது. அவர்கள் ஒவ்வொரு முறையும் வெவ்வேறு விதமாகப் பேசுவார்கள். காலத்திற்கேற்ற கோலம் தரிப்பவர்கள். நாளை அந்த ஆசிரமத்துப் பையன் கண்ணில் பட்டால் ''எங்கே போகிறாய்?' என்று வழக்கம்போல் கேள். 'காற்று இட்டுச் செல்லும் திசையில் போகிறேன்,' என்று அவன் பதிலளித்தால், 'காற்று வீசாவிடில் என்ன செய்வாய்?' என்று கேள். 'கால் இட்டுச் செல்லும் திசையில் போகிறேன்,' என்று அவன் சொன்னால், 'கால் ஒடிந்து நீ முடமானால் என்ன செய்வாய்?' என்று கேள்.''

முதல் ஆசிரமச் சீடன் புறப்பட்டான். இரண்டாம் ஆசிரமச் சீடன் ஏடாகூடமாக ஏதாவது சொன்னால் மடக்கிவிடலாம் என நினைத்தான். இரண்டாமவன் எதிர்ப்பட்டதும் முதலாமவன் கேட்டான், ''இப்பொழுது நீ எங்கே போகிறாய்?'' இரண்டாமவன் சாதாரணமாகச் சொன்னான், ''கடைக்குப் போகிறேன், காய்கறி வாங்க!''

கேள்விகளுக்கு என்ன பதில் சொல்ல வேண்டும் என்று கேட்டாய் அல்லவா? நான் முடிவான பதில் எதையும் உனக்குக் கற்பிக்க முடியாது. சாடையாக மட்டுமே சொல்ல முடியும். கேள்வி கேட்பவனை உற்றுக் கவனி. அவன் எந்த சூழ்நிலையில் கேட்கிறான் என்பதைப் புரிந்துகொள். பிறகு உன் உசிதப்படி செய்.

முதலிலேயே விதிமுறைகளை நிச்சயித்துக்கொண்டு வாழ்க்கையை அதற்கு உட்படுத்த வேண்டிய அவசியமில்லை. விதிமுறைகளுக்கு முதலிடம் தருபவன் கொஞ்சம் கொஞ்சமாக உயிரோட்டத்தை இழக்கிறான். வாழ்க்கையைத் துடிப்புடன் விளங்கவை. புத்தக சித்தாந்தத்திற்கு முக்கியத்துவம் தராமல் அனுபவ அறிவை ஆதாரமாகக் கொள். ஒரே ஒரு கட்டுப்பாட்டைப் பின்பற்றினால் போதும். முழு விழிப்பின்றியும், சுயமாக முழுமையாக உணராமலும், எக்காரியமும் செய்யாதே என்பதுதான் அது.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

விஹாய வைரிணம் காமமர்த்தம் சானர்த்தஸங்குலம்|
தர்மமப்யேதயோர்ஹேதும் ஸர்வத்ராநாதரம் குரு|| (91)

ஸ்வப்னேந்த்ரஜாலவத் பஸ்ய திநாநி த்ரீணி பஞ்ச வா|
மித்ரக்ஷேத்ரதனா காரதாரதாயாதி ஸம்பத:|| (92)

யத்ர யத்ர பவேத்த்ருஷ்ணா ஸம்ஸார வித்தி தத்ர வை|
ப்ரௌடவைராக்யமாச்ரித்ய வீதத்ருஷ்ண: சுகீ பவ|| (93)

த்ருஷ்ணமாத்ராத்மகோ பந்தஸ்தன்நாஸோ மோக்ஷ உச்யதே|
பவாஸன்ஸக்திமாத்ரேண ப்ராப்திதுஷ்டிர் முஹுர்முஹு:|| (94)

த்வமேகஸ்சேதன: சுத்தோ ஜடம் விஸ்வம்ஸத்ததா|
அவித்யாபி நா கின்சித்ஸா கா புபுத்ஸா ததாபி தே|| (95)

ராஜ்யம் ஸுதா கலத்ராணி ஸரீராணி ஸுகானி ச|
ஸன்ஸக்தஸ்யாபி நஷ்டானி தவ ஜன்மனி ஜன்மனி|| (96)

அலமர்த்தேன காமேன ஸுக்ருதேநாபி கர்மணா|
ஏப்ய: ஸன்ஸாரகாந்தாரே ந விஸ்ராந்தமபூன்மன:|| (97)

க்ருதம் ந கதி ஜன்மானி காயேன மனஸா கிரா|
துக்கமாயாஸதம் கர்ம ததத்யாப்யுபரம்யதாம்|| (98)

உனக்கு இரண்டு பகைவர்களாகிய காமத்தையும் பணத்தாசையையும் தியாகம் செய். இவற்றின் பின்னணியில் நுணுக்கமாக உள்ள அறத்தையும் (தர்மநெறியையும்) கூட கைவிட்டு இவை எல்லாவற்றையும் புறக்கணிப்பாயாக. **(சுலோகம் 91)**

பொதுவாகவே எல்லா ஞானிகளுமே பணத்தாசையையும் காமத்தையும் கைவிடவே சொல்கிறார்கள். ஆனால் அஷ்டாவக்ரர் தர்மத்தின் மீதுள்ள பற்றையும் அல்லவா விடு என்கிறார்! இதைச் சரியாகப் புரிந்துகொள்வது அவசியமாகும்.

தர்மத்தின் (அறத்தின்) நுணுக்கமான புரட்சி தர்மத்தையும் கைவிடும் போதுதான் நிகழ்கிறது. இதனால் அதர்மத்தை மேற்கொள்ள வேண்டுமென நினைக்கக்கூடாது. அதர்மத்தைத் துறந்த பிறகுதானே தர்மம் என்னும் நிலையை அடைய முடியும். அதர்மத்தைவிட்டு தர்மத்தைப் பிடித்துக் கொண்டபின் மீண்டும் சரிதல் என்பது இல்லை. ஆனால் அடுத்த கட்டத்தில் அந்த தர்மத்தின் மீதுள்ள பிடிப்பையும் எடுத்துவிட வேண்டும்.

தீய வழியில் சம்பாதித்தல் கெடுதலானது. அது பாவமானது. நல்வழியில் சம்பாதித்தல் சுபமானது. அது புண்ணியம் வாய்ந்தது. பாவத்திலிருந்து விடுபட வேண்டும் என்பதை நாம் எல்லோருமே அறிந்திருக்கிறோம். அஷ்டாவக்ரரின் கண்ணோட்டத்திலோ அது போதாது. நாம் புண்ணியத்திலிருந்தும் விடுபட வேண்டும் என்கிறார் அவர். ஏனெனில் பாவமும் புண்ணியமும் அடிப்படையில் தனித்தனி யானவை அல்ல. அவை ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை. புண்ணியத்தால் கட்டப்பட்டவன் பாவத்தாலும் கட்டுண்ட வனாக இருப்பான். புண்ணியம் சம்பாதிப்பதற்கும் ஆரம்பத்தில் பாவம் செய்ய நேரிடுகிறது. உதாரணமாக, நீ தானதர்மம் செய்ய விரும்புகிறாய் எனில் நிறையப் பணம் திரட்டியாக வேண்டும். அப்படித் திரட்டுவதற்குச் சில பாவங்கள் செய்ய நேரிடும். தானத்தால் உனக்கு புண்ணியம் கிடைக்கும். ஆனால் பணம் சம்பாதிக்காமல் தானம் எப்படி வழங்க முடியும்? நேர்மையாகச் சம்பாதித்தால் அடிப்படை யான வாழ்க்கைக்குத்தான் அது போதும்.

**லா**வோத்சு*வின் சீடர் ஒருவர் நீதிபதியாக நியமனமாகி யிருந்தார். அவர் முன் ஒரு வழக்கு நடந்தது. ஒருவன் திருட்டுக் குற்றத்திற்காக கைது செய்யப்பட்டிருந்தான். அவன் ஊரிலேயே அதிகமாகப் பணம் வைத்திருந்த ஒரு கோடீஸ்வரன் வீட்டில் கன்னம் வைத்துத் திருடினான் என்று குற்றச்சாட்டு. கையும் களவுமாகப் பிடிபட்டதால் குற்றம் சுயமாகவே நிரூபிக்கப்பட்டுவிட்டது. நீதிபதி திருடனுக்கு ஆறு மாதம் சிறை தண்டனை கொடுத்தார். அத்துடன்

* Lao-tzu கி.மு.6ஆம் நூற்றாண்டு சீன தத்துவ ஞானி. Daoism (Taoism) கோட்பாட்டை நிறுவியவர். புனிதராக, தெய்வ மானிடராக சீன மக்களால் வணங்கப்படுபவர்.

வழக்கை முடிக்காமல் அவர் பொருளை இழந்த கோடீஸ்வரனுக்கு ஓர் ஆண்டு சிறை தண்டனை விதித்தார்!

கோடீஸ்வரனுக்குக் கோபம் பொங்கியது. 'இப்படிக்கூட யாராவது தீர்ப்புக் கூறுவார்களா? சுத்த பைத்தியக்காரத்தனமாய் உள்ளதே' என்று எதிர்ப்புத் தெரிவித்து தனது நாட்டு அரசரிடம் மேல்முறையீடு செய்தார். 'பொருளை இழந்தவன் நான். கூடுதலாக நான் சிறை தண்டனையுமா அனுபவிக்க வேண்டும்? இதென்ன கொடுமை!' என்று அவர் அரசரிடம் குமுறினார்.

அரசர் நீதிபதியை வரவழைத்து இத்தகைய விசித்திர தீர்ப்பின் பின்னணி என்ன என்று விசாரித்தார். "இந்தப் பணக்காரர் கோடி-கோடியாகப் பணம் சம்பாதித்துச் சேகரித்ததால்தான் குற்றவாளிக்கு அதைத் திருடும் எண்ணம் ஏற்பட்டது. இல்லாவிடில் அவன் நல்லவனாக, நிரபராதியாக நீடித்திருப்பான். திருடிய குற்றம் தானாக நிகழவில்லை. இரண்டாவது கட்டமாகத்தான் நடந்திருக்கிறது. முதல் கட்டம் பணத்தைப் பதுக்கிய குற்றமாக அமைந்துள்ளது. இதுவே ஆணிவேர். இதற்கு மூல காரணமானதால் செல்வந்தருக்கு இரண்டு மடங்கு தண்டனை வழங்கினேன்," என்று நீதிபதி விளக்கம் தந்தார்.

நீதிபதியின் விளக்கம் அரசருக்குச் சரியென்றே பட்டது. ஆனால் சமூக வாழ்க்கையில் இம்மாதிரித் தீர்ப்பை நடைமுறைப் படுத்த முடியாது. அவர் சொன்னார், "உங்கள் தீர்ப்பு யதார்த்தமாக உள்ளது. ஆனால் இப்படித் தீர்ப்பு ஒருபொழுதும் வழங்கப்பட்ட தில்லை. இந்த விளக்கத்தை அமல்படுத்துவதாயின் நானும் குற்றவாளியாகி விடுவேன். இந்த இக்கட்டான சூழ்நிலை காரணமாக நீங்கள் நீதிபதி பதவியை ராஜினாமா செய்துவிடுங்கள். உங்கள் தீர்ப்பில் எவ்வளவு நியாயம் இருப்பினும் அதை நடைமுறைப்படுத்த முடியாதல்லவா?"

நடைமுறை, வழக்கம் என்ற பெயரில் மனிதர்கள் எவ்வளவோ விஷயங்களை மறைக்கிறார்கள். இதனால் உண்மை வெளிப்படுவ தில்லை. திருடியது மட்டுமே வெளியில் தெரிகிறது. அதன் பின்னணியை யதார்த்த வாழ்க்கை என்னும் திரை மூடியிருக்கிறது.

புண்ணிய காரியத்திற்கு வாரி வழங்க வேண்டுமானால் செயலின் தரம் பார்க்காமல் பணம் சேகரிக்க வேண்டியுள்ளது. பணம்

கைவசம் இருந்தால்தானே தியாகம் செய்வதும் சாத்தியமாகும். ஓர் ஏழை அல்லது பிச்சைக்காரன் ஒருவன் 'நான் எல்லாவற்றையும் தியாகம் செய்யப் போகிறேன்' என்று அறிவித்தால், மக்கள் சிரிப்பார்கள். 'உன்னிடம் தியாகம் செய்ய என்ன உள்ளது?' என்று கேலி செய்வார்கள்.

ஒரு மகாவீரரோ, புத்தரோ தியாகம் செய்யும்போது அதன் எதிரொலி நூற்றாண்டுகளைக் கடந்தும் ஒலிக்கிறது; அதன் தாக்கம் நிரந்தரமானது. ஜைன சாஸ்திரங்களில் மகாவீரர் எத்துணை தியாகம் செய்துள்ளார் என்பது வர்ணிக்கப்படுகிறது. எத்தனை யானைகள், குதிரைகள், தேர்கள், தங்கம், பொற்காசுகள் தியாகம் செய்தார் என்ற விவரம் தரப்படுகிறது. இது மிகையான வர்ணனைதான். சாஸ்திரங்கள் அவரை மகாதியாகியாகக் காட்ட விரும்புகின்றன. தியாகத்தை அளக்க அவை வைத்திருக்கும் அளவுகோலும் பணம்தான்!

இது மிகவும் திகைப்பூட்டும் விஷயமாக அல்லவா உள்ளது. இங்கே போகத்தை அளப்பதும் பணம், தியாகத்தை அளப்பதும் பணம் என்று ஆகிவிட்டது. நாம் பிறருக்குக் கொடுக்கும் கௌரவ மெல்லாம் பணத்தின் அடிப்படையில்தான். அவர் எவ்வளவு சேர்த்து வைத்திருக்கிறார் என்பதைக் கவனிக்கிறோம். நாம் ஒருவரை தியாகி எனப் போற்றுவதற்கு அடிப்படையும் பணம்தான். அவர் தான தர்மத்திற்காக எவ்வளவு செலவழித்தார் என்பதையே கணக்கிடுகிறோம். எல்லாவற்றிற்கும் பணத்தையே இறுதியான அளவுகோலாக நாம் கொண்டுள்ளோம்.

இதனால்தானோ என்னவோ, ஜைனர்களின் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களும் அரசவம்சத்தினர். இவர்கள் வாழ்ந்த காலத்தில் எந்த ஏழையாவது எந்த தியாகமும் செய்யவில்லை என்று கூறிவிட முடியாது. புத்தர், ராமன், கிருஷ்ணன் ஆகியோரும் அரசர்களே. இவர்கள் அரசர்களாயிருந்ததால் கௌரவம் பெற்றனர். அவர்கள் அரச வைபவங்களைத் துறந்து வாழ்ந்ததால் அவர்கள் மேன்மேலும் கௌரவம் பெற்றார்கள்.

ஆழ்ந்து நோக்கினால் இது தியாகத்திற்குக் கிடைத்த கௌரவ மில்லை. அவர்கள் செல்வத்தைக் கைவிட்டதால் அதற்குக் கிடைத்த கௌரவம்தான் இது. ஓர் ஏழை தன்னிடமுள்ளதைக் கொடுத்து தியாகியாக முடியுமா?

ஆகவே தியாகத்திற்கும் பணம் வேண்டும். ஆனால் அப்படி தியாகம் செய்வதற்காக நிறையப் பணம் சம்பாதிக்க பாவம் செய்ய நேரிடும். ஆகவே வாழ்க்கையின் அமைப்பைப் புரிந்து கொண்டவர்கள் புண்ணியத்தையும் விட வேண்டும் என்பதை தர்மத்தையும் விடவேண்டும் என்ற விதமாகக் கூறுவார்கள்.

நமது எதிரி காமம். உலகில் எழுதப்பட்ட அனைத்து சாஸ்திரங்களுமே காமத்தை எதிரி என்கின்றன. இந்துக்கள், ஜைனர்கள், பௌத்தர்கள், கிறிஸ்தவர்கள் முதலிய எல்லா சமயத்தினருமே ஒருமித்த குரலில் காமத்தை நமது எதிரி என வசைபாடுகின்றனர். ஏன் அப்படி என்பதைப் புரிந்துகொள்ள நாம் முயலவேண்டும்.

காமம் அனைத்திலும் வலுவான உணர்வு. அதன் சக்தி பரந்து விரிந்தது. அதன் வீச்சைக் கடப்பது, தாக்கத்திலிருந்து தப்பிப்பது மிகவும் கடினமானது. சாத்தியப்படாதது என்றே கூறலாம். மனத்தத்துவ அறிஞர்களும் இதேபோல் அழுத்தமாகக் கூறுகிறார்கள். ஏனெனில் காமத்தின் விளைவுதான் நமது பிறப்பு. நம் தாய்-தந்தையருக்கு உடல் வேட்கை மிகுந்தபோது நாம் கருவில் ஜனித்தோம். உன் உடலின் தோற்றம் இரண்டு காம அணுக்களின் இணைப்பால் நிகழ்ந்தது. அவை உன் உடலெங்கும் பரவின. இப்போது உன் உடலில் கோடிக் கணக்கான செல்கள் (திசுக்கள்) உள்ளன. ஒவ்வொரு செல்லிலும் காமம் உறைந்துள்ளது.

நீ ஆண் எனில் பெண்ணைத் தனிப்பட்டவள், உன்னுடன் சம்பந்தப்படாத வெளியாள் என்று நினைக்காதே. உனக்குக் கிடைத்த உடலில் ஒரு பாதி தாயிடமிருந்து வந்தது; மறுபாதி தந்தையிடமிருந்து வந்தது. உனக்குள் ஆண்-பெண் ஆகிய இரு தன்மைகளும் உள்ளன. அவற்றின் விகிதாசாரம் வேண்டுமானால் வித்தியாசப்படலாம்.

இதையே இந்துக்கள் அர்த்தநாரீஸ்வர சொரூபமாகக் காண்கின்றனர். சிவபெருமானின் சிலைகள் சிலவற்றில் அவர் பாதி ஆணாகவும், பாதி பெண்ணாகவும் காட்சி தருகிறார். இந்தக் கண்ணோட்டம் மிகவும் மதிப்புடையது. நீயும், ஒவ்வொரு நபரும் அர்த்தநாரீஸ்வரரின் பிரதிபலிப்புதான். வேறு விதமாக அமைய சாத்தியமில்லை. நீ பாதி அளவு உன் தாய்; மறுபாதி உன் தந்தை. ஆணிடம் தந்தையின் தன்மையும், பெண்ணிடம் தாயின் தன்மையும் தூக்கலாக இருக்கும்.

இதனால்தான் நாம் சிலசமயம் ஒருவர் பெண்ணாகவோ, ஒருத்தி ஆணாகவோ மாறியதாகக் கேள்விப்படுகிறோம். இருபதாண்டுகள் வாலிபனாக வளர்ந்தவன். இளம் பெண்ணாக மாறினான் எனக் கேட்டு அதிசயிக்கிறோம். இது இயற்கையாக நிகழ்கிறது. ஆனால் உடலியல் வல்லுநர்கள் இப்படிப்பட்ட மாற்றத்தைச் செயற்கை முறையில் நிகழ்த்த முடியும் என நம்புகின்றனர். விரும்பியபடி ஆணாக அல்லது பெண்ணாக மாறமுடியும் என்கின்றனர். ஒருவன் ஆணாகவோ, பெண்ணாகவோ பல்லாண்டுகள் வாழ்ந்து சலித்துப் போனாலோ, சூழ்நிலையின் தேவை கருதியோ எதிர்பாலார் ஆகிவிடலாம். இதற்கு உடலில் சில ஹார்மோன்களை (சுரப்பு நீர்களை) மாற்றியமைத்தால் போதும். உடலின் ஆண்-பெண் தன்மைகளை இதன்மூலம் வேறுவிதமாக ஆக்கினால் போதும்.

உதாரணமாக, நீ ஆணாயின் உன்னில் அறுபத்தைந்து சதவிகிதம் ஆணின் ஜீன் (உயிர்மத்தின் இணைமரபுக் கீற்று), நாற்பது சதவிகிதம் பெண்ணின் ஜீன் இருக்கும். இந்தத் தகவுப்பொருத்தம் (விகிதாசாரம்) மாறினால் ஆண், பெண்ணாக அல்லது பெண், ஆணாக மாற்றமடைவர்.

காமத்தால் பிறப்பு ஏற்படுகிறது. எதிரெதிரான காம அணுக்களின் சேர்க்கையில் நீ தோன்றி நின்றாய். ஆகவே காம விருப்பத்தைக் கடப்பது அரிதான காரியம். மனத்தத்துவ நிபுணர்களோ காமத்தை வெல்லவே முடியாது என்று அறிவித்துவிட்டனர். நம்முடைய தர்மசாஸ்திரங்களும் இதை ஆமோதிக்கின்றன. ஆத்மபுராணத்தில் ஒரு சுலோகம்:

**காமேன விஜிதோ பிரம்மா, காமேன விஜிதோ ஹர:|**
**காமேன விஜிதோ விஷ்ணு; ஸக்ர: காமேன நிர்ஜித:||**

காமம் பிரம்மாவை, சிவபிரானை, விஷ்ணுவையும் வென்றது. யார்தான் எப்போது காமத்தை வென்றிருக்கிறார்கள்? எல்லோரும் காமத்திடம் தோல்வியே அடைந்துள்ளனர்.

காமம் வலுவானது. ஒன்றின் வலிமை எவ்வளவு அதிகமோ அதை வீழ்த்த வலுவாகப் போராட நேரிடும். காமம் அத்தகைய எதிரி தான். நமது முழுத் திறமையையும் வெளிப்படுத்த வேண்டுமானால் அற்பமானவர்களை நம் எதிரிகளாகக் கொள்ளக்கூடாது. எதிரியின்

வலிமையைப் பொறுத்துதான் உன் வெற்றியும் மதிப்பிடப்படும். அற்பமானவர்களை வெல்வதென்பது சாரமற்ற விஷயம்.

ஈசாப்பின்* கதைகளில் ஒன்று. ஒரு கழுதை ஒரு சிங்கத்திற்கு சவால் விட்டது. "தைரியமிருந்தால் வா மைதானத்திற்கு. என்னுடன் நேருக்கு நேர் மோதிப்பார்," என்றது. சிங்கம் ஏதும் பதிலளிக்காமல் அந்த இடத்தை விட்டு அகன்றது. இதைக் கண்ட ஒரு குள்ளநரி சிங்கத்தை அணுகி, "மகாராஜாவே, என்ன விஷயம்? என்ன காரணத்தால் நீங்கள் அற்பக் கழுதையின் வீராப்பான சவாலை ஏற்கவில்லை?" என்று விசாரித்தது.

சிங்கம் காரணம் சொன்னது: "நரியாரே! உமக்கென்ன பைத்தியம் பிடித்திருக்கிறதா? நான் அதன் சவாலை ஏற்றால், காட்டுராஜா ஒரு கழுதையுடன் சண்டை போட்டார் என்று செய்தி பரவும். எனக்கு அவமானமாகிவிடும். சிங்க இனத்தில், குலத்தில், வம்சத்தில், பரம்பரையில் எந்தச் சிங்கமும் கழுதையுடன் சண்டையிட்டதில்லை. சண்டையே நடக்காது. ஆரம்பத்திலேயே ஒரே அறையில் அதை வீழ்த்திவிடுவேன். அவ்வாறு தோற்பதில் கழுதைக்கு எத்தகைய அவமானமும் இல்லை. சிங்கமாகிய நான் ஜெயித்தாலும் எந்தப் பெருமையும் இல்லை. 'போயும் போயும் ஒரு கழுதையை ஜெயித்தது பார்' என்று மற்ற விலங்குகள் என்னை கேலிதான் செய்யும். தப்பித்தவறி கழுதை ஜெயித்தால் நான் உயிரோடு இருக்க மாட்டேன். கழுதையுடன் வம்பு வேண்டாம் என்றுதான் பேசாமல் போகிறேன்."

அற்பமானவருடன் மோதினால் நீ ஜெயித்தாலும் யாரும் பாராட்ட மாட்டார்கள். தோற்றாலோ கைகொட்டிச் சிரிப்பார்கள். நண்பனாக நீ யாரை வேண்டுமானாலும் ஏற்படுத்திக் கொள்ளலாம். ஆனால் எதிரியை நீ யோசித்துத் தேர்ந்தெடுக்க வேண்டும். சமமான அல்லது உன்னைவிடச் சற்றுக் கூடுதலான வலிமையுள்ளவனை எதிரியாகக் கொள். அப்போது விளையும் சவாலும் போராட்டமும் உனது ஆத்ம வளர்ச்சிக்கு உதவும்.

வெளிப்பொருட்களுடன் மோதுபவர்கள் வென்றாலும் பொருட்கள்தான் அவர்களது வெற்றியின் எல்லை. அலெக்ஸாண்டர்,

* Aesop-கிரேக்க மொழியில் 200 நீதிக்கதைகள் எழுதியுள்ளார். கி.மு.6ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர்.

தைமூர்லங்க், நாதிர் ஷா, நெப்போலியன் போன்றவர்கள் மாபெரும் பகுதியை வென்றாலும் அவர்கள் வென்றது பொருட்களாலான உலகமே.

இதனாலேயே நமது நாட்டில் தன்னை வென்றவருக்கே உயர்ந்த கௌரவம் கொடுத்தோம். அரசர்களை ஜெயித்த சக்கரவர்த்திக்குக்கூட நாம் இவ்வளவு மதிப்புத் தந்ததில்லை. ஏனெனில் தன்னை வெல்லுதலே எல்லாவற்றிலும் கடினமானது. அதற்கு காமத்தைக் கடக்க வேண்டும். அப்படிக் கடந்தால் பிறப்பு-வாழ்வு-இறப்பு ஆகிய மூன்றிலிருந்தும் விடுதலை பெற்றுவிடுவோம்.

காமம் உன்னைப் பிறப்பித்தது. காமமே இளமையாக மலர்ந்து வாழ்வில் உத்சாகம் தந்தது. காமம் களைத்துப் போனதும், உதிரத் தொடங்கியதும் உன்னை மரணம் அணுகுகிறது. ஆக, உன் வாழ்க்கையின் மொத்த கதையும், ஆரம்பத்திலிருந்து இறுதிவரை, காமத்தின் கதைதான். இவ்வாறு காமத்திற்கு நீ வசப்பட்டிருக்கும் வரையிலும் நீ உனக்கு எஜமானனாக வாழ முடியாது. நீ அடிமை போலவே இருப்பாய்.

ஒருவன் தன்னையே ஆள விரும்பினால், யாருடைய சவாலையாவது சந்திக்க விரும்பினால், தனக்குள்ளிருக்கும் எதிரி எழுப்பும் சவாலை ஏற்க வேண்டும். ஆகவே அறநூல்கள் காமத்தைப் பகைவனின் வடிவம் என்கின்றன. இது வசவு இல்லை; இதில் ஓர் உண்மை மறைந்துள்ளது. கடவுள்களுக்கே சவால்விட்ட காமத்தை நாமும் பகைவனாகக் கொள்வது நமக்குப் பெருமை தரும் அல்லவா?

தேவர்களையும் தோற்கடித்த காமத்தை மனிதர்களாகிய நாம் வென்றால் நமக்குள் ஆன்மிக மலர்ச்சி ஏற்படும். எதனிடம் எல்லோரும் தோற்றனரோ அதை வென்றால் உன் உள்ளத்தில் முதல் முறையாக இறைவனின் பேரரசு ஸ்தாபிக்கப்படும்.

இந்தியாவில்தான் தேவர்கள் மனிதர்களின் திருவடிகளில் பணிந்து வணங்கியிருக்கிறார்கள். புத்தமத வர்ணனைப்படி, சித்தார்த்தர் புத்த நிலையை அடைந்தபோது பிரம்மா-விஷ்ணு-சிவபிரான் ஆகிய மும்மூர்த்திகளும் அவருடைய சரணங்களில் படையல் சமர்ப்பித்து பூஜிக்க வந்தனர் என்று கூறப்படுகிறது.

மகாவீரர் பரமஞானத்தை அடைந்தபோது தேவர்கள் அவர்மீது பூமாரி சொரிந்தனர். தேவர்கள் தங்களைவிடத் தாழ்ந்த மனித இனத்தவர் மீது ஏன் மலர் சொரிய வேண்டும்? ஏனெனில் தேவர்களால் கடக்க முடியாத எல்லையை மனிதன் கடந்துவிட்டான் என்பதால் இப்படிப் பாராட்டுகிறார்கள்.

இந்திரனும் காமத்திலிருந்து தப்பவில்லை. அப்சரப் பெண்களிடம் மயங்கிக் கிடக்கிறான். சுவர்க்க வாழ்க்கையிலும் காமமே பிரதானமாக உள்ளது. அங்கு அதன் அளவு தூக்கலாகவே உள்ளது என்று கூறலாம். ஏனெனில் தேவமங்கையர் நிலவுலகத்தினரைவிட அழகிய தேகம் படைத்தவர்கள்; அதிக ஆயுள் உடையவர்கள்; அங்கு போகப் பொருட்கள் ஏராளம்.

தேவலோகத்தில் சுக வாழ்விற்கு என்னென்ன ஏற்பாடுகளோ அவற்றையே பூமியில் அமைத்துத்தர விஞ்ஞானம் முயன்று கொண்டிருக்கிறது.

ஒரு மனிதன் இறந்து சுவர்க்கம் சென்றான். அங்கே ஒரு காட்சியைக் கண்டு திகைப்படைந்தான். அங்கே சிலர் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டிருந்தார்கள். சுவர்க்கத்திலுமா கைதிகள் உண்டு? சுவர்க்கத்து அதிகாரி ஒருவர் எதிர்ப்பட்டார். அவரிடம் அவன், "ஐயா, நரகவாசிகள் சங்கிலிகளால் கட்டப்பட்டவர்களாயின் அதை என்னால் புரிந்துகொள்ள முடியும். சுவர்க்கத்திலும் சங்கிலிகளால் கட்டப்படுவது உண்டெனில் யாருக்கு வேண்டும் சுவர்க்க வாழ்க்கை? எனக்கு இங்கே நடுக்கமாக உள்ளது," என்று தெரிவித்தான்.

அதிகாரி சிரித்தார். "இவர்களெல்லாம் அமெரிக்கர்கள். சுவர்க்கத்தில் வசிப்பதற்காகவே நற்செயல்கள் புரிந்து இங்கே வந்தார்கள். இப்போதோ அவர்கள் அமெரிக்காவிற்குத் திரும்பிச் செல்ல வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கிறார்கள். சுவர்க்க சுகங்கள், வசதிகள் எல்லாம் இப்போது அமெரிக்காவிலேயே கிடைக்கிறதாம். பழக்கமான நாடாகையால் அதுவே தேவலை என்கிறார்கள். ஆகவே அவர்கள் ஓடிப்போகாதபடி சங்கிலிகளால் பிணைத்துள்ளோம்," என்று அவர் விளக்கினார்.

விஞ்ஞானம் சுவர்க்க வாழ்க்கையை பூமிக்கு இழுத்துவர முயலுகிறது. அப்படி நிகழ்ந்தாலும் பலத்த வேறுபாடு எதுவும் தெரியாது. காம உணர்வை திருப்திப்படுத்த எவ்வளவு வசதிகள் செய்து தந்தாலும் அது பலிக்காது. ஏனெனில் காமத்தின் லட்சணமே திருப்தியின்மைதான். கிடைத்ததில் திருப்தி ஏற்படாமல் கிடைக்காததில் ஆர்வம் தோன்றுகிறது. இந்த அதிருப்திதான் நம்மைக் காமத்தில் கட்டிப்போடுகிறது. இப்படித்தான் காமம் நமக்கு எதிரியாகத் தோற்றமளிக்கிறது.

கிடைத்ததைச் சிறிது அனுபவித்ததுமே அது வீணாக உணரப் படுகிறது. நீ விரும்பிய பெண் கிடைத்துவிட்டாள். உடனேயே வேறொரு பெண் மீது விருப்பம் எழுகிறது.

**க**விஞர் பைரன்* பல பெண்களுடன் தொடர்பு வைத்திருந்தார். அவர் ஆணழகர். திறமைசாலி. ஆனால் எந்தப் பெண்ணுடனும் அவரது தொடர்பு ஒன்றிரண்டு மாதத்துக்குமேல் நீடித்ததில்லை. ஆனால் ஒருத்தி, திருமணத்திற்குப் பிறகுதான் தன்னைத் தொடலாம் என்று பிடிவாதமாக இருந்தாள். பைரன் அவளை அடைந்தே தீரவேண்டுமென தீவிரமாக இருந்தார். ஆகவே திருமணத்திற்கு இசைந்தார். திருமணம் முடிந்தபின் மணப்பெண்ணின் விரல்களைப் பற்றியபடி சர்ச் படிகளில் இறங்கி சாலையை அடைந்தார். அவரது பார்வை எங்கோ சென்றது. சட்டென நின்றுவிட்டார். புதுமனைவியிடம் சொன்னார்: "நம்ப முடியாதபடி ஆச்சரியமாக உள்ளது. ஏனக்கு இதுவரை உன்மேல் மோகமாக இருந்தது. உன்னை நினைத்து மாதக் கணக்காக நான் சரியாகத் தூங்கவில்லை. இப்போது உன் கை என் கையின் வசமாகிவிட்டது. ஆனால் உன்னை இப்பொழுதே மறக்கத் தொடங்கிவிட்டேன்! அதோ தெருவில் ஒருத்தி செல்கிறாளே. அவள் எனக்குப் பேரழகியாகத் தெரிகிறாள். என் மனம் உன்னைவிட்டு அவள் பின்னால் போய்விட்டது!"

பிறகென்ன? பைரனின் புதுமனைவி திருமணம் நடந்த சூட்டிலேயே விவாகரத்து செய்து கொண்டாள்.

---

* Lord Byron (1788-1824), British poet

நாம் மிகவும் விரும்பிய ஒரு பொருள் அது கிடைத்ததும் சுவையிழந்து விடுகிறது. உதாரணமாக, நீ வீடு கட்ட விரும்புகிறாய். அதைக் குறித்துக் கனவுகள் கண்டாய். நிறைய ஆலோசித்தாய். வரைபடங்கள் தயாரித்தாய். அவற்றில் அடிக்கடி மாறுதல்கள் செய்தாய். அப்பாடா! ஒருவழியாக வீடு கட்டி முடிந்தது. ஒட்டுமொத்தப் பார்வையாக அதை இப்போது கவனிக்கிறாய். சுவரும் கதவுகளுமே கொண்டு அது சாதாரணமாக, சராசரி வீடாகத் தெரிகிறது. அதில் நீ கற்பனை செய்திருந்த அழகுணர்வு இப்போது காணப்படவில்லை. இன்னொரு விதமாக வீடு கட்டினால்தான் உன் கற்பனை முழுமை பெறும் என உனக்குத் தோன்றுகிறது. ஆனால் காலம் கடந்துவிட்டது; கைப்பணம் செலவாகிவிட்டது.

காமத்தின் லட்சணமே அது உன்னை திருப்தியடைய விடுவ தில்லை என்பதுதான். அதிருப்தியென்னும் எரியும் நெருப்புதான் காமத்தின் சொரூபம்.

இந்துக்கள் கூறும் தர்ம-அர்த்த-காம-மோட்சம் என்பதில் காமம் சராசரியாக எல்லோருக்கும் எழும் விருப்பமாகும். அர்த்தம் (பொருட்செல்வம்) என்பது விருப்பங்களை நிறைவேற்றித் தரும் உபாயமாகும். நமக்குப் பலவிதமான ஆசைகள் உள்ளதால்தான் நாம் செல்வம் பெற உழைக்கிறோம். பணமில்லாமல் அவற்றை நிறை வேற்றிக் கொள்ள முடியாது. பணம் இருந்தால் பேரழகியும் நம் வசமாகி விடுவாள். பணமில்லாதவனுக்கு மட்டரகமான பொருட்களே கிடைக்கும். பணம்தான் ஆசையைப் பலிக்கச் செய்கிறது.

இதில் வேடிக்கை என்னவென்றால், எல்லா செல்வந்தர்களும் அதிருப்தியுடனேயே விளங்குகிறார்கள். ஏழைக்குப் பணம் சம்பாதிப்போம் என்ற நம்பிக்கை உள்ளது. பணக்காரன், தன்னிடம் ஏற்கெனவே உள்ளதைவிட கூடுதலாகச் சம்பாதிக்க முடியாது என நினைத்து வருந்துகிறான்.

ஏழை இன்றைக்குக் கையில் பணமில்லையெனினும் நாளை யாவது கிடைத்துவிடும் என்றும், அதற்காக முயல்வோம் என்றும் தீர்மானிக்கிறான். செல்வந்தனிடம் செலவழிக்கப் பணம் உள்ளது. ஆனால் ஆரம்பத்தில் தடபுடலாகச் செலவழித்தவன் சிறிது காலம் சென்றபின் சலித்துப்போகிறான். பணத்தை உபயோகித்துப் பெறும்

எதுவும் அவனுக்கு திருப்தி தருவதில்லை. ஆகவே அவன் நிச்சயமாக அமைதியிழந்தவனாகக் காணப்படுகிறான்.

ஏழைக்குப் பைத்தியம் பிடிப்பதில்லை. பணக்காரர்கள்தான் மனநோய் மருத்துவர்களிடம் அதிகமாகச் செல்கிறார்கள். செல்வம் கொழிக்கும் நாடுகளில்தான் மனநோய் அதிகம் பரவியுள்ளது. ஏழை நாடுகளிலோ மனவியல் நிபுணர்களும் மனநோய் மருத்துவர்களும் மிகக்குறைந்த எண்ணிக்கையிலேயே உள்ளனர். மும்பை, புனே போன்ற மாநகரங்களிலும் மனநல மருத்துவர்கள் குறைவாகவே உள்ளனர். ஆனால் பல கோடிக் கணக்கில் மக்கள் வாழும் இந்தியாவில் மனவியல் ஆய்வாளர்கள் அதிகம் இல்லை. அவர்கள் அதிகமாகத் தேவைப்படுவதும் இல்லை. காரணம், இங்கே ஏழை மக்களே அதிகம்.

நியூயார்க்கில் மனநோய் மருத்துவர்களின் எண்ணிக்கை வளர்ந்துகொண்டே செல்கிறது. அவர்களின் எண்ணிக்கை உடல்நோய் மருத்துவர்களின் எண்ணிக்கையை நெருங்கிக் கொண்டிருக்கிறது. மேலும் சில ஆண்டுகள் கழித்து மனநோய் மருத்துவர்களின் எண்ணிக் கையே மருத்துவ உலகில் அதிகமாக இருக்கக்கூடிய சாத்தியக்கூறு உள்ளது. ஏனெனில் உடல் சுகத்திற்கான எல்லா வசதிகளும் மேற்கத்திய நாடுகளில் கிடைக்கின்றன. ஆனால் உடல் சம்பந்தப்பட்ட வசதிகளின் அதிகரிப்பு மனக்கோளாறுகளை அதிகமாக்கிவிடும் அதிசயத்தையே நாம் காண்கிறோம்.

என் கண்ணோட்டத்தில், ஓர் ஏழை மனிதன் ஆன்மிகத்தில் ஆர்வம் கொண்டால் அதை அதிசயம் என்பேன். ஒருவன் பணக் காரனாக இருந்து காலப்போக்கில் அவன் ஆன்மிக நாட்டம் கொள்ளாவிடில் அதுவும் அதிசயம்தான்.

ஏழை அன்றாட பிரச்சினைகளிலிருந்து மனத்தை விடுவித்து அதை ஆன்மிகம் நோக்கிச் செலுத்த முடிவதில்லை. அவன் மனத் திற்கு ஆன்மிக ஏக்கமும் உண்டு என்பதை அவன் அறிந்திருக்கக்கூட மாட்டான். வயிற்றை நிரப்புவதிலேயே அவனது கவனம் செல்கிறது.

பணக்காரன் காலப்போக்கில் ஆன்மிகத்தில் ஆர்வம் எடுத்துக் கொள்ளத்தான் செய்வான். ஏனெனில் அவன் உலக ஆசைகளை அனுபவித்தவன். அவற்றின் உண்மை நிலையை அறிந்தவன். அவன்

வாங்க விரும்பியதை எல்லாம் வாங்கிவிட்டான். அவற்றைத் தேவைக்கு அதிகமாகவும் வாங்கியுள்ளான். மேற்கொண்டு என்ன செய்வது? அவன் மனம் ஆன்மிகம் நோக்கித் திரும்புகிறது. இதை இயல்பான, சாதாரண மாற்றமாகவே கருத வேண்டும். அப்படித்தான் நிகழும்.

பணக்காரன் பக்தி விஷயங்களில் ஆர்வம் கொள்ளாவிடில்தான் ஆச்சரியம். அப்படி நிகழ்ந்தால் அவன் முட்டாளாக இருப்பான் அல்லது இன்னும் முழுப்பணக்காரன் ஆகியிருக்க மாட்டான். முழுப் பணக்காரனாக இருந்து, புத்தியுடையவனாகவும் இருப்பவன் பக்தி விஷயங்களில் பங்கேற்காமல் இருக்க முடியாது. ஏழையை ஆன்மிகத்தில் இறங்கச் செய்யும் அளவிற்கு அவனது அறிவு செயல்படுவதில்லை. பணக்காரனோ பக்தியில் ஈடுபடுவதுதான் புத்திசாலித்தனமென்று அறிந்திருப்பான்.

இந்தியாவில் செல்வ வளம் நிறைந்திருந்தபோது அது ஆன்மிக பூமியாகவும் விளங்கியது. புத்தரும் மகாவீரரும் வாழ்ந்த காலம் இந்தியாவிற்குப் பொற்காலமாக இருந்தது. இந்தியாவைத் தங்க முட்டை இடும் பறவையென்றழைத்துப் புகழின் சிகரத்தில் நிலைநிறுத்தினர். அனைத்துச் செல்வமும் குவிந்திருந்த இந்தியா வையே எல்லா நாடுகளும் கவனித்தன. அதன்பின் நமக்கு சரிவு ஏற்பட்டது. மீண்டும் சிகரம் தொட முடியவில்லை. பிறகு எடுத்த முயற்சியெல்லாம் கனவானது.

ஏழை முழுமையாக ஆன்மிகத்தில் இறங்க முடியாது. ஏனெனில் அவன் பணத்தில் ஆர்வம் கொண்டிருக்கிறான். அவனுடைய சிறிய தேவைகள்கூட பூர்த்தியாகவில்லை. ஆன்மிகமோ வாழ்க்கையின் கடைசித் தேவையாக உள்ளது. 'பசியுள்ளவன் பரந்தாமனை பூஜிக்க முடியாது' என்று பொன்மொழி நிலவுகிறது. பசியுள்ளவன் பஜனை செய்தாலும் அதில் பசியின் நிழல் படிந்திருக்கத்தான் செய்யும். அவன் பஜனையின் முடிவில் கிடைக்கும் (பிரசாதத்தை) ரொட்டியை நினைத்தபடியே பாடுகிறான். அந்த சமயம் அவன் கடவுளை நினைப்பதில்லை, நினைக்க முடிவதும் இல்லை.

வாழ்க்கையின் தேவைகள் நிறைவேறிவிட்டால், உடலுக்கு வேண்டியதெல்லாம் கிடைத்துவிட்டால் பிறகு மனம் இயங்கத்

தொடங்குகிறது. அப்போது ஒரு விசித்திர எண்ணம் எழுகிறது. உலகில் முயன்று அடையவேண்டியது எதுவுமே கிடையாது என்பது புரிகிறது. வேறு எங்கேயோ உள்ளது நாம் பெற வேண்டிய பொருள் என்பதை அறிந்து நாம் அதைத் தேட ஆரம்பிக்கிறோம். அர்த்தம் (செல்வம்), காமம் இரண்டின் யாத்திரையும் முடிந்து தோல்வியும் கண்டபின் ஆன்மிக யாத்திரை தொடங்குகிறது.

இவ்வாறு உலகில் இரண்டு யாத்திரைகள் நடைபெறுகின்றன. ஒன்று: பணம், காமம் (ஆசை) சம்பந்தப்பட்டது. இரண்டாவது: தர்மம் (அறம்), மோட்சம் சம்பந்தப்பட்டது. பணம் கருவியானால் ஆசை நிறைவேறுதல் அதன் லட்சியம். அறம் கருவியானால் மோட்சம் அதன் முடிவிடம். மனத்தில் உதிக்கும் ஆசையை பூர்த்திசெய்ய பணம் தேவை என்பதுபோல, மோட்சத்தை விரும்புபவன் அறச்செயல்கள் மூலம் புண்ணியம் சம்பாதிக்க வேண்டும். உலக ஆசைகள் அர்த்த மற்றவை என்ற அனுபவம் பெற்று, அதிலிருந்து விடுதலையடைந்து, மோட்சத்தின் சுவையறிய விரும்பினால், அறத்தின் உதவியையே நாட வேண்டும்.

அஷ்டாவக்ரர் புரட்சிகரமான கருத்து ஒன்றைக் கூறுகிறார். ஒரு படி மேலே, சென்று அவர், ஒரு கட்டத்தில் அந்த அறம் என்ற நிலையையும் சாதகன் கடக்க வேண்டும் என்கிறார். மோட்சம் என்பதே கூட விருப்பம் என்னும் வகையின்கீழ் வராது. அதை ஒருவன் விரும்புவதாகக் கூறுவதுகூட பிழை. நீ எதையாவது விரும்பினால் அது மோட்ச நிலையாக இருக்க முடியாது. விரும்புதல் என்பது மோட்சத்திற்கு முற்பட்ட உலகத்துடன்தான் சம்பந்தப்பட்டிருக்கும். அடிப்படையில், மோட்சத்தை அடைவதற்கான சாதனம் எதுவும் கிடையாது. அறச்செயல்கூட மோட்ச சாதனம் இல்லை.

'ஆசை நிறைவேறப் பணமும், மோட்சம் கிடைக்க புண்ணியமும் சம்பாதி' என்று சொல்லப்படுவது கணிதவியலை ஆதாரமாகக் கொண்ட இந்த உலகத்திற்குத்தான் பொருந்தும். இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால், பணம்போல மக்கள் புண்ணியமும் சம்பாதிப்பதில் ஈடுபடுகிறார்கள். பணத்தைச் சேகரிப்பதைப்போல புண்ணியத்தைப் பொக்கிஷத்தில் நிரப்புகிறார்கள். மனத்தில் பேரேடு தயாரிக்கிறார்கள். வங்கிக் கணக்கு ஏடைப் பார்ப்பதுபோல் புண்ணியம் எவ்வளவு சேர்ந்துள்ளது என்று மனக்கணக்கு போடுகிறார்கள்.

கடவுளை தரிசிக்கும்போது இந்த புண்ணிய அறிக்கையைக் கடவுளிடம் சமர்ப்பித்து புண்ணியங்களின் கூட்டுத் தொகைக்கான வரம் கேட்கலாம் என நினைக்கிறார்கள்.

சராசரி மனிதனின் பார்வையில், வாழ்க்கையில், எல்லாமே கொடுத்தல்-பெறுதல் என்னும் வியாபாரம்தான். வணிகமயமாகிவிட்ட வாழ்க்கையில் எல்லாமே பேரத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளன.

அஷ்டாவக்ரர் கூறுகிறார்: மோட்சம் என்பது வியாபார நடவடிக்கை இல்லை; அது ஒரு தொழிலின் பயன் அல்லது விளைவு போன்றதில்லை. நீ வலிய எதையும் செய்து அதை அடைய முடியாது. அது கேட்டுப் பெறக்கூடியது அன்று; அது வழங்கப்படும் பிரசாதம் போன்றது. நீ அதை விரும்புவதாகக் கூறிப் பெற இயலாது.

உனக்கு மோட்சம் ஏற்கெனவே கிட்டியுள்ளது. அதன் மீது உன் விருப்பம் காரணமாக வெளியே தேடி வருவதால் அது உன்னிடம் உள்ளதை நீ பார்க்க முடியவில்லை. விருப்பம் உன்னை குருடாக்கி யுள்ளது. நீ எதையும் விரும்பாமலும், எதற்கும் ஏங்காமலும் சிறிது காலம் இருந்துபார். திடீரென மோட்ச நிலையின் கிரணங்கள் உனக்குள் இறங்கி வருவதை உணர்வாய்.

மோட்சம் என்பது அடையக்கூடிய ஒரு நிலையாக இருந்தால்தானே அங்கே நம்மைக் கொண்டு செல்ல சாதனமும் இருக்கும். ஆனால் மோட்சம் நம் சுபாவத்தின் அங்கமாகும். நாம் ஏற்கெனவே மோட்ச நிலையில்தான் வாழ்ந்து வருகிறோம்.

**ஒ**ரு மீன். அது மிகச் சிறிதாக இருந்தபோது கடலைப் பற்றி கேள்விப்பட்டு வந்தது. மீன்களில் அனுபவசாலியானவை கடலைப் பற்றி கூறுவதையும் கேட்டிருந்தது. அந்த மீன் வளரத் தொடங்கியது. கடல் எங்கே இருக்கிறது என்பது பற்றி யோசித்துக் கவலைப்பட்டது. கடலில் பிறந்து, கடலில் வளர்ந்த இந்த மீனுக்கு எது கடல் என்றே தெரியவில்லை! அது மற்ற மீன்களிடம் விசாரித்தது. அவையும், “நாங்களும் கடல் பற்றி கேட்டிருக்கிறோமே ஒழிய அதைப் பார்த்ததில்லை. புத்தர்-மகாவீரர், ராமன்-கிருஷ்ணன் போன்றோருக்கு இணையான ஞானம் பெற்ற அதிர்ஷ்டசாலியான சில மீன்கள்

கடலைப் பார்த்திருக்கலாம். எங்களைப் பொறுத்தவரை கடல் என்பது செவிவழிச் செய்தி மாத்திரமே.'' என்று தெரிவித்தன.

மீனின் கவலை அதிகரித்தது. அதன் வாழ்க்கை குழப்ப மயமாகிவிட்டது. சில சமயம் அது உண்ணாமல் கடலை பற்றி சிந்தனையிலேயே தியானம் செய்வதுபோல் ஆழ்ந்திருந்தது. எப்படிக் கடலை அடைவது; கடலைக் காணும் அதிசயம் எப்பொழுது நிகழும் என்று ஏங்கி அது மெலிந்து விட்டது.

ஒரு நாள் அந்தக் கடலில் கலக்கும் நதியுடன் ஒரு மீன் வந்தது. இரண்டு மீன்களும் சிநேகிதர்களாகிவிட்டன. முதல் மீனின் சோகத்தின் காரணத்தை அறிந்து இரண்டாவது மீன் சிரித்தது ''ஏ பைத்தியம்! நீ எதைத் தேடுகிறாயோ அது உன்னைச் சுற்றிதான் நாலாபுறமும் உள்ளது. நாமும் மற்ற மீன்களும் அதில்தான் உயிர் வாழ்கிறோம். நீ பட்டினி கிடக்கவோ, தியானம் செய்யவோ தேவையில்லை. ஜபமும் வேண்டாம். இதோ கடல் உள்ளது. அது இருப்பதால்தான், அதில் நாம் உள்ளதால்தான், நம் உடலில் உயிர் இருக்கிறது,'' என்று இரண்டாவது மீன் முதல் மீனுக்கு யதார்த்தத்தை உணர்த்தியது.

இரண்டாம் மீனைப் போலவே அஷ்டாவக்ரர் போன்ற சத்குரு நமக்கு உணர்த்த முயல்வதும் இதுவே. நாம் ஏற்கெனவே மோட்ச உலகில்தான் இருக்கிறோம். பரமாத்மா கடல்போல் நம்மைச் சூழ்ந்து பரவியுள்ளார். பரமாத்ம சாகரத்தில்தான் நாம் பிறக்கிறோம். அதில்தான் நாம் கரைந்து போகிறோம். ஆனால் பரமாத்மா மிகவும் அருகில் இருப்பதால் கண்ணால் அவரைப் பார்க்க முடிவதில்லை. சற்று விலகியிருக்கும் பொருளைத்தான் கண் பார்க்கும். ஒரு படத்தைக் கண்ணிற்கு மிக அருகில் பிடித்தால் பார்க்க முடிவதில்லை. பரமாத்மாவும் நமக்கு மிக நெருக்கமாக இருப்பதால் அவரை நாம் பார்க்கத் தவறி விடுகிறோம். மீனுக்கு ஒரு வசதி உண்டு. அதைத் தூக்கிக் கரையில் போட்டுவிட்டால், கடலிலிருந்து பிரிந்திருப்பதன் துன்பத்தை உணர்ந்து அது துடிக்கிறது. நமக்கு அந்த சௌகரிய மில்லை. பரமாத்மாவிலிருந்து பிரிவது எவ்வளவு வேதனை தரும் என்பதை உணரமுடியாதபடி அவர் நம்முடன் ஐக்யப்பட்டிருக்கிறார்.

அஷ்டாவக்ரரின் அறிவிப்பு இதுவே: நீ தர்மம், புண்ணியம் என்றெல்லாம் கவலைப்படாதே கடவுள் உனக்குக் கிடைக்க நீ

விசேஷமான, கடினமான முயற்சி எதுவும் செய்யவேண்டியதில்லை. அவர் உனக்கு ஏற்கெனவே கிடைத்துதான் உள்ளார். மோட்சம் என்பது எதிர்காலத்தில் எங்கோ நடைபெறும் நிகழ்ச்சியன்று. அது இங்கே, இப்போதே கிடைக்கிறது. விருப்பம் ஏதுமற்ற சூனியமான மனநிலையே மோட்சம், சுவர்க்கம் எல்லாம்.

காமம் (ஆசை) நமது பகைவன். அது நம்மை எதிலும் திருப்தியடைய விடாமல் கொந்தளித்துக் கொண்டே இருக்கச் செய்கிறது. நண்பனாக இருப்பவன் நமக்கு திருப்தி தருவான், ஓய்வு தருவான். அவன் அருகில் இருப்பின் சாந்தமாக உணர்வோம். யார் அருகில் இருந்தால் சுகமாகத் தோன்றுகிறதோ அவரே நண்பர். யார் அருகில் இருப்பின் துக்கமாக, முள் குத்துவது போல் தோன்றுகிறதோ அவர் நம் எதிரி.

அஷ்டாவக்ரர் கூறுகிறார்: நீ அர்த்தம் (பொருட்செல்வம்) என்றழைப்பது அனர்த்தம் (தீயது) ஆகும். பொருளியல் (அர்த்த சாஸ்திரம்) உண்மையில் அனர்த்தத்தின் (தீயவிளைவு தரும்) சாஸ்திரமாகும். உலகில் நிகழும் குழப்பங்களுக்கெல்லாம் பணமே காரணம். ஆகவே அறிஞர்கள் சிலர், பணத்தின் மேலாதிக்கம் இருக்கும் வரை உலகில் அமைதி நிலவாது என்று முடிவாகக் கூறிவிட்டனர்.

**தொ**ண்ணூற்று ஒன்பது கொடுத்த தொல்லை என்று இந்தி பேசும் மாநிலங்களில் கூறுவதுண்டு. ஓர் அரசர். அவருக்கு தினமும் உடலில் எண்ணெய் பூசி மாலிஷ் செய்து உடல் உருவிவிட ஒருவர் வருவார். சன்மானமாக அரசர் ஒரு ரூபாய் தருவார். அந்த மனிதர் எப்பொழுதும் மகிழ்ச்சியாகத் தென்படுவார். எல்லாப் பொருட்களும் மலிவாகக் கிடைத்த காலம். ஒற்றை ரூபாயில் அவர் தானும் நன்றாகச் சாப்பிட்டு, நண்பர்களுக்கும் சாப்பாடு போடுவார். இரவில் தூங்கப்போகும் முன் எப்படியும் அந்த ஒரு ரூபாயை மிச்சம் வைக்காமல் செலவழித்துவிடுவார். அதற்காக என்றும் அவர் கவலைப்பட்டதில்லை. ஏனெனில் மறுநாள் அரசர் அவருக்கு ஒரு ரூபாய் கொடுப்பார்.

ஆனாலும் அவர் மகிழ்ச்சியாக இருப்பது கண்டு அரசருக்கே பொறாமை ஏற்பட்டது. அரசரது வாழ்வில் தினமும் பிரச்சினைகளும்

கவலைகளும் அவரை மலைபோல் அழுத்தின. ஆகவே அவர் ஒருநாள் மாலிஷ்காரரிடம் அவர் எப்படி மகிழ்ச்சியாக இருக்க முடிகிறது என்று காரணம் கேட்டார்.

அவர் சொன்னார், "மகாராஜா, நான் ஒரு விஷயமும் அறியாதவன். நான் அறிவாளியும் இல்லை. என்னைப் பார்த்து நீங்கள் ஆச்சரியமடைவதைப் போல் உங்களைப் பார்த்து எனக்கு ஆச்சரியமாக உள்ளது. என்னிடம் ஒன்றுமில்லாதபோதும் நான் மகிழ்ச்சியாக உள்ளேன். உங்களிடம் எல்லாம் இருந்தும் மிகவும் சோகமாகத் தெரிகிறீர்களே."

அரசர் தன் அந்தஸ்தை மறந்து பதில் கூற முடியாதல்லவா? அவர் தன் அமைச்சரிடம், "இந்த மனிதனின் சந்தோஷம் கண்டு என் மனத்தில் பொறாமைத் தீ மூளுகிறது. அரசனாக இருப்பதைவிட மாலிஷ்காரராக இருப்பதே மேலானது என்று தோன்றுகிறது. எனக்கு இரவில் தூக்கமில்லை. பகலில் அரசப் பணிகளிலிருந்து ஓய்வில்லை. தினமும் கவலைகள் அதிகரித்தபடி செல்கின்றன. ஒரு பிரச்சினையைக் களைந்தால் புதிதாகப் பத்து பிரச்சினை முளைக்கிறது." என்று சொல்லி வருந்தினார்.

அமைச்சர் ஆறுதல் கூறினார், "அரசே, கவலை வேண்டாம். நான் அந்த ஆளை உலக இயல்புக்குக் கொண்டுவந்து சரிப்படுத்து கிறேன்." எப்படி அது சாத்தியப்படும் என்று அரசர் கேட்டார். "எனக்கு ஒரு நாலு நாள் அவகாசம் கொடுங்கள்," என்று அமைச்சர் கேட்டுக் கொண்டார். அவர் ஒரு சுருக்குப் பையில் 99 ரூபாய் நிரப்பி ஓர் இரவு அந்த ஊழியர் வீட்டுக்குள் எறிந்து விட்டு போய்விட்டார். இந்த விஷயம் அரசருக்குத் தெரியாது. காலையில் அதைப் பிரித்த மாலிஷ்காரர் கவலையில் ஆழ்ந்தார். நூற்றுக்கு ஒரு ரூபாய் குறைகிறது. அரசர் கொடுக்கும் ரூபாயை பட்டினி கிடந்தாவது சேமித்துவிட்டால் நூறாகிவிடும் என அவர் நினைத்தார்.

உபத்திரவம் ஆரம்பமாகிவிட்டது! இதுவரை அவர் சம்பாத்தியத்தில் மிச்சப்படுத்திச் சேமிக்க முயன்றதில்லை. சேமிக்க யோசித்ததில்லை. சேமிக்கும் வாய்ப்பும் இல்லை. தினமும் கிடைத்த ஒரு ரூபாய் அன்றையச் செலவுகளுக்குச் சரியாக இருந்தது. அடுத்த நாள் பற்றி அவர் கவலைப்பட்டதில்லை. அதன் நிழல்கூட அவர்

மனத்தில் படர்ந்தது கிடையாது. ஒவ்வொரு நாளையும் முழுமையாக வாழ்ந்து வந்தார். இப்போது முதல் முறையாக 'நாளை' என்பதை அவர் கருத்தில் கொள்ள வேண்டியிருந்தது.

கைவசம் 99 ரூபாய் இருந்தது. அது நூறு ஆவதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும்? இரவெல்லாம் யோசித்தபின் அவர் மறுநாள் முழுதும் பட்டினி கிடந்து அரசர் தரவுள்ள ஒரு ரூபாயை மிச்சப்படுத்தி விடலாம் என்று முடிவெடுத்தார்,

மறுநாள் அவர் அரசருக்கு உடல் பிடித்துவிடும் போது வழக்கமான உற்சாகம் காணப்படவில்லை. முகத்தில் கவலை பரவியிருந்தது. அரசர் கேட்டார், "இன்று நீ மிகவும் கவலையுடன் தெரிகிறாயே. என்ன பிரச்சினை?"

"மகாராஜா, ஒரு பிரச்சினையும் இல்லை. எல்லாம் வழக்கம் போல்தான்," என்றார் மாலிஷ்காரர். ஆனால் வார்த்தைகளில் உற்சாகம் பிரதிபலிப்பாகவில்லை. ஒப்புக்காகப் பேசுவதுபோல் இருந்தது.

அரசர் மறுத்துப் பேசினார், "அப்படியில்லை. நீ சொல்வதை நம்பமுடியவில்லை. உன் கண்கள் வழக்கம்போல் ஒளிவீசவில்லை. ஏன், நேற்றிரவு சரியாகத் தூங்கவில்லையா?"

"மகாராஜா, தாங்கள் இவ்வளவு அக்கறையுடன் விசாரிக்கும் போது எப்படி மறைக்க முடியும்? ஆம் மஹாராஜா, நேற்று இரவு சரியாகத் தூங்கவில்லைதான், இன்று ஒருநாளில் எல்லாம் சரியாகி விடும். தாங்கள் வீணாகக் கவலைப்பட வேண்டாம்."

அரசர் சமாதானமடைந்தார். ஆனால் மாலிஷ்காரரின் கவலை குறையவில்லை. ஏனெனில் இப்போது நூறு ரூபாய் சேர்ந்தபின், அதற்கொரு வழியும் தெரிந்தபின், அந்த நூறை எப்படி இருநூறாக்குவது என்று யோசிக்கலானார். சாப்பாட்டைக் குறைத்துக் கொண்டு, பணம் மிச்சப்படுத்திச் சேமிக்கத் தொடங்கினார். அடுத்த பதினைந்து நாட்களில் அவர் இளைத்துப் பாதி தேகமாகிவிட்டார். அரசருக்குச் சரியாக உடம்பைப் பிடித்துவிட முடியவில்லை. அரசர் கோபித்தார், "உனக்கு என்ன ஆனது? உண்மையைச் சொல். என் அமைச்சர் ஏதாவது சொன்னாரா அல்லது செய்தாரா?"

மாலிஷ்காரர் திடுக்கிட்டார். "தாங்கள் என்ன சொல்கிறீர்கள்? தங்கள் அமைச்சரா...? இப்போது விஷயம் புரிகிறது. ஒருநாள் திடீரென என் வீட்டில் ஒரு சுருக்குப்பை வந்து விழுந்தது. அன்றிலிருந்துதான் என் வாழ்க்கையில் குழப்பம் சூழ்ந்தது. அந்தப் பையில் சரியாகத் தொண்ணூற்று ஒன்பது ரூபாய் இருந்தது. அது கொடுத்த தொல்லை தான் எல்லாம் என்று புரிந்துகொண்டேன்," என்றார்.

உலகில் நிலவும் எல்லாக் குழப்பங்களுக்கும் அடிப்படை பணம்தான். உண்மையில் உலகில் எல்லோரும் சுகமாக வாழக்கூடிய அளவிற்குச் செல்வம் குவிந்து கிடக்கிறது. ஆனால் அதை அபகரிக்க ஓடுவோரும், தமதாக்கிக் கொள்ள முயல்வோரும் செல்வம் பரவலாவதைத் தடுத்து விடுகின்றனர். இது சரியல்ல.

இன்றைய உலகம் செல்வச் செழிப்புடன் விளங்குகிறது. அதைப் பகிர்ந்தளித்தால் யாருக்கும் உணவு-உடை-இருப்பிடம் பற்றிய கஷ்டமே இருக்காது. ஆனால் சிறுபான்மையோரான செல்வந்தர்கள் வெறி பிடித்ததுபோல் மேன்மேலும் புணத்தைத் திரட்டிப் பதுக்குவ திலேயே ஈடுபட்டுள்ளனர். பணம்தான் எத்தனையோ போர்களுக்கு, எண்ணற்ற கொலைகளுக்குக் காரணமாய் அமைந்து வருகிறது. அரசியல் பிரச்சினைகளின் அடிப்படையிலும் பணம் செயல்படுகிறது.

டால்ஸ்டாயும் பணப்புழக்கம் இருக்கும்வரை உலகில் அமைதியை எதிர்பார்க்க முடியாது என்று எழுதியுள்ளார். இது மிகையான வாதமாக உள்ளது. இதை ஒப்புக்கொள்ள முடியாது. பணத்தை உபயோகிக்காமல் உலகில் எக்காரியமும் நடக்க முடியாத நிலை உள்ளது. பணமின்றி மனிதனால் வாழ முடியாது. பணம் அச்சடிப்பதை நிறுத்தினால் உலகில் பயங்கரக் குழப்பம் மூளும். ஆனால் பணவெறியிலிருந்து மனிதனை மீட்கலாம்.

பணத்தின் பின்னால் வெறியுடன் ஓடுகின்றவனைக் கவனமாகப் பார். ஒரு விஷயம் உனக்கு உறுதியாகத் தெரியவரும். அவனது வாழ்க்கையில் அன்பிற்கு இடம் இருக்காது. கருமி அன்புள்ளம் கொண்டவனாக இருக்க முடியாது. அன்புள்ளவனிடம் கருமித்தனம் இருக்காது. வாழ்க்கையில் அன்பு அதிகரித்தால் பணத்தைப் பதுக்கும் வெறிகுறையும். அன்பு காட்டத் தெரியாதவரிடம் பணத்தாசை அதிகமிருக்கும். இதயம் காலியாக இருந்தால் அதில், எதையாவது

நிரப்ப வேண்டும். கருமி பணம் சேமித்து இதயத்தின் வெற்றிடத்தை நிரப்ப முயலுகிறான்.

குழந்தை பிறந்ததும் அதன் வாழ்க்கையில் நிகழும் மிகவும் முக்கியமான நிகழ்ச்சி தாயிடம் பால் அருந்துதல். பாலுடன் தாயின் அன்பும் சேர்ந்தே வருகிறது. ஆகவே எப்பொழுது வேண்டுமானாலும் பால் கிடைக்கும் என்ற ஆழ்மன நம்பிக்கையால் குழந்தை ஒவ்வொரு முறையும் கொஞ்சம்தான் பால் பருகுகிறது. ஏனெனில் அதன் உள்ளம் தாயின் அன்புணர்வாலும் நிறைந்துள்ளதால் பால் அதிகமாகக் குடிக்கத் தோன்றுவதில்லை.

சில சூழ்நிலைகளில் தாய் குழந்தையிடம் அன்பு காட்டுவ தில்லை. குழந்தைக்கு ஆசைப்படாத நிலையில் பிறத்தல், குடும்பக் கட்டுப்பாடு மாத்திரை வேலை செய்யாமல் போய்விடல் போன்ற காரணங்கள் இருக்கலாம். பால் தருபவள் அன்பில்லாத தாய், சிற்றன்னை, நர்ஸ் என அமைந்தால் குழந்தை அன்பிற்குப் பதிலாகக் கூடுதலாகப் பாலை உறிஞ்சிவிடும். சிறிது நேரம் கழித்து மறுபடியும் பால் கிடைக்குமா, என்று அதற்கு சந்தேகம் ஏற்பட்டு விடுகிறது. எதிர்காலக் கவலை ஏற்பட்டு இப்பொழுதே எவ்வளவு சேகரிக்க முடியுமோ அவ்வளவு சேமித்து வைப்போம் என்று அது நினைக்கிறது.

நீ பார்த்திருப்பாயே, உடல் மெலிந்திருந்தாலும் ஏழைக் குழந்தைகளின் வயிறு மட்டும் உப்பியிருக்கும். பணக்காரர்களின் குழந்தைகளின் வயிறு சாதாரணமாக இருக்கும். ஏழைக் குழந்தையின் ஆழ்மனத்தில் எதிர்காலம் பற்றிய கவலை. ஆகவே அது ஒவ்வொரு முறையும் பலவந்தமாக நிறையப் பாலை உறிஞ்சிவிடுகிறது. பணக்காரக் குழந்தைக்கு அந்த பயம் இல்லை. அது ஒவ்வொரு முறையும் குறைவாகக் குடிக்கிறது.

பணம் சேர்ப்பவரும் இப்படித்தான் செய்கிறார். எதிர்காலம் பற்றிய அச்சமும் எதிர்காலப் பாதுகாப்புக் குறித்துக் கவலையும் அவருக்குள்ளது. ஆகவே காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள அவர் நிகழ்காலத்திலேயே ஓடி-ஓடி பணம் திரட்டுகிறார். வங்கிக் கணக்கில் பணம் அதிகரிக்கிறதா என்பதைக் கவனிக்கிறார். காப்பீடு (இன்ஷ்யூரன்ஸ்) செய்கிறார். எதிர்காலத்திற்காகவே இந்த ஏற்பாடெல்லாம். அவர் சொல்வார். 'பணம் இருந்தால் எதிர்காலம் பற்றி

கவலை எழாது. சில ஆண்டுகளில் முதுமை வந்துவிடும். நோய்கள் தாக்கும். பணம் இருந்தால் இவற்றையெல்லாம் சமாளித்துவிடலாம். யாரும் அன்பு காட்டாவிடில் நஷ்டம் ஒன்றுமில்லை. கையில் பணமிருந்தால் போதும். அதுதான் முக்கியம். அன்பை வைத்துக் கொண்டு என்ன செய்வது? அதைச் சாப்பிட முடியுமா? குடிக்க முடியுமா? பணத்தைக் கொண்டு அன்பைக்கூட வாங்கிவிடலாம். எதையும் பணத்தால் வாங்கக் கூடிய நிலையில் அன்பு மட்டும் விதிவிலக்காக முடியுமா?'

அப்படியில்லை, வாழ்க்கையில் சில அரிய விஷயங்களும் உள்ளன. அவற்றை விலை கொடுத்து வாங்க முடியாது. உதாரணமாக, பிரேமை, பிரார்த்தனை, பரமாத்மா ஆகியவை விலைக்குக் கிடைப்பவை அல்ல. வாழ்க்கையில் அற்பமானவையும், சீக்கிரம் வீணாகுபவையும், சாரமற்றவையும் விலைக்குக் கிடைக்கும். பணம் அற்பமானது. ஓர் அற்பமான பொருளால் வேறோர் அற்பமான பொருளைத்தானே வாங்க முடியும்?

ஆகவே மனிதன் மேன்மேலும் பணம் சேகரிக்கிறான். அவன் சொல்லுவான், 'அன்பு செலுத்துவதை நாளைக்கு வைத்துக் கொள்ளலாம். இன்று பணத்தை சேகரிக்கும் வேலை செய்யலாம். பணம் சேர்ந்து விட்டால் நாளை கவலையின்றி இருப்போம். அன்பு செலுத்துவோம். பாடுவோம். வீணை மீட்டுவோம். ஓய்வெடுப்போம். ஆனால் இன்று சம்பாதிப்பதில் மட்டும் ஈடுபடுவோம். இன்று சம்பாதித்து நாளைக்கான ஏற்பாடு செய்வோம்.'

'நாளை' வரும். அப்போது அதுவும் 'இன்று' ஆகிவிடுவதால் தொடர்ந்து பணம் சம்பாதிப்பாய். ஒருநாள் மரணம்தான் வரும். நீ கூறிய 'நாளை' என்ற தினம் வராது. உன்னோடு பணத்தை எடுத்துச் செல்ல முடியாது. நீ சம்பாதித்த பணக் குவியல் உன் பிணத்திற்கு அப்பால் கிடக்கும். உனக்கும் பிச்சைக்காரனுக்கும் வித்தியாசம் இருக் காது. அன்பு செலுத்த மறந்ததால்தான் உனக்கு இந்த நிலை நேர்ந்தது.

பணமே எல்லா பிரச்சினைகளுக்கும் காரணம். இதை நீ சரியாகப் புரிந்துகொள். நீ பணத்தைக் கண்டாலே பதறி ஓடப்போக வேண்டும் என்று நான் சொல்லவில்லை. பணம் குறித்து விழிப்புடன் இரு என்றே எச்சரிக்கிறேன். பணத்திற்கு உபயோகம் உண்டு. நான்

பணத்திற்கு எதிரியில்லை. பணத்திற்கு வெளியுலகில் உபயோகம் உண்டு. ஆனால் பணத்தால் உன்னை நிரப்பிக்கொள்ள முயலாதே. அவ்வாறு முயன்றால் உன் வாழ்க்கை நாசமாகிவிடும்.

பணத்தின் மூலம் சில பொருட்கள் கிடைக்கின்றன; நிச்சயமாகக் கிடைக்கின்றன. அந்தப் பொருட்களுக்கென்று தனிப்பட்ட மதிப்பும் உண்டு. ஆனால் அவற்றால் மனம் நிரந்தர திருப்தி அடைவதில்லை.

இயேசுநாதர் சொன்னார், 'மனிதன் உணவினால் மட்டும் உயிர் வாழ்ந்துவிட முடியாது.'* இதனுடன் நான் கூறும் இன்னொன்றையும் சேர்க்கலாம்: 'மனிதன் உணவின்றியும் உயிர்வாழ முடியாது.' உணவு தேவை. ஆனால் வாழ்க்கைக்கு உணவு மட்டும் போதாது. வேறு சில தேவைகளும் உண்டு பணம் இருந்தால் போதும் என நீ நினைத்தால் உன் வாழ்க்கையில் விபரீதங்கள் குறுக்கிடும். பணத்திற்குள்ள உபயோகத்தை நினைவில் கொண்டிருப்பதுடன் நில்லாமல், ஆனால் அந்த உபயோகமும் பணத்தின் செல்வாக்கும் எல்லைக்கு உட்பட்டது என்பதிலும் விழிப்பாக இருக்க வேண்டும்.

பணத்தை நீ கருவியாக உபயோகிக்க வேண்டுமே தவிர, பணம் உன்னைக் கருவியாகப் பயன்படுத்திக் கொள்ள நீ அனுமதிக்கக் கூடாது. நீ பணத்திற்கு எஜமானனாக இருக்க வேண்டுமே தவிர, பணம் உன்னை ஆட்டிப்படைக்க விடக்கூடாது. நீ எஜமானனாக இருந்தால்தான் பணம் அர்த்தமுள்ளதாக இருக்கும். பணம் உனக்கு எஜமானன் ஆனால் பேரிழப்பு ஏற்படும்.

பணத்தையும் ஆசைகளையும் துரத்திக் கொண்டு மனிதன் ஓடுகிற ஓட்டத்தின் அடிப்படையில் தர்மம் (அறம்) செயல்படுகிறது என்று நான் சொன்னால் நீ அதிர்ச்சியடைவாய். இதுவரை நீ தர்மம் பற்றி கேள்விப்பட்டிருந்தது வித்தியாசமாக இருந்தது. 'தர்மம் தலைகாக்கும், தர்மம் பிறவிக் கடலுக்குப் படகு' என்றெல்லாம்தான் நீ நினைத்து வந்திருக்கிறாய். அஷ்டாவக்ரரோ காமமும் பண வெறியும் அறத்தின் காரணமாகவே வலுப்பெற்று விடுகின்றன என்று கூறுகிறார். இது வித்தியாசமான கண்ணோட்டம்.

தர்மம் நாம் மோட்சம் பெறுவதை லட்சியமாகக் கொள்ளச் சொல்கிறது. இந்த ஆசை நிறைவேற சில நடவடிக்கைகளை

* Man doth not live by bread only... (Deuteronomy)

மேற்கொள்ளவும் சொல்கிறது. அந்த நடவடிக்கைகளை மேற்கொள்ளப் பணம் தேவைப்படுகிறது. அதற்காகப் பணம் திரட்டும்போது திசைமாறிப் பணத்தாசை உருவாகி விடுகிறது. இப்படி ஆசையுடன் பணப்பற்று கைகோக்கிறது.

ஆனால் மோட்சத்திற்காக நீ எந்த முயற்சியும் செய்ய வேண்டியதில்லை. நீ பிறக்கும்போதே மோட்சமும் சேர்ந்தே வந்தது. இங்கே, இப்போதே உன் சுபாவத்தில் மோட்சம் கலந்துதான் இருக்கிறது. நீ அதை அறிவிக்க வேண்டியதுதான் பாக்கி. நீ அறிவித்ததுமே உனக்குள் ஆனந்தம் மழையாகப் பொழியும்.

பொதுவாக, நாம் எல்லாவற்றையும் கருவி, இலக்கு என்று இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். இவற்றை சாதனம், சாத்யம் என்றும் கூறுவர். கருவி தற்காலத்தையும், இலக்கு எதிர்காலத்தையும் குறிக்கிறது. கடவுள் விஷயத்திலோ நேர்மாறான நிலை. மோட்சம் இப்பொழுதே, இங்கேயே உள்ளது. அதைப் பெற எந்தக் கருவியும் தேவையில்லை. விழித்தால் போதும், கண்ணைத் திறந்து பார்த்தால் போதும். சூரியன் உதித்துவிட்டான். எத்திசையிலும் இரவைக் காணோம். நீயோ இன்னமும் கண்களை மூடியிருக்கிறாய். ஆகவே இருட்டாக உணர்கிறாய்.

எந்த சாதனமும் தேவையில்லை. ஏனெனில் கருவி எப்படிச் செயல்படுகிறது? அதைக் கொண்டு இன்று தயாரிப்புகள் செய்கிறோம்; நாளை பலன் கிடைக்கிறது. பிறகு அதே பழைய ஓட்டம்தான். இன்று பணம் சம்பாதிக்க உழைத்தால் நாளை பணக்காரர் ஆகிவிடுவோம்; இன்று பெண் தேடினால், நாளை ஒருத்தி கிடைப்பாள் என்றெல்லாம் மனம் நம்மை விரட்டத் தொடங்குகிறது. ஆகவே கருவி அல்லது சாதனம் என்று ஒன்றைத் தேடினால் பரமாத்மாவும் நாளையப் பொருளாகி விடுவார்.

கடவுள் இன்றே கிடைக்கிறார். உலகத்தை நாளைக்குத் தள்ளிப்போடு. உலகம் என்பது இலக்கை நோக்கிய ஓட்டம். கடவுள் இப்பொழுதும் எப்பொழுதுமே கிடைக்கின்ற இலக்காக உள்ளார். விசேஷ முயற்சி தேவையில்லை. நீ எங்கேயும் அலைந்து தேட வேண்டியதில்லை. இப்போதே நீ கடவுளால்தான் சூழப்பட்டிருக்கிறாய். அவரே உனக்கு வெளியேயும் உள்ளேயும் வீற்றிருக்கிறார்.

நீ எல்லாவற்றையும் அலட்சியப்படுத்து, புறக்கணி. தர்மம்-அர்த்தம்-காமம் மூன்றையுமே துற. கடவுளை இலக்காக வைத்து எந்தக் கருவியையும் உபயோகிக்காதே.

தர்மம்-தனம்-ஆசை இவை மூன்றும் கருவிகள் மாத்திரமே. இவற்றைப் புறக்கணித்து விட்டால் மிஞ்சுவதுதான் மோட்சம் என்பது.

'நண்பர், நிலம், செல்வம், மனைவி, உடன்பிறந்தோர் ஆகியவற்றை நீ கனவுபோல், மந்திரவித்தைபோல் கருதிப் பார். இவை சில தினங்களே தங்குகின்றன.' **(சுலோகம் 92)**

அஷ்டாவக்ரர் கூறுகிறார்: இந்த உலகத்தில் நாம் எதையெல்லாம் பற்றிக் கொள்கிறோமோ, எதுவெல்லாம் நமக்கு சுகம் தரும் என்று நினைக்கிறோமோ, அவையனைத்தும் நாம் பார்த்துக் கொண்டிருக்கும் போதே சேதமடைந்து விடுகின்றன. எல்லாம் கனவு போன்றது. கனவு நிகழும்போது அது உண்மையெனத் தோன்றுகிறது. அது கலைந்ததும் மிகுந்த திகைப்பு உண்டாகிறது.

இதுதான் கனவின் சுபாவம். இரவில் உண்மையெனத் தோன்றும் கனவு காலையில் கண் விழித்ததும் பொய்யெனத் தெரிகிறது. அடுத்த நாள் இரவு கனவு காணும்போது அதை உண்மையென நம்புகிறாய். கனவைக் குறித்து ஒருபோதும் சந்தேகம் எழுவதில்லை. நாத்திகரும் கனவை உண்மையென நம்புகிறார். கனவு காணும் சமயம் அதை உண்மையென்றே உலகிலுள்ள அனைவரும் ஒருமித்து நினைப்பது ஆச்சரியம் தரும் விஷயம்.

கனவில் திடீரென ஒரு குதிரை உன்னை நோக்கி வருவதைப் பார்க்கிறாய். குதிரை உன் அருகில் வந்து நின்றதும் உன் மனைவியாக அல்லது உன் கணவனாக மாறிவிடுகிறது. இது எப்படி நிகழ்ந்தது என்று அந்த சமயம் உன் மனம் சந்தேகம் கிளப்புவதில்லை. நடப்பதை அப்படியே ஏற்கிறாய். கனவில் எதுவும் நிகழ முடியும். நீ கனவில் ஆகாயத்தில் பறக்கிறாய். எப்படி அவ்வாறு பறக்க முடியும் என்று நீ சந்தேகப்படுவதில்லை. நீ ஆகாயத்தையே மறைக்குமளவு பெரிய உருவம் எடுத்தாலும், எறும்பைவிட சிறிய உடலை எடுத்தாலும் உனக்கு சந்தேகம் எழுவதில்லை. காலையில் கண்விழித்து யோசித்ததும் இந்தக் கிறுக்குத்தனமான கனவுகளை நினைத்து உனக்குச் சிரிப்பாக வரும்.

சத்தியம் என்பதை இந்திய தத்துவயியல் குறிப்பிட்ட விதமாக வரையறுக்கிறது. அது முக்காலத்திலும் நிலைத்து நிற்க வேண்டும். எக்காலத்தாலும் பாதிக்கப்படாதிருக்க வேண்டும். முன்பு இருந்த விதமாகவே இன்றும் நாளையும் ஒரேமாதிரி நீடிக்க வேண்டும். ஏதாவது ஒரு காலத்திலாவது அது காணாமல் போய், மற்ற காலங்களில் இருந்தாலும் அது அசத்தியம் என்றே கருதப்படும்.

சத்தியத்தின் பிரவாகத்தில் தடை இருக்காது. எது எப்படியோ அது அப்படியே இருக்கும். நேற்று இல்லை-இன்று உள்ளது-நாளை இருக்காது என்று கூறும்போது இரண்டு காலங்களில் இல்லாதது இன்னொரு காலத்தில் இருக்கக்கூடும் என்று தெரிகிறது. உதாரணமாக, முன்பு நீ இல்லை, நாளை இருக்கப் போவதில்லை, ஆனால் நடுவில் நீ வாழ்வதுபோல் தெரிகிறது. ஆனால் உன் வாழ்க்கை முக்காலங்களில் ஒரு காலத்தில்தான் இருந்ததால் அதைக் கனவு என்றே கருத வேண்டும். எத்தனை ஆண்டுகள் வாழ்ந்தாலும் வாழ்க்கை ஒரு கனவுதான். நீண்ட ஆயுள் என்பதால் கனவு நனவாகிவிட முடியாது.

'த்ரிகாலாபாத்யத்வே ஸத்யத்வம்'-முக்காலங்களிலும் தடையின்றி விளங்குவதே ஸத்யமாகும்.

இந்திய மனத்தத்துவயியல் மனத்தின் உணரும் தன்மையை நான்கு நிலைகளாகப் பிரிக்கிறது: ஜாக்ரத, ஸ்வப்ன, ஸுஷுப்தி, ஸ்வபாவ (சாட்சி, துரீய). விழிப்பின்போது (ஜாக்ரத) நீ ஓர் உலகத்தைக் காண்கிறாய். உறக்கத்தில் கனவில் ஆழும்போது, விழிப்பு நிலையில் நீ பார்த்த உலகம் பொய்யாகி விடுகிறது. பக்கத்தில்தான் மனைவி படுத்திருந்த போதிலும், நீ கனவு காண்கையில் அவள் பொய்யாகி விடுகிறாள். அந்த சமயம் மனைவியின் நினைவுகூட எழுவதில்லை. நிஜவுலகில் உள்ள உன் குழந்தைகள், உன் வீடு, நீ ஏழை அல்லது சீமானாக இருப்பது, உனக்கு சமூகத்தில் அந்தஸ்து இருப்பது அல்லது இல்லாமை, நீ சாமியாராக அல்லது மகாத்மாவாக விளங்குவது, நீ தீயவனாக இருப்பது—இவ்வாறு உன்னைப் பற்றிய எல்லாமும் உன் கனவில் மறைந்துவிடும்.

காலையில் கனவு கலைந்ததும், இரண்டாம் கனவு ஆரம்பிக்கிறது. கனவில் கண்டதெல்லாம் இப்போது மறைந்துவிட்டது. முதல் கட்டமான விழிப்பு நிலையில் நாம் அறிந்தது எல்லாம் கனவு

நிலையிலும், கனவில் கண்டதெல்லாம் மறுவிழிப்பு (சுழுத்தி) நிலையிலும் காணாமல் போய்விடுகின்றன. இத்துடன் பெரும்பாலோர் நின்று விடுகிறோம். நான்காம் நிலையை—தனது உண்மையான நிலையை—அடைவோர் வெகு சிலரே. இதற்கு புத்தத்துவம், ஜினத்துவம், சாட்சி பாவனை என்றெல்லாம் பெயர் கொடுக்கலாம். இந்த சுத்தமான நான்காம் நிலையை பரமவிழிப்பு நிலை எனலாம். அப்போது மற்ற மூன்று நிலைகளும் புறந்தள்ளப்படுகின்றன. ஒரு புதுமையான அனுபவம் கிடைக்கிறது. அதுவே பிரம்ம அனுபவம், பரமாத்ம அனுபவம். அங்கே உலகமே கண்ணில் படுவதில்லை. இன்னொருவன் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. தானே எங்கும் விரிந்து பரவியிருப்பதாகத் தோன்றுகிறது. அந்நிலையில் 'நான்' என்பவனும் மிஞ்சுவதில்லை. 'நீ' என்பவனும் மிஞ்சுவதில்லை.

இவ்வாறு இந்தியக் கண்ணோட்டத்தில், சாட்சி மனப்பான்மை யுடன் எது அறியப்படுகிறதோ அதுவே சத்தியமாகும். அதற்கு மறுப்புத் தெரிவிக்க வாய்ப்பில்லை. நாம் இவ்வுலகை சத்தியமென நினைத்து-வருகிறோம். இந்திய தத்துவம் உலகை வரையறுக்கும்போது 'கச்சதீதி ஜகத்' என்கிறது. கடந்து போய்க் கொண்டிருக்கின்ற, ஏறத்தாழக் கடந்துபோய்விட்ட, முழுமையாகக் கடந்துவிட்ட, முழுமையாகக் கடக்கும் எல்லைக்கோட்டை அடைந்துவிட்ட தன்மை உடையதே உலகம் என்பது.

உலகம் அஸ்திரமானது, உறுதியற்றது. ஆற்றின் பிரவாகம்போல் அது சலனத்துடன் இயங்கி வருகிறது. இங்கு எல்லாம் மாறிக் கொண்டே இருக்கின்றன. எதுவும் இங்கு சாஸ்வதம் அல்லது நிலையானது இல்லை. எது மாறுதலடைகிறதோ அது ஸத்யமாக இருக்க முடியாது. மாறாத தன்மை உள்ள இடமே, நிரந்தரத் தன்மை உள்ள இடமே சத்தியமானது என்று கருதத் தக்கது.

ஆனால் உலகமோ மேகக்கூட்டம்போல் இருக்கிறது. ஓடிக் கொண்டே இருக்கிறது. அல்லது புகை கிளம்பும்போது பலவிதமான உருவங்கள் தோன்றி மறைகின்றன; விதம் விதமாகப் பரவுகின்றன. எதுவும் ஒரு கணம்கூட நிற்பதில்லை. உலகம் அப்படிப்பட்டது.

இங்கே ஒருவன் வீழ்கிறான்; ஒருவன் எழுகிறான்; ஒருவன் வெல்கிறான்; ஒருவன் தோற்கிறான். இன்று தோற்றவன் நாளை

வெல்லக்கூடும். இன்று வென்றவன் நாளை தோற்பான். இங்கு எதுவுமே பக்காவாக, உறுதியாகச் சொல்ல முடியாது. இங்கே எல்லாம் கடல் அலைகளைப் போல மாறிக்கொண்டே இருக்கின்றன. இந்த சூழ்நிலையில் சத்தியத்தைத் தேடுபவன் கையில் எதுவும் அகப்படாது.

இத்துணை மாற்றங்களிடையே ஒரு பொருள் மாறுவதில்லை. அது என்ன என்று உனக்கு நினைவிருக்கிறதா? அதுதான் ஆத்மா என்பது. பகலில் நீ விழித்திருக்கிறாய். உலகம் எதிரே உள்ளது. உனக்கு உள்ளே அமர்ந்து உலகைப் பார்ப்பவன் ஒருவன் உள்ளான். இரவில் தூக்கத்தில் கனவு காண்கிறாய். அப்போது கனவு, காண்பவனாகிய நீ என்னும் இரு விஷயங்கள் உள்ளன. பிறகு உனக்கு ஆழ்ந்த தூக்கம் வருகிறது. அப்போது நீ, ஆழ்ந்த தூக்கம் என்னும் இரு விஷயங்கள் உள்ளன. ஆழ்ந்த தூக்கம் கனவாகவோ, கனவு ஆழ்ந்த தூக்கமாகவோ மாறக்கூடும். கனவிலிருந்து நடுவில் சில சமயம் விழிக்கிறாய். அப்போது உலகம் எதிர்ப்படுகிறது. ஒன்றுமட்டுமே இவை எல்லாவற்றிலும் நிரந்தரமாக உள்ளது. அதுவே உனது சாட்சி மனப்பான்மை.

ஒருவன் காலையில் எழுந்தபோது, "இரவு ஆழ்ந்து தூங்கினேன்; ஆனந்தமாகத் தூங்கினேன்," என்கிறான். அவனைச் சில கேள்விகள் கேட்டுப்பார். "நீ ஆழமாகத் தூங்கினாய் என்றால் அது உனக்கே எப்படித் தெரிய முடியும்? அதை நீ அறிந்தது எப்படி? அந்தச் செய்தியை நீ எப்படி அறிவாய்? நிச்சயமாக உனக்குள்ளே யாரோ ஒரு பார்வையாளன் அமர்ந்திருக்கிறான். அவன்தான் உனக்கு ஆழ்ந்த தூக்கம் வந்ததை, அது ஆனந்தமாக இருந்ததைக் கவனித்தவன். எல்லாம் மாறுகின்ற, விழிப்பு-கனவு-மறுவிழிப்பு-நினைவு என்கிற சூழ்நிலைகளில் அந்த சாட்சி மட்டும் மாறுவதில்லை.

நீ முதலில் குழந்தையாக இருந்தாய். பிறகு இளைஞன் ஆனாய். கடைசியில் முதுமை சூழ்ந்தது. ஒரு காலத்தில் ஆரோக்கியமாக இருந்தாய். இப்போது நீ சிதைந்து உருக்குலைந்து விட்டாய். இடிந்த புராதனச் சின்னம்போல் காணப்படுகிறாய். ஆனால் உனக்குள்ளிருந்து பார்ப்பவனாகிய சாட்சி எந்த மாற்றமும் அடையாமல் அப்படியே உள்ளான். அந்த சாட்சி ஒருகாலத்தில் உன்னைக் குழந்தை உடலில் பார்த்தான்; பிறகு நீ வாலிபனாகி விட்டதையும் பார்த்தான். அடுத்து

உன்னிடம் முதுமையின் அறிகுறிகளைக் கண்டான். கடைசியில் நீ சிதிலமாகிவிட்டதும் அவன் கண்ணில்பட்டது.

ஆனால் அவன் மட்டும் மாறவில்லை. அவன் வாழ்க்கையில் ஆயிரக்கணக்கான சம்பவங்கள் நடந்தன. ஆனால் அந்த சாட்சி மட்டும் ஒரேமாதிரியாகவே நீடித்தான். இந்த சாட்சியின் கண் முன்னே எல்லாம் வந்தன, சென்றன; எல்லா விளையாட்டுகளும் நடைபெற்றன. சாட்சியோ எல்லாவற்றையும் கடந்து நின்றான் அவன் எதனாலும் தீண்டப்படவில்லை. எதனாலும் கறைபடவில்லை. சாட்சியத்துவம்- சாட்சியாக நின்ற இந்த நிலை-இது மட்டுமே சத்தியம், ஒரே சத்தியம்.

'எங்கெங்கெல்லாம் பேராசை உள்ளதோ, அங்கெல்லாம் உலகம் உள்ளது. முதிர்ந்த வைராக்கிய உணர்விற்கு ஆதரவு (இடம்) தந்து பேராசையிலிருந்து விடுபட்டவனாக இரு.' **(சுலோகம் 93)**

முதிர்ந்த வைராக்கியம் தேவை. பழுக்காத வைராக்கியம் பயன் தராது. அது அரைகுறை அறிவைப்போல ஆபத்தானது. காய் நிலையிலான வைராக்கியம் (பற்றின்மை) பிறர் சொல்லி ஏற்பதாகும். துறவிகள் சிலரின் முன்னிலையில் நீ இருக்க நேர்ந்து, அவர்கள் வைராக்கியத்தின் மூலம் பெற்ற அனுபவங்களை வர்ணிக்கையில் நீ கேட்க நேரிடுகிறது. உன் மனத்திலும் அம்மாதிரியான அனுபவம் பெற ஆசை மூளுகிறது. ஒரு துறவி வைராக்கியம் மூலம் கிடைக்கும் ஆனந்தத்தைப் புகழ்கிறார். இன்னொரு துறவி சமாதிநிலையின் சுகத்தை வர்ணிக்கிறார். உன் மனத்திலும் அந்த வகை ஆனந்தத்தை, அந்த வகை சுகத்தைப் பெற ஆசை உதிக்கிறது. இப்படித் திடீர்த் தூண்டுதலால் நீ வைராக்கியம் மேற்கொண்டால் அது பழுக்காததாக இருக்கும். இது நீடிக்காது. உன்னை ஆபத்தில் தள்ளிவிடும். பழுக்காத நிலையில் பறித்தால், காய்க்கும் வலி, மரத்திற்கும் வலி ஏற்படுகிறது.

பழுக்காத (கச்சா) வைராக்கியத்தில் எவ்வித தெய்விக அனுபவமும் கிடைக்காது. பழுத்த பழத்தின் இயல்பு காய்க்கு இருக்காது. பழுத்த வைராக்கியத்திற்கே பூரணமான அனுபவம் கிடைக்கும். பழுத்த பழம் மரத்திலிருந்து விழும். ஆனால் அது எப்போது விழுந்தது என்று யாருக்கும் தெரிவதில்லை. அது பிரிந்த விதத்தால் மரத்திற்கும் வலியில்லை, பழத்திற்கும் வலியில்லை. காற்று வீசக்கூட இல்லை. பழம் தானாகவே சறுக்கி இறங்கி விடுகிறது.

பழுத்த வைராக்கியம் என்பது வாழ்க்கையின் சாரமற்ற தன்மையைப் புரிந்துகொண்டு மனமுதிர்ச்சியை அடைவதைக் குறிப்பிடுகிறது. பிறர் வர்ணிப்பதைக் கேட்டு காய்நிலை வைராக் கியத்தில் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பித்து இரு. அதற்கு ஒரு மதிப்பும் கிடையாது. அது உன்னை உலக அனுபவமும் அடைய விடாது. சமாதி நிலைக்கும் இட்டுச் செல்லாது. நீ திரிசங்குபோல் நடுவில் தொங்குவாய். உலக அனுபவத்தைப் பெற்று அதையும் தனது சொந்த அனுபவம் மூலம் பெற்ற பின் கிடைப்பதே முதிர்ந்த வைராக்கியம்.

புத்தர் சொல்கிறார்: உலகம் துன்பமயம். அஷ்டாவக்ரர் சொல்கிறார்: காமம் பெரும் பகைவன். மகாவீரர் சொல்கிறார்: பணத்தின் பலன் தீமை. ஆனால் சாதகனாகிய நீ இவற்றை நேரடியாக அறிந்திருக்கவில்லை. ஆகவே அவர்களது பேச்சை மட்டுமே கேட்டு அவர்கள் பின்னால் செல்லாதே; அவர்களைப் பின்பற்றாதே. இதனால் ஆபத்துதான் நேரும். இன்னும் உனக்கு விவேகம் என்னும் கண்கள் அமையாததால் பள்ளத்தில் விழுவாய். இந்த மகான்கள் சொன்னதை அறிந்துகொள். ஆனால் உன் சொந்த வாழ்க்கை என்னும் உரைகல்லில் உரைத்துப்பார். பிறரின் சொற்களால் கவரப்படாமல் சொந்த அனுபவத்திலிருந்து கற்றுக்கொள். இவர்கள் மகான்கள். இவர்கள் சொன்னால் சரியாகத்தான் இருக்கும் என்று நம்ப வேண்டிய அவசியமில்லை. அவர்கள் சொன்னதைச் சோதித்துப் பார்ப்பது அவசியம். அவர்களின் கருத்துகளை உன் வாழ்க்கையில் பிரயோ கித்துப் பார். நீ எந்த முடிவிற்கு வருகிறாய் என்பதைக் கவனி. புத்தர் சொன்னதே, அஷ்டாவக்ரர் சொன்னதே சரியென்று நீயும் முடிவெடுத்தால் சரி. அதாவது, முடிவெடுப்பவன் நீதான். புத்தர் ஒரு சாட்சி மட்டுமே. இறுதி முடிவு உன்னுடையதாகத்தான் இருக்கும். பிறகு உன் வாழ்க்கையில் தோன்றும் வைராக்கியம் முதிர்ந்த வைராக்கியமாக இருக்கும்.

ஆசை நிலவும் இடமெல்லாம் உலகம்தான். மோட்ச ஆசைகூட உலக ஆசைகளில் ஒன்றுதான். எனவே தர்மம் என்பதையும் தியாகம் செய்து முன்னேற வேண்டும். இப்போதே நீ சுகம் பெறு. ஆனால் அதற்கு முன் உன் வைராக்கியம் பக்குவமடைய விடு.

ஆசை, பற்று உள்ள இடமெல்லாம் உலகம்தான். ஆகவே உலகை வாழ்க்கையை மட்டும் துறப்பதால் பயனில்லை. ஆசையை விட்டால்தான் முழுப்பயன் கிடைக்கும். ஆசைகளால்தான் உலகம் நிர்மாணிக்கப்படுகிறது. குறிப்பிட்ட வகையான வாழ்க்கையை விட்டுத் தப்பித்து ஓடினாலும் லாபம் ஏற்படாது. ஆசை நீடித்தால் வேறு புதிய உலகம் படைக்கப்பட்டுவிடும். ஆசையை 'ப்ளூ பிரின்ட்' எனலாம். நீ எங்கே போனாலும் அதுவும் உன்னுடன் சேர்ந்து இருக்கும். ஆசை என்னும் விதை உன் உள்ளத்தில்தான் உள்ளது. நீ எங்கே போய் புதிதான (துறவறம் போன்ற) வாழ்க்கையைத் தொடங்கினாலும் அது அங்கே முளைத்துவிடும்.

ஆசைதான் விதை. உலகம் வெறும் மரம் மாத்திரமே.. நீ விதையைச் சுட்டெரி. அவ்வாறு செய்யாமல் மரத்தோடு மோதிக் கொண்டிராதே.

ஆகவே புறமுதுகிட்டு உலகைவிட்டு ஓட்டு ஓடாதே. தோல்வி மனப்பான்மை உடையவனாக ஆகிவிடாதே. வாழ்க்கையின் ஆழத்தில் இறங்கிநில். அதன் அடர்த்தியால் சூழப்படு. வாழ்க்கையை எல்லா விதமாகவும் அறிந்துகொள். காமத்தை அனுபவித்தால்தான் அதிலிருந்து நீ விடுபட முடியும். அப்போதுதான் நீ முதலில் நினைத்த அளவிற்கு காமம் முக்கியமானதன்று என்பது புரியவரும். பணத்தின் பின்னால் பிசாசாக ஓடியலைந்துதான் பணத்தின் மூலம் நிரந்தரமான பயன் கிடைப்பதில்லை என்பதை அறிந்து கொள்வாய். அனைவரையும், அனைத்தையும் ஆளும் பேராசையை அதில் ஈடுபட்ட பிறகுதான் அது நெருப்புப் போன்றது, கடுமையான காய்ச்சல்போல் சூடேற்றுவது என்பது புரியும் அரசியல் வெளிப்பகட்டு உடையது. அதில் ஈடுபட்ட பிறகுதான் அது ஒரு நோய், கிறுக்குத்தனம், வெறி என்றெல்லாம் உணரலாம்.

வாழ்க்கை என்னும் கச்சாப் பொருள் அனுபவத்தால் பழுக் கட்டும். இந்த அனுபவம் இயற்கையான முறையில் தூண்டும்போது உனக்கு வைராக்கியம் சகஜமாகக் கிடைத்துவிடும். பழம் தானாக பூமியில் விழுவதுபோல் நீயும் துளிக்கூட சிரமமின்றி உலகப் பற்றை விடுவாய்.

"ஆசைதான் கட்டுத்தளை. அது நீங்கியபின், வீழ்ந்தபின், உள்ள நிலையே மோட்சம் என்பது. உலகிலுள்ள எதனுடனும் ஒட்டாமல்

விலகுவதால் ஆத்மா நிரந்தரமாக போஷிக்கப்பட்டு திருப்தி யடைகிறது.'' **(சுலோகம் 94)**

இந்த சூத்திரம் சிந்தனைக்குரியது. நீ எதையாவது விரும்புகின்ற வரையிலும் ஆசையினால் கட்டப்பட்டவனாக இருக்கிறாய். ஈசனோடு ஆயினும் அவரை அடைய ஆசைப்பட்டால் அதுவும் உன்னை வேறு வகையில் கட்டிப்போடும்.

'**குணா**' என்ற சிஷ்யை மிகையான பக்தியினால் எனக்கொரு கடிதம் எழுதினாள். "என்னால் உங்களை ஒருபோதும் கைவிட முடியாது. நீங்களும் நான் உங்களைக் கைவிடும்படி செய்ய முயற்சி எடுக்காதீர்கள். எனக்கு நீங்கள்தான் சகலமும். எனக்குக் கடவுளும் வேண்டாம், மோட்சமும் வேண்டாம்," என்று ஆவேசமாக எழுதியிருந்தாள்.

இம்மாதிரியான கண்ணோட்டத்துடன் எனக்கு உடன்பாடில்லை. நான் அவளுக்கு விளக்கமாகப் பதிலளித்தேன். "நீ குருபக்தி காரணமாக இப்படி எழுதியுள்ளபோதிலும் நான் அதற்கு உடந்தையாக இருக்க முடியாது. கடுமையான நடவடிக்கைபோல் தோன்றினாலும் நீ என்மீதுள்ள பற்றிலிருந்து விடுபட வேண்டும் என்பதற்காக நான் முழுமையாக முயல்வேன். இல்லாவிடில், குரு ஸ்தானத்திலிருந்து சரிந்து நான் உனக்கு எதிரியாகிவிடுவேன். எல்லா உலகப் பற்றையும் விட்டு நீ இங்கு வந்தாய். ஆனால் இப்போது குருபக்தி என்ற புதிய பற்றால் கட்டப்பட்டுள்ளாய். பழைய ஆசைகளின் இடத்தில் புதிய ஆசை தோன்றிவிட்டது. கணவனை அல்லது மனைவியைத் துறந்தவர் களும் குருபக்தி என்னும் புதிய சங்கிலியால் கட்டப்பட்டு விடுகிறார்கள். இதிலிருந்து புதிய பிரச்சினைகள் தோன்றுகின்றன.

உன்னை எல்லாத் தளைகளிலிருந்தும் அடியோடு விடுவிப்பவரே குரு என்று கூறப்படும் தகுதிபெற்றவராகிறார். பிறகு அவர் உன்னை உன்னிலிருந்து, 'நான்' என்னும் உணர்விலிருந்தும் விடுவித்து விடுகிறார். இவ்வாறு அன்பு உணர்விலிருந்து உன்னை அறுத்துப் பிரிப்பது உனக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். ஆனால் உன் அன்பால் நான் நெகிழ்ந்தால் நீ ஆத்ம முன்னேற்றத்தின் இறுதிக் கட்டத்தை அடையமாட்டாய். உன் வழிக்கு நான் வந்தால் நீ

குருவாகவும் நான் சீடனாகவும் அல்லவா ஆகிவிடுவோம்! என் நடவடிக்கை கடுமையாகத் தெரிந்தாலும் அதை நான் செய்துதான் ஆகவேண்டும். 'உன்னை நான் கைவிடமாட்டேன்' என்று நான் சொன்னாலும் அதை நீ நம்பியிராதே. நீ முன்கூட்டியே விலகி ஓடிப்போய் விடுவதைத் தடுக்கவே நான் அவ்வாறு கூறக்கூடும். நான் எப்போதுமே மானசீகமாக உன்னோடுதான் இருப்பேன். ஆனால் பற்று என்னும் வேரை அறுத்துக் கொண்டு இருப்பேன். ஒருநாள் திடீரென நீ முழுமையாகப் பற்றிலிருந்து விடுபட்டதை உணர்வாய். அதற்கு என்னிடமிருந்தும் நீ விடுபட்டாக வேண்டும்.

நிஜமான உன்னை 'நான்' என்னும் உன்னிடமிருந்து விடுவிப்பவரே சத்குரு ஆவார். இல்லாவிடில் குரு மீது முதலில் அன்பு, பிறகு அன்பு காரணமாக அவரைப் பற்றி கவலை என்று பற்றுகள் உன்னைச் சூழத் தொடங்கும்.

**நா**ன் ஒருமுறை பஞ்சாபில் பிரயாணம் செய்தேன். ஓர் ஊரில் சீக்கியர் வீட்டில் தங்கியிருந்தேன். காலையில் எழுந்து பார்த்தபோது அவ்வீட்டினர் 'குரு கிரந்த ஸாஹப்' என்னும் அவர்களது புனித நூலை அலங்காரமாக ஒரு மணையில் வைத்திருந்தனர். அருகே ஒரு டூத்பிரஷ்ஷும் ஒரு டம்ளரில் தண்ணீரும் வைக்கப்பட்டிருந்தன! நான் காரணம் கேட்டேன். 'ஸாஹப்' என்னும் சொல் மூலம் அந்த புனித நூலை ஒரு தெய்வ உருவம்போல் அவர்கள் கருதுவது தெரிந்தது. ஆகவே காலைப் பொழுது மலர்ந்ததைக் காட்ட பல் விளக்குவது போன்ற ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

இதெல்லாம் மிகையான பக்தியின் அடையாளம். சிலையை அலங்கரித்தல், அபிஷேகம் (நீராட்டு), நிவேதனம் (படையல்), உலாவ ஏற்பாடு (வீதி உலா), சயனம் (பள்ளிகொள்ளுதல்) ஆகிய செயல்கள் மனிதர்களுக்குச் செய்யப்படுவதுபோல் குறியீடாக இறைச் சின்னங்களுக்கும் செய்யப்படுகின்றன. குழந்தைகள் பொம்மைகளை உயிருள்ளவைபோல் கருதி இம்மாதிரி விளையாட்டுகளில் ஈடுபடு கின்றனர். பக்தர்கள் ராமன், கிருஷ்ணன் உருவங்களுக்கு இதேபோல் உபசாரங்கள் செய்கிறார்கள். பக்தர்கள் இதுவே பக்தியின் வெளிப்பாடு, இறையன்பு, உன்னதமான உணர்வு என்று நினைக்கிறார்கள். இவை எவ்வளவு உயர்ந்த விஷயங்களாயினும் உன்னை உலகத் தளைகளி

லிருந்து விடுவிக்க மாட்டா. உலக நடவடிக்கைகளில் உன்னைக் கூடுதலாகவே கட்டிப்போடும்.

உலகப் பிடிப்புகளிலிருந்து விடுபடுவது கடினமானது. தர்மத்திலிருந்து விடுபடுவது அதைவிட மகாகடினம். உலகப் பிடிப்புகளில் கசப்பு இருந்தாலும் கடமை காரணமாக அவற்றை விட முடிவதில்லை. வழிபாடு சம்பந்தமான செயல்கள் மனத்திற்குப் பிடித்தமாக இருப்பதால் அவற்றை விடுவது உலகக் கடமைகளை விடுவதைவிடக் கடுமையாகத் தெரிகிறது.

குரு-சீடன் சம்பந்தமும் இதேபோல் இனிமையானது. அதில் கசப்பே கிடையாது. சுவையான உறவு அது. கணவன்-மனைவி உறவில் சிறிது காலம் கழித்துச் சலிப்பேற்படுகிறது. தந்தை-மகன் உறவிலும் இனிமை குறைந்து இருவரிடையேயும் சண்டை மூள்கிறது.

ஆனால் குரு-சீடன் உறவில் எந்தத் தகராறும் ஏற்படுவதில்லை; எந்த பிரச்சினையுமில்லை; முள்போன்ற உறுத்தல் ஏதுமில்லை. அங்கே அன்பு ரசம் மட்டுமே பெருக்கெடுத்து ஓடுகிறது. அங்கு சீடனும் உன்னத நிலையில் குருவைச் சந்திக்கிறான். குருவோ ஏற்கெனவே உன்னத நிலையில்தான் உள்ளார்.

நீ குருவைச் சந்திக்க வரும்போது உன்னிடமுள்ள சிறந்த அம்சங்கள் வெளிப்படுகின்றன. குரு-சீடன் சந்திப்பு சிறந்ததும் சிறந்ததும் பரஸ்பரம் சந்திப்பதற்கு சமமாகும். உன்னிடமுள்ள உடல்-மன அழுக்குகளைப் போக்கிக் கொண்ட பிறகே நீ குருவிடம் வருகிறாய். அதிகபட்சத் தூய்மையுடன் வருகிறாய். குருவின் உன்னதத்தோடு இணைக்க உன்னிடமுள்ள உன்னதத்தை எடுத்து வருகிறாய். இந்த இரண்டு உன்னதங்களின் சந்திப்பு மதுரமானது. ஆனாலும் அந்த உறவும் உன்னைக் கட்டிப்போடும் ஒரு தளைதான். இப்படியே சம்பந்தம் நீடிக்கட்டும்; இப்படியே என்றும் தொடரட்டும் என நீ விரும்பலாம்.

ஆனால் இது சரியில்லை. இந்தக் கனவும் கலைந்துதான் ஆகவேண்டும். சீடனுக்கு இஷ்டமில்லாவிட்டாலும் குரு ஒரு கட்டத்தில் இந்தக் கட்டுப்படுத்தும் உறவை நெகிழ்த்திக் கொடுக்க வேண்டும். அவர் சீடனின் விருப்பத்திற்கு வலுவேற்றக் கூடாது.

ஆசை அல்லது பற்று வீழ்ந்தவுடன் மோட்சம் கண்ணில் தெரியும்! முதலில் விட்டு-விட்டுத் தோன்றும். முதலில் ஆசை சிறிது நேரமே மறையும். அப்போது ஞான சூரியன் ஒளிவிடும். நாம் கண்களை மூடித் திறப்பது போல்தான் இதுவும். காலப்போக்கில் நீண்ட நேரமும் பிறகு நிரந்தரமாகவும் கண் திறந்திருக்கும். பிறகு ஒருபோதும் மூடாது.

சத்தியம் கண்ணுக்குக் கூடிக்கொண்டே தெரிய ஆரம்பித்ததும் அசத்தியத்துடன் எல்லா சம்பந்தங்களும் நீங்கிவிடும். எல்லாம் சாரமற்றவை எனத் தெரிந்ததும் மூடியுள்ள உள்ளங்கை திறந்து கொள்ளும். எது சாரமானது என்று தெரிந்ததும் அதை இதயத்தில் சேமித்துப் பாதுகாக்க, இதயத்தைப் பொக்கிஷப் பெட்டியாக்கிக் கொள்ள, இயற்கையான ஆர்வம் எழும்.

"நீ சுத்த சத்திய உருவினன். உலகம் ஜடப் பொருள்; அது அசத்தியமானது. அவித்தை (ஆன்மிக அறியாமை) என்பதும் அசத்தியமானது. இதற்கு மேலும் நீ என்ன தெரிந்து கொள்ள விரும்புகிறாய்?" **(சுலோகம் 95)**

அஷ்டாவக்ரர் கூறுகிறார்: இங்கே தெரிந்து கொள்வதற்கு எதுவுமில்லை. இங்கே மூன்று வஸ்துகள் உள்ளன. ஆத்மா, உலகம், இவை இரண்டிற்கும் இடையே ஒரு குழப்பமான சம்பந்தம். அதை நாம் அவித்தை, மாயா, அஞ்ஞானம் என்றெல்லாம் கூறுகிறோம். உலகம் நமக்குள்ளே ஓரளவு உயிர்த் துடிப்பாகவும், மீதி நமக்கு வெளியே ஜடமாகவும் பரவியுள்ளது.

ஆத்மாவை உலகத்துடன் இணைக்கும் பாலம் அவித்தை எனில் நாம் சிக்கல்களில் மாட்டிக் கொள்வோம். இணைப்புப் பாலம் ஆசை எனில் நாம் அதனால் கட்டப்பட்டு விடுவோம். இணைப்புப் பாலம் கோரிக்கை அல்லது யாசகம் ஆயின் நாம் பிச்சையெடுப்பவர் களுக்கு சமானமாகி விடுவோம். இதனால் நாம் நம்மிடம் மறைந்துள்ள ஆன்மிகச் செல்வத்தை அறிந்திருப்பதில்லை. அது இருப்பது தெரியவந்தால் அவித்தை, மாயை எல்லாம் மறைந்துவிடும். நாம் விழித்தெழுவோம். நடுவிலுள்ள பாலம் உடைந்துவிடும். இப்பக்கம் ஆத்மா, அப்பக்கம் உலகம் என்பது தெரிந்துவிட்டால் பிறகு தெரிந்து கொள்வதற்கு வேறு எதுவும் மிஞ்சியிருக்காது.

இந்த ஜட உலகம் அசத்தியமானது.கனவு போன்றது. ஆகவே இதனுடன் நாம் ஏற்படுத்திக் கொள்ளும் சம்பந்தமும் சத்தியமாக இருக்க முடியாது. அசத்தியத்துடன் சத்தியம் எப்படிச் சேர முடியும்?

இரவில் ஒரு கனவு கண்டாய். அதில் கோஹினூர் வைரம் உன் எதிரே வைக்கப்பட்டிருக்கிறது. இந்தியா, பாகிஸ்தான், ஆப்கானிஸ் தான், இங்கிலாந்து நாடுகள் கைப்பற்றப் போட்டியிட்ட கோஹினூர் இதோ உன் எதிரே! உடனே அதை எடுத்து, எங்காவது ஒளித்து, உனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளத் துடிக்கிறாய். கனவில் கண்ட கோஹினூரே பொய்யாக இருக்கும்போது, அதை யாரும் பார்த்துவிடாமல், யாருக்கும் தெரியாமல் ஒளித்து வைத்துவிட வேண்டும் என்கிற உன் எண்ணம் மட்டும் எப்படி உண்மை உணர்வாக இருக்கும்? நிஜத்தில் இல்லாத ஒரு பொருளைக் குறித்த உணர்வும் உண்மையாக இருக்க முடியாது.

அஷ்டாவக்ரர் கூறுகிறார்: நீ வேறு என்ன தெரிந்துகொள்ள விரும்புகிறாய்? இவ்வளவுதான் ஞானம். நீ தெரிந்துகொள்ள வேண்டியது இவ்வளவுதான்.

உலகம் தலைதெறிக்க ஓடிக்கொண்டிருக்கிறது. உலகக் கடலில் மாறுதல்கள் என்னும் அலைகள் எழும்பிய வண்ணம் உள்ளன. ஆனால் ஆத்மா நிலையானது, மாறுதல் என்னும் அலைகள் இல்லாதது. ஆத்மாவிற்கும் உலகிற்கும் இடையே உள்ளதாகக் கூறப்படும் சம்பந்தங்கள் எல்லாம் பொய்யானவை. அறியாமை காரணமாக அந்த சம்பந்தங்களை என் மகன், என் மனைவி, என் வீடு என்றெல்லாம் கூறுகிறோம்.

**ப**ணக்காரன் ஒருவன் வீட்டில் தீப்பிடித்துவிட்டது. அவன் மாரில் அடித்துக் கொண்டு உரக்க அழுகிறான். கூட்டம் திரண்டு விட்டது. ஒருவன் ஓடிவந்து சொன்னான், "இந்தாங்க ஐயா, ஏன் தேவையில்லாம அழறீங்க? நேற்றே உங்க மகன் பக்கத்து கிராமத்தில ஒருத்தருக்கு இந்த வீட்டை வித்துட்டானே."

இதைக் கேட்டதும் பணக்காரனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. "அப்படியா, எனக்குத் தெரியாதே. என் மகன் எதுவுமே தெரிவிக்

கிலையோ. ஒரு விஷயமா பக்கத்து கிராமத்துக்குப் போறேன்னுட்டு கிளம்பிட்டான். அவ்வளவுதான்."

வீடு இன்னும் எரிந்து கொண்டிருந்தது. தீயின் நாக்குகள் முன்பைவிட உயரமாக எழும்பின. ஆனால் பணக்காரனின் கண்களில் கண்ணீர் உலர்ந்து விட்டது. அவன் சந்தோஷமாகவும் தெரிந்தான்.

அதே சமயம் அவன் மகன் ஓடோடி வந்தான். தந்தையைக் கண்டித்தான். "வீடு பற்றி எரிகிறது. ஏன் வேடிக்கை பார்க்கிறீர்கள்? இதுவா சந்தோஷப்படும் சமயம்? இந்த வீட்டை வாங்கிக் கொள்வ தாகப் பக்கத்து கிராமத்து ஆள் சொன்னதை நம்பி நான் அங்கே போனேன். இப்போது அவன் வாங்கிக் கொள்ள மறுக்கிறான். வெறும் கையோடு திரும்பியுள்ளேன்," என்று தெரிவித்தான்.

உடனே பணக்காரன் மறுபடியும் மாரில் அடித்துக் கொண்டு அழத் தொடங்கினான். மறுபடியும் வீட்டின் மீது உரிமை உணர்வு விழித்துக் கொண்டது. நடுவில் சிறிது நேரம் 'என்னுடையது' என்ற உணர்வுடன் அவன் தொடர்பு இல்லாதவனாக இருந்தான். 'எனது' என்னும் உறவு சிறிது நேரம் நீங்கியிருந்தது. சூழ்நிலை அப்படியே தான் இருந்தது. எந்த வித்தியாசமும் இல்லை. வீடு அதே வீடுதான். ஆளும் ஒரே ஆள்தான். சங்கிலியில் ஒரு கண்ணிபோல் ஒரேயொரு சம்பந்தம் மட்டும் நடுவில் சிறிது நேரம் விட்டுப் போயிருந்தது. 'என்னுடையது' என்னும் உணர்வுதான் அந்தக் கண்ணி. அது நீங்கியிருந்த நேரம் துன்ப உணர்வும் மறைந்து போயிருந்தது. மறுபடியும் அந்த சம்பந்தம் திரும்பியதும் துக்கமும் திரும்பி வந்துவிட்டது.

இதன் அடிப்படை தத்துவம் என்ன? அசத்தியமானதுடன் நீ உண்டாக்கிக் கொள்ளும் தொடர்பால் உனக்கு துன்பம் விளைகிறது. அசத்தியமானதுடன், உண்மையில் இல்லாத ஒன்றுடன் (உதாரணம், 'எனது' என்னும் உரிமை உணர்வு) உன் சம்பந்தம் நீங்கியதும் உனக்கு மகிழ்ச்சி பிறக்கிறது.

"உனது ராஜ்ஜியம், மகன்-மகள்கள், உடல், சுகசௌகரியங்கள் ஒவ்வொரு பிறவியிலும் நாசமடைந்து போயின. ஆனாலும் நீ அவற்றில் பற்று வைத்திருந்தாய்." **(சுலோகம் 96)**

அஷ்டாவக்ரர் கூறுகிறார்: திரும்பிப் பார். உன்னிடம் இப்போது என்னென்ன உள்ளனவோ அவை இதற்கு முன்பும் பல முறை உன்னிடம் இருந்தன. நீ முற்காலத்திலும் பல நாடுகளை ஆண்டிருக் கிறாய். எத்தனையோ மனைவிகள், எண்ணற்ற குழந்தைகள் உனக்கு ஏற்பட்டிருக்கின்றனர். ஏராளமான செல்வம் எத்தனையோ முறை உன்னிடம் குவிந்தது. ஒவ்வொரு முறையும் இந்த ஒவ்வொன்றின் மீது நீ பற்று கொண்டிருந்தாய். உன் பற்றை முன்னிட்டு அவற்றில் எதுவும் நீடித்துத் தங்கவில்லை. அவை வந்தன, சென்றன. கனவு போன்ற அவை உன் பற்றைக் கவனித்து உன்னிடமே நீடிக்க முடியுமா?

எத்தனை பிறவிகளாக நீ இந்தப் பொருட்களால், மனிதர்களால் சூழப்பட்டிருந்தாய். ஒவ்வொரு தடவையும் நீ அவற்றில் பற்று வைத்தாய். இவை 'என்னுடையவை' என்று உரிமை கோரும் உறவைப் படைத்துக் கொண்டாய். அவை வயதாக ஆக ஒவ்வொன் றாக உன்னை விட்டுக் கை நழுவிச் சென்றன. சாவு வந்தது. எல்லாத் தொடர்புகளையும் உடைத்தெறிந்தது; எல்லாவற்றையும் சிதறடித்துச் சென்றது.

"அன்பனே கேள், செல்வம், காமம், புண்ணியச் செயல்கள் உன்னால் நிறைய நடைபெற்று முடிந்துவிட்டன. உலகமெனும் காட்டில் சிக்கியுள்ள உன் மனத்திற்கு இவை மூலம் ஓய்வான, சாந்தமான உணர்வு ஏற்படவில்லை." **(சுலோகம் 97)**

நீ எல்லா முயற்சியும் செய்து பார்த்தாய். பொக்கிஷம் கொள்ளாத அளவிற்கு ஏராளமாகச் சம்பாதித்தாய். உலக போகங்களையும் முழுமையாக அனுபவித்தாய். உன் மனம் நிறைந்ததா? திருப்தி யுற்றதா?

**உ**பநிஷதம் ஒன்றில் யயாதி மன்னனின் கதை வருகிறது. அவன் நூறு வயதை அடைந்தபோது சாவு வந்துவிட்டது. யயாதி திடுக்கிட்டான். 'இதென்ன சாவு இவ்வளவு சீக்கிரமாக என்னை நெருங்கிவிட்டதே. இப்போதுதான் எனக்கு நூறு வயதாகிறது. நூற்றுக் கணக்கான ராணிகள் இருந்தும் நான் வாழ்க்கை இன்பங்களை இன்னும் சரியாகக்கூட அனுபவிக்கவில்லையே!' என்று வருந்தினான்.

பழங்காலத்து கதை. அக்காலத்தில் விதிமுறைகள் கடுமையாகப் பின்பற்றப்படவில்லை. கடவுள் சாவு விஷயத்தில் கருணை காட்டினார். சாவு யயாதியிடம் சொன்னது, "சரி, உன்னை விட்டுவிடுகிறேன். ஆனால் எங்கள் கணக்குப்படி ஓர் உயிரை இங்கிருந்து எடுத்துச் சென்றாக வேண்டும். உன் மகன்களில் ஒருவனை உனக்குப் பதிலாக அனுப்பு. அதுவே போதும்."

யயாதிக்கு நூறு மகன்கள். யயாதி அவர்களிடம் விவரம் தெரிவித்தான். "நான்தானே உங்களைப் படைத்தவன். உங்கள் தந்தைக் காக உங்களில் யாரும் உயிரைத் தந்து உபகாரம் செய்யக்கூடாதா?" என்று கெஞ்சினான்.*

யாரும் தங்கள் உயிரை தானமளிக்க மாட்டார்கள் என்று மரண தேவதைக்குத் தெரியும். அதனால்தான் அப்படியொரு நிபந்தனை விதித்தது. ஆம், யயாதியின் மகன்கள் வயது வரிசைப்படி யாரும் உயிரைத் தர முன்வரவில்லை. மூத்த மகனுக்கே 80 வயதாகிவிட்டது. அடுத்தவர்கள் 70-75 வயது என்றெல்லாம் இருந்தனர். அவர்கள் வாழ்க்கையை அனுபவித்தவர்கள்தாம். ஆனாலும் வாழ்க்கை இன்பங்களில் அவர்களது பற்று குறையவில்லை.

கடைசிப் பையன் மட்டும்தான் உயிரைத் தர முன்வந்தான். அவனது வயது 15-16தான் இருக்கும். மரண தேவதை அவனை கண்டித்தது. "ஏ முட்டாளே! உனக்கு 99 சகோதரர்கள். உன்னைவிட மிகவும் மூத்தவர்கள். அவர்களில் ஒருவன் என்னுடன் வர சம்மதித்தால் அதை என்னால் புரிந்து கொள்ள முடியும். உன் மூத்த அண்ணன் 80 வயதுக் கிழவன். அவனே கிளம்பத் தயாராக இல்லை. உன் அப்பா விற்கு 100 வயதாகிவிட்டதல்லவா? அவரே கிளம்ப வேண்டியவர் தானே. இவர்கள் எல்லோருமே அசைந்து கொடுக்காதபோது நீ ஏன் என்னுடன் வர தயாராக உள்ளாய்? நீ ஏன் இறக்க வேண்டும்?" என்று சாவு கேட்டது.

கடைசி மகன் சாந்தமாகப் பதிலளித்தான். "தந்தை உட்பட அவர்கள் எல்லோரும் எதனால் உன்னுடன் வரத் தயங்குகிறார்களோ

* ஆதாரபூர்வமான மகாபாரத நூல்களில் யயாதி மகன்களிடம் உயிரை யாசிக்கவில்லை என்றும் இளமையை மட்டுமே தன்னுடன் பரிவர்த்தனை செய்து கொள்ளுமாறு கேட்கிறான் என்றும் கூறப்படுகிறது.

அதே காரணத்தால்தான் நான் உன்னுடன் வர சித்தமாக உள்ளேன். என் தந்தை நூறாண்டு வாழ்ந்தும் வாழ்க்கையில் ஒன்றும் கிடைக்கவில்லை என நினைக்கிறார். இதேபோல் நானும் நூறாண்டு வாழ்ந்தால் எனக்கு மட்டும் என்ன கிடைத்துவிடும்? என் அண்ணன்கள் 60-70-80 வயதானவர்களும் திருப்தி பெறவில்லை. எனக்கு மட்டும் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்தாலும் எப்படி திருப்தி ஏற்படும்? எத்தனை வயதில் இறந்தாலும் ஒன்றுதான். ஆகவே நான் இப்போதே புறப்பட தயார்," என்று அவன் விளக்கம் தந்தான்.

இந்தக் கடைசி மகன் அற்புதமான மனிதனாக இருந்திருப்பான். மரணம் அவனை எடுத்துச்சென்றது. யயாதிக்கு மேலும் நூறாண்டுகள் வாழக் கிடைத்தன.

இவ்வாறு பத்து முறை நிகழ்ந்ததாகக் கூறுவார்கள். ஒவ்வொரு முறை சாவு யயாதியைச் சந்தித்தபோதும், 'இன்னும் வாழ்வு திகட்டவில்லை' என்றே கூறினான். நல்லவேளையாக ஒவ்வொரு முறையும் யயாதியின் மகன்களில் ஒருவன் சாவுடன் சென்று தன் தந்தையின் ஆயுள் நீடிக்க வைத்தான்.

யயாதிக்கு ஆயிரம் வயது ஆனபோது மரணம் அவனிடம் வந்தது. யயாதி சொன்னான், "உன்னை அடிக்கடி அலைய வைத்ததற்காக மிகவும் வெட்கப்படுகிறேன். இதற்காக என்னை மன்னித்துவிடு. ஒரு விஷயம் எனக்கு இப்போதுதான் புரியவந்தது. ஆயிரம் ஆண்டுகள் எம்மாத்திரம்? நான் கோடி ஆண்டு வாழ்ந்தாலும் பயனில்லை. ஆசைகளுக்கு முடிவில்லை, என்றைக்கும் ஆசைகள் திகட்டுவதில்லை என்று உலக இயல்பு இருக்கும்போது, எத்தனை ஆண்டுகளுக்கு உயிர் நீடிக்கிறது, ஆயுள் வளர்கிறது என்பது முக்கியமில்லாமல் போய்விடுகிறது."

அஷ்டாவக்ரர் கூறுகிறார்: நீ செல்வம் திரட்டினாய். இன்பங்கள் அனுபவித்தாய். நற்செயல்கள், சுபகாரியங்கள் நிறைய செய்தாய். நிறைய புண்ணியம் சம்பாதித்து விட்டாய். ஆனால் மனம் அமைதியடையவில்லை, திருப்தி கொள்ளவில்லை.

கெடுதலான செயல்களால் மன அமைதி கிடைக்காது என்பது தெரிந்த விஷயம்தான். நற்செயலாலும் அமைதி கிடைக்காது. செயல் புரிவதே ஓய்வான நிலையிலிருந்து பரபரப்பான நிலையை

அடைவதைத்தானே குறிப்பிடுகிறது. இயக்கமும், ஓட்டமும், துள்ளலும், பாய்தலும்தானே செயல் புரிவதன் (கர்மத்தின்) அடையாளங்கள்.

செய்யாமை (அகர்மம்) மூலமே அமைதி கிடைக்கும். அமர்ந்துவிடு, சாந்தமாயிரு, அமைதியில் ஆழ்ந்துவிடு, சிந்தனைக்கு முற்றுப்புள்ளி வை. சாட்சியாக மட்டுமே இரு. செய்பவனாக (கர்த்தாவாக) இராதே.

வாழ்க்கையில் எல்லா ஆர்ப்பாட்டமும் செய்து பார்த்துவிட்டாய். ஆனால் உபத்திரவங்கள், தொந்தரவுகள் நிறைந்த இவ்வுலகில் உனக்குச் சிறிது நேரம்கூட அமைதி கிடைக்கவில்லை. எனவே 'செய்யாமை' என்ற நிலைமையைச் சென்றடை.

'எத்தனையோ பிறவிகளாக நீ சிந்தனை-சொல்-செயலால் துன்பம் நிறைந்த, கடினமான காரியங்களைச் செய்தாய். போதுமப்பா, போய் ஓய்வெடு. 'அமைதியாக அமர்ந்து சுற்றிலும் நடப்பதைப் பார்த்தபடி இரு. தியான ஓய்வில் இரு.' **(சுலோகம் 98)**

தியானம் என்பது ஒரு செயலில்லை. அதற்காக நீ விசேஷமாக எதுவும் செய்ய வேண்டியதில்லை. சாட்சி மனப்பான்மை என்பதே தியானம் என்பதும். சுற்றிலும் நடப்பதை அமைதியாகப் பார்த்தபடி இரு. ஒட்டுதல் இன்றி, பற்றுதல் இன்றி, எதிர்ப்பின்றி, இப்பக்கமோ-அப்பக்கமோ சாயாமல், உணர்ச்சிவசப்படாமல், அமைதியாக நிகழ்ச்சிகளைப் பார்.

மக்கள் தீயவற்றில் சிக்கியுள்ளனர். எப்படியாவது அதிலிருந்து வெளியேறினால் தர்மச் செயல்களில் சிக்குகின்றனர். சிக்கல் என்பது அப்படியேதான் உள்ளது. மக்கள் பாவம் செய்கிறார்கள். பாவத்தி லிருந்து வெளிப்பட்டால் புண்ணியத்தில் சிக்குகின்றனர். சிக்கலில் மாட்டிக் கொள்ளும் தன்மை அப்படியேதான் உள்ளது. சிலர் வசவுச் சொற்களைப் பெருமளவில் பேசுவதில் சுவை காண்கின்றனர். அவர்களுக்கு நல்லுபதேசம் செய்து, நல்வழிக்கு இட்டுவந்தால், "சரி, இனி ஜெபம் செய்கிறோம், பஜனை செய்கிறோம்," என்று வேறுவிதத்தில் உபத்திரவம் செய்வதைத் தொடர்கிறார்கள்.

நீ பார்த்திருப்பாயே, மக்கள் ஒலிபெருக்கி வைத்து, தொடர்ந்து பஜன் பாடுகிறார்கள். நிகழ்ச்சி நடைபெறும் தெருவில் வசிப்பவர்கள்

தூங்க முடிவதில்லை. மாணவர்கள் படிக்க, தேர்வுக்கு தயாரிக்க முடிவதில்லை. பக்திப் பாடகர்கள் இந்த விஷயங்களில் அக்கறை காட்டுவதில்லை. தொடர் இசை நிகழ்ச்சியால் யாருக்காவது பாதிப்புண்டா என்றாவது இவர்கள் விசாரிக்க வேண்டாமா? இவர்களுக்கு யாரும் தடைபோட முடியாது.

ஒருவன் இரவு முழுதும் ஒலிபெருக்கி மூலம் கண்ட-கண்ட விஷயங்களைப் பேசினால் போலீசார் பிடித்துச் சென்றுவிடுவார்கள். ஆனால் பக்திப் பாடல்களை விடிய-விடியப் பாடினால், சங்கீத உபன்யாசம் செய்தால் அவர்களைப் போலீசார் தொடமுடியாது. இரவின் அமைதியைக் குலைக்கும் எதுவும் சத்தம்தான் என்றாலும் பக்தர்களின் நிகழ்ச்சிகளில் காவல்துறை தலையிடாது.

என்னிடம் வருபவர்கள் ஒரு குறையைத் தெரிவிக்கிறார்கள். "சாமி, நீங்கள் எங்களை அமைதியாக அமர்ந்து தியானத்தில் ஈடுபடுமாறு கூறுகிறீர்கள். ஆனால் அதற்கு ஏதாவது ஆதரவு, ஆதாரம் தேவைப்படுகிறது. சூன்யத்தில் மனம் பதிவதில்லை. 'ராம்-ராம்' போன்ற ஏதாவது மந்திரம் சொல்லித்தாருங்கள்; காதில் தீட்சை மந்திரம் அளியுங்கள். பற்றுக்கோலாகப் பிடித்துக் கொள்ள ஏதாவது கொடுங்கள்," என்று வேண்டுகிறார்கள்.

'சரி, ராம்-ராம் என்பதை அடிப்படையாகக் கொள்ளலாம் என்று அனுமதித்தால் அவர்கள் அதைப் பேரொலியுடன் ஜெபம் செய்யத் தொடங்கி விடுவார்கள். முன்பு வேறு என்னவெல்லாமோ சொல்லிக் கத்தியவர்கள் இப்போது 'ராம்-ராம்' என்பதை ஆரம்பித்து விடுவார்கள். நான் எவ்வளவோ கேட்டுக் கொண்டாலும், மக்கள் பேசாமல் அமைதியாக இருக்க மட்டும் தயாராக இல்லை. மௌனமாக இருப்பது கடினம் எனில், சலனமின்றி எதையும் பார்த்தபடி இருத்தல் அதைவிடக் கடினம்.

சாட்சி மனப்பான்மையே தியானம் ஆகும். அமைதியாக உட்கார். மனம் படிய மறுத்து அலைகிறதா? அதை அதன் போக்கில் விட்டுவிடு. அதன் ஓட்டத்தில் அணை கட்ட உனக்கு என்ன உரிமை? உன்னிடம் யார் அனுமதி கேட்டனர்? சாலையில் கார்களும், ஆட்டோக்களும் ஹாரன் ஒலி எழுப்பியபடி சீறிப் பாய்கின்றன. வானத்தில் விமானங்கள் பறக்கின்றன. பறவைகள் கத்துகின்றன.

குழந்தைகள் அழுகின்றன. நாய்கள் குரைக்கின்றன. இதுபோலவே உன் மனத்திலும் எண்ணங்களின் போக்குவரத்து (டிராஃபிக்) நடைபெறு கிறது; விடாமல் சத்தம் கேட்கிறது. அங்கு என்ன வேண்டுமானாலும் நடக்கட்டும். நீ சும்மா உட்கார்ந்திரு. இதுதான் ஒட்டாமை (தொடாமல் படாமல் இருப்பது) என்பது.

ஒட்டாமல் இருந்துகொண்டு, உள்ளே ஆசனம் போட்டு அமர்ந்து உள்ளேயும் வெளியேயும் நடப்பதைப் பார். அவை நடைபெறும் விதத்திலேயே தொடரட்டும். தீய எண்ணம் மனத்தில் எழுந்தால் அதைத் தீயது என்று சொல்லாதே. அவ்வாறு சொன்னால் நீ ஊசலாடுகிறாய் என்று அர்த்தமாகும். ஏனெனில் அந்த எண்ணம் எழாமலிருந்தால் நன்றாக இருந்திருக்கும் என்று நீ நினைக்கிறாய். ஒரு நல்ல எண்ணம் மனத்தில் தோன்றினால் அதற்காகத் தட்டிக்கொடுத்து உன்னையே பாராட்டிக் கொள்ளாதே. இங்கும் உன் நடுநிலைமையான உறுதி தடுமாறுகிறது. குண்டலினி விழித்து எழும்புவதுபோல் தோன்றினால் நீ சித்த புருஷனாக மாறுவதாகவும், ஆன்மிக ஒளி தெரிவதாகவும் நினைத்துத் தடுமாறாதே. இவை மனத்தின் மாய விளையாட்டுகள். தொலைவிலுள்ளவற்றையும், இல்லாத காட்சி களையும் கூட காண்பதாக மனம் நம்மை நினைக்கவைக்க வல்லது.

**எ**ண்பது வயது மூதாட்டி ஒருவர் என்னைச் சந்திக்க வந்தார். த்னக்கு அபூர்வமான அனுபவம் ஒன்று கிடைத்தது என்றார்.

"உங்களுக்கு அப்படி என்ன அதிசய அனுபவம் கிடைத்தது?"

"நான் அமைதியாக உட்கார்ந்திருக்கும்போது கண்ணெதிரே காடுகள் தெரிகின்றன. இத்தனை பசுமையான காடுகளை நான் பார்த்ததில்லை."

"சரியம்மா, இவற்றைப் பார்த்தும் நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? காடுகள்தானே தெரிகின்றன. தெரிந்துவிட்டுப் போகட்டுமே."

அவருக்குக் கோபம் வந்துவிட்டது. "நீங்களெல்லாம் என்ன சந்நியாசி? மற்ற சாமியார்களிடம் சொன்னபோது பாராட்டினார்கள். எனக்கு அற்புதமான அனுபவம் கிடைத்துள்ளது என்றும், எனக்கு

நல்லது நடக்கப்போவதைக் காட்டும் அறிகுறியே இந்தக் காடுகள் என்றும் அவர்கள் விளக்கினார்கள்,'' என்று மூதாட்டி படபடத்தார்.

ஆன்மிகம் என்பது ஓர் அனுபவம் அன்று. அனுபவபூர்வமாக ஒன்று நடைபெறும்வரை அது ஆன்மிகம் ஆகாது. அனுபவம் என்பது அனுபவிப்பவன் என்னும் ஒருவன் இருந்தால்தான் சாத்தியப்படும். மனத்திற்குள் நிகழும் அனுபவமும் அதை அனுபவிக்க ஒருவன் இருந்தால்தான் உணர முடியும்.

ஒருவர் தனக்குள்ளிருக்கும் குண்டலினி சக்தி மேலேழுவதாக நினைக்கிறார். இன்னொருவர் தனது உடலில் பரவசமான புல்லரிப்பை உணருகிறார். யோகிகளின் சொற்பொழிவைக் கேட்டு, யோக சாஸ்திர நூல்களில் படித்து இப்படியெல்லாம் அனுபவம் ஏற்படும் என அறிகிறோம். பிறகு ஒருமுறை ஆசனம் போட்டு தீவிரமாகப் பயிற்சி செய்கிறாய். அந்த பரவசமான புல்லரிப்பு உனக்கும் ஏற்படுகிறதா என்று தேடுகிறாய், கற்பனை செய்து பார்க்கிறாய். இதனால் உனக்குப் புல்லரிப்பு ஏற்பட்டது போன்றே தோன்றும். நீ அளவற்ற மகிழ்ச்சி யடைவாய். ஆனால் இங்கு உண்மையில் தியானம் தோல்விதான் அடைந்தது. அனுபவிப்பவன்-அனுபவம் என்று இரண்டு கூறுகளாகப் பிரிவது தியானமாகாது.

சுற்றிலும் என்ன நடந்தாலும் நீ பார்வையாளனாக மட்டுமே இரு. பார்ப்பவன் என்னும் நிலையிலிருந்து சிறிதும் அசையாதே. நீ சாட்சியாக மட்டுமே இரு. 'சரியோ, தப்போ, பார்ப்பதுடன் நிறுத்திக் கொள்வோம்' என்று இரு. எந்த மதிப்பீடும் செய்யாதே. எது சிறந்தது என்று தேர்வு செய்யாதே. நல்லது-கெட்டது என்று வகைப்படுத்தாதே. ஆரம்பத்தில் கடினம்தான். ஏனெனில் எதைப் பற்றியும் கருத்துத் தெரிவிப்பது என்பது பிறவிகள் தோறும் நமது பழக்கமாக இருந்திருக்கிறது.

நீதிபதி தீர்ப்புக் கூறுவதுபோல் நீ எதையும் மதிப்பீடு செய்து முடிவு கூறாதே. இது சரி, இது தப்பு என்றெல்லாம் சொல்லாதே. எல்லாவற்றையும் பார்த்தபடி மட்டும் இரு. அலைகளாகத் திரண்ட எண்ணங்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டே போவதைப் பார்த்து நீ ஆச்சரியப்படுவாய். எண்ணங்கள் குறைய-குறைய அவை பற்றிய அனுபவ நினைவுகளும் குறைந்துவிடும், ஒரு கட்டத்தில்

மனத்தில் காலியிடம் தோன்றும். அந்த இடத்தில், அந்த நேரத்தில் ஆத்மா போஷணையும் திருப்தியும் பெறுகிறது. அனுபவத்தால் விளையும் திருப்தியில்லை இது. அந்த திருப்தி 'எனக்கு மகா அனுபவம் ஏற்பட்டிருக்கிறது' என்னும் அகங்காரத்தையே தூண்டி விடும்.

இந்த விசேஷ திருப்தி சூன்யத்தில் நிலவும் அமைதியாகிய திருப்தி. இது சமாதி நிலை திருப்தி. சராசரி வாழ்க்கையின் அனுபவங் களுக்கு அப்பாற்பட்டுள்ள திருப்தி. இது துரியம் என்னும் நிலையை (ஆன்மா சுத்தமாய் நிற்கும் நிலையைச்) சார்ந்த திருப்தி. இது மாபெரும் ஓய்வின் விளைவாகக் கிடைக்கிறது.

இதுவே நான் உனக்குச் சொல்வது: சலனமின்றி ஓய்வாக இரு. ஓரிடத்தில் அமைதியாக உட்கார்ந்து பார்வையைச் செலுத்து. இதுவரை கர்த்தாவாக (செய்பவனாக) நிறைய காரியங்கள் செய்தாய். போக்தா (அனுபவிப்பவனாக) நிறைய அனுபவம் பெற்றாய்; பலன்கள் அடைந்தாய். நற்செயல்களும் செய்தாய். தீயவினைகளும் புரிந்தாய். அளவுக்கு மீறி எல்லாம் செய்தாய். போதும், போதும். மேற்கொண்டு நீ சாட்சி ஆகு. செய்பவனாகவும் அனுபவிப்பவனாகவும் இருந்த போது உனக்குக் கிடைக்காத அருட்பிரசாதம் நீ சாட்சியானதும் உனக்குள் பொழியும். சாட்சி நிலையில் கடவுள் கிடைக்கிறார். சாட்சி நிலையில் சத்தியம் வசப்படுகிறது. ஏனெனில் சாட்சிநிலை என்பது சத்தியநிலை.

**ஹரி ஓம் தத்ஸத்!**

**முதல் கேள்வி:**

> **அஷ்டாவக்ரர் தாயின் கர்ப்பத்தில் இருந்தபோது அவருடைய தந்தை சாபமிட்டதால் அவரது உடல் எட்டுக் கோணலாக (அஷ்ட வக்கிரமாக) ஆனது என்று நீங்கள் ஒருமுறை சொன்னீர்கள். குறிப்பாக எட்டுக் கோணல் என்பதில் ரகசியம் எதுவும் உண்டா? பதினெட்டுக் கோணலாக அவரது உடல் வளைந்து அவர் பெயர் அஷ்டாதசவக்ரர் என்று ஏன் ஆகவில்லை?**

அஷ்டாவக்ரர் உடல் எட்டுக் கோணல் என்பதை எதையோ சுட்டிக்காட்டும் கதையாகக் கொள்ளவேண்டும். அவரது உடலைப் பற்றிய குறிப்பை வரலாற்று உண்மையாக நினைத்துவிடக் கூடாது. இவை நேரடியாக உண்மையுடன் சம்பந்தப்படவில்லை. இவை உள்மன ரகசியங்களுடன் சம்பந்தமுடையவை. அவ்வகையில் எட்டு என்பது அர்த்தமுள்ள எண்.

எட்டு என்பது யோகசாஸ்திரத்தில் வரும் எட்டு பிரிவுகளோடு (அஷ்டாங்கத்தோடு) தொடர்புடையது. பதஞ்சலி முனிவரின் கண்ணோட்டப்படி யோக அறிவின் பிரிவுகளாகிய இந்த எட்டு அங்கங்களையும், முழுதும் கற்றவனே பரம சத்தியத்தின் அறிமுகம் பெறுகிறான். அவை யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை, தியானம், சமாதி என்று வரிசைப்படுத்தப் பட்டுள்ளன. தந்தையின் சாபம் என்னவெனில் யோகத்தின் எட்டுப் பிரிவுகளும் அஷ்டாவக்ரருக்குப் பயன்படாமல் சிதைந்து போகட்டும் என்பதுதான்.

அஷ்டாவக்ரரின் தந்தை வேதங்கள் ஓதுபவர். காலையிலிருந்தே வேதம் ஓதத் தொடங்கி விடுவார். வேத சாஸ்திர அறிஞர் என நாடு

முழுதும் புகழ்பெற்றவர். வேதங்களின் அடிப்படையில் வாதங்கள் செய்து மற்ற சம்பிரதாயங்களின் அறிஞர்களை வென்றவர். அஷ்டாவக்ரர் தாயின் வயிற்றிலிருக்கும் போது தந்தையின் வேதபாராயணத்தைக் கேட்பது வழக்கம். ஒருநாள் கர்ப்பத்திலிருந்த படியே அவர் பேசினார்! “போதும், நிறுத்துங்கள். இப்படிக் கிளிப்பிள்ளை மாதிரித் திருப்பித் திருப்பி வேதம் ஓதுவதால் பயனில்லை. சத்தியத்தை ஆன்மிக அனுபவம் மூலமாகவே அறிய முடியும். எத்தனை வேதங்களை எத்தனை முறை படித்தாலும் பயனில்லை. சாஸ்திரம் என்பது சத்தியத்தின் பிரதிபிம்பம் இல்லை. அறிவைத் துணையாகக் கொண்டது சாஸ்திரம். அனுபவத்தைத் துணையாகக் கொண்டது சத்தியம்.”

தந்தை கோபம் கொண்டார். அவரது அகங்காரத்தின் மீது பலத்த அடி விழுவதுபோல் இருந்தது. அவர் தந்தை மட்டும் அல்லர், அறிஞரும் அல்லவா? எனவே இரண்டு மடங்கு அதிர்ச்சியடைந்தார். மகன் பேச்சை, இன்னும் பிறக்கக்கூட இல்லாத மகன் பேச்சைத் தந்தை ஏற்பதா? இது நடக்கமுடியாததாயிற்றே. மகன் தன்னைவிட அறிவாளியாக இருக்கக்கூடும் என்பதைத் தந்தையால் ஒருபோதும் ஏற்க முடிவதில்லை. மகன் 70 வயதானவனாயினும் தந்தை அவனுக்கு அறிவு மட்டு என்றே நினைக்கிறார். இது இயற்கைதான்.

மகன் பிறப்பு சமயத்திலிருந்து அவனுக்கும் அவன் தந்தைக்கும் நடுவில் ஏற்படும் இடைவெளியின் நீளம் என்றும் குறைவதில்லை. வயதின் அடிப்படையில் அவர்களுக்கிடையே இருக்கும் 20 ஆண்டு இடைவெளி அவர்களின் சிந்தனையையும் உறவையும் பாதிக்கிறது. ஆகவே மகனிடமிருந்து அறிவு பெறுவது தந்தைக்கு கடினம். அவர் அறிஞராக இருந்துவிட்டாலோ மகாகடினம். தனக்கு அறிவு பூரணமாக உள்ளதாகத் தந்தையாகிய தான் நினைத்திருக்கும்போது கருவிலுள்ள மாமிச பிண்டம் தன்னை மட்டம் தட்டுவதா?-அஷ்டாவக்ரரின் தந்தை கொதித்துப் போனார்.

ஆகவே அவர் சிசுவை சபித்தார். அந்த சாபம் யோகத்தின் எட்டு உறுப்புகளையும் சிதைப்பதாக இருந்தது. அவர் கூறினார்-“ஏ சிசுவே! எந்த எட்டு யோகாங்கங்களால் மனிதன் ஞானம் பெறு கிறானோ அவை உனக்குப் பயன்படாதபடி அழிந்து போவதாக!

அதன்பின் நீ எப்படி ஞானம் பெறுகிறாய் என்பதைப் பார்ப்போம்.

"சத்தியத்தை அடைய இரண்டு வழிகள்-சாஸ்திரம் மூலம் அடையலாம், யோக சாதனை மூலமும் அடையலாம். நீயோ சாஸ்திர அறிவின் மூலம் ஞானம் கிடைக்காது என்று கூறி அந்த வழியை அடைத்து விட்டாய். பிறகு யோக சாதனை மூலம்தான் நீ ஞானம் பெறமுடியும். அதையும் இப்போது என் சாபத்தால் தடுத்துவிட்டேன். இனி என்ன செய்வாய்?" என்று தந்தை சவால்விட்டார்! மகன் ஞானம்பெற வழிகாட்ட வேண்டியவர் தனது அறிவுத் திமிரினால் இப்படிக் கேவலமாக நடந்து கொண்டார்.

ஆனாலும் அஷ்டாவக்ரருக்கு ஞானம் கிடைத்துவிட்டது. அவரது உபதேசத்தின் சாரமே, மையக் கருத்தே, நமக்கு சத்தியம் ஏற்கெனவே கிடைத்தே இருக்கிறது என்பதுதான். அது சாஸ்திரம் மூலமாகவும் கிடைப்பதில்லை. யோக அப்பியாசம் மூலமாகவும் கிடைப்பதில்லை. கிடைக்காததைப் பெறுவதற்குத்தான் பயிற்சி மேற்கொள்ளப்படுகிறது. சத்தியத்தை நாம் பிறக்கும்பொழுதே நம்முடன் கொண்டு வருகிறோம். தாயின் வயிற்றில் இருக்கும்போதே சத்தியம் நம்முடன் சேர்ந்து கொள்கிறது. சத்தியத்தின்மீது நமக்குப் பிறவியிலிருந்தே உரிமை உள்ளது. அது நமது சொரூபத்தின் அம்சம். நாமே சத்தியம். எனவே 'சத்யம் கிடைத்தல்' என்று சொல்வது அர்த்தமற்றது. உடலால் வேண்டுமானால் எட்டுக் கோணலாக இருக்கலாம். பாதகமில்லை. ஆனால் சத்தியம் ஒருபோதும் கோணல்மாணலாக இருக்காது.

யோக சாதனை அல்லது யோகப் பயிற்சியின் வீச்சு நமது உடல், மனம் ஆகியவை வரைதான். 'கோணலாகிப் போ' என்னும் சாபம் உடல்வரை பலிக்கலாம், மனம்வரை பலிக்கலாம். ஆனால் ஆத்மா எந்த மாறுதலும் அடையாது. இதைத்தான் அஷ்டாவக்ரர் ஜனகரிடம் சொன்னரா், "அரசே! வீட்டு முற்றம் கோணலாயிருந்தாலும் மேலே தெரியும் ஆகாயம் கோணலாகி விடுவதில்லை. குடம் கோணலாயிருந்தாலும் அதன் உள்ளே நிரம்பியிருக்கும் ஆகாயம் (ஆகாய அம்சம்) கோணலாக ஆவதில்லை. என் உடலைப் பார்க்காதே, என் மனத்தை ஆராயாதே. என் ஆத்மாவை நேரடியாகப் பார்."

அஷ்டாவக்ரரின் முக்கியச் செய்தியே ஞானம் என்பது சாஸ்திரம் மூலமோ, பயிற்சி வழியிலோ கிடைக்காது என்பதுதான். ஜே.கிருஷ்ணமூர்த்தி சொல்வதும் இதுவேதான். இதைக் கேட்டு நீ பயந்துவிடுவாய். பிறகு ஞானம் எப்படிக் கிடைக்கும் என்று கேட்பாய். 'எப்படி' என்று கேட்பதே தவறு. ஏற்கெனவே நமக்குக் கிடைத்துள்ள ஒன்றை எப்படிக் கிடைக்கும் என்று கேட்பது அர்த்தமில்லாதது.

சத்தியம் நிபந்தனைகளற்றது. பாவி, புண்ணியம் செய்தவன், கறுப்பர், வெள்ளையர், அழகானவர், குரூபர், ஆண், பெண், முயன்றவர், முயலாதவர் ஆகிய எல்லோருக்கும் கிடைத்துள்ளது. முயற்சியின் மூலம் சிலருக்கும், தானாக பிரசாதம்போல் சிலருக்கும் சத்தியம் வசப்பட்டுள்ளது. ஆனால் முயற்சியும் தேவையில்லை, பிரசாதமாகக் கிடைக்க வேண்டுதலும் தேவையில்லை. ஏனெனில் சத்தியம் நமக்கு ஏற்கெனவே சுயமாகக் கிடைத்துள்ளது.

**காலையில் மலரும் தாமரைப்பூ**
**இரவினில் மலரும் அல்லிப்பூ**
**விடியலோ, இரவோ தேவையில்லை**
**ஞானமென்னும் பூ மலர;**
**தன்னுணர்வு விழிக்கும் தருணத்தில்**
**தானாக மலர்ந்திடும் ஞானப் பூ**
**அதுவே ஆகும் அதன் விடியலும் இரவும்**

மனிதன் எந்த நேரத்திலும், எந்த சூழ்நிலையிலும் (ஞான) விழிப்பு பெற முடியும். அந்த விழிப்பு காலையில்தான் ஏற்படும் என்றில்லை. நள்ளிரவிலும் அவன் விழிக்கக்கூடும்.

இவ்வாறு விழிப்படைய அவன் எந்த முயற்சியும் செய்ய வேண்டியதில்லை. கண்களைத் திறப்பது மட்டுமே கட்டாயத் தேவை. கண் இமைகளில், கண்ணின் ஓரத்தில் எல்லாம் மறைந்து நிற்கின்றன.

சிலசமயம் கண்ணில் மணல்துகள், பொடிக்கல் விழுகிறது. அதை நீக்கும் வரையிலும் கண்ணால் எதையும் பார்க்க முடிவதில்லை. கண் மிகச் சிறிய உறுப்புதான். ஆனால் அது இமயமலையின் தோற்றத்தைத் தனக்குள் அடக்கிக் கொள்ள முடியும். நூற்றுக்கணக்கான மைல்கள் பனிபடர்ந்து பரவியுள்ள இமயமலையின் சிகரங்களைச் சிறுகண் உள்வாங்கிக் கொள்ளும். இத்தகைய ஆற்றல் மிக்க கண்

அற்பமான மண்துகளிடம் தோற்றுவிடுகிறது. கண்ணில் மண்துகள் விழுந்தால் எதிரே இருக்கும் இமயமலை கண்ணுக்குத் தெரிவதில்லை. அந்தத் துகள் அகன்றால் போதும். பிரம்மாண்டமான இமயமலை கண்ணுக்குத் தெரியும்.

அஷ்டாவக்ரர் தரும் செய்திப்படி, மிகச் சிறிதளவு கண் இமை திறந்தால், சிறிதளவு தன்னிச்சையான நிகழ்வை அனுமதித்தால் போதும். எல்லாம் தயார் நிலையில் உள்ளன. புதிதாகச் செய்வதற்கு எதுவுமில்லை. எங்கும் போக வேண்டாம்; எதையும் தேட வேண்டாம்.

**திறந்த கண்களால் கனவு கண்டிடு**
**மூடிய கண்களால் உன்னையே காண்**
**நம்மவர் உள்ளே இருக்கின்றார்**
**வெளியில் தெரிபவை வெற்றுக் காட்சிகள்**
**பெயரும் உருவமும் கொண்டு உலகில்**
**உலவுது பெருங்கூட்டம் ஒன்று**
**உள்ளே இருப்பவன் ஒற்றை ஆள்**
**நாம ரூபம் இல்லாதவன்**
**வெளியில் காண வசிய மை போதும்**
**உள்ளே பார்த்திட உள்ளன்பு தேவை**
**கண்ணில் படுவதைக் காணாதிரு**
**காணாமல் இருப்பதைத் தேடி காண்**

வெளியே பார்ப்பதெல்லாம் கனவு. உன்னைப் பார்க்க வேண்டு மானால் உள்ளே காண். வெளியே இருப்பதைப் பெறவேண்டுமானால் ஓடி-ஓடி துரத்த வேண்டியுள்ளது. ஆனாலும் அது எங்கே வசப்படுகிறது? ஓட்டம்தான் முழுமை பெறுகிறது. கையில் எதுவுமே கிடைப்பதில்லை.

இதுதான் உலகின் சுபாவமென அறி. எல்லாம் காணக் கிடைக்கிறது. எவ்வளவோ காணக் கிடைக்கிறது. ஆனால் கையில் எதுவுமே கிடைப்பதில்லை. 'விரும்பும் பொருள் இதோ உள்ளது. கொஞ்சம் நடந்தால் போதும். கொஞ்சம் முயன்றால் போதும். அடிவானம் சில மைல் தொலைவில்தானே உள்ளது. ஓடிப்போய் அடைந்து தொட்டுவிடலாம். மண்ணும் விண்ணும் ஒன்றையொன்று தொடும் இடத்தை அடைந்து அங்கிருந்து ஆகாயத்தில் ஏற

ஆரம்பித்து விடலாம்; ஏணி அமைத்துவிடலாம். சுவர்க்கத்தை அடைந்துவிடலாம்.' மனிதன் இவ்வாறு கற்பனை செய்கிறான்.

ஆனால் மண்ணும் விண்ணும் சந்திக்கும் இடத்தை நாம் ஒருகாலத்திலும் அடைய முடிவதில்லை. ஏனெனில் அவை இரண்டும் உண்மையில் சந்திப்பதும் இல்லை. அந்தச் சந்திப்பு வெறும் தோற்றம். இதையே இந்துக்களாகிய நாம் மாயை என்கிறோம். அடிவானத்தை நோக்கி எவ்வளவு காலம் நடந்தாலும் போய்ச்சேர முடியாதே. இல்லாத ஒன்று—மாயை—எப்படி உண்மையாக முடியும்?

வெளியே உள்ளது கிடைக்கும்போல் தோன்றுகிறது. ஆனால் ஒருபோதும் கிடைப்பதில்லை. உள்ளேயிருப்பது எப்படிக் கிடைக்கும் என யோசிக்கிறாய். ஆனால் அது உனக்கு ஏற்கெனவே கிடைத்துள்ளது. வெளியுலகத்திலிருந்து உள்ளுலகம் மிகவும் மாறுபட்டது. உலகைப் பார்க்க வேண்டுமானால் கண்கள்ள வெளிப்புறமாகத் திற. சத்தியத்தை தரிசிக்க வேண்டுமானால் கண்களை உட்புறமாகத் திற. ஆகவே கண்ணை மூடு என்றால் உட்புறம் நோக்கு என்று பொருள்படும்.

வெளியுலகில் மறைந்து கிடக்கும் புதையல் முதலிய பொருட்களைக் காணக் கண்களில் விசேஷமான அஞ்சனம் (வசிய மை) தடவிக்கொள்ள வேண்டும் என்று நம்புகிறோம். அதேபோல் நமக்குள்ளே பார்க்க வேண்டுமானால் உள்ளன்பு, இறை நினைவு, ஞான விழிப்பு, சமாதி என்பவற்றைக் கொண்டு தயாரிக்கப்பட்ட மை தேவைப்படும்.

அப்போது உன்னை எழுப்புவதுபோல் 'நான் யார்?' என்னும் ஒரே கேள்வி மனத்தில் எழும். அக்கேள்வி உன் உயிரினில் எதிரொலி ஏற்படுத்தும். சம்மட்டியால் அடிமேல் அடிப்பதுபோல் மீண்டும்-மீண்டும் அக்கேள்வியின் தாக்குதலால் உள்ளத்தின் கதவுகள் திறக்கும்.

சட்டென்று பதில் சொல்லாதே. ஏனெனில் உன் பதில் வெளியுலகத்திலிருந்து வரும்; வெளியுலகத்துடன் சம்பந்தப்பட்டதாக இருக்கும். நீ அவசரப்பட்டுப் பதில் சொல்வாய் 'அஹம் பிரஹ்மாஸ்மி' (நான் கடவுள்). இது உன் பதிலில்லை; சொந்தச் சரக்கில்லை. உபநிஷதத்திலிருந்து எடுத்துக் கூறுகிறாய். ஆகவே நீ பதில் சொல்ல

முயலாமல் 'நான் யார்?' என்று கேட்டுக் கொண்டே செல். ஒரு கட்டத்தில் அந்தக் கேள்வி விழுந்துவிடும். அது விழும் இடம்தான் அக்கேள்விக்கான பதில். அதன்பின் 'நான் கடவுள்' என்று சொல்லமாட்டாய். சொல்லத் தேவையுமில்லை. ஏனெனில் நீ கடவுள் என்பதை அறிந்துகொண்டு விட்டாய். அதை அனுபவபூர்வமாகவும் உணர்கிறாய். சொற்கள் பூரணமான பதில் தருவதில்லை. நிசப்தத்தில்-பேரமைதியில்-பதிலை உணர்கிறாய்.

தற்போது நீ எதைப் பார்க்கிறாயோ அதில் சிக்கியுள்ளாய். உன் கண்ணுக்குத் தெரிவது எதுவோ அதுவே உலகம் என்பது. ஆனால் இதைக் கண்களின் வழியாகப் பார்ப்பவன் யார்? அவன் கண்ணிற்குப் புலனாவதில்லை. அவன் நமக்குள் முழுமையாக மறைந்திருக்கிறான்.

ஆன்மிகத்தைப் பொறுத்தவரையில், எழுத்தறிவால் எதுவும் லாபமில்லை. நாம் எழுதும் எழுத்தை அக்ஷரம் (அட்சரம்) என்கிறோம். அக்ஷரம் என்பதன் நேர்பொருள் அழிக்க முடியாத ஒன்று என்பதாகும். எழுதுவது ஒருநாள் அழியக்கூடியது—க்ஷரம். விநோதமாக நீ அதை அழியாதது (அக்ஷரம்) என்கிறாய். எப்பேர்ப்பட்ட மோசடி! யாரை ஏமாற்றுகிறாய்? நீ எழுதுவது எல்லாமே ஒரு காலத்தில் அழிந்துவிடும். சாஸ்திரங்கள் எழுதினாலும் அவை காலப்போக்கில் மறைந்துவிடும். நீ இங்கே எதை எழுதினாலும் அது நதிக்கரை மணலில் உன் பெயரை எழுதுவதற்கு சமமாகும். ஒரு காற்று வீசினால் போதும் மணல் படிந்து உன் பெயர் அழிந்துவிடும். அதைவிட, நீர் மேல் எழுத்து என்று சொல்வது அதிகம் பொருந்தும். எழுத-எழுத எழுதியதெல்லாம் உடனே மறைந்து போகும்.

முட்டாளே! நீ எழுதுவது அழியும் தன்மை உடையது—க்ஷரம். ஆனால் நீ அது அக்ஷரமாக (அழியாததாக) இருக்கும் என்று எதிர்பார்க்கிறாயே. காலம் என்னும் நிலையில்லாத பலகையில் எழுது கிறாய். ஆனால் அது நிரந்தரமாக இருக்கும் என்று எதிர்பார்க்கிறாய். அற்பத்தை உனதாகப் பிடித்துக் கொண்டிருக்கிறாய். ஆனால் விசாலப் பெருவெளி உன் வசமாக வேண்டுமென ஆசைப்படுகிறாய்.

அட்சரம் (அழியாதது) என்பது உனக்குள்ளேதான் இருக்கிறது. சிறிது காலம் எதுவும் எழுதாதே, படிக்காதே, எதுவும் செய்யாதே. கண்ணில் தெரியும் காட்சிகளுக்கு விடைகொடு. சிறிது நேரம் உன்

பார்வையை உட்புறம் செலுத்து. கடவுளின் நினைவில் மூழ்கு. அதற்கொரு வழி கடவுளின் பெயரை (உதாரணமாக ராம்-ராம்) ஜெபித்தல். ஆனால் நமது மனம் கடவுளில் படியவேண்டுமே தவிர ஜெப ஒலியில் மயங்கக்கூடாது.

இரவு இருட்டில் கதவு-ஜன்னல்களை மூடிவிட்டு விளக்கையும் அணைத்துவிட்டு உட்காரு. அப்போதுதான் வெளியிலுள்ள எதுவும் தெரியாது. கொஞ்சம் வெளிச்சம் இருந்தாலும் நீ வெளிக்காட்சிகளைக் கவனிப்பாய். ஆகவேதான் உன்னைச் சுற்றிலும் முழு இருட்டாக இருக்க வேண்டும். அடுத்து, கடவுளின் பெயர்களில் உச்சரிக்க மென்மையான, இனிமையான ஒன்றை உரக்கச் சொல். ஐந்தாறு நிமிடங்களில் உனக்குள் இனிமையான ரசம் போல் ஊற்றெடுக்கும்.

அடுத்து, ஒலி அதிகம் எழுப்பாமல் முணுமுணுப்பாக ஐந்தாறு நிமிடங்கள் நாமஜெபம் செய். முதலில் வெளிப்புறம் ஒலி கேட்டது. இப்போது வாய்க்குள்ளே ஒலி கேட்கும். சிறிது நேரம் அமைதியாக இரு. நீ உச்சரித்த திருப்பெயரின் எதிரொலி உனக்குள்ளே கேட்க ஆரம்பிக்கும். ஒலி அலைகள் உனக்குள் பரவும். வீணை வாசிப்பதை நிறுத்தியதும் ஒலி சட்டென நிற்பதில்லை. அதன் ரீங்காரம் சில விநாடிகள் நீடிப்பது போன்ற நிலை நாமஜெபத்திலும் உண்டு.

இவ்வாறு 15-25 நிமிடங்கள் நீ நாமஜெபம் செய்தாய். முதலில் உதடுகளின் வழியாக ஒலி கிளம்பியது. அடுத்து நாக்கு மட்டும் ஒலியெழுப்பியது. பிறகு இரண்டு நிமிடங்களுக்கு எதிரொலி கேட்கும் கட்டத்தை அடைகிறாய். உடலின் ஒவ்வொரு ரோமத்திலும் எதிரொலியைச் சிலிர்ப்பாக உணர்வாய். பிறகு மெதுவாக அந்த எதிரொலி மறைந்துவிடும்.

பிறகு மிஞ்சியிருப்பது எதுவோ அதுவே 'ராம்'. அதுவே கடவுள். சொல்லின் ஒலி மிஞ்சியிருப்பதில்லை. எதிரொலியும் நீடிப்பதில்லை. ஒரு மகாசூன்ய நிலை பரவி நிற்கிறது.

'ராம்' என்பதற்குப் பதிலாக 'ஓம்' என ஜெபித்தாலும் இந்நிலையை அடையலாம். இனிய ஒலி ஜெபத்தின் வெற்றிக்கு அடிப்படை. பெயர், திராட்சைபோல் இனிக்க வேண்டும். சரியாகச் சாறு எடுத்தால் நீ ஆச்சரியப்படுவாய். அந்த இனிமையில் உன் நடையே நடனமாகும். உன் வாழ்க்கையில் இனிய ரீங்காரம் கேட்கும்.

நமக்குள்ளே மறைந்திருப்பவனை நாம்தான் கொண்டுவந்தோம். அவனை நாம் உற்பத்தி செய்யவில்லை; புதிதாகக் கண்டுபிடிக்க வில்லை. அல்லது ஏற்கெனவே உள்ளவனை மறுகண்டுபிடிப்பு (re-discovery) செய்ய வேண்டும் என்று வேண்டுமானால் சொல்லலாம். ஏனெனில் உள்ளே இருப்பவனை நாம் மறந்துவிட்டோம். கனவு வாழ்க்கையில் ஆழ்ந்துவிட்டோம். நமது மெய்யான சொரூபத்தை மறந்துவிட்டோம். கனவிற்கு விடைகொடு. உனக்குள்ளே ஆராய்ந்து பார். இதுவரை காணாதது தென்படும், எழுதாதது தென்படும், அழியாதது (அக்ஷரம்) தென்படும்.

அஷ்டாவக்ரரின் உடல் எட்டுக் கோணல்கள். அதனால் ஞானத்தை அடைவதில் தடையொன்றுமில்லை. உறுப்புகள் நேராக உள்ளனவா, வளைந்துள்ளனவா, நீ உட்கார்ந்திருக்கிறாயா, நிற்கிறாயா... என்பதெல்லாம் முக்கியமில்லை.

யோகாசனம் பலவகைப்படும். வெவ்வேறு ஆசன முறையில் வெவ்வேறு சாதகர்கள் பரமஞானம் பெற்றுள்ளனர். மகாவீரர் கோதோசனத்தில் அமர்ந்திருந்தார். இதன் பொருள், பசுவின் மடியிலிருந்து பால் கறப்பது போன்ற பாவனையில் அமர்தல் என்பதாகும். எதிரே பசு இல்லை, கையில் பால் பாத்திரம் இல்லை. இந்த விதமாக அமர்ந்து தியானித்தபோது மகாவீரருக்கு பரமஞானம் பிறந்தது. நீ உட்கார்ந்து பார். இது கடினமான ஆசனம். தள்ளாடுவாய். புத்தர் பரவாயில்லை. சித்தாசனத்தில் வசதியாக உட்கார்ந்திருந்தார்.

உடல் நேராக இருந்தாலும் சரி, கோணலாக இருந்தாலும் சரி, பெரிதாக இருந்தாலும் சரி, சிறிதாக இருந்தாலும் சரி. ஆசனத்திற்கும் ஞானத்துக்கும் சம்பந்தமில்லை. மனம் புண்ணியச் சிந்தனையில் ஈடுபட்டாலும், தீய எண்ணங்களில் ஆழ்ந்தாலும், மனம் நல்லது செய்ய விரும்பினாலும் தீயது செய்ய விரும்பினாலும், இதற்கும் ஞானம் பெறுவதற்கும் சம்பந்தமில்லை. அஷ்டாவக்ரர் சொல்வது நீ சாட்சியாகு என்பதுதான். கோணல் உடலுடைய சாட்சியானாலும் சரி, பாவ எண்ணமுடைய சாட்சியானாலும் சரி, தொலைவில் நின்று உன் மனத்தையும் உடலையும் உன்னிடமிருந்து பிரித்துப் பார்க்க முடியுமானால் ஞானம் கிடைப்பது சாத்தியமாகிவிடும். யோக சாஸ்திரம் கூறும் அஷ்டாங்கப் பயிற்சியால் ஞானம் கிடைப்பது நிச்சயமில்லை என்பதால் உடல் எட்டுக் கோணலாக இருந்தாலும் ஞானம் கிடைக்க

வாய்ப்புண்டு. இதற்கு வேத சாஸ்திரமோ, யோக சாஸ்திரமோ தேவையில்லை.

கற்பனை செய்துபார். அஷ்டாவக்ரர் யாராவது யோகியிடம் சென்று யோகத்தில் தீட்சை தருமாறு கேட்டால் என்ன நடக்கும்? யோகி கைகூப்பிச் சொல்லுவார், "சுவாமி, என்னை ஏன் வம்பில் மாட்டி விடுகிறீர்கள்? இது சாத்தியமில்லை. உங்களால் யோகாசனம் எப்படிச் செய்ய முடியும்? ஒட்டகத்தை நேராக்க முடியுமா? உங்கள் வளைந்த உடலை ஓரிடத்தில் சரிசெய்தால் இன்னொரு இடத்தில் முறுக்கிக் கொண்டுவிடுமே. சுவாமி போய்வாருங்கள்."

சுருக்கமாகக் கூறுவதானால்-எட்டுக் கோணல் உடல் உடையவரும் பரம ஞானம் பெற முடியும். சாதகரின் உடலைப் பற்றி நினைக்கக் கூடாது. இதையே அஷ்டாவக்ரரின் வரலாறு வலியுறுத்து கிறது.

**இரண்டாம் கேள்வி:**

சுவாமி ராமதீர்த்தர் சொல்கிறார்:

**நீ என்னை எதில் எப்படி வைப்பாயோ**
**அதையே நானும் விரும்பி ஏற்பேன்**
**இப்படி வைத்தாலும் இதைக் கொடுத்தாலும் சரியே**
**அப்படி வைத்தாலும் அதைக் கொடுத்தாலும் சரியே**

நான் பாட விரும்புவது:

**இப்படியும் குழப்பம் அப்படியும் குழப்பம்**
**இப்பக்கமும் சிக்கல்கள் அப்பக்கமும் சிக்கல்கள்**
**இந்த இரு கண்ணோட்டங்கள் குறித்துத் தங்கள்**
**கருத்தென்னவோ?**

நான் ராமதீர்த்தர் சொல்வதையும் ஏற்கவில்லை; நீ சொல்வ தையும் ஒப்புக்கொள்ள முடியவில்லை. ஒன்று ஆக்கபூர்வமான (பாசிடிவ்) கண்ணோட்டம். இன்னொன்று எதிர்மறையான (நெகடிவ்) கண்ணோட்டம்.

ராமதீர்த்தர் எதையும் விரும்பி ஏற்பதால் ஆக்கபூர்வமான கண்ணோட்டம் கொண்டுள்ளார் எனலாம். முள்களை அவர்

எண்ணவில்லை, பூக்களை எண்ணினார்; இரவுகளை எண்ணவில்லை, பகல்களை எண்ணினார். இரு நாட்களுக்கு இடையில் கட்டாயமாக வரும் இரவை அவர் பொருட்படுத்தியதில்லை. அவர் பூக்களைப் பற்றிதான் பேசுவார். முள் பற்றி கேட்டால், "கொஞ்சம் முள் இருந்தால் என்ன தப்பு? பூக்களைப் பாதுகாக்க அவை கட்டாயமாகத் தேவைதானே," என்பார். வாழ்க்கையில் சுகம் தரும் விஷயங்களில் அவரது பார்வை படிந்தது. சுபமானவற்றை, சுந்தரமானவற்றையே அவர் கவனித்தார். குரூபமானவற்றை அலட்சியம் செய்தார். அசுபத்தின் மீதும் கவனம் செலுத்தவில்லை. கடவுள் அசுபமும் உலகில் நிலவ அனுமதித்திருப்பதால் அதில் ஏதோ சுபம் மறைந்திருக்கும் என்பது ராமதீர்த்தரின் கருத்து.

ஆத்திகர்களின் கொள்கை இதுதான். எதையும் ஏற்கும், சுவீகரிக்கும், மனப்பான்மை இது. இதில் நம்பிக்கையுள்ளவன், "இறைவா, நீ என்ன செய்தாலும் பரிபூரணமாக நான் 'ஆம், சரி' என ஒத்துக்கொள்வேன்" என்பான். தன்னுடைய வங்கிக் காசோலையில் தொகை எதுவும் எழுதாமல், கையெழுத்து மட்டும் இட்டு, 'பிரபு இதை நீங்கள் எப்படி வேண்டுமானாலும் நிரப்பிக் கொள்ளுங்கள்,' என்று சமர்ப்பித்துவிடுவான்.

ராமதீர்த்தர் சொல்கிறார்-'இறைவா! நீ என்னை எங்கே எவ்விடத்தில் வைத்தாலும் சரியே. சுவர்க்கம் அளித்தாலும் சந்தோஷம்; நரகத்தில் தள்ளினாலும் சந்தோஷமே. என் சந்தோஷத்தை நீ தடுக்க முடியாது. ஏனெனில் உனது விருப்பம் இதுவென்றால் எனது விருப்பமும் இதுவேதான்.

ராமதீர்த்தரின் கண்ணோட்டத்திற்கு நேர் எதிராக உன் கண்ணோட்டம் உள்ளது. 'எங்கும் எதிலும் குழப்பம்' என்கிறாய்.

இது நாத்திகரின் கண்ணோட்டம். எதிர்மறையான கண் ணோட்டம். நீ முள்களை எண்ணுகிறாய். ராமதீர்த்தர் இரண்டு பகல்களுக்கிடையே சிறு இரவைக் காண்கிறார். உனக்கு இரண்டு இரவுகளுக்கிடையேதான் சிறு பகல் தென்படுகிறது. இப்பக்கமும் இரவு, அப்பக்கமும் இரவு. இப்பக்கம் விழுந்தால் கிணறு. அப்பக்கம் விழுந்தால் அகழி. தப்பிக்க வழி எங்கும் தென்படவில்லை. ராமதீர்த்தரின் குரலில் சமரசம் தெரிகிறது. உன் குரலில் கோபம்

பிரதிபலிக்கிறது. நீ சொல்வதென்ன? குடும்பஸ்தனாக இருந்தாலும் குழப்பம்; சந்நியாசியானாலும் சங்கடம். வீட்டில் வசித்தாலும் பிரச்சினை. காட்டில் வசித்தாலும் பிரச்சினை. தனிமனிதனாக இருந்தாலும் தொந்தரவு. யாருடனாவது சேர்ந்து வசித்தாலும் தொல்லை.

நீ சுவர்க்கத்தில் வசித்தாலும் சிக்கல்கள் இருக்கும். அங்கும் போட்டி பொறாமை உண்டு; அரசியல் உண்டு. யார் கடவுளுக்கு அருகில் உட்கார்ந்துள்ளார்; யார் தொலைவில் அமர்ந்துள்ளார்; கடவுள் யார் பக்கமெல்லாம் பார்த்தார்; யார் பக்கம் பார்க்கவில்லை என்றெல்லாம் ஆராய்ச்சி அங்கும் உண்டு.

இயேசுநாதர் சிஷ்யர்களிடம் விடைபெறும் சமயம் சீடர்கள் கேட்டனர், "ஒரு விஷயம் சொல்லிவிட்டுச் செல்லுங்கள். சுவர்க்கத்தில் நீங்கள் கடவுளின் கையருகே அமர்ந்திருப்பீர்கள். உங்கள் பன்னிரண்டு சீடர்களாகிய நாங்கள் எங்கெங்கே அமர்த்தப்பட்டிருப்போம்?"

இயேசுநாதர் சிலுவையில் அறையப்பட்டு உயிர் இழக்கவுள்ளார். ஆனால் சீடர்கள் அரசியல்வாதிகள்போல் நடந்து கொள்கிறார்கள். யாருக்கு எந்த இருக்கை என்று இந்த நேரத்திலா கேட்பது? எந்த நேரத்திலுமே கேட்கக்கூடாத கேள்வியாயிற்றே இது.

'இரண்டாவது இடம் யாருக்கு? மூன்றாவது இடம் யாருக்கு? கடவுளுக்கு அருகே யாருக்கு ஆசனம்? தொலைவில் யாருக்கு ஆசனம்?' என்ற போட்டி காரணமாக நீ சுவர்க்கத்திலும் குழப்பம் இருப்பதைக் காண்பாய். எந்த அப்சரசு யாருக்குக் கிடைத்தாள், யாருக்குக் கிடைக்கவில்லை என்னும் பேச்சும் அழுகையுமாக இருக்கும். சுவர்க்கத்திற்கு வருகின்றவர்கள் எல்லாம் வசிப்பதற்கு வசதியான இடம் தேடி போட்டி போடுகிறார்கள்.

என் கருத்து, என் கண்ணோட்டம், என்ன என்று கேட்டாயல்லவா? நான் ஆத்திகனும் அல்லன், நாத்திகனும் அல்லன். நான் 'உண்டு' என்னும் பக்கமும் வளைவதில்லை, 'கிடையாது' என்ற பக்கமும் வளைவதில்லை. உண்டு-இல்லை என்னும் இரண்டும் ஒரே நாணயத்தின் இருபக்கங்கள்தாம். ராமதீர்த்தர் சொன்னது நாணயத்தின் 'தலை' என்றால், நீ சொன்னது நாணயத்தின் 'பூ'. இந்த இரண்டு கருத்துகளும் எதிரெதிரானவை என நினைக்கிறாய். நான் அவ்வாறு கருதவில்லை. நான் கூறுவதைக் கவனமாகக் கேள்.

'இறைவா! உனக்கு எதில் விருப்பமோ அந்த நிலையில் இருக்க எனக்கு சந்தோஷம், சம்மதம்' என்று சொல்லும்போது உன்னுடைய சுயமான விருப்பம் என்ன? உனக்கு உண்மையில் எதில் சந்தோஷம் என்று தெரிவதில்லை. கடவுள் செய்வது எல்லாம் சரியாகத்தான் இருக்கும் என்று விட்டுக்கொடுத்தல்; கடவுளின் விருப்பத்தை மீறி நாம் என்ன செய்ய முடியும் என்னும் தோல்வி மனப்பான்மை; கடவுளுடன் ஒப்பிடுகையில் நாம் சக்தியற்றவர்கள் என்று அங்கலாய்த்தல் ஆகியவையும் ராமதீர்த்தரின் சரணாகதி அறிவிப்பில் மறைந்து நிற்கின்றன. நிஜமாகவே, உள்ளத்தின் உள்ளேயிருந்தே அந்த சம்மதம் வெளிப்படுகிறது என்று சொல்ல முடியாது. வெளியே பூ தெரிந்தாலும் உள்ளே முள்ளிருக்கலாம்.

என்னைப் பொறுத்தவரையில், கடவுளின் விருப்பமே என் விருப்பம் என்று சொல்லவோ, என் விருப்பம் வேறானது என்று கடவுளை மீறிச் சொல்லவோ நான் தயாரில்லை. ஏனெனில் நாம் கடவுளிலிருந்து வேறானவர்கள் இல்லை. அவரில் நாமும், நம்மில் அவரும் இருக்கிறோம். ஆகவே கடவுளின் விருப்பத்தை ஏற்கிறேன் அல்லது எதிர்க்கிறேன் என்று நம்மால் கூற முடியாது. நம்மிடமிருந்து பிரிந்து தனியாக இருப்பவரிடம்தான் அவர் விருப்பத்துக்கு உடன்படுகிறோமா, இல்லையா என்பதைக் கூற முடியும். இதுவே அஷ்டாவக்ரரின் மகாகீதை கூறும் செய்தியுமாகும்.

நீதானே அவர்! பிறகு யார்மீது யார் கோபப்படுவது? யாருடன் யார் ஒத்துப்போவது? 'உன் விருப்பம் எனக்கு சம்மதம்' என்று கூறுவது 'நான் வேறு, நீ வேறு' என்பதை மறைமுகமாகக் குறிப்பிடு கிறது. இவ்வாறு 'இருவரும் ஒன்றே' என்பதும், 'இருவரும் வெவ்வேறு' என்பதும் ஒன்றுடனொன்று முரண்படுகின்றன. 'உன் விருப்பம் என் விருப்பமாகாது' என்றும் சொல்லும்பொழுது இருவரும் வெவ்வேறு என்பது வெளிப்படையாகச் சொல்லப்படுகிறது. அவ்வாறு உன்னைப் பிரித்துக் கொள்ளும்போது உன் விருப்பமும் வேறாகத்தான் இருக்கும்.

**சூ**ஃபி துறவி ஒருவர் 40 ஆண்டுகளாகக் கடவுளை நினைத்து, 'ஹே பிரபு! உன் விருப்பம் நிறைவேறட்டும். நீ விரும்புவதே நடக் கட்டும்' என்று தினமும் பிரார்த்தனை செய்வார். நாற்பது ஆண்டு

களுக்குப்பின் கடவுள் ஒருநாள் அவருக்கு தரிசனம் தந்தார். அவர் சொன்னார், "உன் பிரார்த்தனை போலியானது. கடவுள் விருப்பப்படி நடக்கட்டும் என்று சொன்னால் போதுமே. ஆனால் 40 வருடங்களாக இதையே நீ சொல்வதால் இத்தனை காலமாக உன் வாழ்வில் நடந்ததை எல்லாம் கடவுளின் விருப்பம் என்று நீ எடுத்துக் கொள்ளவில்லை என்பது தெளிவாகிறது. தினமும் கடவுள் விருப்பப்படியே எல்லாம் நடக்கிறது என்று எடுத்துக் கொள்ளாமல் உன் வேண்டுகோளைச் சொல்லிபடியே இருப்பது என்னைக் குறை கூறுவதாகிறது. ஆனால் பிரார்த்தனை என்ற பெயரால் புகாரை மறைக்கிறாய்.

'உன் இஷ்டப்படியே செய், அப்படியே நடக்கட்டும்' என்று நாம் சொல்லும்போது, பெரும்பாலும், தவிர்க்க முடியாமையே காட்டு கிறது. இன்னொருவர் நம் தலையைப் பிடித்துத் தாழ்த்துவதுபோல் உள்ளது. அது மட்டுமல்ல, நீ வேறு, கடவுள் வேறு என்று நீ நினைப்பதையும் அது காட்டுகிறது. உண்மையில் அவர் மட்டுமே உள்ளார், நாம் இல்லை. அல்லது நாம் மட்டுமே உள்ளோம், அவர் இல்லை. ஒரேசமயம் இரண்டில்லை, ஒன்றுதான் உள்ளது. ஞான மொழியில் சொல்வதானால் 'நான் மட்டும் இருக்கிறேன்'. பக்திமொழியில் சொல்வதானால் 'நீ மட்டுமே இருக்கிறாய்.'

**ஜென்** துறவி போகோஜு என்பவர் காலையில் எழுந்ததும் 'போகோஜு' என்று உரக்கக் கூப்பிடுவார். பிறகு அவரே 'உள்ளேன் ஐயா, என்ன செய்ய வேண்டும், கட்டளையிடுங்கள்,' என்பார். மேலும்-மேலும் போகோஜுவே இரண்டு நபர்கள் போல் பேசுவார்!

'போகோஜு, கவனமாயிரு. புத்தரின் கட்டளைகளை மீறாமல் இரு.'

'சரி, ஐயா, நான் கவனமாக இருப்பேன்.'

'போகோஜு, தெரிந்தோ-தெரியாமலோ புத்த நெறிகளை மீறாதே.'

'நிச்சயமாக ஞாபகம் வைத்துக் கொள்வேன், ஐயா!'

போகோஜுவின் சீடன் ஒருவன் ஒருநாள் இந்த உரையாடலைக் கேட்க நேர்ந்தது. இது என்ன உளறலாக இருக்கிறதே என்று அவன்

திகைத்தான். ஒருநாள் அவன் துணிந்து குருவிடம் இந்த இரு பாத்திர உரையாடலின் ரகசியமென்ன என்று வினவினான்.

போகோஜூ சிரித்தார். "இரண்டு பேர் உரையாடல் என்கிறாயே. இங்கே இரண்டு பேர் எப்படி வந்தார்கள்? இங்கே கட்டளையிடு பவனும் நானே. அதைக் கடைப்பிடிப்பவனும் நானே. நானே படைப்பவன், நானே படைப்பு. நானே கேள்வி, நானே விடை. இங்கு இரண்டாவதாக யாருமில்லை. இதை தமாஷ் என்று நினைக்காதே. இதுவே வாழ்வின் யதார்த்தம்," என விளக்கினார்.

நீயும் இதேபோல்தான் ராமதீர்த்தர் கருத்தையும் உன் கருத்தையும் சொன்னாய். இந்த இரண்டிற்கும் இடையிலுள்ள முரண்பாட்டிற்கு என் பதிலென்ன என்று கேட்கிறாய். என் பதில் இதுவே—ஒன்றுதான் உளது. இரண்டு கிடையாது. இரண்டாகப் பிரியாது. ஆகவே நீ ஆக்கபூர்வமான அணுகுமுறை, எதிர்மறையான கண்ணோட்டம் இரண்டையும் கடந்துசெல். அப்போது அங்கே ஆன்மிகம் தொடங்குகிறது.

வித்தியாசத்தைப் புரிந்துகொள். எதிர்மறையானால் நாத்திகம். ஆக்கபூர்வமெனில் ஆத்திகம். இரண்டையும் கடந்தது ஆத்யாத்மிகம் எனப்படும் ஆன்மிகம்.

ஆன்மிகம் என்பது ஆத்திகத்தைவிட உயர்ந்த விஷயமாகும். நாத்திகம் நிலவும் இடத்தில்தான் ஆத்திகமும் நிலவுகிறது. இவை இரண்டும் ஒரே பூமியில் விளைபவை. ஆத்திகம் 'உண்டு' என்கிறது. நாத்திகம் 'இல்லை' என்கிறது. இரண்டும் ஒரே கடவுளைத்தான் குறிப்பிடுகின்றன. அவை கடவுளை நம்மிடமிருந்து பிரிக்கின்றன. ஆன்மிகம், 'கடவுள் உன்னிடமிருந்து வேறுபட்டவரில்லை. நீயே அவர்' என அறிவிக்கிறது.

## மூன்றாம் கேள்வி

**கடவுளை அறிய ஆசைப்படுவதையும் அஷ்டாவக்ரர் இதர ஆசைகளுடன் சேர்க்கிறார். ஆனால் மற்ற ஞானிகள் ஈசன் மீதான ஆசையை மிக உயர்வாக அல்லவா பேசுகிறார்கள். இந்த வேறுபாட்டை விளக்குங்கள்.**

உன்னுடைய எல்லா ஆசைகளையும் ஒன்று திரட்டிக் கடவுளை நோக்கி முன்னேறுதல் முமுக்ஷா (முமுட்சை) என்று அழைக்கப்படு கிறது. வீடுபேற்றில் நாட்டமே இதன் லட்சியமாகும். சிற்றாறுகள், சிற்றருவிகள், ஓடைகள் எல்லாம் இணைந்து கங்கையாகின்றன. கங்கை கடலை நோக்கிப் பாய்கின்றது. நீ பணம் திரட்ட, உயர்பதவி பெற, அழகாக விளங்க, ஆரோக்கியம் வாய்க்க, கௌரவம் பெற ஆசைப்படுகிறாய். இப்படி எண்ணிலடங்கா ஆசைகள் எத்தனையோ உனக்கு உள்ளன. இவை எல்லாம் இணைந்தால் கடலை நோக்கிப் பாயும் கங்கை நதிபோல் தோன்றும்.

கடைசியில் கங்கையும் தனது தனித்துவத்தை இழக்கத்தான் நேரிடும். இல்லாவிடில் அது கடலில் சங்கமிக்க முடியாது. கங்கை கடலில் கலக்காமல் கரையிலே நின்றுவிட்டால் அதன் இறுதி லட்சியம் நிறைவேறாது.

முதலில் சிறு-சிறு ஆசைகள் தோன்றி இணைந்து இறையன்பாக மாறி இறைவனை அடையும் பேராசை எழும். அந்த மகத்தான ஆசையும் ஒரு கட்டத்தில் நீங்கியாக வேண்டும். ஆகவே பரமஞானி ஈசன் மீதான ஆசையும் ஒரு தடை என்பார். மோட்சத்திற்கு ஆசைப்படுவதையும் தடை என்பார். அவரது இறுதி லட்சியம் இவற்றையெல்லாம் கடந்ததாகும்.

ஒருவனுக்குப் பணம் திரட்டும் ஆசை; ஒருவனுக்கு பலசாலி யாகும் ஆசை; ஒருவனுக்கு அமர வாழ்வின் மீது ஆசை; இதேபோல் ஒருவனுக்கு மோட்ச ஆசை. லட்சியம் வெவ்வேறே தவிர எல்லா வற்றிற்கும் ஆசையே அடிப்படை. மோட்ச ஆசை அனைத்திலும் உயர்ந்தது எனினும் அதுவும் ஆசைதான். எந்த ஆசையானாலும் அது நம்மைக் கட்டிப்போடவே செய்யும்.

நான் ஒன்றை விரும்பினால் ஒரு போராட்டமும் தொடங்கி விடும். ஏனெனில் என் விருப்பம் வேறு பலருடைய அதேமாதிரியான விருப்பத்துடன் மோதுகிறது. எது வேண்டுமோ அது இல்லை என்பதும், எது உள்ளதோ அது வேண்டாம் என்பதுமே விருப்பத்தின் அடிப்படை. எனவே விருப்பத்தில் அதிருப்தி ஊடுருவியுள்ளது. அதிருப்தி என்னும் அக்கினியில் விருப்பு உணர்வு தோன்றுகிறது. அப்படியானால் மோட்சம் என்னும் பெருவிருப்பம் எப்போது

நிறைவேறுகிறது? எது இல்லையோ அதை வேண்டும் என்று கோராமல், எது உள்ளதோ அதில் ஆனந்தம் கொண்டால் திருப்தி விளைகிறது. அதுவே மோட்சநிலை.

முக்தி ஆசை நம்மை இறைவனின் இல்லம்வரை இட்டுச் செல்கிறது. ஆனால் வாசலுடன் நின்றுவிடுகிறது. கடைசியில் முக்தி ஆசையையும் கைவிடத்தான் வேண்டும். முக்தி ஆசை தலைசிறந்தது எனினும் மற்ற எல்லா ஆசைகளையும் வாழ்க்கைப் பயணத்தில் கைவிடுவதுபோல், பயணத்தின் இறுதியில் முக்தி ஆசையையும் கைவிட வேண்டும். முக்தி அடைய முக்தி ஆசையைக் கைவிட வேண்டும் என்பது முரண்பாடாக, விசித்திரமாகத் தெரியலாம். ஆனால் அந்த நிபந்தனை உண்மையே.

ஆனால் அவசரப்பட வேண்டாம். முதலில் கங்கையை உருவாக்கு. எல்லா ஆசைகளையும் முக்தி என்னும் ஆசையில் கலந்துவிடு. ஒரே ஓர் ஆசையே கொழுந்துவிட்டு எரியட்டும். மனம் பல்வேறு திசைகளில் மாறி-மாறி ஓடுகிறது. அது ஒரே திசையில் ஓடட்டும். மனத்தில் எத்தனையோ வேண்டுதல்கள் எழுந்த வண்ணமாக உள்ளன. அவற்றின் இடத்தில் ஒரே கோரிக்கை எழட்டும். இதனால் உனக்குள் துண்டு-துண்டாக இருந்த அம்சங்கள் இணைந்து நீ முழுமையற்றவனாக ஆகிவிட வேண்டும். இந்நிலையில் நீ ஒரு நிவேதனப் பொருளாக ஆகிவிடுவாய். நீ சென்று கடவுளின் திருவடிகளில் உன்னை சமர்ப்பித்துவிடு. ஓர் அறிவிப்பு செய்: ‘இனி எனக்கு எதுவுமே வேண்டாம். உன்னைத் தேட, உன்னை அறிய, மோட்சம் பெற என்றெல்லாம் ஆசைப்பட்டதை உன் திருவடிகளில் சமர்ப்பிக்கிறேன்’. அக்கணமே கங்கை கடற்கரையில் சரிகிறது; அக்கணமே அது கடலாக ஆகிவிடுகிறது.

**மயங்கிய நிலையில் நான் இருந்து**
**அந்த மயக்கத்தை நான் உணர்ந்தால்**
**எனது பிரார்த்தனை நிச்சயமாக**
**குறைபாடு உடையது என்றாகும்**

நீ மயக்க நிலையில் உள்ளாய். நீ அவ்வாறு மயங்கியதை உணரும் அளவிற்கு உனக்கு நினைவு இருந்தால், உனது பிரார்த்தனை முழுமை பெறவில்லை என்று பொருள். நீ பரவச நிலையில்

அசைந்தாடிச் செல்கையில் அந்த பரவசத்தை நீ உணர்ந்தால் உனது உணர்ச்சி முழுமை பெற்றதாகாது. மோட்ச ஆசை நீங்கிய நிலையில்தான் முழுமையான மோட்சம் சாத்தியமாகிறது.

**இலக்கை நோக்கிய எனது பயணம்**
**முடிந்ததென எப்படிச் சொல்வேன்**
**எனக்கு அது தெரியாது என்பதே**
**எனக்குத் தெரிந்த செய்தியாகும்**

பெரிய-பெரிய தடைகளை மனிதன் எளிதில் கடந்துவிடுகிறான். சிறிய தடைகள்தான் உண்மையில் தொந்தரவு தருகின்றன. பணம் சம்பாதிக்க வேண்டும் என்பது அற்பமான ஆசையாகும். அதை மோட்ச ஆசையுடன் கலந்துவிட வேண்டும். இவ்வாறு விகாரமான, குரூபமான ஆசைகளை மோட்ச ஆசையுடன் இணைத்த பிறகு வலி, வேதனை முதலிய உணர்வுகள் எழா. ஆனால் ஒரு சிறு குறுக்கீடு உள்ளது. வீடுபேறு வேட்கை (முமுட்சா) என்னும் கண்ணாடிச் சுவர் நடுவிலுள்ளது. கண்ணுக்குப் புலப்படாத அளவிற்கு மெல்லிய சுத்தமான கண்ணாடி. இருபுறமும் தெளிவாகத் தெரிகிறது. தொட்டுப் பார்த்தால்தான் உணரலாம்.

நீ முக்திபெற வேண்டும் என்னும் ஞாபகம் இருக்கும் பட்சத்தில் நீ இன்னும் முக்தி அடையவில்லை என்பது தெளிவு. முக்தி பெற வேண்டும் என்னும் ஆசை இருந்தாலும் நீ முக்தி பெற முடியாது. ஏனெனில் முக்தி ஏற்பட்டதன் அடையாளம் கைவசம் விருப்பம் எதுவும் மிஞ்சியிருக்கவில்லை என்பதுதான்.

ஆகவே அஷ்டாவக்ரர் வெளியிட்டது புரட்சிகரமான கருத்தாகும். அர்த்தம் (செல்வம்), காமத்திலிருந்து மட்டுமல்ல, தர்மத்திலிருந்தும் விடுதலை பெற வேண்டுமென அவர் கூறுகிறார். வேறு எந்த சாஸ்திர நூலிலும் இம்மாதிரியான கருத்து கிடையாது. எல்லா ஞானிகளுமே செல்வம், வாழ்க்கை இன்பங்களிலிருந்து விடுதலை பெறுவதைக் கூறியுள்ளனர். அறத்திலிருந்தும் விடுதலை பெறுமாறு யாரும் உரைத்ததில்லை. ஆகவே அஷ்டாவக்ரர் கூறியுள்ளது புதுமையாக இருக்கிறது. அறமும் ஒருவன் மோட்சம் பெறத் தடையாக இருக்கும் என்பது அவரது கருத்து. ஏனெனில் மோட்சம் பெற எல்லா ஆசைகள்ளயும் துறக்கும்போது தர்மம் மூலம் புண்ணியம் சம்பாதிக்கும் ஆசையும் நீங்க வேண்டும்.

எப்படி என்னால் சொல்ல முடியும்
சூன்யம் ஆகிப் போனேன் என்று
இமயத்தைக்கூட தாண்டிய நான்
சரளைக் கற்களால் தடுக்கப்பட்டேன்
அடிப்படையில் அச்சம் இருக்குமாயின்
நொடிப்பொழுது தைரியமும் ஐயத்திற்குரியது
கடலையும் நீந்திக் கடந்த நான்
கரை மணலால் தடுக்கப்பட்டேன்
விருப்பம் எதுவும் எனக்கு இல்லை ஆயின்
இழத்தல், பெறுதல், போராட்டமில்லை
எல்லோருடனும் சமரசம் ஆனேன்
என்னுடன் மட்டுமே விரோதம் உள்ளது
சிக்கல்களின் மெல்லிய இழைகளால்
கட்டுண்டு கிடக்கும் எனது மனம்
சிக்கல்களை நெகிழ்த்த முயலுகையில்
மேன்மேலும் முடிச்சுகளில் சிக்குகிறது

மாபெரும் மலையை மனிதன் கடந்து விடுகிறான். ஆனால் சிறு கல் தடுக்கி விழுந்து விடுகிறான்! யானை ஓரிடத்தைக் கடந்து விடுகிறது. ஆனால் அதன் வால் மட்டும் ஓரிடத்தில் மாட்டிக் கொள்கிறது! மனிதனின் நிலை அப்படி. அவன் சுலபமாக நீந்திக் கடலைக் கடக்கிறான். கரைக்கு வந்ததும் மணலில் சிக்கி நடக்கக்கூட சிரமப்படுகிறான்.

மகாவீரரின் வாழ்க்கையில் ஒரு சம்பவம். அவருடைய முக்கியச் சீடரான கௌதம் கணதர் பல்லாண்டுகளாக குருவுடன் இருந்தும் முக்தி பெற முடியவில்லை. மகாவீரரின் சீடர்களில் அவனே கூர்மையான அறிவுடையவன். அவன் மிகவும் கவலைப்பட்டான். அவன் முக்தி பெறவேண்டுமென தீவிரமாக ஆசைப்பட்டான். அவனது விருப்பத்தில் எந்தக் குறைபாடும் இல்லை. தனது வாழ்க்கையையே மோட்சம் பெறுவதற்காக அர்ப்பணித்தும் ஏன் முன்னேற்றமில்லை என்று மிகவும் யோசித்தான். ஆனால் இந்த தீவிர ஆசைதான், ஆவேசம்தான், மோட்சம் பெறுவதைத் தடுக்கிறது என்பதை அவன் புரிந்து கொள்ளவில்லை. தனக்கு ஏதோ உரிமை உள்ளதுபோல் அவன் மோட்சம் பெற ஆசைப்பட்டது அகங்காரத்தின் விளைவாகும். இது அகங்காரத்தின் கடைசி விளையாட்டாகும்.

மகாவீரர் இறந்த சமயம் கௌதம் அருகில் இல்லை. அருகிலுள்ள ஊர் ஒன்றில் உபதேச பிரசங்கம் செய்யப்போயிருந்தான். அவன் திரும்பும்போது எதிர்ப்பட்ட வழிப்போக்கர்கள் மகாவீரர் காலமான செய்தியைத் தெரிவித்தனர். உடனே அவன் அழ ஆரம்பித்துவிட்டான். அழுதபடியே அவன் வழிப்போக்கர்களிடம் மகாவீரர் அவனுக்குச் செய்தி எதுவும் விட்டுச் சென்றிருக்கிறாரா என்று அவர்களுக்குத் தெரியுமா என்று விசாரித்தான். அவன்தானே அவருக்கு மிகநெருக்கமான சீடன். அவன் அவருக்குச் சளைக்காமல் சேவை புரிந்திருக்கிறான். ஆயினும் மோட்சம் கிடைப்பதில் ஏதோ தடை இருந்தது: அது குறித்து மகாவீரர் ஏதேனும் ஆலோசனை வழங்கியிருப்பார் என அவன் ஊகித்தான்.

வழிப்போக்கர்கள் சொன்னார்கள்: "ஆம், உங்களுக்காக ஒரு செய்தி விட்டுச் சென்றுள்ளார். அதன் அர்த்தம் புரியவில்லை. வார்த்தைகள் மட்டுமே ஞாபகம் உள்ளது. அர்த்தம் அவருக்கும் உங்களுக்கும்தான் புரியும். அவர், 'ஏ கௌதம், நீ நதியை முழுமையாக நீந்திவிட்டாய். பிறகு ஏன் கரையிலேயே நின்றுவிட்டாய்?' என்று மட்டுமே அவர் கூறி இறந்தார்."

இதைக் கேட்டதுமே கௌதமுக்கு ஞானம் கிடைத்துவிட்டது; மோட்ச நிலை வசப்பட்டுவிட்டது!

மனிதன் நீந்திக் கரையை அடைகிறான். கரையைத் தொட்டபடி அப்படியே இருந்து விடுகிறான். ஒரு கட்டத்தில் கரை என்ற பற்றையும் கூட விட்டாக வேண்டும். எல்லாவற்றையும் விட வேண்டும். விடுவதையும் விடவேண்டும். அப்போது நீ உன் பரிசுத்தமான ரூபத்தில் மிஞ்சியிருப்பாய். அப்போது மோட்சம் உனக்குக் காட்சி தரும்.

**நான்காம் கேள்வி:**

**எனக்கொரு கனவு. அதை தயவுசெய்து விளக்குங்கள். நான் சந்நியாசி ஆவதற்கு முன்பு சமூகத்தில், பொது இடத்தில், மக்கள் கூட்டத்தில் நான் ஆடையில்லாமல் தென்படு வதாகக் கனவு கண்டுவந்தேன். அதனால் திடுக்கிட்டேன். இப்போது துறவறம் ஏற்றபின்**

**அத்தகைய கனவு வருவது நின்றுவிட்டது. சில சமயம் கனவில் சாதாரண உடையில் என்னைப் பார்த்தும் அதிர்ச்சியடைகிறேன். நான் சுயமாக விரும்பியேதான், ஆனந்தமாக, நன்றி உணர்வுடன் காவி உடை அணிகிறேன். என் ஆனந்தத்தை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்வதற்கு இந்த நிறம் உதவியாக உள்ளது. என் கனவிற்கு என்ன பொருள்?**

இந்தக் கனவைப் புரிந்துகொள்ள கார்ல் குஸ்தாவ் ஜூங்* கண்டுபிடித்த மனத்தத்துவக் கோட்பாட்டைத் தெரிந்து கொள்ள வேண்டும். தன் கோட்பாட்டை அவர் 'தி ஷேடோ'-நிழல் மனிதன்- என்றழைக்கிறார். இது மிகவும் முக்கியமான கோட்பாடாகும். நீ வெயிலில் செல்லும்போது உன் நிழல் சேர்ந்து செல்கிறது. அதுபோல் நீ செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் அசைவுக்கும் உனக்குள்ளே நிழல் படிகிறது. ஆனால் இந்த நிழல் எப்பொழுதும் உனக்கு எதிர்மாறானதாக (Opposite) இருக்கும்.

வாழ்க்கை விதிகளின்படி உலகில் எல்லாப் பொருட்களும் எதிரெதிரான அம்சங்கள் இணைவதால் இயங்குகின்றன. இங்கே ஆணின் உதவியின்றிப் பெண்ணாலோ, பெண்ணின் உதவியின்றி ஆணாலோ வாழ்க்கை நடத்த முடியாது. இரவு பகலுடன், பிறப்பு இறப்புடன், இருட்டு வெளிச்சத்துடன் என்றபடிக்கு ஒவ்வொன்றும் தமக்கு எதிரானவற்றுடன் இணைக்கப்படுகின்றன. உலகில் எங்கும் இருபக்க மோதலாக, எதிரெதிரான இரண்டாக உள்ளது. இதே நிலைதான் உன் மனத்திலும் காணப்படுகிறது.

உன் முன்னாள் கனவுகளின்படி வெளியுலகில் நீ திடீரென்று எந்த ஆடையுமின்றிப் பிறந்த மேனியாய் காட்சியளித்திருக்கிறாய். அது உன் நிழல்! விழிப்பு நிலையில் நீ எல்லா இடங்களுக்கும் ஆடை அணிந்தே செல்கிறாய்; எல்லோரையும் சந்திக்கிறாய். உனது உள்நிழல் இதற்கு எதிரான உணர்வைப் பிறப்பிக்கிறது; ஆடையில்லாமல் இருக்கத் தூண்டுகிறது. ஆகவேதான் மூளைக்கோளாறு ஏற்பட்டால்

---

* **Carl Gustav Jung** (1875-1961) சுவிட்சர்லாந்து மனத்தத்துவ அறிஞர் சிக்மண்ட் ஃப்ராய்டுடன் பணி புரிந்தவர். பிரிந்து புதிய மனத்தத்துவக் கோட்பாடுகளை நிறுவியர். ஆழ்மனத்திற்கும் கனவுகளுக்குமுள்ள தொடர்பை ஆராய்ந்தவர்.

மனிதன் ஆடைகளைக் கழற்றி எறிகிறான். சாதாரண மனநிலையில் நிழல் சொன்னதற்காக ஆடையைக் கழற்றாதவன் பைத்தியம் பிடித்தால் நிழலுடன் ஒத்துப்போகிறான்; அதனுடன் ராஜியாகிறான். இதுவரை மற்றவர்களைப் போலிருந்ததைக் கைவிட்டு நிழலின் பேச்சைக் கேட்கத் தொடங்குகிறான். நிழல் உருவம் உன்னை எப்பொழுதுமே உடைகளைக் களைந்தெறி என்றே தூண்டி வந்திருக்கிறது.

ஆகவேதான் சமூகம் நம்மைப் பார்த்து 'திகம்பரனாக இருக்காதீர்கள்' என்று உரக்கக் கூவுகிறது. ஆதிகாலத்தில் மனிதன் துணியால் உடலை மூடத் தொடங்கிய தினத்திலிருந்தே ஆடையில்லாமல் இருக்கும் ஆசை நிழல் உருவ ஆளுமையில் தோன்றிவிட்டது. ஆடை அணியத் தொடங்கிய அன்றே ஆடையில்லாமல் இருக்கும் ஆசையும் தோன்றியது அதிசயமான ஒற்றுமை.

காடுகளில் ஆடையில்லாமல் திரிகிறார்களே அவர்களுக்கு உனக்கு வந்தது போன்ற கனவு வராது. ஆனால் ஒருவேளை அவர் களுக்கு ஆடை அணிந்திருப்பது போன்ற கனவு வரலாம்! அதற்கு அவர்கள் ஆடையணிந்த மனிதர்களை எங்காவது பார்த்திருக்க வேண்டும். அது அவர்களின் நிழல் சொரூபத்தைப் பாதித்திருக்கும்.

பொதுவாக, நாம் எதை விழிப்புநிலையில் மறுக்கிறோமோ, தவிர்க்கிறோமோ அதைத்தான் கனவில் பார்க்கிறோம். வேண்டாம் என நாம் நினைக்கும் பொருட்களை வீட்டின் நில அறையில் தூக்கிப் போட்டு விடுவதுபோல், சில சிந்தனைகளை, சில விருப்பங்களை நாம் மனத்தின் ஆழத்தில் புதைத்துவிட முயல்கிறோம்.

நீ ஒரு பெண்ணை நேசிக்கிறாய். அவளிடம் உள்ள உனக்குப் பிடிக்காத சில அம்சங்கள் காரணமாக உனக்கு அவள் மீது சிறிது வெறுப்பும் உள்ளது. அந்த வெறுப்பை நீ உள்ளத்தின் ஆழத்திற்குள் தள்ளிவிட முயலுகிறாய். ஆனால் அந்தப் பெண்ணிடம் நீ வெறுப்பை வெளிப்படுத்துவது போன்றே கனவு வரும்.

என்றாவது ஒருநாள் நீ கனவில் மனைவியின் கழுத்தை அழுத்திக் கொலை செய்வாய்! விழிப்புநிலையில் அவ்வாறு செய்ய நினைத்ததே கிடையாதே என்று உனக்குத் திகைப்பு எழும். மனைவி

அழகானவள். அன்பானவள். குடும்பம் சரியாக நடைபெற்று வருகிறது. பிறகு இந்தக் கனவு ஏன் ஏற்பட்டது?

உனக்கு ஒரு நல்ல நண்பன். எல்லா விஷயங்களிலும் அவன் உனக்கு சமமாக இருப்பதால் போட்டி மனப்பான்மை காரணமாக உன் மனத்தில் அவன் மீது நுணுக்கமான விரோதம் இருக்கிறது. அது தவறென்று மனத்தின் ஆழத்திற்குத் தள்ளிவிடுகிறாய். ஆனால் அது கனவாக மேலெழும்புகிறது. கனவில் நீ உன் நண்பனுடன் வாள் சண்டை போடுகிறாய்!

நாம் நாள் முழுவதும் சிந்திக்கும் எண்ணங்களை புண்ணியம்-பாவம் என்று வகைப்படுத்திச் சிலவற்றை மனத்தின் நிலவறையில் தள்ளிவிடுகிறோம். அஷ்டாவக்ரர் அவ்வாறு தேர்ந்தெடுக்காதே என்று உன்னை எச்சரிக்கிறார். நீ புண்ணியத்தை வைத்துக் கொண்டால் பாவத்தை நிலவறையில் தள்ளிவிடுவாய். ஆனால் அந்த பாவ எண்ணங்கள் கனவில் வந்து உன்னை வருத்தும். நாம் புண்யாத்மா என்று சொல்பவன் பாவங்களை மனத்தின் ஆழத்திற்குள் தள்ளியிருப்பான். அவ்வளவுதான் அவனிடம் விசேஷம்.

குழந்தைக்கு முதல் முறையாக ஆடை அணிவிக்கும் அன்றே அவனது நிழல் ஆளுமையும் பிறந்துவிடுகிறது. குழந்தைகள் ஆடை அணிவதை வெறுக்கின்றன. அவர்களுக்கு பலவந்தப்படுத்தி ஆடை அணிவிக்க வேண்டியுள்ளது. மிரட்ட அல்லது தின்பண்டம் தருவதாக ஆசைகாட்ட வேண்டியுள்ளது. ஆடை அணியாமல் வெளியில் போனால் அசிங்கம் என்று அவர்களுக்குக் கற்பிக்கிறோம்.

ஆனால் ஆடையில்லாமல் இருப்பதுதான் குழந்தைகளுக்குப் பிடிக்கும். ஒருவகையில் அவை நாகரிகத் தாக்கமற்ற காட்டுவாசி போன்றவை. ஆதிவாசி போன்றவை. எதற்காகத் தங்கள் மென்மையான உடலை ஆடையில் இறுக்கிக் கட்ட வேண்டும் என்று அவற்றிற்குப் புரிவதில்லை. தங்களின் சுதந்திரத்தில் பெரியவர்கள் குறுக்கிடுவதாக அவை நினைக்கின்றன. ஆகவே அவை உடையைக் கிழித்து விடு கின்றன அல்லது மண்ணில் அளைந்து அழுக்காக்கிக் கொள்கின்றன.

ஆனால் இவர்களே வளர்ந்தபின் தங்கள் குழந்தைகளுக்கு வற்புறுத்தி ஆடைகள் அணிவிக்கின்றனர்; அவற்றை அழுக்காக்கி

விடாதே என்று மிரட்டுகின்றனர். பிறகு வரிசையாக ஆடைத் திணிப்பு முன்னேறுகிறது. நல்ல உடை-அழகான உடை-கலைநயமிக்க உடை என்று மனிதனை இந்த உடை விஷயம் வலைபோல் கட்டிப் போடுகிறது.

இவ்வாறு குழந்தையாய் இருந்தபோது ஆடையை விரும்பாத சுதந்திர உணர்வு வளர்ந்தபின் ஆழ்மனமென்னும் நில அறையில் அமுக்கப்படுகிறது. அந்த விருப்பம் அவ்வப்பொழுது கனவில் தலைகாட்டும். ஆடையற்ற குழந்தைப் பருவம் ஆனந்தமாக இருந்தது. குழந்தை குதித்தது, ஆடி ஓடியது, தண்ணீரில் இறங்கியது, மழையில் நனைந்தது, மண்ணில் புரண்டது. ஆனால் ஆடைகள் அணிவது உயிரைப் பிடுங்குவது போலிருந்தது. இந்த ஆடைகளால் கிடைத்த நன்மை சிறிதளவே, இழப்போ ஏராளம். குழந்தைப் பருவத்தில் நீ ஆடையின்றி சந்தோஷமாகத் திரிந்தாய். சற்று வளர்ந்தபின் சமூகத்திற்கு பயந்து அந்த திகம்பர சுதந்திரத்தை அடிமனத்தில் புதைத்தாய். அதுவே பிற்காலத்தில் கனவாக வந்து உன்னை ஆடையற்றுக் காட்சியளிக்கச் செய்தது.

சந்நியாசம் ஏற்றபின் இத்தகைய கனவு தோன்றவில்லை என்றாய். ஏனெனில் நீயாக விரும்பி சந்நியாசம் ஏற்றாய். பெற்றோர் உன்னைக் கட்டாயப்படுத்தி சந்நியாசி ஆக்கவில்லை. ஆடைகளோ பெற்றோர் தந்தவை. உன்னை வற்புறுத்தி அணிவித்தவை. நீ துறவறத்தை ஆனந்தமாக ஏற்றாய். ஆகவே காவி ஆடையை நீ சுயமாகவே தேர்ந்தெடுத்தாய். இந்த ஆடைதான் உன் மனத்திற்குப் பிடித்தமாக இருந்தது.

நீ விரும்பியதே நடந்ததால் ஆடையின்மை என்னும் கனவு வரவில்லை. அம்மாதிரிக் கனவின் அடிப்படையான சமூகம் வற்புறுத்திய ஆடை முறையை நீ கைவிட்டதால் இனி அத்தகைய கனவு எழக் காரணமில்லை. அந்த ஆடைகளுடன் சம்பந்தப்பட்ட நிழல் ஆளுமை விடைபெற்றுக் கொண்டு விட்டது.

சந்நியாசியான பிறகும் கனவில் சில சமயம் நீ சாதாரண உடையுடன் தென்பட்டதற்காக காரணம் கேட்டாய். குழந்தைப் பருவத்தில் நீண்ட காலம் வரை உன்மீது சுமத்தப்பட்ட ஆடைகள் காரணமாக விளைந்த நிழல் அடர்த்தியாகவும், நீயாக விரும்பித்

தேர்ந்தெடுத்து சில காலமாக அணியும் காவி ஆடையினால் விளைந்த நிழல் மங்கலாகவும் இருக்கும். ஆனால் அதற்கும் நிழல் உண்டு. அணியும் ஆடையைக் கட்டாயத்தால் தேர்ந்தெடுத்தாயா அல்லது விரும்பியா என்பது முக்கியமன்று. தேர்ந்தெடுக்காமலே இருந்தால்தான் நிழல் ஆளுமை தோன்றாது. ஏனெனில் அப்போது நீ சாட்சி மனப்பான்மையுடன் இருக்கிறாய். கர்த்தா மனப்பான்மையில் இருந்தால்தான் நிழல் ஆளுமைக்கு வாய்ப்பு இருக்கும்.

சந்நியாசத்திலும் கர்த்தா மனப்பான்மை உள்ளது. ஏனெனில் நீதான் யோசித்தாய், ஆராய்ந்தாய், சந்நியாசத்தைத் தேர்ந்தெடுத்தாய். அதில் ஆனந்தமும் அடைந்தாய். சாதாரண உடை பற்றிய சிந்தனையை மனத்தின் ஆழத்தில் மறைக்க முயன்றாய். அவ்வுடையை நீ விரும்பவில்லை என்பது வேறு விஷயம். இதெல்லாம் கர்த்தா மனப்பான்மையின் அடிப்படையில் நிகழ்ந்தவை. இந்த நிலைக்கும் மேலான நிலை நோக்கி உயரு. சாட்சியாக மாறு.

சாட்சி மனப்பான்மை உருவானதும் கனவுகள் தோன்றுவது நின்றுவிடும். இதை அறிந்து நீ ஆச்சரியப்படுவாய். கனவுகள் தோன்றுகின்றனவா அல்லது இல்லையா என்பதை உரைகல்லாக வைத்துக்கூட ஒருவன் சாட்சி நிலைக்கு வந்துவிட்டானா என்பதை முடிவு செய்யலாம். நாம் கர்த்தாவாக இருக்கும்வரை கனவுகளும் தொடரும்.

கனவு சம்பந்தமாகக் கேள்விகேட்ட சீட்ரின் பெயர் அஜித். துறவறம் ஏற்றதும் அவர் உடனே தனது பழைய உடை முறையைக் கைவிடவில்லை. மேல்சட்டை மட்டும் காவி நிறத் துணியில் தைத்துக் கொண்டார். பேண்ட் மட்டும் வெள்ளை நிறத்திலேயே தரித்தார். மனத்தில் இருமுனைப் போராட்டம் உண்டாகியிருக்கும். ஏனெனில் அஜித் ஒரு டாக்டர். பேண்ட்டும் காவியில் இருந்தால் குடும்பத்தினர் என்ன சொல்வார்களோ; டாக்டர் தொழில் பாதிக்கப்படுமோ என்றெல்லாம் அவருக்கு சந்தேகம், குழப்பம். அஜித் மாலையும் அணிந்திருந்தார், ஆனால் சட்டைக்குள் மறைத்திருந்தார்.

போகப் போக அவருக்கு தைரியம் வளர்ந்தது. முதலில் மாலையைச் சட்டைக்கு வெளியே தெரியும்படி எடுத்துவிட்டார். அவர் என்னைச் சந்திக்கும்போது பேண்ட்டையும் காவி நிறத்தில் அணியச்

சொன்னேன். சரி-சரியென்று சொல்லியபடி மூன்று வருஷம் ஓட்டிவிட்டார். அந்த மூன்றுவருஷ மனக்கொந்தளிப்பின் நிழல் அவருக்குள் பதிந்திருந்தது. முழுமையாக மனம் மாறியபின் அவர் முழுமையாகக் காவி உடைக்கு மாறிவிட்டார். அந்த மூன்று வருடங்களில் காவி உடைக்கு முழுமையாக மாறுவதா, வேண்டாமா; உறவு பாதி-துறவு பாதி என்று இருப்பதா என்ற மன அழுத்தத்தின் ரேகைகள் படிந்துவிட்டதால் அவை கனவுகளாக உருமாறி வெளிப்பட்டன.

ஒன்றை நாம் தேர்ந்தெடுக்கிறோம் என்றால் எதற்கோ பதிலாக, எதற்கோ எதிர்ப்பாக அவ்வாறு செய்கிறோம் என்று பொருள்படும். அஜித் தான் ஏற்கெனவே அணிந்திருந்த சாதாரண ஆடைக்கு எதிர்ப்பாகக் காவி ஆடை அணியத் துவங்கினார். ஆகவே எதிரியாக்கப்பட்ட சாதாரண உடை பழிவாங்கத்தானே செய்யும். அது சந்தர்ப்பத்திற்காகக் காத்திருக்கும். அதுவே கனவு.

அடுத்த கட்டமாக இந்தக் கனவுநிலை என்னும் நிழலையும் கடக்க வேண்டும். நீ விரும்பியேதான் சந்நியாசம் ஏற்றாய் என்பதையும், முன்பு அணிந்திருந்த சாதாரண உடைகளுடன் போராடித்தான் காஷாய வஸ்திரத்திற்கு மாறினாய் என்பதையும் மனபூர்வமாக ஒப்புக்கொள். இதன்மூலம் முன்பு அணிந்த சாதாரண உடைகள் மீது உனக்குப் பற்று இருந்தது என்பதை நீ மறைக்கவில்லை. உடனேயே அந்த சாதா உடைகள் உன் கனவில் வருவது நின்றுவிடும். நீ ஒரு புதிய தளத்தில் பிரவேசிப்பாய். அப்போது இந்த காவி உடை நீ தேர்ந்தெடுத்ததாக இராமல் ஓர் அருட்பிரசாதம்போல் அமையும்.

நீ என்னிடம் வந்து, "நான் சந்நியாசம் பெறத் தகுதியுள்ளவனாயின் அளியுங்கள்' என்று பிரசாதமாகக் கேட்டுப் பெற்றிருந்தால், கனவில் எதன் நிழலும் உன்னைப் பாதிக்காது. ஆனால் நீ கர்த்தா என்ற நினைவுடன் யோசித்து, சிந்தித்து, ஆதரவான-எதிர்ப்பான அம்சங்களை ஒப்பிட்டு, தர்க்க அறிவைப் பயன்படுத்தி மதிப்பீடு செய்து, பிறகு துறவறத்தை நீ தேர்ந்தெடுத்திருந்தால், கர்த்தா உணர்வின் காரணமாக நிழல் ஆளுமையும் வலுவாக இருக்கும்.

அஜித் நீண்டகாலம் சிந்தித்து ஆராய்ந்து சந்நியாசம் ஏற்றதால், அவர் சிறிது-சிறிதாகக் கைவிட்டவை ஆழ்மனத்தில் இறங்கி, நிழல்

ஆளுமையாக இணைந்துவிட்டன. ஆனால் நீங்கள் துறவறத்தை அருட்பிரசாதமாகப் பெற்றுக் கொள்ளுங்கள். 'நான் சந்நியாசம் ஏற்றேன்' என்று அறிவிக்காதீர்கள். 'எனக்குக் கடவுளின் பிரசாதமாக, கடவுளின் கருணையால் சந்நியாசம் கிடைத்தது. நானாக அதைத் தேர்ந்தெடுக்கத் தகுதி பெற்றிருக்கவில்லை' என்று அறிவியுங்கள்.

**தி**ருகுர்ஆனில் ஓர் உபதேசம் உள்ளது. துறவி ஒரு வேந்தனுடைய அல்லது செல்வந்தனுடைய வீட்டிற்குப் போகக்கூடாது. வேந்தன்தான் துறவியின் குடிலுக்கு வந்து சந்திக்க வேண்டும்.

ஜலாலுத்தீன் ரூமி* என்பவர் ஒரு மாபெரும் சித்த புருஷர். ஒருநாள் அவர் அரசரின் அரண்மனைக்குச் செல்வதை அவருடைய சீடர்கள் பார்த்தனர். அவர்கள் மிகவும் குழப்பமடைந்தனர். குரு திருகுர்ஆனின் கட்டளையை மீறுகிறாரே என வருந்தினர். அவர் அரண்மனையிலிருந்து திரும்பியதும் சீடர்கள் அவரிடம், "தங்களைப் போன்ற சத்புருஷர் இறைக்கட்டளையை மீறலாமா? அரசர்தான் வந்து துறவியைச் சந்திக்க வேண்டும் என்றுதானே திருகுர்ஆன் மொழிகிறது." என்று கூறினார்கள்.

சீடர்கள் திருக்குர்ஆனில் கூறப்பட்டிருந்ததற்குச் சொல்வழி அர்த்தம்தான் எடுத்துக் கொண்டார்கள். ஆனால் ஜலாலுத்தீன் பரம ஞானியாயிற்றே. அவருக்கு நுணுக்கமான அர்த்தம் தெரிந்திருந்தது. அவர் சொன்னார், "என் அருமைச் சீடர்களே, நீங்கள் இது குறித்து கவலைப்படாதீர்கள். நான் அரசரின் மாளிகைக்குப் போனாலும், அரசர் இந்தக் குடிலுக்கு வந்தாலும், அடிப்படையில், அரசர்தான் என்னிடம் வருகிறார்," என்றார்.

ஜலாலுத்தீனின் விளக்கம் சீடர்களுக்குப் புரியவில்லை. அவர்களின் முகத்தைக் கவனித்த குரு மேலும் சொன்னார்: "குழப்பமடையாதீர்கள். அரசருக்கு இங்கு வந்து சந்திக்கும் தைரியமில்லை. அவருக்குச் சிந்திக்கும் அறிவு குன்றவு. நான் அப்படியில்லை அல்லவா? அரசர் இங்கே வருவதற்குப் பாதை போட

* **Jalal al-Din al-Rumi** (1207-1273) தலைசிறந்த சூஃபி சம்பிரதாய ஞானியும் புகழ்பெற்ற பாரசீகக் கவிஞரும் ஆவார். துருக்கிய கலாசாரத்தின் உருவாக்கத்தில் பெரும் பங்கு உடையவர். பக்தி பரவசத்தில் பாடி ஆடுவார்.

வேண்டும் என்பதற்காகவே நான் , அங்கே போனேன். கூடிய சீக்கிரம் அவர் இங்கு வருவார் பாருங்கள். எனக்கு எதுவும் வேண்டுமென்று கேட்டுப் பெறுவதற்காக நான் அங்கே போனால் நான் தொலைந்தேன். நான் அரசர் இங்கு வருவதற்கு ஒரு வாய்ப்புக் கொடுக்கவே போனேன். திருகுர்ஆன் 'போகாதே' என்று கூறுவது உண்மை. அதன் உள்ளர்த்தம் 'யாசிக்கப் போகாதே' என்பதுதான். கொடுப்பதற்காகப் போவதை அது தடுக்கவில்லை. கொடுப்பதற்காகப் போவதைப் போதல் என்ற கணக்கில் எடுத்துக் கொள்ளக் கூடாது."

நான் ஜலாலுத்தீனின் கருத்தை ஆமோதிக்கிறேன். சீடர் அஜித் நீண்ட காலம் யோசித்தபின் துறவறம் பூண்டார். அவ்வளவு யோசிக்காமல் இருந்திருந்தால் சற்று முன்னதாகவே அவருக்குத் துறவறம் கிட்டியிருக்கும். சுயமாக ஒருவர் சந்நியாசி ஆவதாக முடிவு செய்தாலும் கொடுப்பவர் வேறொருவராகிய குருதான்.

இவ்வாறு சந்நியாசம் என்பது பிரசாதம். இந்த மனப்பான்மை ஏற்பட்ட பிறகு கனவு வருவது நின்றுவிடும்.

**ஆறாவது கேள்வி:**

**நான் உங்களிடம் சமர்ப்பணமாகியுள்ளேன். ஆனால் அது குறித்து எனக்கு ஒரு சந்தேகமுள்ளது. சீடனேதான் முழு சமர்ப்பணமும் செய்தாக வேண்டுமா? குருவும் அவன் முழுமையாக சமர்ப்பணமாவதில் உதவுவாரா, ஒத்துழைப்பாரா?**

சமர்ப்பணம் குறித்து எல்லோருக்குமே சந்தேகம் உள்ளது. ஏனெனில் யோசித்துச் செய்யப்படும் சமர்ப்பணத்தில் சந்தேகமும் கலந்திருக்கும். சமர்ப்பணம் என்பது ஒரே தாவலில் நீண்ட தூரம் கடத்தல் போன்றது (quantum leap). அது ஒருவகையான ஆவேசம். அது புரட்சியை உண்டுபண்ணுகிறது. ஆனால் அத்தகைய சுத்தமான சமர்ப்பணம் செய்பவர்கள் நூறில் ஒன்றிரண்டு பேரே உள்ளனர்.

நீ சமர்ப்பணம் ஆகும் முன் நிறைய யோசித்து அதற்கு உன் மனம் எந்த அளவிற்கு ஆதரவாக உள்ளது என்று நீ கணக்கிடுவதாக வைத்துக் கொள்வோம். உன் மனம் 60 சதவிகிதம் ஆதரவாகவும், 40

சதவிகிதம் எதிர்ப்பதாகவும் இருக்கிறது. பாராளுமன்ற விதிகளின் அடிப்படையில், பெரும்பான்மை ஆதரவு காரணமாக, நீ குருவிடம் சமர்ப்பணம் ஆக முடிவெடுக்கிறாய். ஆனால் அதை நீ செயற்படுத்துவதற்குள் எதிரணியிலுள்ள 40 சதவிகித மனம், ஆதரவாக உள்ள பெரும்பான்மைக்குள் பிளவு ஏற்படுத்த முயலக்கூடும். அரசியலில் ஒரு கட்சியின் சில உறுப்பினர்களின் மனத்தை மாற்ற லஞ்சம் தரப்படுகிறது; அமைச்சர் பதவி தருவோம் என்று ஆசை காட்டப்படுகிறது. இவ்வாறே பெரும்பான்மை மனத்தைச் சிறுபான்மை மனம் அரிக்கத் தொடங்கும்.

அறுபது சதவிகித மனம் கூறியபடி நீ சமர்ப்பணம் ஆகிவிட்டாய். ஆனால் இதனால் என்ன பயன் விளைகிறது என்பதை உரைகல்லாக வைத்தே உன் சமர்ப்பணம் மதிப்பிடப்படுகிறது. அப்படிப் பயன் எதுவும் விளைவதாகத் தெரியாவிடில் 40 சதவிகித மனம் உன்னை இகழும். 'இப்பொழுது புத்தி வந்ததா? முதலிலேயே சமர்ப்பணம் செய்யாதே என்று சொன்னோமே. இதனால் ஒரு லாபமும் இல்லை' என்று இடித்துரைக்கும்.

இவ்வாறு மனத்துக்குள் போராட்டம். உண்மையான சமர்ப்பணமானால் நூற்றுக்கு நூறு என்னும் நிலையில் நிகழும். முழுமையாக மனம் ஒப்புக் கொண்டால்தான் அது நிகழும். நூறு டிகிரி வெப்பத்தில்தான் தண்ணீர் நீராவியாகும். அறுபது டிகிரியில் தண்ணீர் சூடாக இருக்குமே தவிர, ஆவியாகாது.

அதுபோல் மனத்தின் முழு ஆதரவையும் பெறாத சமர்ப்பணம் உன்னைச் சூடேற்ற மட்டுமே செய்யும். முதலிலிருந்த குளிர்ந்த மன நிம்மதியும் போய்விடும். காவி உடை தரித்துப் புதிய தொல்லையை விலைக்கு வாங்கியது போலாகிவிடும். உன் முடிவை எதிர்த்த 40 சதவிகித மனத்தை நீ விமர்சிக்க முடியாது. அது எதிர்க்கட்சி போன்றது.

எதிர்க்கட்சிக்கு ஒரு வசதி உண்டு. அதை நீ குறை கூற முடியாது. அது ஒன்றும் செய்திராதபோது அதை எப்படி விமரிசிப்பது? ஆகவே எதிர்க்கட்சித் தலைவர்கள் எதிலும் தீவிரமாகக் குற்றம் கண்டுபிடிக்கின்றனர். ஏதேனும் செய்பவனைத்தானே யாரும் குறைகூற முடியும். பெரும்பான்மையினர்தான் முடிவுகள் எடுப்பதால் சிறுபான்மையோர் அவர்களைக் குறைகூறுவது எளிது.

இதனால்தான் ஒரு கட்சியே எப்பொழுதும் அல்லது நீண்ட காலம் ஆட்சியில் நீடிக்க முடிவதில்லை. ஏனெனில் அதன் திட்டங்களில், செயற்பாடுகளில் ஏதேனும் குறை இருக்கத்தான் செய்யும். நாட்டில் நிலவும் எல்லா சிக்கல்களையும் அதனால் தீர்க்க முடியாது. அந்த தீராத பிரச்சினைகளை காரணம் காட்டி எதிர்க்கட்சி ஆளும் கட்சியைக் கண்டிக்கும். ஆளும் கட்சியால் நாடு பாதாளத்துக்குப் போகிறது என்று எதிர்க்கட்சி அலறும்.

மக்கள் கொஞ்சம்-கொஞ்சமாக எதிர்க்கட்சியின் பிரச்சாரத்தால் கவரப்படுவார்கள். எதிர்க்கட்சியின் பலம் அதிகரித்து அது ஆட்சியைப் பிடிக்கும். ஆனால் அப்போதிலிருந்தே அதன் பலம் தேயத் தொடங்கும். முதலில் ஆண்ட கட்சி இப்போது எதிர்க் கட்சியானதும் அதன் பலம் வளர ஆரம்பிக்கும்.

இப்படி உலகம் முழுவதும் அரசியல்வாதிகளின் இந்த விளையாட்டு நடைபெற்று வருகிறது. கூட்டணிகளாக இருந்தாலும் ஆளும்கட்சி-எதிர்க்கட்சி என்று இரண்டு முகாம்தான் அடிப்படையில் உள்ளன. இவை இரண்டும் மக்களை முட்டாள்களாக்கி விளையாடு கின்றன. ஒரு கட்சி அல்லது ஒரு கூட்டணி ஆட்சி புரியும். அப்போது எதிர்க்கட்சிகள் மக்களிடையே தமது செல்வாக்கை வளர்த்துக் கொள்ளும். இதனால் இவை அடுத்த முறை ஆட்சியைப் பிடிக்கும். இதுவரை ஆண்ட கட்சி எதிர்க்கட்சியாக மாறி மக்களைத் தனக்கு ஆதரவாகத் திரட்ட ஆரம்பிக்கும். ஆளும் கட்சி அணி-எதிர்க்கட்சி அணி என்று பிரியும் இவை அடிப்படையில் ஒன்றுசேர்ந்து மக்களை ஏமாற்றும் வேலையைச் செய்கின்றன.

மக்களின் நினைவாற்றல் வலுவானது இல்லை. 'உன் கட்சி ஆட்சியிலிருக்கும்போது நீ அதன் நடவடிக்கைகளில் குறைபாடுகள் கண்டுபிடித்ததில்லை இப்போது எதிர்க்கட்சித் தலைவரான பிறகுதான் கண் திறந்ததா' என்று மக்கள் தலைவர்களைத் தட்டிக்கேட்பதில்லை. ஆட்சியில் இருந்தால் தாங்கள் செய்வதெல்லாம் சரி, எதிர்க்கட்சி கூறுவ தெல்லாம் ஆதாரமற்றவை என்று வாதிடுவதே அரசியல்வாதிகளின் வழக்கமாகிவிட்டது. ஆட்சியை இழந்து எதிர்க்கட்சியாகி விட்டால் இதையே அவர்கள் மாற்றிச் சொல்வார்கள்.

இம்மாதிரியாகவே மனமும் அரசியல் களம்போல் உள்ளது. மனத்தின் ஒரு பகுதி 'சமர்ப்பணம் ஆகாதே, சந்நியாசி ஆகாதே' என்று தடுக்கிறது. மனத்தின் பெரும்பான்மைப் பகுதியின் ஆதரவு காரணமாக நீ குருவிடம் சமர்ப்பணம் ஆகிறாய்.சிறுபான்மைப் பகுதி சிறிது கால இடைவெளிக்குப் பிறகு 'சந்நியாசியாகி விட்டாயா? பிறகு உனக்கு என்ன நன்மை விளைந்தது?' என்று அடிக்கடி கேட்கிறது. இதனால் பெரும்பான்மைப் பகுதிக்கும் சந்தேகம் ஏற்பட்டுத் தடுமாறுகிறது. அதன் ஒரு பகுதி சிறுபான்மையோடு சேர்ந்து விடுகிறத. இரு பக்கமும் சமமாக 50-50 என்று ஆகும்போது சமர்ப்பணம் செய்தது சரிதானா என்னும் சந்தேக நிலை தோன்றுகிறது.

சில சமயம் நிலைமை தலைகீழாகலாம். சமர்ப்பணத்திற்கு ஆதரவு 40 சதவிகிதமாகவும், எதிர்ப்பு 60 சதவிகிதமாகவும் மாறலாம். அப்படியானால் நீ சந்நியாசத்தைவிட்டு ஓடுவதற்கான முயற்சியில் ஈடுபடுவாய்!

'சமர்ப்பணம் செய்தேன்' என்றாலே அதில் சிறிது சந்தேகமும் கலந்துள்ளது. ஏனெனில் சமர்ப்பணம் என்பது செய்யப்படும் ஒன்று அன்று. சமர்ப்பணம் சுயமாக நிகழ்வது. அது அன்பு உணர்வைப் போன்றது. அன்பு என்பது ஏற்படக்கூடிய ஒன்றே தவிர செய்யப் படக்கூடிய விஷயமில்லை.

என் மேற்பார்வையில் இருவகையான சந்நியாசிகள் உள்ளனர். சிலர் சமர்ப்பணம் செய்தவர்கள். அவர்களுக்குத் தங்கள் செயல் குறித்து எப்பொழுதும் சந்தேகம் இருக்கும்.

இன்னொரு வகைத் துறவிகள் என்னிடம் சமர்ப்பணம் ஆனவர்கள். இவர்கள் மனத்தில் அது குறித்து சந்தேகமே கிடையாது. இந்த சமர்ப்பணம் பாராளுமன்றத்தின் பெரும்பான்மை ஆதரவைப் போன்றதில்லை. நூற்றுக்கு நூறு சம்மதம் என்ற முறையில் ஏற்பட்ட சமர்ப்பணம் இது. படிப்படியாக ஏறுவதுபோன்ற முயற்சி இதில் கிடையாது. ஒரே தாவலில் நிகழ்ந்து விடுகிறது.

யோசித்துச் செய்த சமர்ப்பணமானால் அதில் முழுமை இருக்காது. முழுமை இல்லையெனில் கைமேல் பலன் கிடைக்காது.

பலன் கிடைக்காவிடில் தான் சமர்ப்பணம் செய்தது தவறோ என்று சந்தேகம் எழும்.

சமர்ப்பணம் என்பது செய்யப்படும் ஒன்றில்லை. என் சொற்பொழிவுகளைக் கேள்; என்னுடனேயே இரு. சிறிது-சிறிதாக முன்னேற்றம் ஏற்பட்டு ஒருநாள் திடீரென்று சமர்ப்பணம் ஆகிவிட்டதாக உனக்கே தோன்றும். எப்படி, எப்போது சமர்ப்பணமாவது என்று கணக்குப் போடாதே. எப்படியோ அப்படியே இரு. சத்சங்கத்தின் காரணமாக இயல்பாகவே சமர்ப்பணம் நிகழும்.

சீடன் எதுவும் செய்யவேண்டியதில்லை. குருவும் எதுவும் செய்ய வேண்டாம். அவரது முன்னிலையில் சீடன் இருந்தால் போதும். இந்த இருவரும் நெருங்கி இருப்பதால் குருவின் ஆற்றல் சீடனுக்குள் பிரவேசிக்கத் தொடங்கும். சீடன் குருவை நெருங்கத் தொடங்குவான். இருவரின் இடையேயும் உள்ள ஆன்மிக இடைவெளி குறைந்து போகும்.

இசை மொழியில் சொல்வதானால், நானும் நீயும் வீணைகள். நான் என் வீணையை மீட்டவில்லை. நீயும் உன் வீணையை மீட்டவில்லை. அவை அருகருகே இருப்பதால், ஒன்றையொன்று எவ்விதமாகவோ பாதித்து உன் வீணையில் என் வீணையை அனுசரித்து இனிய ஒலிகள் கிளம்புகின்றன.

உண்மையான, முழுமையான சமர்ப்பணம் சீடனால் செய்யப்படுவதில்லை. அது குருவினால் செய்விக்கப்படுவதும் இல்லை. சமர்ப்பணம் செய்யும் சீடனிடம் உண்மையான சீடத்தன்மை இருப்பதில்லை. சமர்ப்பணம் ஏற்படவைக்கிறேன் என்பவர் சத்குரு இல்லை, துர்க்குரு. குரு எந்த ஆதரவான உதவியும் செய்வதில்லை. அவர் எதுவும் செய்தால் அவரை உன் எதிரி எனலாம். நீ அவரைச் சார்ந்திருக்க நேரிடும். இன்னொருவர் உதவியால் மோட்சம் கிடைக்காது. குரு எதுவும் செய்வதில்லை. உனக்கு ஒரு வெற்றிடம் அமைத்துத் தருகிறார். அவர் திறந்த வாசல் போன்றவர். குறுக்கே கதவோ, சுவரோ கிடையாது. அந்த காலியிடம் வழியாக நீ உள்ளே செல்ல முடியும். திறந்த வாசல் உன்னை அழைக்கிறது. துணிந்து நுழை. பயப்படாதே. யோசிக்காதே.

திறந்த வாசல் ஓர் அழைப்புபோல் அமைகிறது. நீ திறந்த வாசல் பக்கமாகச் சென்றால் உள்ளே நுழைந்து பார்க்க மனம் தூண்டும். நீ துணிந்து திறந்த வாசலின் அழைப்பை ஏற்றால் குரு, குருத்வாரா ஆகிறார் (த்வாரம்=வாசல்).

குரு எதுவும் செய்வது இல்லை. ஆனால் அவர் ஓர் ஊக்கியாக (catalyst) இருக்கிறார். அவரது முன்னிலை போதும். அவரது முன்னிலை உன்னை ஊக்குவிக்க நீ வாய்ப்புக் கொடு. உன் திமிரைக் கைவிடு. நெகிழ்வாக இரு. ஓய்வான மனநிலையில் இரு. நீ தேடுவது உன் உள்ளேதான் இருக்கிறது என்பது குருவின் முன்னிலையில் உனக்குத் தெளிவுபடும்.

**தனது நாபியில் ஊறிச் சுரக்கும்**
**கஸ்தூரி மணத்தில் மயங்கிய மான்**
**அறியாமையால் அதை வெளியே தேடி**
**காடுகளில் அலைந்து திரியும்போது**
**வேடன் அம்பிற்கு இலக்காகிறது.**

கஸ்தூரிமான் தனது நாபியில் இருந்துதான் கஸ்தூரி மணம் எழும்புவதை உணராமல், அறியாமை காரணமாக, புல் தரையை முகர்ந்தபடி அலைகிறது. அதுபோலவே நீ என்னிடமிருந்து கிளம்புவதாக நினைக்கும் மணம் உண்மையில் உன்னுடைய மணம்தான். என் குரலைக் கேட்பதாக நீ நினைக்கிறாயே, அது உன் உயிர் விழித்தெழுவதன் ஒலிதான்.

வேட்டையாடும் வேடன் காட்டில் எங்கோ ஒளிந்திருக்கிறான். அவன் கையில் கஸ்தூரிமான் சிக்கிக்கொள்கிறது. அது தன்னிடமுள்ள நறுமணத்தை வெளியில் தேடிக் கிளம்பியது. நீயும் எத்தனையே வேடர்களின் அம்பிற்கு இலக்காக அமைந்திருக்கிறாய். பணத்தாசை, பதவியாசை, கௌரவம் என்று எத்தனையோ அம்புகள் உன்னைத் தாக்கியுள்ளன; உன் இதயத்தைச் சல்லடையாக்கியுள்ளன. ஆனால் நீ தேடியதோ உனக்குள்ளேயே இருந்தது. இந்த உண்மை சத்குருவின் முன்னிலையில் உனக்குத் தெரிய வருகிறது.

இப்போது சமர்ப்பணம் நிகழ்ந்துவிட்டது. ஆனால் மறுபடியும் யோசிக்கிறாய். யோசித்து-யோசித்து வாழ்க்கையையும் காலத்தையும் வீணாக்காதே. சமர்ப்பணம் என்பதை யோசித்த பிறகே செய்வது

என்பது கூடாது. சரியோ, தப்போ, உன்னை குருவிடம் சமர்ப்பித்து விட்டாய். இனியாவது யோசிப்பதைக் கைவிடு. வால் வெட்டப்பட்டு விட்டது. அதை மறுபடியும் ஒட்டிவிடலாமெனக் கனவு காணாதே. எஞ்சியுள்ள வாழ்க்கையை, உடலில் எஞ்சியுள்ள சக்தியை, நல்ல செயல்கள் புரிவதில் செலவிடு.

**தீப்பொறி ஒன்று மிஞ்சியுள்ளது**

**சிதையை மூட்டலாம் அதைத் தூண்டி**
**விளக்கும் ஏற்றலாம் அதைக் கொண்டு**

**உழைத்துக் களைத்த சூரியன்**
**உறங்கவுள்ளான் கண்களை மூடி**
**மேற்கிலிருந்து இருட்டுப் பறவை**
**மாலைச் சிறகை விரித்து வந்தது**
**ஆரத்தி காட்டி சங்கொலி எழுப்பி**
**ஆலயத்தில் வழிபாடாகிறது**

**வினாடிப் பொழுதையும் வீணாக்காமல்**
**விலை கொடுத்தாவது நீ வாங்கினால்**
**யுகமே உனக்குக் கைமேல் கிடைக்கும்**
**மண் உடலின் பேச்சும்கூட**
**காலத்தின் குரலில் நீடித்திருக்கும்**

உன்னிடம் தீப்பொறிபோல் சிறிதளவு சக்தி மிஞ்சியுள்ளது. அதைக் கொண்டு சிதை மூட்டப்போகிறாயா அல்லது விளக்கு ஏற்றி வைக்கப்போகிறாயா? நிறைய யோசித்துவிட்டாய். அது போதும். மிஞ்சியுள்ள உனது சக்தியையெல்லாம் சமர்ப்பணமாகப் பெருகவிடு. என்னருகில் வா. எனக்குள்ளே எத்தகைய புரட்சிகரமான மாறுதல் நடந்ததோ அது உன்னையும் தொற்றிக் கொள்ளட்டும்.

சமர்ப்பணமானாய், சந்நியாசம் கொடுத்தேன். அதை வைத்துக் கொண்டு சும்மா உட்கார்ந்திருக்கப் போகிறாயா? அந்தப் புல்லாங்குழலை நீ வாசிக்க வேண்டும்.

**புல்லாங்குழலை எவ்வளவு ஊதினும்**
**துளைகளை விரல்களால் வருடாவிடில்**
**அன்பெனும் ராகம் வெளிப்படாது**

உனக்குப் புல்லாங்குழல் கொடுத்து விட்டேன். அதில் வெற்றொலி மட்டுமே எழுப்பிக் கொண்டிருக்கப் போகிறாயா? உயிராற்றல் என்னும் விரல்களால் அந்தப் புல்லாங்குழலின் துளைகளைத் தடவு.

உனக்கு வழங்கப்பட்ட சந்நியாசம் கடவுளின் அன்பு ராகத்தை பிறப்பிக்கும் ஒரு வாய்ப்பாக அமையட்டும். ஏற்கெனவே நீ நிறைய யோசித்து முடித்துவிட்டாய். அஷ்டாவக்ரர் சொன்னது ஞாபகத்தில் உள்ளதா? அவர் ஜனகரிடம் சொன்னார்: "எத்தனையோ பிறவிகளாக நீ நற்செயல்கள் புரிந்தாய்; கெட்ட செயல்கள் செய்தாய். இவை போதாதா? இனியாவது விழிப்புப்பெறு. பேரமைதியைப் பெற்று மகிழு. வீட்டுக்குத் திரும்பு. உனது தோற்றுவாய்க்கு, மூலப்பிறப்பிடத்திற்குத் திரும்பிச் செல்."

அந்தத் தோற்றுவாயின் இன்னொரு பெயர்தான் சாட்சி மனம். சந்நியாசம் என்பது புல்லாங்குழல் மட்டுமே. துளைகளை விரல்களால் ஸ்பரிசித்து நீ குழலை வாசித்தால்தான் இனிய சுரங்கள் எழும். அப்போதுதான் அவற்றிலிருந்து சாட்சி மனப்பான்மை பிறக்கும். சாட்சி என்னும் சேருமிடத்தை இலக்காகக் கொண்டு மேற்கொள்ளப்படும் பயணம்தான் துறவறம் என்றழைக்கப்படுகிறது. சாட்சி மனப்பான்மை உதிக்கும் காலம் வரையிலும் சந்நியாசம் இன்னும் முழுமை பெறவில்லை என்று பொருள் கொள்ள வேண்டும்.

**ஹரி ஓம்தத்ஸத்!**